## நூலாசிரியரைப் பற்றி

A.P.Y. அப்துல் காதர் M.A., M.Ed 1965 முதல் 2004 வரை ஆசிரியராக பணியாற்றியவர். 1978 முதல் 1995 வரை முதுகலை தமிழாசிரியராகவும் 1996 முதல் 2004 வரை தலைமை ஆசிரியராகவும் அரசு மேல்நிலைப் பள்ளிகளில் பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

1974 ஆம் ஆண்டில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தில் இணைந்தார். மேலப்பாளையம் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் தலைவராகவும், தமிழ்நாடு அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் அமீராகவும் இருந்தார். தற்போது மேலப்பாளையம் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் அமீராகவும், தமிழக தென் மண்டல ஜமாஅத்துகளின் அமீராகவும் மார்க்கத் தொண்டாற்றி வருகிறார்.

1988-1989 ஆகிய வருடங்களில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் சார்பாக திருக்குர்ஆன் தமிழாக்கத்தை வெளியிடும் குழுவில் ஒருவராக பணியாற்றியவர். 1994-ல் கோவையில் JAQH அமைப்பினரோடு நடைபெற்ற விவாதத்தில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் சார்பாக நடுவராக இருந்து விவாதம் வெற்றிபெற பாடுபட்டவர். இவர் பைபிளின் ஆதாரங்களின் அடிப்படையில் சிறித்துவ கடவுட் கொள்கை என்னும் நூலையும், திருக்குர்ஆன் நபிமொழி ஆகியவற்றின் ஆதாரங்களின் அடிப்படையில் ஹஸ்ரத் மஸீஹ் ஈஸப்னு மர்யம் (அலை) அவர்களின் மரணம் என்னும் நூலையும் எழுதி உள்ளார். இவர் திருக்குர்ஆன், நபிமொழி, பைபிள் ஆகியவற்றின் அடிப்படையில் மாற்று மதத்தவருடன் அழகிய முறையில் விவாதம் செய்வதில் ஆற்றல் மிக்கவர். இன்னும் அவருடைய தொண்டுகள் தொடர துஆ செய்கிறோம்.

978-81-7912-282-1

இஸ்லாத்தின் மறுபெயர் அஹ்மதிய்யத்



# இஸ்லாத்தின் மறுபெயர்
# அஹ்மதிய்யத்

A.P.Y. அப்துல் காதிர். M.A.

# இஸ்லாத்தின் மறு பெயர்
# அஹ்மதிய்யத்

**A.P.Y. அப்துல் காதிர் M.A.,**


வெளியிடுவோர்

**தமிழக புத்தக வெளியீட்டுக் குழு (தென் மண்டலம்)**

**அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்,**

ஆசூரா கீழத் தெரு, மேலப்பாளையம், திருநெல்வேலி - 627 005.

Ph : 0462 - 2352456





First Edition 2013

Copies : 3000

"Islathin Maru Peyar Ahmadiyyat"

Written by
Jb. A.P.Y. ABDUL QADIR M.A., M.Ed.,

Type-set by
Muallim Jb. A. Khaleel Ahmad Sb &
Jb. A. Muhammad Nisar Sb.

Printed by
Syed Screens - Tirunelveli - 627 004.

for
NAZARAT NASHR-O-ISHA ATH
Sadr Anjuman Ahmadiyya, Qadian, Punjab - 143 516

ISBN No. : 978-81-7912-292-1

Price : 60/-

Published by
Tamilnadu Book Publishing Committee (South Zone)
Ashura East Street, Melapalayam, Tirunelveli - 627 005.
Ph : 0462 - 2352456
Website : www.alislam.org/tamil
E-mail : amjsouthzonetn@gmail.com
Toll Free Number : 1800 425 40000

## இந்நூலைப் பற்றி...

தூய இஸ்லாத்தின் கொள்கைகளுள் ஐம்பெரும் கடமைகள், ஈமானின் ஆறு விசயங்கள், ஈஸா நபி (அலை) அவர்களின் மரணம், இமாம் மஹ்தி (அலை) அவர்களின் வருகை, நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு உம்மத்தி நபியின் வருகை, இஸ்லாத்தின் அறிவியல் கருத்துகள் ஆகியவை தொடர்பாக திருக்குர்ஆன், நபிமொழிகளுக்கு மாற்றமான கருத்துக்களை மவ்லவி P. ஜைனுல் ஆபிதீன் தன்னுடைய திருக்குர்ஆன் மொழியாக்க விளக்கத்திலும் பிறவற்றிலும் எழுதி உள்ளார்.

பீ.ஜே -யின் 70 கருத்துகளை திருக்குர்ஆன், நபிமொழி ஆகியவற்றின் அடிப்படையில் தவறு என ஆசிரியர் விளக்கி உள்ளார். குறிப்பாக, கோவை விவாதத்தில் பீ.ஜே வைத்துள்ள குற்றச் சாட்டுகளுக்கு ஆசிரியர் பதிலளித்துள்ளார். அதில் நூல் ஆசிரியர் கேட்கின்ற ஒரு கேள்விக்கு பீ.ஜே அன்றும், இன்றும், என்றும் பதில் தரப் போவதில்லை. தரவும் முடியாது.

இவ்வாறு உண்மை இஸ்லாத்தின் கருத்துக்களை - அஹ்மதிய்யத்தின் கருத்துக்களை இந்நூலில் எடுத்துக் காட்டியுள்ளார்.

**கேள்வியாவது,**

**திருக்குர்ஆனிலிருந்து ஒரு உண்மை நபியின் அளவுகோலை எடுத்துக் காட்டி அதற்கு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் பொருந்தவில்லை என்றோ அல்லது ஒரு பொய் நபியின் அளவுகோலை எடுத்துக் காட்டி அதற்கு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் பொருந்துகிறார் என்றோ நிரூபிக்க வேண்டும். இதுவே கோவை விவாதத்தில் வைத்த விதியாகும்.**

இதன்படி கோவை விவாதத்தில் இந்த நிபந்தனையை அவரால் நிறைவேற்ற முடியவில்லை. இன்று வரை இந்த அளவுகோலின்படி ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் பொய் நபி என அவரால் நிரூபித்துக் காட்ட முடியவில்லை.

இனிமேலும் நிரூபித்துக் காட்ட முடியாது என்பது உறுதியானதாகும். இவ்வாறு மவ்லவி P. ஜைனுல் ஆபிதீன், ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களையும் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தையும் உண்மையாக்கிக் கொண்டு உலவி வருகிறார்.

இந்நூலின் 14-வது தலைப்பில், **தூய இஸ்லாம் என்பது அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தே** என்பதை எடுத்துக் காட்டும் சில வினாக்கள் உள்ளன. அவற்றை உங்கள் சிந்தனைக்குப் படைக்கிறோம்.

நூல் வெளியீட்டாளர்.

## பொருளடக்கம்

## முன்னுரை

*கோவை விவாதத்திற்குப் பிறகு பீ.ஜே. தன் சாதனைப் பட்டியலில், காதியானிகளை அந்த விவாதத்தில் தோற்கடித்து விட்டதாக பச்சைப் பொய்யைத் தமிழகம் முழுவதும் தம்பட்டம் அடித்துக் கொண்டு திரிகிறார். அதில் ஒன்று தான், ரமலான் ஸஹர் நேர சொற்பொழிவில் யார் அந்த 72 கூட்டத்தினர்? எனும் தலைப்பில் பேசிய டி.வி. நிகழ்ச்சியாகும்.*

*இவற்றின் விளைவாக பீ.ஜே. -யின் பொய்க் குற்றச்சாட்டுகளுக்குப் பதில் எழுதும் நோக்கில் அவரது திருக்குர்ஆன் மொழியாக்கத்தின் இறுதிப் பகுதியில் உள்ள திருக்குர்ஆனுக்கும், நபிமொழிகளுக்கும் மாற்றமான கருத்துகளுக்குப் பதிலாக இந்நூலை அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் வெளியிட்டுள்ளது.*

*இஸ்லாத்தை அதன் தூய வடிவில் கூறுவதாகக் கூறித்திரியும் இவர்கள் தூய இஸ்லாத்திற்கு மாற்றமாக அல்லாஹ், நபிமார்கள், வேதம், மறுமை, சொர்க்கம் நரகம் பற்றியும், இஸ்லாத்தின் கடமைகள் குறித்தும் இஸ்லாத்திற்கு மாற்றமான கருத்துக்களைக் கூறியுள்ளதை இந்நூல் வெளி உலகுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது.*

*இவ்வாறு உண்மை இஸ்லாத்தை அஹ்மதிய்யத் படம்பிடித்துக் காட்டுவதால் தான் இந்நூலுக்கு **இஸ்லாத்தின் மறுபெயர் அஹ்மதிய்யத்** என்று பெயர் சூட்டியுள்ளோம். இந்நூலைக் கருத்தூன்றிப் படிப்பவர், தூய இஸ்லாம் என்றால் அஹ்மதிய்யத் என்று ஏற்றுக் கொள்வார். இன்-ா அல்லாஹ்.*

*அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தைப் பொய் என்று எண்ணுபவர்களும் பேசுபவர்களும் இந்நூலை நடுநிலையுடன் படிக்குமாறு வேண்டுகிறேன்.*

*இந்த நூலை சரிபார்த்து வெளியிடுவதற்கு முழுமையாக ஒத்துழைப்புத் தந்தவர்கள். **மவ்லவி S. அப்துல் காதிர் சாஹிப், மவ்லவி M. ரஃபீக் அஹ்மது சாஹிப், மவ்லவி N. ஸியாவுல் ஹக் சாஹிப், மவ்லவி M. நிஜாமுத்தீன் சாஹிப்** ஆகியோருக்கும் இந்த புத்தகத்தை டைப்செட் செய்த **மவ்லவி A.கலீல் அஹ்மது சாஹிப், A.முஹம்மது நிஸார் சாஹிப்** அவர்களுக்கும், பொருள் உதவி நல்கியவர்களுக்கும் இம்மையிலும் மறுமையிலும் நற்கூலி வழங்க இறைவனிடம் இறைஞ்சுகிறேன்.*

### ஒரு வேண்டுகோள்:

1. *திருக்குர்ஆனில் ஒரு வசனம் பிற தர்ஜுமாக்களில் 86:11 என்றிருந்தால் எங்கள் தர்ஜுமாக்களில் 86:12 என்றிருக்கும். காரணம் பிஸ்மில்லாஹ்வையும் ஒரு வசனமாக கருதுவதே ஆகும். வாசகர்கள் இதனைக் கவனத்தில் கொள்க.*
2. *ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை பீ.ஜே ஏக வசனத்தில் எழுதியுள்ள எல்லா இடங்களிலும் இஸ்லாம், நபி (ஸல்) அவர்களின் நடைமுறை, மனிதப் பண்பாடு, கோவை விவாத விதி ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு **'ன்'** ஐ **'ர்'** எனத் திருத்தியுள்ளேன்.*
3. *இந்நூலில் நான் எடுத்துக் காட்டியுள்ள மேற்கோள்கள் பீ.ஜே.-யின் திருக்குர்ஆன் மொழியாக்கத்தின் 2 வது பதிப்பில் உள்ள திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண்களே ஆகும். சில 9,10,11-வது பதிப்புகளில் உள்ளனவாகும்.*

*நூல் ஆசிரியர்.*

بِسۡمِ اللّٰہِ الرَّحۡمٰنِ الرَّحِیۡمِ

# I. ஈஸா நபி (அலை) அவர்களின் மரணம்

## 1. ஹஸ்ரத் ஈஸா நபி (அலை) திரும்பி இவ்வுலகிற்கு வரவே மாட்டார்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 149 இல் திருப்பித் தரும் வானம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார் ;**

*இவ்வசனத்தில் (திருக்குர்ஆன் 86:11) திருப்பித் தரும் வானம் என்று வானத்திற்கு ஒரு அற்புதமான அடைமொழியை அல்லாஹ் பயன்படுத்தியுள்ளான்.*

*வானம் எதை திருப்பித் தரும் என்றால் ஏராளமான விசயங்களை நமக்குத் திருப்பித் தந்து கொண்டே இருக்கிறது.*

**நம் விளக்கம்:**

1) திருக்குர்ஆனின் 86:12 வசனத்தில் அல்லாஹ் எடுத்தாண்டுள்ள சொல் **ரஜ்யி** என்பதாகும். இச்சொல் திருக்குர்ஆனில் **திருப்பி அனுப்புதல்** எனும் பொருளில் பற்பல இடங்களில் வருகிறது. 21:96, 36:32, 32:13, 56:88, 36:51 ஆகிய வசனங்களைப் பார்க்கவும்.

திருக்குர்ஆன் 36:32 இல், இவர்களுக்கு முன்னர் எத்தனையோ தலைமுறையினர்களை நாம் அழித்திருப்பதையும் அவர்கள் ஒரு போதும் **இவர்களிடம் திரும்பி வராமலிருப்பதையும்** இவர்கள் காணவில்லையா? என்றும்,

**திருக்குர்ஆன் 32:13 இல்,**

குற்றமிழைத்தவர்களை நம் இறைவன் முன்னிலையில் தம் தலைகளைத் தொங்கவிட்டவர்களாக நீர் கண்டால் (அவர்கள் கூறுவர்) எங்கள் இறைவா ! நாங்கள் கண்டு கொண்டோம். மேலும் கேட்டுக் கொண்டோம். எனவே, நீ எங்களை **(உலகிற்கு) திருப்பி அனுப்புவாயாக**. நாங்கள் நற்செயல் செய்வோம். (ஏனென்றால்)



இப்பொழுது நாங்கள் (உண்மையை) உணர்ந்து கொண்டோம் என்றும்,

**திருக்குர்ஆன் 56:88 இல்,**

நீங்கள் உண்மையாளர்களாயின் அதனை (உயிரை) ஏன் உங்களால் **திரும்பிக் கொண்டு வர இயல்வதில்லை** என்றும்,

**திருக்குர்ஆன் 36:51 இல்,**

அப்பொழுது அவர்களால் மரண சாசனம் கூறவும் இயலாது; அவர்களால் **தங்கள் குடும்பத்தினரிடம் திரும்பி வரவும் இயலாது** என்றும்,

**திருக்குர்ஆன் 23:100 இல்,**

அவர்களுள் ஒருவருக்கு மரணம் வந்துவிட்டால் அவர் (மீண்டும் மீண்டும் மன்றாடி இவ்வாறு) கூறுவார்: என் இறைவா! **என்னைத் திரும்ப அனுப்பிவிடு** என்றும் வருகிறது.

எனவே, **ஹஸ்ரத் ஈஸா நபி (அலை) அவர்கள் இவ்வுலகிற்குத் திரும்பி வருவார்கள் என்றால்,** அன்னாரது வருகையைப் பற்றி அவர் **திரும்பவும் இவ்வுலகுக்கு வருவார்** என்று திருக்குர்ஆனிலோ, நபிமொழிகளிலோ சொல்லப்பட்டிருக்க வேண்டும். இவ்வாறு **திரும்பவும் வருவார் என்று சொல்லப்படாததினால் ஈஸா நபி திரும்பவும் இவ்வுலகுக்கு வரப்போவதில்லை** என்று தெளிவாகிறது.

2) ஒருவர் இறைவனளவில் சென்று மீண்டும் உலகுக்குத் திரும்பி வருவதற்கு **கர்ரத்த** எனும் சொல்லும் திருக்குர்ஆனில் காணப்படுகிறது.

**திருக்குர்ஆன் 2:168 இல்,**

**திரும்பிச் செல்ல வாய்ப்பு கிடைத்தால்** இவர்கள் நம்மை விட்டு விலகி விட்டதைப் போன்று நாமும் இவர்களை விட்டு விலகிக் கொள்வோம் என்று கூறுவர்.

**திருக்குர்ஆன் 26:103 இல்,**

எனவே, (உலகிற்குத்) **திரும்பிச் செல்ல முடிந்தால்** நாங்கள் நிச்சயமாக நம்பிக்கை கொண்டவர்களைச் சேர்ந்தவர்களாகி விடுவோம்.

**திருக்குர்ஆன் 39:59 இல்,**

அவர் தண்டனையைக் காணும் போது (உலகிற்குத்) **திரும்பிச் செல்ல** எனக்கு வாய்ப்புக் கிடைத்தால் நான் நன்மை செய்பவர்களைச் சேர்ந்தவனாகியிருப்பேன்.

இவ்வசனங்களில் வரும் **கர்ரதன்** எனும் சொல்லானது ஹஸ்ரத் ஈஸா நபி (அலை) அவர்கள் **திரும்பி வருவார்** என்பதைக் குறிக்க வந்திருந்தால் எடுத்துக் காட்டுமாறு வேண்டுகிறேன். அவ்வாறு வராததினாலும் ஈஸா நபி (அலை) அவர்கள் **உலகிற்கு திரும்பி வரப் போவதில்லை** என்று உறுதியாகிறது.

3) திருக்குர்ஆனில் **ரத்து** எனும் சொல்லும் **உலகிற்கு திரும்பி அனுப்பப்படுதல்** எனும் பொருளில் எடுத்தாளப்படுகிறது.

**திருக்குர்ஆன் 6:28 இல்,**

நரகத்திற்கு முன் அவர்கள் நிறுத்தப்படும் போது நீர் அவர்களைக் கண்டால் அவர்கள் அந்தோ! நாங்கள் **மீண்டும் (உலகிற்கு) அனுப்பப்பட்டால்** நலமாக இருக்குமே... என்று கூறுவார்கள். **ரத்து** – என்ற சொல்லாவது ஹஸ்ரத் ஈஸா நபி **உலகிற்குத் திரும்பி வருவதைக்** குறிக்க வந்திருக்கிறதா என்றால் அதுவும் இல்லை. இவ்வாறு **ரஜ்யீ, கர்ரத்தன், ரத்து** ஆகிய மூன்று சொற்களும் **திரும்பி வருதல்** என்ற பொருளில் திருக்குர்ஆனில் வருகிறது. இந்த மூன்று சொற்களில் எதுவும் ஈஸா நபிக்கு எடுத்தாளப்படவில்லை.

மேலும் பீ.ஜே, **திருப்பித் தரும் வானம் என்று யாராவது வானத்திற்கு அடைமொழி சொல்வார்களா? அதுவும் 14 நூற்றாண்டுகளுக்கு முன்னால் சொல்வார்களா?**



இந்த மாபெரும் அறிவியல் உண்மையை எழுதப் படிக்கத் தெரியாத முஹம்மது சொல்கிறார் என்றால், நிச்சயமாக இது அவருடைய வார்த்தையாக இருக்க முடியாது; படைத்த இறைவனின் வார்த்தையாகத் தான் இருக்க முடியும் என்று எழுதியுள்ளார்.

இவ்வாறு **திருப்பித் தரும் வானம் என்ற சொல்** எதிர்காலத்தில் ஏற்படப்போகும் பல அறிவியல் உண்மைகளை எடுத்துக் காட்டுகிறது. எனவே இது எல்லாம் அறிந்த இறைவனுடைய வசனம் என்றால், அந்த திருக்குர்ஆனிலோ, ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் நபிமொழிகளிலோ, கியாமத் நாளின் அடையாளமாக பழைய இஸ்ரவேலர்களுக்கு வந்த அந்த ஈஸாவே வருவார் என்றால், அவருடைய வருகையைக் குறித்து **திரும்பவும் அவர் வருவார் என்று அல்லாஹ் சொல்லாததினால் அவர் மீண்டும் உலகிற்கு வரப் போவதில்லை என்பதை பீ.ஜே உணரத் தவறியது ஏன்?**

இவ்வாறு திருக்குர்ஆனிலோ, நபிமொழியிலோ அந்த ஈஸா திரும்பவும் வருவார் என்று சொல்லப்படாததினால் அவர் இனிமேல் வரவே மாட்டார் என்பது உறுதியாகிறது.

அப்படியானால் ஈஸா நபியவர்கள் **இறங்குவார்** என்று நபிமொழியில் கூறப்பட்டுள்ளதே என்றால், இறங்குதல் எனும் சொல் திருக்குர்ஆனில் வந்துள்ள சில வசனங்களைப் பார்த்தால் அதன் பொருள் விளங்கும்.

*கால்நடைகளில் எட்டு ஜோடிகளை உங்களுக்காக இறக்கினான். (திருக்குர்ஆன் 39:7)*

*ஆதமின் மக்களே! உங்கள் மானத்தை மறைக்கக் கூடியதும் அணிகலனாக இருக்கக் கூடியதுமான ஆடையினை உங்களுக்காக நாம் இறக்கினோம். (திருக்குர்ஆன் 7:27)*

*உங்களுக்காக மன்னு ஸல்வாவை இறக்கினோம் என்று வருகிறது.(திருக்குர்ஆன் 2:58)*

பீ.ஜே வானத்திலிருந்து இவற்றை இறக்கியதாக எழுதியுள்ளார். வானம் என்ற சொல்லை இவர் திருக்குர்ஆனில் இருந்தோ நபிமொழிகளில் இருந்தோ காட்ட முடியமா?

*இரும்பையும் நாம் இறக்கினோம். (குர்ஆன் 57:26)*

***அல்லாஹ் தன் அமைதியைத் தன் தூதர் மீதும் நம்பிக்கை கொண்டோர் மீதும் இறக்1கினான்.*** *(குர்ஆன் 9:26)*

ஹஸ்ரத் ஈஸா நபிக்கு ஹதீஸில் வரும் **நுஸுல்** எனும் சொல்லே **கால்நடை, ஆடை, மன்னு, ஸல்வா, இரும்பு** ஆகியவற்றுடனும் திருக்குர்ஆனில் வருகிறது. இவை எப்படி இறையருளால் விண்ணிலிருந்து இறங்காமல் மண்ணிலிருந்து வளர்கிறதோ அவ்வாறே ஹஸ்ரத் ஈஸா நபியும் விண்ணிலிருந்து இறங்க மாட்டார். பிற நபிமார்களைப் போன்று பூமியில் பிறந்து வளர்ந்து மறைவார். இதனால் தான் இந்த ரஸுலை இறக்கினோம் என்று ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களைப் பற்றி அல்லாஹ் கூறுகிறான். (65:11-12)

## 2. சிலுவையில் அறையப்பட்டவர் ஈஸா நபியே! ஆள்மாறாட்டம் இல்லை.

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 265 -இல், ஒருவர் இன்னொருவரின் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*திருக்குர்ஆன் பல வசனங்களில் ஒருவர் மற்றவரின் பாவத்தைச் சுமக்க முடியாது என்று கூறுகிறது. இது இஸ்லாத்தின் மிகப் பெரிய அடிப்படைக் கொள்கை. குறிப்பாக இந்த அடிப்படையில் தான் கிறித்தவ மார்க்கத்தில் இருந்து முற்றாக இஸ்லாம் மாறுபடுகிறது. எல்லோரும் பாவிகளாகப் பிறந்து அந்தப் பாவத்தை ஏசு சுமந்து கொண்டார் எனக் கூறப்படும் சித்தாந்தத்தை இஸ்லாம் மறுக்கிறது.*

*ஒருவர் பாவம் செய்தால் அந்தப் பாவம் அவரைத் தான் சாரும். ஆதம் பாவம் செய்தால் ஆதமுடைய பிள்ளைகள் யாரும்*



*அந்தப் பாவத்தில் பங்காளிகள் இல்லை. எனவே பிறக்கும் போதே யாரும் பாவியாகப் பிறக்க மாட்டார்கள்.*

*அப்படியே பாவம் செய்தாலும் இன்னொருவரது பாவத்தைச் சுமக்க முடியுமா? அனைவரது பாவங்களையும் சுமப்பதற்காக ஏசு பலி கொடுக்கப்படுவாரா? என்றால் அதையும் இஸ்லாம் மறுக்கிறது.*

*மற்றவர்கள் செய்த பாவங்களுக்காக அந்தப் பாவத்தில் சம்பந்தமில்லாத ஒருவரைப் பலி கொடுப்பது என்பது இஸ்லாமிய அடிப்படைக்கு எதிரானது.*

**நம் விளக்கம்:**

1. ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்களைப் பிடிப்பதற்காகச் சென்ற போது, அல்லாஹ் ஆள்மாறாட்டம் செய்து ஈஸா நபியைக் காப்பாற்றி தன்னளவில் உயர்த்திக் கொண்டான். கைது செய்ய வந்தவர்களுள் ஒருவன் ஆள்மாறாட்டத்தினால் ஈஸா நபி எனப்பிடிக்கப்பட்டு சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டான் என்று கற்பனைக் கதையை பீ.ஜே நம்புகிறார்.(ஆதாரம் : 4:157 பீ.ஜே மொழியாக்கம்) மேலே அவர் கூறிய படி ஈஸா நபிக்குப் பதிலாகச் சிலுவையில் அறையப்பட்டவன், அந்தச் சம்பவத்தில் எக்குற்றமும் செய்யாதவன். இவ்வாறு **அக்குற்றத்தில் சம்பந்தமில்லாத ஒருவனைப் பலி கொடுப்பது என்பது இஸ்லாமிய அடிப்படைக்கு எதிரானது ஆகாதா?**
2. திருக்குர்ஆன் 12:80 வது வசனத்தில், "அவர் கூறினார்; நாங்கள் எவரிடத்தில் எங்கள் பொருள்களைக் கண்டு பிடித்தோமோ அவரைத் தவிர வேறொருவரை நாங்கள் பிடிப்பதிலிருந்து **இறைவனிடம் அடைக்கலம்** தேடுகிறோம். நாங்கள் அவ்வாறு செய்தால் **அநீதி இழைத்தவர்களைச் சேர்ந்தவர்கள்** ஆவோம் என்று வருகிறது. அதாவது குற்றவாளியை விட்டுவிட்டு அதில் சம்பந்தமில்லாத ஒருவரைப் பிடிப்பதைப் அநீதி இழைத்தல் என்றும் அவ்வாறு செய்யாதிருக்க அல்லாஹ்விடம்

அடைக்கலம் தேடுவதாகவும் இந்த வசனம் கூறுகிறது". ஆள் மாறாட்டத்தால் வேறு ஒருவர் சிலுவையில் அறையப்பட்டார் என்றால், இது அநீதி ஆகாதா?

3. அல்லாஹ் ஆள்மாறாட்டம் செய்து தான் யூதர்களிடமிருந்து தன் நபியைக் காப்பாற்ற வேண்டுமா?
4. ஆள்மாறாட்டம் செய்து அப்பாவி ஒருவனைச் சிலுவையில் அறைந்து கொல்லாமல் தன் நபியைக் காப்பாற்ற அல்லாஹ்வால் முடியாதா?
5. **ஷுப்பிஹ லஹும்** எனும் சொற்றொடர்க்கு ஆள் மாறாட்டம் தான் பொருள் என்பதை பீ.ஜே திருக்குர்ஆனிலிருந்தும் நபிமொழிகளிலிருந்தும் அகராதியிலிருந்தும் தக்க சான்றுகள் தந்து நிரூபிக்க முடியுமா? எனவே இதை பீ.ஜே –யின் பொருள் மாறாட்டம் என்று கூறலாமா?
6. தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ள ஏறக்குறைய 25 தர்ஜுமாக்களில் ஆள் மாறாட்டம் எனும் பொருளைக் காண முடியவில்லையே! ஏன்?
7. ஆள்மாறாட்டம் போன்ற இழி செயல்களை அல்லாஹ் செய்வானா?
8. ஒரு தூய நபியின் தோற்றத்தைச் சாதாரண மனிதனுக்கு அல்லாஹ் கொடுப்பானா?
9. ஆள் மாறாட்டத்தில், சிலுவையில் அறையப்பட்டவனின் மனைவி, மக்கள், நண்பர்கள், உற்றார் உறவினர்கள் யாரும் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லையா? பீ.ஜே இப்படித்தான் இருப்பார் போலும்.
10. ஈஸா நபியின் உருவம் கொடுக்கப்பட்டவர், தோற்றத்தில் மட்டும் தான் மாறினாரா? உள்ளத்தாலும் மாறினாரா?

ஆதம் பாவம் செய்தால், ஆதமுடைய பிள்ளைகள் யாவும் அந்தப் பாவத்தில் பங்காளிகள் இல்லை என்று கூறுகிறார். (திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 265) இதில் பரம்பரை பாவம் இல்லை என்கிறார்.



திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 15 –இல், **அனைவரும் வெளியேறுங்கள்** எனும் தலைப்பில் உலகம் அழியும் வரை தோன்றும் அனைவரையும் அவ்விருவரும் தமக்குள் சுமந்திருந்தார்கள். அவர்களிலிருந்து தோன்ற இருப்பவர்களையும் கருத்தில் கொண்டு இவ்வாறு கூறப்பட்டுள்ளது என்று பீ.ஜே எழுதியுள்ளார்.

ஆதம் நபி செய்த தவறு அவரது சந்ததி அனைவரையும் பங்காளியாக்கி விட்டது. இவ்வாறு கடைசி மனிதன் வரை பரம்பரைப் பாவம் பாதித்து விட்டது என்கிறார்.

இந்த சுய முரண்பாடு ஏன்? இவ்விரண்டில் எது சரி? முன்னது சரி என்றால், பின்னது தவறாகும். எந்த அளவுக்கு என்றால், ஆதம் நபியும், அன்னை ஹவ்வாவும் செய்த பாவங்களுக்காக உலக மனித இனம் முழுமையும் சொர்க்கத்தை இழந்து, மண்ணில் பிறந்து வளர்ந்து, மண்ணைத் தின்று மண்ணோடு மண்ணாக மடிகிறோம். இவ்வாறு பரம்பரை பாவத்திற்கு ஆளாகி விட்டோம் என்று 100% கிறித்தவக் கொள்கையை பீ.ஜே நம்புகிறார் என்று பொருள். இவ்வாறு இஸ்லாத்தின் மிகப் பெரிய அடிப்படைக் கொள்கையை பீ.ஜே தவிடுபொடியாக்கி விட்டார்!

### 3. ஈஸா நபி இறந்து விட்டார்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 278 இல் தாயாருக்கு நன்மை செய்யும் காலமெல்லாம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*திருக்குர்ஆன் 19:30-32 வசனங்களுக்கு எல்லா தமிழ் மொழிபெயர்ப்புகளும், எல்லா ஆங்கில மொழிபெயர்ப்புகளும் தவறான பொருள் தந்துள்ளன. எனவே 19:32 வசனத்தின் சரியான பொருள் என்னவென்று பார்ப்போம் என்று எழுதியுள்ளார்.*

**பிறருடைய மொழிபெயர்ப்பு:**

*(ஈஸா) கூறினார்: நான் அல்லாஹ்வின் அடியான். அவன் எனக்கு வேதத்தை வழங்கி, என்னை நபியாக ஆக்கியுள்ளான்.*

*நான் எங்கிருந்தாலும் அவன் என்னை அருள் நிறைந்த (ஒரு)வனாக ஆக்கியுள்ளான். நான் உயிருடன் இருக்கும் வரை தொழுகையையும், ஸக்காத்தையும் அவன் எனக்கு கட்டாயக் கடமையாக்கியுள்ளான்.*

*மேலும் என் தாயாருடன் மிக்க நல்ல முறையில் நடந்து கொள்பவனாகவும் என்னை ஆக்கியுள்ளான். என்னை ஆணவம் கொண்டவனாகவும் இரக்கமற்றவனாகவும் ஆக்கவில்லை. (19:31-33)*

**பீ.ஜே யின் மொழிபெயர்ப்பு:**

*நான் அல்லாஹ்வின் அடியான். எனக்கு அவன் வேதத்தை அளித்தான். என்னை நபியாக்கினான். நான் எங்கே இருந்த போதும் பாக்கியம் பொருந்தியவனாகவும் ஆக்கினான். நான் உயிருடன் இருந்து என் தாயாருக்கு நன்மை செய்பவனாகவும் இருக்கும் காலமெல்லாம் தொழுமாறும், ஸகாத் கொடுக்குமாறும் எனக்குக் கட்டளையிட்டான். என்னை துர்பாக்கிய சாலியாகவும் அடக்குமுறை செய்பவனாகவும் அவன் ஆக்கவில்லை. (19:30-32)*

**நம் கேள்வி:**

பீ.ஜே எல்லாருடைய மொழிபெயர்ப்புக்கும் மாற்றமாக ஒரு புதிய மொழிபெயர்ப்பை ஏன் செய்துள்ளார்? பிறருடைய மொழிபெயர்ப்புகளின்படி ஈஸா நபி அவர்கள் இறந்து விட்டார்கள் என்பது தெரிந்து விடும் என்பதினால் இறந்து போனவரை உயிருள்ளவராக காட்டும் அவரது தில்லுமுல்லுகளைக் காண்போம்.

ஈஸா நபி (அலை) உயிருடன் இருக்கும் வரை தொழ வேண்டும். ஸக்காத்து கொடுக்க வேண்டும் என்பது இறை கட்டளை. அவர் என்ன தொழுகிறார்? எப்படி தொழுகிறார்? என்ற கேள்விகளுக்கும், அவர் ஸக்காத்து கொடுக்கிறார் என்றால், என்ன ஸக்காத்து கொடுக்கிறார்? எப்படி ஸக்காத்து கொடுக்கிறார்? யாருக்கு ஸக்காத்து கொடுக்கிறார்? என்ற கேள்விகளுக்கும் பீ.ஜே-யால் பதில்



சொல்ல முடியவில்லை. எனவே அவர் உயிருடன் இல்லை என்ற உண்மையை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

எனவே இறந்து போன ஈஸா நபியை உயிருடன் இருப்பதாகக் காட்டுவதற்கு வலிந்து ஆயத்துகளை வளைத்து ஒரு புதுப் பொருளைக் கொடுத்துள்ளார். எப்படி?

ஈஸா நபி உயிருடன் இருந்து அவர் தாயாருக்கு நன்மை செய்பவராக இருக்கும் காலமெல்லாம் தொழுமாறும் ஸக்காத்து கொடுக்குமாறும் இறைவன் கட்டளையிட்டுள்ளான்.

இதில் ஈஸா நபி தொழுவதற்கும் ஸக்காத்து கொடுப்பதற்கும் உயிருடன் இருப்பது மட்டும் போதாது. அவர் தாயாருக்கு நன்மை செய்பவராகவும் இருக்க வேண்டும் என்று 2 நிபந்தனைகளை அல்லாஹ் விதித்துள்ளான் என்று பீ.ஜே கண்டுபிடித்துள்ளார்.

இந்த புதிய கண்டுபிடிப்பின்படி ஈஸா நபி தொழவோ, சக்காத்து கொடுக்கவோ வேண்டியதில்லை. ஏனென்றால் தாயாருக்கு நன்மை செய்யவில்லை. எனவே ஈஸா நபி உயிருடன் இருக்கிறார் என்பது அவரின் நிலைப்பாடு.

**நம் விளக்கமாவது:**

1. ஈஸா நபி மீண்டும் உலகுக்கு வருவதாக பீ.ஜே நம்புகிறாரே! அப்படியானால் அவர் தொழமாட்டார். ஸக்காத்து கொடுக்க மாட்டார் என்றால் அவர் எப்படி ஒரு நபியாக, மூமினாக இருக்க முடியும்? என்று கேட்டால், அவர் இஸ்ரவேலர்களுக்குரிய தொழுகையை, ஸக்காத்தை செய்ய மாட்டார் என்று பதில் கூறுகிறார்கள். இவர்கள் கூறும் இந்த சுய விளக்கத்திற்கு நபிமொழி சான்றுகளை தருமாறு வேண்டுகிறோம்.
2. இஸ்லாத்தின்படி குர்ஆன், நபிவழியை, தொழுகையை, ஸக்காத்து விதிகளை ஜிப்ரீல் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்குத் தானே கற்றுக் கொடுத்தார்? ஈஸா நபிக்கும் சேர்த்துக் கற்றுக் கொடுத்தார் என்பதற்கும் அவர் இஸ்ரவேல் அல்லாதவர்க்கும்

குறிப்பாக முஸ்லிம்களுக்கும் நபியாக வருவார் என்பதற்கும் திருக்குர்ஆன் ஹதீது சான்றுகள் தருமாறு வேண்டுகிறோம்.

3. தொழுகை என்பது இபாதத் அதாவது வணக்க வழிபாடு. இதனை அல்லாஹ்வுக்கு மட்டுமே செய்ய வேண்டும். அல்லாஹ்வைத் தவிர வேறு எவர்க்குச் செய்தாலும், எவருக்காகச் செய்தாலும் அது ஷிர்க் ஆகும். அதாவது தொழுகையை அல்லாஹ்வுக்காக, அல்லாஹ்வுக்கு மட்டுமே செய்ய வேண்டும். இதனை தன் தாயாருக்காக செய்யாமல் இருப்பதோ, செய்வதோ என்றால் அவர் அல்லாஹ்வுடன் மர்யம் (அலை) அவர்களை சேர்த்து ஷிர்க் செய்து விட்டார். பச்சையாகச் சொல்வது என்றால் மர்யம் (அலை) அவர்களை ஒரு கடவுளாக ஆக்கி விட்டார்.

   இதனை வேறு விதமாகக் கூறுகிறேன். அறுத்துப் பலியிடுவது அல்லாஹ்வுக்கு மட்டுமே செய்ய வேண்டும். இதனை ஒருவர் அல்லாஹ்வுக்காகவும் வேறு ஒருவருக்காகவும் செய்தால் அது எப்படி ஷிர்க்கோ அவ்வாறு தான் தொழுகையை ஒருவர் தன் தாயாருக்காகவும் செய்தார் என்றால் அதுவும் ஷிர்க் ஆகிவிடும். பீ.ஜே திருக்குர்ஆன் வசனத்திற்கு புதிய மொழிபெயர்ப்பைக் கொடுத்து தானும் ஷிர்க்கான நம்பிக்கையை நம்பி, பிறரையும் நம்பும்படித் தூண்டுகிறார்.

4. மர்யம் (அலை) ஈஸா நபியின் தாயாராக இருக்கும் காலம் எல்லாம் ஈஸா நபியை தொழுகையும், ஸக்காத்தும் கட்டுப்படுத்தும். அவர்க்கு நன்மை செய்வதாக இருக்கும் காலமெல்லாம் அவ்விரண்டையும் கட்டுப்படுத்தும் என்றால் ஈஸா நபி பூமிக்கு மீண்டும் வரும் போது, அவர் தொழவோ, ஸக்காத்து கொடுக்கவோ வேண்டிய தேவையில்லை என்பதை வலிந்து நிரூபிக்க விரும்பினால், பழைய தொழுகை (இஸ்ரவேலர் தொழுகை) புதிய தொழுகை (முஸ்லிம்கள் தொழுகை) என்று கூற முடியாது. காரணம் அல்லாஹ் அப்படி



எதுவும் கூறவில்லை. ஒன்று கூறலாம் மர்யம் (அலை) அவர்கள் இன்னும் உயிருடன் இருக்கிறார் என்று ஒரு புதிய பொய்யைக் கூறலாம். இதைத்தவிர பீ.ஜே -க்கு வேறு வழியில்லை. சொல்லிப்பாருங்கள்.

மொத்தத்தில் ஏனையோரின் மொழி பெயர்ப்பே சரியானதும் பொருத்தமானதும் ஆகும்.

## 4. ஈஸா நபி (அலை) உயிருடன் இருந்தால்?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 333 இல் இறங்குமுகம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*மனிதன் பிறந்தது முதல் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து கொண்டே செல்கிறான். ஒரு குறிப்பிட்ட கட்டத்திற்குப் பின் திரும்பவும் தேய்ந்து கொண்டே வந்து பற்களை இழந்து நடையை இழந்து படுக்கையில் கிடக்கிறான். குழந்தை போன்ற நிலைக்கே வந்து நடக்க முடியாமல், பேச முடியாமல், சிறு குழந்தையைப் போன்று ஆகி விடுகிறான். இது தான் இவ்வசனத்தில் (திருக்குர்ஆன் 36:68) கூறப்படுகிறது.*

**நம் விளக்கம்:**

ஈஸா நபி (அலை) அவர்களை கடந்த 2000 ஆண்டுகளாக இறைவன் தன்னளவில் உயர்த்தி உடலோடு அங்கு இருக்கிறார் எனில்,

அவர் குறிப்பிட்ட கட்டத்திற்குப் பின் திரும்பவும் தேய்ந்து கொண்டே வந்து பற்களை இழந்து, நடையை இழந்து, படுக்கையில் இருக்கிறாரா? குழந்தை போன்ற நிலைக்கே வந்து நடக்க முடியாமல், பேச முடியாமல் ஒரு குழந்தை போன்று ஆகிவிடுவாரா?

அப்படி என்றால், மீண்டும் பூமிக்கு வந்து எப்படி சிலுவையை முறிக்கப்போகிறார்? உலகிலுள்ள பன்றிகளைக் கொல்லப் போகிறார்? தஜ்ஜாலைக் கொல்லப் போகிறார்? யாஜுஜ்

மாஜுஜ் கூட்டத்தை ஒழிக்கப் போகிறார்? அவர்க்கு இறங்குமுகம் இல்லை, ஏறுமுகம் என்றால் கடந்த 2000 ஆண்டுகளில் எவ்வளவு உயரம், எவ்வளவு பருமன், எவ்வளவு எடை, எவ்வளவு ஆற்றல் கொண்டுள்ளார்! என்று கூற முடியுமா? அவ்வளவு உயரமாக, பருமனாக அவர் கீழே இறங்கி வரும் போது டமாஸ்கஸில் உள்ள வெள்ளை மினாரா அவரைத் தாங்குமா? என்று கணித்து அதைப் புதுப்பித்துக் கட்ட வேண்டும். அவர் எப்படி ஊரிலும் கடை வீதியிலும் நடப்பார் என்று ஒரு தனிப்பாதையை ஏற்பாடு செய்ய வேண்டும். அவர்க்குரிய உணவு, உடை போன்றவைகளை அளவிட்டு, ஏற்பாடு செய்ய வேண்டும். இறங்கு முகமும் இல்லை, ஏறுமுகமும் இல்லை அவர் பழைய முகம் தான் என்றால் அது எப்படி? என்று தக்க ஆதாரத்துடன் விளக்க வேண்டும். போகட்டும். அல்லாஹ் எதற்காக இத்தனை ஆண்டுகளாக அவரை இப்படி ஓரிடத்தில் பாதுகாத்து வைத்திருக்க வேண்டும்! இன்னும் எத்தனை ஆண்டுகளுக்கு அந்நிலையிலேயே வைக்கப் போகிறான்? பீ.ஜே யின் முன்னோர்கள் போய் விட்டார்கள். பீ.ஜே யும் போகப் போகிறார். அவருடைய பேரன் பேத்தியாவது ஈஸா நபியைக் காண்பார்களா? கொள்ளுப் பேரன்களோ, எள்ளுப் பேரன்களோ காண்பார்களா?

இஸ்லாத்தில் நபி (ஸல்) அவர்களை பின்பற்றி, திருக்குர்ஆனைப் பின்பற்றி, முஸ்லிம் உம்மத்தில் பிறந்து வளர்ந்த ஒருவர் அல்லாஹ்வுக்கு கிடைக்கவில்லையா? அந்த ஈஸா நபி வந்து சிலுவையை முறிப்பார் என்றால், இஸ்லாம் மத நல்லிணக்கத்தை உருவாக்கும் மார்க்கமாகுமா? இஸ்லாம் ஓர் இனிய மார்க்கமாகுமா? அவர் கோடானு கோடி பன்றிகளைக் கொன்று குவிப்பார் என்றால், இஸ்லாம் ஜீவ காருண்யத்தைப் போதிக்கும் மார்க்கமாகுமா? பன்றிகளைக் கொல்வதற்கு ஒரு நபி வரவேண்டுமா? பன்றி இனத்தைப் படைத்து இத்தனை ஆண்டுகள் வாழவிட்ட இறைவன் மொத்தமாக அவற்றை ஏன் அழிக்க வேண்டும்? இஸ்லாம் கொலை வெறி கொண்டது என்ற தப்பான எண்ணம் பிறருக்கு ஏற்படாதா?



## 5.தவஃப்பா என்ற சொல்லுக்குத் தவறான விளக்கம்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை 93 -ல் கைப்பற்றி உயர்த்துதல் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*திருக்குர்ஆனில் 3:55 வசனத்தில் முதவஃப்பீக என்ற சொல் மூலத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதற்கு கைப்பற்றுதல் என்றும் மரணிக்கச் செய்தல் என்றும் பொருள் உள்ளது. இதில் எது சரி என்பது பற்றி முழுமையான விபரம் 151வது குறிப்பில் காண்க.*

**நம் விளக்கம்:**

I. 93, 151 ஆகிய இரு குறிப்புகளையும் காண்போம். அவற்றில் தவஃப்பைத்தனீ எனும் சொல்லைப்பற்றி விளக்கப்பட்டுள்ளது. இச்சொல் திருக்குர்ஆனில் 25 இடங்களில் தான் பயன்படுத்தப்பட்டுள்ளது. இச்சொல்லுக்கு ரூஹை கைப்பற்றுதல் என்று தான் பொருளே தவிர கைப்பற்றுதல் என்று பொருள் இல்லை. இவ்வாறே 3:55 வசனமும் பொருள் தரும்.

உதாரணமாக திருக்குர்ஆன் 39:42 வது வசனத்தில், உயிர்களை மரணத்தின் போதும், மரணிக்காதவற்றைத் தூக்கத்தின் போதும் அல்லாஹ் கைப்பற்றுகிறான் என்று வருகிறது. 1) 39:42, 2) 6:60 ஆகிய இரு வசனங்களுக்கு பீ.ஜே கூறுவது போல், இரவில் கைப்பற்றுகிறான், தூக்கத்தில் கைப்பற்றுகிறான் என்று பொருள் இல்லை. தூக்கத்தின் போது ரூஹைக் கைப்பற்றுகிறான் என்றே பொருள். 3) எதன் மீது அல்லாஹ் மரணத்தை விதித்து விட்டானோ அந்த உயிர் அல்லாஹ்வின் கைவசத்தில் உள்ளது. 4) தூக்கத்தின் போது கைப்பற்றப்பட்ட உயிரை, குறிப்பிட்ட காலம் வரை வாழ விட்டு விடுகிறான்.

இந்தக் கருத்துக்களின் அடிப்படையில் **தவஃப்பீ** எனும் சொல் வரும் 25 இடங்களில், மரணத்தின் போது ரூஹைக் கைப்பற்றுதல் 23 இடங்களிலும், தூக்கத்தின் போது ரூஹைக் கைப்பற்றுதல் 2 இடங்களிலும் வருகிறது.

இதில் கைப்பற்றுகிறான் என்று தான் வருகிறது. மரணிக்கச் செய்தல் என்று பொருள் கொள்வதில்லை என்று பீ.ஜே எழுதியுள்ளார். இது தவறாகும்.

1) எதை கைப்பற்றுகிறான்? உயிர்களைக் கைப்பற்றுகிறான் என்று தான் வருகிறதே தவிர, கைப்பற்றுகிறான் என்று மட்டும் வரவில்லை.

2) உயிர்களைக் கைப்பற்றுதல் என்பது மரணத்தின் போதும் தூக்கத்தின் போதும் ஆகிய இரு இடங்களில் மட்டும் நடைபெறுகிறது. மூன்றாவது இடம் இல்லை.

பீ.ஜே தவஃப்பா என்ற சொல்லுக்கு முழுமையாக எடுத்துக் கொள்ளுதல் என்று பொருள் எனக் கூறியிருப்பது தவறாகும்.

மரணத்தின் மூலம் நிரந்தரமாகவும் தூக்கத்தில் கைப்பற்றப் படுவதின் மூலம் தற்காலிகமாகவும் ஒரு மனிதனின் உயிர் கைபற்றப்படுகிறது. அவ்வளவுதான்.

திருக்குர்ஆன் 4:15 வசனத்திற்கு அவர்களை மரணம் கைப்பற்றும் வரை வீட்டில் தடுத்து வையுங்கள். அதாவது மரணம் மரணிக்கச் செய்யும் வரை என்று இவ்வசனத்திற்குப் பொருள் கொள்ள முடியாது என்று பீ.ஜே எழுதியுள்ளார்.

அவர்களை மரணித்தின் போது ரூஹைக் கைப்பற்றும் வரை வீட்டில் தடுத்து வையுங்கள் என்று பொருள் கொடுக்க வேண்டும்.

II. திருக்குர்ஆனின் 2:281; 3:161; 3:185; 16:111 ஆகிய வசனங்களிலும் இதே சொல் தான் பயன்படுத்தப்பட்டுள்ளது. முழுமையாக கூலி தரப்படும் என்றுதான் பொருள் கொள்ள வேண்டும். மறுமையில் சாகடிக்கப்படுவார்கள் என்று பொருள் கொள்ள முடியாது என்று பீ.ஜே எழுதுகிறார்.

இந்த வசனங்களில் தவஃப்பா எனும் சொல் வந்தாலும், **மறுமை** எனும் சொல்லும், **செயல்** எனும் சொல்லும், **கூலி** எனும் சொல்லும் வருவதால், ஒருவரின் செயலுக்குரிய கூலி மறுமையில் முழுமையாகக் கொடுக்கப்படும் என்று பொருள் கொள்ள வேண்டும். இடத்திற்கேற்ப பொருள் கொள்ள வேண்டும். உதாரணமாக ஒருவர் தனக்கு கேன்ஸர் ஏற்பட்டுள்ளது. மருத்துவர்கள் குணப்படுத்தி விடலாம் என்கின்றனர். எனக்காக நீங்கள் துஆ செய்யுங்கள் என்று வேண்டினால், அறிவுள்ளவன் எவனும் கேன்ஸர் என்பதை நோய் என்று பொருள் கொள்வானே தவிர, கேன்ஸர் என்றால் கடகராசி என்றும், அதன் வல்லுநர்களான ஜோதிட விற்பன்னர்கள் கடகராசியின் தீங்கிலிருந்து காப்பாற்றி விடலாம் என்று கூறுகிறார்கள். அதற்காக துஆ செய்வோம் என்று எண்ணமாட்டான்.

மரணம் என்பது இம்மையில் நடக்கக்கூடியது. ஒருவரின் செயலுக்குரிய கூலி மறுமையில் தான் முழுமையாக கிடைக்கக் கூடியது. அல்லாஹ்வுக்கும் ரஸுலுக்கும் பகைவனாக விளங்கக்கூடிய ஒருவனுக்கு இம்மையில் ஒரு கூலி கிடைக்கும். ஆனால் அவனுக்குரிய முழுமையான கூலி மறுமையில் தான் கிடைக்கும். எனவே இவ்விரண்டின் பொருளையும் பீ.ஜே தன் சிந்தனையில் வைத்து சரியான பொருளை மக்களுக்கு கூற வேண்டும்.

III. என்னை **மரணிக்கச் செய்த போது** என்று இந்த இடத்தில் நாம் பொருள் கொண்டால், ஈஸா நபி **கியாமத் நாளின் அடையாளமாக** உள்ளார். (திருக்குர்ஆன் 43:61) என்ற வசனத்துடனும் ஈஸா நபி மரணிப்பதற்கு முன் வேதமுடையோர் அவரை நம்பிக்கை கொள்ளாமல் இருக்கமாட்டார்கள். (திருக்குர்ஆன் 4:159) என்ற வசனத்துடனும் மோதுகின்றது. கைப்பற்றுதல் என்று பொருள் கொண்டால் அவ்விரு வசனங்களுடன் ஒத்துப் போகின்றது என்று பீ.ஜே எழுதியுள்ளார்.

**நம் விளக்கம்:**

1. தவஃப்பீ எனும் சொல் ரூஹைக் கைப்பற்றுதல் அதாவது மரணம் என்றால், ஈஸா நபி மரணித்து விட்டார்கள் என்றால்,

திருக்குர்ஆன் 43:61 ; 4:159 ஆகிய வசனத்தின்படி அவர் உயிருடன் உள்ளார் என்று தெரிகிறதே! என்று பீ.ஜே கருதுகிறார். ரூஹைக் கைப்பற்றுதல் என்ற பொருளின்படி ஈஸா (அலை) மரணித்து விட்டார் என்றால், அவ்விரு வசனங்களுக்கும் பீ.ஜே தவறான பொருளைத் தந்து தானும் குழம்பி மக்களையும் குழப்புகிறார். அல்லாஹ்வின் வசனத்துடன் விளையாடுகிறார். அதனை விரிவாகக் காண்போம்.

தவஃப்பா எனும் சொல் வரும் 25 இடங்களில், இரவிலோ, தூக்கத்திலோ ரூஹ் கைப்பற்றப்படுவதற்கு தூக்கம் என்ற தற்காலிக மரணம் என்னும் பொருளில் இரு இடங்களில் வருகிறது. (6:61 ; 39:43) ஏனைய 23 இடங்களில், இரு இடங்களில் ஈஸா நபியுடனும் - 3:55 ; 5:116-118, ஓரிடத்தில் யூசுஃப் நபியுடனும் - 12:102, மூன்று இடங்களில் நபி (ஸல்) அவர்களுடனும் வருகிறது. நபிமார்களுடன் ஆறு இடங்களிலும், ஏனைய பதினேழு இடங்களில் மனிதர்களுடனும் வருகிறது.

ஈஸா நபியுடன் வருகிற 2 இடங்கள் நீங்கலாக ஏனையவர்களுடன் (4+17) 21 இடங்களில் வருகிறது. அந்த 21 இடங்களிலும் உயிரைக் கைப்பற்றுதல் எனும் பொருளில் தான் வருகிறது என்பதை ஏற்றுக் கொள்ளும் இவர்கள் ஈஸா நபியுடன் வரும் 2 இடங்ககளுக்கு மட்டும் கைப்பற்றுதல் எனும் பொருள் தந்து உடலோடு கைப்பற்றப்பட்டார் என்று வாதிக்கின்றனர். எனவே 21 இடங்களில் மரணத்தின் போது உயிரைக் கைப்பற்றுதல் எனும் பொருளில் வருவதைப் போலவே ஈஸா நபியுடன் வரும் இரண்டு இடங்களிலும் மரணத்தின் போது ரூஹைக் கைப்பற்றுதல் என்பதே பொருளாகும்.

2. திருக்குர்ஆன் 39:42 வசனத்தில், தவஃப்பா எனும் சொல்லுக்கு உயிரைக் கைப்பற்றுதல் எனும் பொருளைத் தான் அல்லாஹ் தந்துள்ளான். I. மரணத்தின் போது ரூஹைக் கைப்பற்றுதல் II. தூக்கத்தின் போது ரூஹைக் கைப்பற்றுதல் மூன்றாவதாக, கைப்பற்றப்படுவதற்கு எதையும் அல்லாஹ் கூறவில்லை. எனவே ஈஸா நபி மரணித்திருக்க வேண்டும் அல்லது தூங்கிக் கொண்டிருக்க வேண்டும். ஈஸா நபியுடன் 2 இடத்திலும் இரவு என்றோ, தூக்கம் என்றோ கூறப்படாததினால் அவரது ரூஹ், மரணத்தின் போது கைப்பற்றப்பட்டு விட்டது என்பதே பொருளாகும்.



3. திருக்குர்ஆன் 39:42 வசனத்தில், **அல்லாஹ் உயிர்களைத் தான் கைப்பற்றுவதாக கூறுகிறான். உடல் என்று அதில் கூறவில்லை.** மேலும் மரணத்தின் போது கைப்பற்றிய உயிரைத் தன்வசம் வைத்திருப்பதாகவும் தூக்கத்தின் போது கைப்பற்றிய உயிரை உயிர் வாழ்வதற்கு சில காலம் விட்டு விடுவதாகவும் கூறுகிறான். **எது கைப்பற்றப்பட்டதோ, அதுதான் இறைவன் அளவில் உயர்த்தப்பட்டு அவன்வசம் இருக்கும்.** ஈஸா நபியின் உயிர்தான் கைப்பற்றப்பட்டது. எனவே அவரது உடல் உயர்த்தப்பட்டது என்பது முற்றிலும் தவறாகும்.

4. ஈஸா நபியுடன் வரும் 2 இடங்களில், ஓரிடத்திற்கு அதாவது 5:116-118 வசனத்திற்கு நபி (ஸல்) அவர்கள் தன்னோடு ஒப்பிட்டுக் காட்டி, தன்னுடைய உயிர் கைப்பற்றப்பட்ட பிறகு தன் தோழர்களுள் சிலர் வழிகேட்டில் சென்று நரகிற்கு இழுத்துச் செல்லப்படுவதைக் கூறுகிறார்கள். இதுபோல் அவ்வசனத்திற்கு ஈஸா நபியின் உயிரும் கைப்பற்றப்பட்ட பிறகே, அவரது சமுதாயம் அவரையும் அவரது தாயையும் இரு தெய்வங்களாக ஆக்கிக்கொண்டனர் என்று நபி (ஸல்) அவர்கள் பொருள் தந்துள்ளார்கள். (புகாரி 4625)

இரண்டாவது வசனமாகிய 3:56 வசனத்திற்கு இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், அதில் வரும் முதவஃப்பீக்க எனும் சொல்லுக்கு முமீத்துக்க (மரணம்) என்று பொருள் தந்துள்ளார்கள். (புகாரி 4623 க்கும் 4625 க்கும் இடையில் காண்க)

எனவே ஈஸா நபி, முஹம்மது நபி (ஸல்) அவர்களைப் போன்றும், யூசுஃப் நபியைப் போன்றும், 17 இடங்களில் வரும் மனிதர்களைப் போன்றும் மவ்த் ஆகி விட்டார் என்பது தெளிவு. இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிவூன். திருக்குர்ஆனில் 17+4=21 இடங்களில் ஈஸா நபியின் மரணம் உறுதி செய்யப்பட்டுள்ளது.

5. நபிமொழிகளில் பல்லாயிரம் இடங்களில் தவஃப்பா எனும் சொல் மூலம் அவரது மரணம் உறுதி செய்யப்பட்டுள்ளது. அதாவது, அல்லாஹ் தவஃப்பா செய்தான் என்று வந்து, அதில் இரவு, உறக்கம் எனும் சொற்கள் வரவில்லையென்றால், அல்லாஹ் அவரது உயிரைக் கைப்பற்றி விட்டான் என்று பொருள். இவ்வாறு தவஃப்பா எனும் சொல் நபிமொழிகளில் பலருடன் பல்லாயிரம் முறை வந்துள்ளது. இப்படி வந்தால் அதற்கு **ரூஹைக் கைப்பற்றுதல் என்ற பொருளைத் தவிர வேறு பொருள் இல்லவே இல்லை. இருந்தால் ஒரேயொரு சான்றைக் கொண்டு வாருங்கள்.** போகட்டும்! அரபி இலக்கியங்களிலிருந்தாவது ஒரேயொரு சான்றைக் கொண்டு வர முடியுமா? ஆக, 21+ பல்லாயிரம் தடவைகள் தவஃப்பா எனும் சொல் ஈஸா நபியின் மரணத்தை உறுதி செய்கிறது. திட்டவட்டமான பொருளைத் தராத 43:61; 4:159 ஆகிய வசனங்களைக் காட்டி, ஈஸா நபி இறந்து விட்டார் என்றால் அவ்விரு வசனத்துடன் மோதுகிறது என்று திசை திருப்பும் பீ.ஜே தெளிவாகவும், திட்டவட்டமாகவும் ரூஹைக் கைப்பற்றுதல் என்று பொருளைத்தரும் தவஃப்பீ எனும் சொல்லுடன் ஈஸா நபி உயிருடன் இருக்கிறார் என்பது பல்லாயிரம் தடவை மோதுவதை சிந்திக்க வேண்டும்.

**பீ.ஜே கூறுகிறார்:**

*நான் அவர்களுடன் இருக்கும் போது பார்த்துக் கொண்டிருந்தேன். என்னை நீ கைப்பற்றிய போது நீயே*



*அவர்களுக்குப் பொறுப்பாளன் என்று தான் ஈஸா நபி கூறுவார்கள். நான் உயிருடன் இருந்த போது எனக் கூறாமல் **நான் அவர்களுடன் இருந்த போது என்று ஈஸா நபி கூறுவார்கள். இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டை நாம் சிந்திக்க வேண்டும். நான் உயிருடன் இருந்த போது என்று கூறி விட்டு ஃபலம்மா தவஃப்பைத்தனீ என்று அவர்கள் கூறினால், அந்த இடத்தில் என்னை மரணிக்கச் செய்த போது என்று தான் பொருள் கொள்ள முடியும்.** அல்லாஹ் அந்த வார்த்தைகளைத் தவிர்த்து விட்டு நான் அவர்களுடன் இருந்த போது என்ற முற்றிலும் வித்தியாசமாக வார்த்தையைப் பயன்படுத்தியுள்ளான்.*

*அதாவது ஈஸா நபியவர்கள் அவர்களுடன் இருந்து கண்காணிக்கும் நிலையையும் அடைவார்கள். உயிருடன் இருந்தும் அவர்களுடன் இல்லாமல் இருக்கும் நிலையையும் அடைவார்கள் என்பது தான் இதன் கருத்தாகும்.*

**நம் பதில்:**

1) நபிமொழிகள் திருக்குர்ஆனுக்கு விளக்கமாகும் என்பது 5:116-118 வசனத்திற்கு 100% பொருந்துகிறது. 5:118 வசனத்திற்கு பீ.ஜே தந்த அதி அற்புதமான விளக்கத்தைப் பார்த்தோம். இப்போது நபி (ஸல்) அவர்கள் தந்த விளக்கத்தைக் காண்போம். நபி (ஸல்) அவர்கள் நான் இறைவனின் நல்லடியாரான அந்த ஈஸா நபி (அலை) அவர்கள் கூறியதைப் போல, நான் அவர்களுடன் இருந்த காலம் வரை அவர்களுக்குச் சாட்சியாக இருந்தேன். ஆனால் நீ என்னை மரணிக்கச் செய்த பின் நீயே அவர்களைக் கண்காணித்தவனாக இருந்தாய் என்று கூறுவேன் என்று கூறியதாக புகாரியில் காணப்படுகிறது. பீ.ஜே சொல்வது போல் என்றால், **நபி (ஸல்) அவர்கள், அவர்களுடன் (நபித்தோழர்களுடன்) இருந்து கண்காணிக்கும் நிலையையும் அடைவார்கள். உயிருடன் இருந்தும் அவர்களுடன் இல்லாமல் இருக்கும் நிலையையும் அடைவார்கள் என்று பீ.ஜே நம்பத் தயாரா? அதாவது நபி (ஸல்)**

**அவர்கள் உயிருடன் இருக்கிறார்கள். நபித்தோழர்களுடன் இல்லாமல் இருக்கும் நிலையையும் அடைந்துள்ளார்கள் என்று நம்புகிறாரா?**

நீங்கள் எத்தனை ஆண்டுகள் நபி (ஸல்) அவர்களுக்கு இந்த அநீதியை, அவமானத்தை, களங்கத்தை செய்யப் போகிறீர்கள்?

2) **நான் அவர்களுடன் இருந்த போது** என்று ஈஸா நபி கூறுவது, நான் உயிருடன் அவர்களுடன் இருந்த போது என்று தான் பொருளே தவிர, **நான் உயிர் இல்லாமல் அவர்களுடன் இருந்த போது என்று பொருள் இல்லை.** எனவே, நான் அவர்களுடன் இருந்த போது நான் பார்த்துக் கொண்டிருந்தேன். என் ரூஹை கைப்பற்றிய பிறகு நீயே அவர்களை கண்காணித்தவனாக இருந்தாய் என்று பொருள் கூறி இருப்பது தான் முற்றிலும் சரியாகும். ஏனென்றால் உயிருடன் இருப்பவர் மட்டுமே சாட்சியாக இருக்க முடியும்.

அவர் மரணமடைந்ததினால் தான் மீண்டும் பூமிக்கு வருவது பற்றியோ அவரது சாட்சி பற்றியோ திருக்குர்ஆன் எதுவும் கூறவில்லை.

3) ஈஸா நபி, நான் அவர்களுடன் இருந்த போது என்று தான் கூறியுள்ளார். நான் உயிருடன் இருந்து போது என்று கூறவில்லை. இரண்டுக்கும் உள்ள வேறுபாட்டை நாம் சிந்திக்க வேண்டும் என்று பீ.ஜே சிந்தித்ததினால் சிந்திய முத்துக்களை மேலே கண்டோம். நான் அவர்களுடன் இருந்த போது கண்காணித்தவனாக இருந்தேன் என்றால், நான் உயிருடன் அவர்கள் மத்தியில் இருந்த போது அவர்களைக் கண்காணித்தவனாக இருந்தேன் என்பது தான் பொருள் என்பதை சிந்தித்து உணரத் தவறி விட்டார் பீ.ஜே.

43:62 வசனத்தின்படி **கியாமத் நாளின் அடையாளமாக ஈஸா இருப்பார்** என்றால் இஸ்ரவேலர்க்கு மட்டும் வந்த அந்த ஈஸா நபி இறந்து விட்டதனால், அதே ஈஸா என்ற பெயரில் முழு



உலகுக்கும் முஸ்லிம் உம்மத்தில் ஒருவர் வருவார் என்றே பொருள். 43:62 -ல், கியாமத் நாளின் அடையாளம் என்ற பொருளைக் காட்டிலும் **அந்த நேரத்தின் அடையாளம்** என்பதே சரியாகும். ஏனென்றால் அவ்வசனத்தில் இடம்பெறும் சொல் **சாஅ** என்பதாகும். இச்சொல் திருக்குர்ஆனில் இரு நபிமார்களின் தோற்றத்தையும் அவர்கள் மூலம் ஏற்படும் ஆத்மீகப் புரட்சியையும் இஸ்லாத்தின் வளர்ச்சியையும் குறிக்க வருகிறது. அவற்றுள் 1) திருக்குர்ஆன் 54:2 – அந்த நேரம் வந்து விட்டது. சந்திரனும் பிளந்து விட்டது. இதன்படி ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களது தோற்றத்தினை **அந்த நேரம் வந்து விட்டது** என்ற சொல் குறிக்கிறது. இங்கு சாஅ என்ற சொல்லுக்கு கியாமத் என்று பொருள் கொண்டால், நபி (ஸல்) அவர்களது காலத்தில் சொல்லப்பட்ட கியாமத் இன்று வரை நடக்கவில்லையே! என்ற கேள்வி எழும். எனவே, இங்கு சாஅ என்னும் சொல் ஒரு நபியின் தோற்றத்தைக் குறிக்கும் நேரத்தைக் குறிக்கிறது. அடுத்து **சந்திரன் பிளந்து விட்டது.** இதன்படி சந்திரனாகிய அரபு உலகம் பிளந்து அங்கு இஸ்லாமிய உலகம் தோன்றியது. இஸ்லாம் முழு உலகிலும் பரவி ஆத்மீகப் புரட்சி ஏற்பட்டது. இரண்டாவதாக, 43:62 –ன்படி கியாமத் நாள் என்று வரும் இடத்தில் சாஅ எனும் சொல் வருவதால் அந்த நேரத்தின் அடையாளமாக ஈஸா நபியின் இரண்டாவது தோற்றம் நிகழும். இஸ்லாம் அனைத்து மார்க்கங்–களையும் வெல்லும் என்று திருக்குர்ஆன் கூறும் அடையாளம் இதுதான். இந்த வசனங்களுக்கு (9:33; 48:29; 61:10) திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள், இது ஈஸா நபியின் வருகையின் போது நிகழும் என்று எழுதியுள்ளார்கள். (1. தஃப்ஸீர் ஜாமிஉல் பயான் தொகுதி 29, 2. தஃப்ஸீர் இப்னு ஜரீர் பாகம் 15; பக்கம் 72)

இவ்வாறு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களே ஈசப்னு மர்யமாக தோன்றினார்கள். அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் மூலம் அனைத்து மார்க்கங்களும் வெற்றி கொள்ளப்பட்டன.

அப்படியென்றால் அவர் மரணிக்கும் முன் வேதமுடையோர் அவரை நம்பிக்கை கொள்ளாமல் இருக்க மாட்டார்கள் (4:159) என்ற வசனத்திற்கு என்ன பொருள்?

ஈஸா நபி (அலை) உயிருடன் இருக்கிறார் என்றால், அவர் மீது நம்பிக்கை கொள்ளாமல் கடந்த 2000 ஆண்டுகளாக இஸ்ரவேல் சமுதாயத்தினர் இறந்து கொண்டே இருக்கின்றனரே! அந்த இஸ்ரவேல் சமுதாயத்தில் யாரும் இறக்காமல் அவரது இரண்டாவது வருகைக்காக கடந்த 2000 ஆண்டுகளாக உயிருடன் காத்துக்கொண்டு இருக்கின்றனரா? இல்லையே!

எனவே இஸ்ரவேலர் சமுதாயத்திற்கு மட்டும் வந்த ஈஸா நபி, வேதமுடையவர்கள் (பல கோத்திரத்து மக்களையும் தேடிச் சென்று அவர்களுள் பலர்) நம்பிக்கை கொண்ட பின்னரே இறந்தனர். இவ்வாறு அவர் மரணிக்கும் முன் வேதமுடையயோர்கள் நம்பிக்கை கொள்ளாமல் இருக்கமாட்டார்கள் என்பதும் நடந்து விட்டது.

## 6. ஈஸா நபி (அலை) வானத்திற்குச் சென்றார்கள் என்று நம்புவது இறைத்தூய்மைக்கு களங்கமாகும்.

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை 10-ல் தூய்மையானவன் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதியுள்ளார்.**

*ஸுப்ஹான் என்பது கடவுள் தன்மைக்குப் பங்கம் விளைவிக்கும் எல்லாத் தன்மைகளை விட்டும் தூய்மையானவன் என்பதே பொருளாகும்.*

**நம் விளக்கம்:**

1. திருக்குர்ஆனின் 3:192 வது வசனத்தில், ‘‘அவர்கள் நின்று கொண்டும், ஒரு பக்கமாக சாய்ந்து படுத்துக் கொண்டும் அல்லாஹ்வை (எப்போதும்) நினைத்துக் கொண்டிருப்பர். வானங்கள், பூமி ஆகியவற்றின் படைப்பு பற்றி சிந்தித்துக் கொண்டிருப்பர். எங்கள் இறைவா! நீ இதனை வீணாகப்



படைக்கவில்லை; **நீ தூயவன்.** எனவே நீ எங்களை நெருப்பின் தண்டனையிலிருந்து காப்பாற்றுவாயாக!’’ (எனக் கூறுவர்).

இதில் வானங்களையும் பூமியையும் அல்லாஹ் வீணாகப் படைத்துள்ளான் என்று எண்ணுவது அல்லாஹ்வின் பரிசுத்தத் தன்மைக்கு பங்கம் விளைவிப்பதால் **நீ தூயவன்** என்று கூறப்பட்டுள்ளது.

2. திருக்குர்ஆனின் 5:117வது வசனத்தின், ‘‘மர்யமின் மகன் ஈஸாவே! நீர் மக்களிடம் அல்லாஹ்வையன்றி என்னையும் என் தாயையும் இரண்டு கடவுள்களாக ஆக்கிக் கொள்ளுங்கள் என்று கூறினீரா? என அல்லாஹ் கேட்ட போது, அவர் **நீ தூயவன்** எனக் கூறினார்.

இதில் ஈஸா நபியையும் அவருடைய தாயையும் இரண்டு தெய்வங்களாக ஆக்கிக் கொள்வது இறைவனின் தூய்மைக்கு களங்கம் கற்பிப்பதாகும். ஆனால் **இறைவனோ இந்தக் களங்கத்தில் இருந்து தூயவன் ஆவான்** என்ற கருத்து கூறப்பட்டுள்ளது.

3. திருக்குர்ஆனின் 7:144 வது வசனத்தில், ‘‘அவர் (மூஸா) என் இறைவா! நான் உன்னைப் பார்க்கும் பொருட்டு நீ (உன்னை) எனக்குக் காட்டுவாயாக! என்று வேண்டினார். இதற்கு அவன் உம்மால் என்னை ஒருபோதும் காணவியலாது. ஆயினும் மலையின் பக்கம் பார்ப்பீராக! அது தனது இடத்தில் நிலைத்திருந்தால் நீர் என்னைக் காண்பீர் என பதிலளித்தான். பின்னர் அவருடைய இறைவன் மலையின் மீது தானே தோற்றமளித்த போது, அதனைத் தவிடு பொடியாக்கி விட்டான். மேலும் மூஸா மயங்கி விழுந்தார். பின்னர் அவருக்கு மயக்கம் தெளிந்த போது (என் இறைவா!) **நீ எல்லாக் குறைகளிலிருந்தும் தூய்மையானவன்...**’’ என்றார்.

இதில் ஒரு நபி இறைவனை **தன் புறக்கண்ணால் காண்பது என்பது இறைவனின் தூய்மைக்குக் களங்கம்** ஏற்படுத்தக் கூடியதாகும் என்ற கருத்தை இறைவன் கூறுகிறான்.

4. திருக்குர்ஆனின் 9:31வது வசனத்தில், "*அவர்கள் அல்லாஹ்வையன்றித் தங்கள் சமய அறிஞர்களையும் துறவிகளையும் இவ்வாறே மரியத்தின் மகன் மஸீஹையும் தங்கள் கடவுள்களாக ஆக்கிக் கொண்டனர்.... அவர்கள் வைக்கின்ற இணையை விட்டும் அவன் தூயவன்.*"

இதில் அல்லாஹ் அல்லாத சமய அறிஞர்களையும் துறவிகளையும் மர்யத்தின் மகன் மஸீஹையும் கடவுள்களாக ஆக்குவது இணை வைத்தல் ஆகும். இது இறைவனின் ஸுப்ஹான் என்ற பண்புக்கு மாற்றமாகும் என்று கூறப்பட்டுள்ளது.

5. திருக்குர்ஆனின் 21:23வது வசனத்தில், "*(வானங்கள், பூமி) ஆகிய அவ்விரண்டிலும் அல்லாஹ்வையன்றி வேறு கடவுளர்கள் இருந்திருப்பின் அவை இரண்டும் பெருங் குழப்பத்திற்கு இரையாகி அழிந்திருக்கும். எனவே அரியணைக்குரிய இறைவனாகிய அல்லாஹ் எல்லாக் குறைபாடுகளிலிருந்தும் அவர்கள் கூறுபவற்றிலிருந்தும் தூய்மையானவன்.*"

இதில் வானங்கள் பூமி ஆகியவற்றில் **ஒன்றுக்கு மேற்பட்ட கடவுள்கள் இருக்கின்றனர்** என்று கூறும் குறைகளிலிருந்து அல்லாஹ் **தூயவன்** என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

மேலே கூறப்பட்டுள்ள வசனங்களிலிருந்து நாம் விளங்குவது, அல்லாஹ்வுக்குப் பங்கம் விளைவிக்கும் – களங்கம் கற்பிக்கும் – ஒரு செயல் கூறப்பட்டால், அல்லாஹ் (அதனையே) ஸுப்ஹான் என்று கூறுவதன் மூலம் மறுப்பதைக் காணலாம். அதாவது அல்லாஹ் ஸுப்ஹான் என்று ஒரு வசனத்தில் கூறப்பட்டிருந்தால் அதற்கு மேலே அல்லாஹ்வுக்கு மாற்றமான, அல்லாஹ்வின் கண்ணியத்திற்கு பங்கம் உண்டாக்கும், களங்கமோ கறையோ உண்டாக்கும் ஒரு செயல் கூறப்பட்டிருக்கிறது என்று விளங்குகிறோம். இந்த அளவுகோலின் அடிப்படையில் நாம் குர்ஆன் 17:94 ஆம் வசனத்தைக் காண்போம். 17:94 ஆம் வசனத்தில்,



மக்கத்து மக்கள் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களிடம், நீர் வானத்திற்கு ஏறிச் செல்ல வேண்டும். நாங்கள் படிக்கத்தக்க ஒரு நூலை எங்களுக்குக் கொண்டு வராத வரை நீர் வானத்திற்கு ஏறிச் சென்றதையும் நாங்கள் நம்பமாட்டோம் என்று கூறுகின்றனர். அதற்கு அல்லாஹ் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களிடம், என் இறைவன் தூயவன். நான் ஒரு மனிதனாகிய தூதரேயன்றி வேறு அல்லன் என்று பதில் கூறுமாறு கூறுகின்றான்.

இதில் இறைவன் தூயவன் என்ற சொல் ஒரு நபி உடலுடன் வானிற்குச் சென்று மீண்டும் வருவது என்பது அல்லாஹ்வின் **ஸுப்ஹான் என்ற பண்புக்கு மாற்றமானது என்றும், ஒரு மனிதத் தூதரால் அவ்வாறு உடலுடன் வானுக்கு ஏறிச் சென்று மீண்டும் திரும்பி வர முடியாது என்ற கருத்தும் கூறப்பட்டுள்ளது.**

பீ.ஜே போன்ற மவ்லவிகள், ஈஸா நபி தன் உடலுடன் வானுக்கு சென்றுள்ளார். அவரே மீண்டும் வருவார் என்று நம்புவது, அல்லாஹ்வின் ஸுப்ஹான் என்ற இறை பண்புக்கு பங்கமும் களங்கமும் கறையும் கற்பிக்கும் நம்பிக்கையாகும் என்றும் அப்படி நம்புவது ஈஸா நபியை ஒரு மனிதத் தூதர் இல்லை என்று மறுக்கும் செயலாகும் என்பதை நெஞ்சில் நிறுத்த வேண்டும். இல்லை என்றால் அவர்கள் தானும் வழிகெட்டு, மக்கள் சமுதாயத்தையும் வழிகெடுத்த பாவத்திற்கு ஆளாக நேரும் என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும்.

அது மட்டும் இல்லை. **ஈஸா நபி (அலை) அவர்கள் உடலுடன் உயர்த்தப்பட்டுள்ளார். அவரே மீண்டும் வருவார் என்று நம்பினால், ஸுப்ஹான் தரும் கருத்தின் அடிப்படையில் கீழே வருபவற்றையும் நம்ப வேண்டியது வரும்.**

1. அல்லாஹ் வானங்களையும் பூமியையும் வீணாகப் படைத்துள்ளான் என்று நம்புவதாக பொருள். (3:192)
2. ஈஸா நபியையும் அவருடைய தாயையும் இரு தெய்வங்களாக நம்புகிறார் என்று பொருள். (5:117)

3. மூஸா நபி (அலை) அவர்கள் அல்லாஹ்வை தம் புறக்கண்ணால் கண்டார் என்று நம்புவதாக பொருள். (7:144)

4. சமய அறிஞர்களையும் துறவிகளையும் ஈஸா நபி (அலை) அவர்களையும் ரப்புகளாக ஏற்றுக் கொள்கின்றனர் என்று பொருள். (9:31)

5. வானம், பூமி ஆகியவற்றுள் அல்லாஹ்வுடன் வேறு கடவுள் இருப்பதாக நம்புகிறார் என்று அர்த்தம். (21:23)

6. அல்லாஹ் தனக்கென ஒரு மகனை உருவாக்கிக் கொண்டான் என்று நம்புகிறார் என்று பொருள். (21:27)

7. அல்லாஹ்வைத் தவிர பிறருக்கு படைத்தல், உணவு கொடுத்தல், மரணத்தைக் கொடுத்தல், உயிர் கொடுத்தல் ஆகிய ஆற்றல்கள் இருக்கிறன என்று நம்புகிறார் என்று பொருள். (30:41)

அல்லாஹ் உங்களையும் என்னையும் ஈஸா (நபி) உடலுடன் வானுக்கு உயர்த்தப்பட்டுள்ளார் என்று நம்பி சுப்ஹான் என்ற பண்புக்கு களங்கம் கற்பிப்பதிலிருந்தும் மேலே காட்டியுள்ள ஷிர்க்கான நம்பிக்கையிலிருந்தும் காத்தருள்வானாக! ஆமீன்.

## II. நபித்துவம் தொடர்கிறது

### 7. நபிமார்களுள் சிலரை ஏற்று சிலரை மறுப்பதே இறைத்தூதர்களிடையே பாகுபாடு காட்டுதலாகும்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 37-இல் இறைத் தூதர்களிடையே பாகுபாடு காட்டுதல் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இவர்தான் பணியைச் சிறப்பாகச் செய்தார். அவர் சிறப்பாகச் செய்யவில்லை. என்றெல்லாம் கூறினால் அது பாகுபாடு காட்டும் குற்றமாக அமையும் என்று எழுதியுள்ளார். அதாவது,*

*இந்த நபி தன் பணியைச் சிறப்பாகச் செய்தார். அந்த நபி தன் பணியைச் சிறப்பாகச் செய்யவில்லை என்று கூறுவது தான்*



*இறைத் தூதர்களிடையே பாகுபாடு காட்டுதல் என்று ஒரு கருத்தைக் கூறியுள்ளார்.*

*மூஸா நபியின் இடத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இருந்திருந்தால் இதைவிடச் சிறப்பாகச் செய்திருப்பார்கள் என்று கூறினால் அது பாகுபாடு காட்டியதுடன் இறைவனின் தேர்வைக் குறை கூறிய குற்றமாகவும் அமையும் என்றும் இன்னொரு கருத்தையும் தருகிறார்.*

*எல்லாத் தூதர்களுமே தமக்கு வழங்கப்பட்ட பணியில் எள் முனையளவும் குறையில்லாமல், விலை போகாமல் மனிதர்களுக்கு அஞ்சாமல் மறுமையை விட இவ்வுலகைப் பெரிதாக நினைக்காமல் சிறந்து விளங்கினார்கள் என்று நம்புவது தான் பாகுபாடு காட்டக் கூடாது என்பதன் கருத்து என்றும் எழுதியுள்ளார்.*

*(பார்க்க : திருக்குர்ஆன் 2:136; 2:285; 3:84)*

**நம் விளக்கம்:**

பீ.ஜே காட்டியுள்ள திருக்குர்ஆன் வசனங்களுடன் 4:150 வசனத்தையும் நாம் ஆய்வுக்காகப் பார்க்க வேண்டும். பீ.ஜே எழுதியுள்ள கருத்துக்களை தொகுத்துப் பார்த்தால், அந்த நபி தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட பணியைச் சிறப்பாகச் செய்தார், இந்த நபி தன் பணியைச் சிறப்பாகச் செய்யவில்லை என்றும், மூஸா நபியின் இடத்தில் நபி (ஸல்) அவர்கள் இருந்திருந்தால் அவரை விட இவர் தம் பணியைச் சிறப்பாகச் செய்திருப்பார் என்றும் நினைக்கக் கூடாது என்றும், எல்லாரும் தத்தமது பணியில் சிறந்து விளங்கினார்கள் என்றும் எண்ண வேண்டும் என்று எழுதுகிறார்.

**அதாவது நபித்துவ பணியில் பாகுபாடு காட்டக் கூடாது என்பதே அதன் பொருள் என்று கருதுகிறார். இது சரியா** என்பதனை அவர் காட்டியுள்ள திருக்குர்ஆன் வசனங்களிலிருந்து காண்போம்.

**2:137-138 வசனத்தைக் காண்க. இவ்விரு வசனங்களில்,**

1. அல்லாஹ்வையும், எங்களுக்கு வழங்கப்பட்டதையும்,
2. இப்றாஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யாஃகூப் அவரது வழித் தோன்றல்களுக்கு அருளப்பட்டதையும்,
3. ஏனைய நபிமார்களுக்கு வழங்கப்பட்டதையும்,
4. ஈமான் கொள்ள வேண்டும்
5. நீங்கள் ஈமான் கொண்டது போல் அவர்களும் ஈமான் கொண்டால் நேர்வழி பெறுவர்.
6. இதைப் புறக்கணித்தால் எதிரிகளே என்று கூறப்பட்டுள்ளது.

அதாவது, 1) அல்லாஹ்வின் மீது **ஈமான் கொள்ளுதல்** 2) அவன் அனுப்பிய **நபிமார்கள் எல்லாரிடமும் ஈமான் கொள்ளுதல்** 3) அவர்களுக்கு அருளப்பட்டதன் மீது **ஈமான் கொண்டால்** நேர்வழி எனக் கூறப்பட்டுள்ளது. நபிமார்களிடம் பாகுபாடு காட்ட மாட்டோம் என்று கூறப்பட்டுள்ளது.

2:185 வசனத்தில், 1) அல்லாஹ்வை ஈமான் கொள்ளுதல் 2) மலக்குகள் மீது ஈமான் கொள்ளுதல் 3) வேதங்கள் மீது ஈமான் கொள்ளுதல் 4) அவனுடைய தூதர்கள் மீது ஈமான் கொள்ளுதல் 5) அவனுடைய தூதர்களுக்கிடையில் பாகுபாடு காட்டாதிருத்தல்.

**3:84 வசனமும், 2:136 வசனமும் ஒன்றுதான். இம்மூன்று வசனங்களும்,**

1) அல்லாஹ்வின் மீதும் 2) அவனது மலக்குகள் மீதும் 3) அவனுடைய எல்லா நபிமார்கள் மீதும் 4) அவர்களுக்கு வழங்கப்பட்டவை மீதும் ஈமான் கொள்ள வேண்டும் என்றும் **நபிமார்களுக்கிடையில் ஈமான் கொள்வதில் பாகுபாடு காட்டக் கூடாது என்றும் கூறுகிறது. அதாவது நபிமார்கள் சிலரை ஈமான் கொள்வதும் நபிமார்கள் சிலரை ஈமான் கொள்ளா –திருப்பதும் அவர்களுக்கிடையில் பாகுபாடு காட்டுவதாகும் என்று கூறுகிறது.**



இக்கருத்தை 4:150 வது வசனம் தெளிவாகக் கூறுகிறது,

1. அல்லாஹ்வையும் அவனது தூதரையும் மொத்தமாக மறுத்தல்.
2. சில தூதர்களை ஏற்று மற்றும் சில தூதர்களை மறுத்தல்.
3. அல்லாஹ் அனுப்பிய நபிமார்கள் இவர்கள் தான். அல்லாஹ்வினால் அனுப்பப்பட்ட ரஸூல்மார்களை ரஸூல்மார்கள் இல்லை என்று கூறுவது அல்லாஹ்வுக்கும் ரஸூலுக்கும் இடையில் பாகுபாடு காட்டுதல்.

1. IFT திருக்குர்ஆன் விளக்கவுரை
2. அப்துல் வஹ்ஹாபியின் தர்ஜுமா
3. சவூதி அரசின் வெளியீடு
4. அன்வாருல் குர்ஆன்
5. தப்ஸீர் இப்னு கஸீர்
6. ஜான் டிரஸ்ட்
7. தப்ஸீர் ஹமீத்
8. சிராஜுத்தின் நூரியின் தர்ஜுமா
9. தாவூத் ஸா விரிவுரை
10. அப்துல் ஹமீது பாகவி

**இவர்கள் 4:150 வசனத்திற்கு நபிமார்களுள் சிலரை ஏற்று சிலரை மறுப்பது என்றே பொருள் தந்துள்ளனர்.**

## நபிமார்கள் வரலாறு

ஆதம் நபி முதல் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் வரை வந்த நபிமார்களின் வரலாற்றை பாகுபாடு என்ற கண்ணோட்டத்தில் நாம் ஆய்வு செய்தால்,

1. ஒவ்வொரு சமுதாயத்துக்கும் நபி ஒருவர் அனுப்பப்பட்ட போதெல்லாம் ஒரு சிலர் ஈமான் கொண்டனர். பெரும்பாலார் மறுத்தனர். அந்தந்த நபியை ஈமான் கொள்வதில் தான் பாகுபாடு காணப்பட்டுள்ளதே தவிர பீ.ஜே கூறுவது போல் அந்த நபியை விட இந்த நபி தம் பணியைச் சிறப்பாகச் செய்தார் என்றோ இவராக இருந்தால் அவரைவிட தம் பணியைச் சிறப்பாகச்

செய்திருப்பார் என்றோ பாகுபாடு காட்டப்பட்டதாக திருக்குர்ஆன், நபிமொழிகளிலிருந்து நமக்குத் தெரியவில்லை.

2. யூதர்களிடையே ஈஸா நபி வந்த போதும் இவ்வாறே சிலர் ஈமான் கொண்டனர்; பலர் மறுத்தனர். பீ.ஜே பாகுபாடு பற்றிக் கூறியிருப்பது போல் அவர்கள் கூறியதாகத் தெரியவில்லை.

3. ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் மூஸா நபியையும் ஈஸா நபியையும் ஈமான் கொண்டோருள் சிலர் நபி (ஸல்) அவர்கள் மீதும் ஈமான் கொண்டனர். ஆனால் பலர் மறுத்தனர். நபித்தோழர்கள் யாரும் முன்னர் வந்த நபிமார்களின் பணியைப் பற்றி பீ.ஜே எழுதியிருப்பது போல் (ஓரிருவரைத் தவிர வேறு எவரும்) பேசியிருப்பதாக தெரியவில்லை. எனவே, **நபிமார்களுக்கு இடையே பாகுபாடு என்பது நபிமார்களுள் சிலரை ஏற்பதையும் சிலரை மறுப்பதையும் தான் குறிக்கும்.**

திருக்குர்ஆன் இவ்வாறு கூறுவதிலிருந்து, எதிர்காலத்தில் முஸ்லிம் உம்மத்தில் திருக்குர்ஆனையும் நபிவழியையும் பின்பற்றி உம்மத்தி நபி வருவார் என்பதையும் அன்னாரை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும், அன்னாரை மறுப்பது, நபிமார்களிடையே வேறுபாடு காட்டுவதாகும் என்ற கருத்து வலியுறுத்தப்பட்டுள்ளது.

ஒரு நபியை மறுப்பது என்பது அதற்கு முன்னர் வந்த அனைத்து தூதர்களையும் மறுப்பதாகும். இன்றைய முஸ்லிம் உலகு தங்களுக்கு அனுப்பப்பட்ட ஒரு தூதரை மறுக்கிறார்கள் என்றால், அவர்கள் ஆதம் நபி முதல் நபி (ஸல்) அவர்கள் வரை எல்லாத் தூதர்களையும் மறுக்கிறார்கள் என்று தான் பொருள். அதாவது இவர்கள் பிற நபிமார்கள் காலத்தில் இருந்தாலோ, அல்லது பிற நபிமார்கள் இவர்கள் காலத்தில் வந்தாலோ அந்தந்த நபிமார்களை இவர்கள் மறுத்து விடுவார்கள். அல்லாஹ் நம்மை அத்தகு குஃப்ரிலிருந்து காத்தருள்வானாக.



பீ.ஜே மேலும், எல்லா இறைத்தூதர்களையும் சமமான தகுதிகளுடன் அல்லாஹ் அனுப்பவில்லை. ஒருவருக்கு வழங்காத தகுதிகள் மற்றவருக்கு அல்லாஹ் வழங்கியுள்ளான். அல்லாஹ் வழங்கிய அந்தச் சிறப்புகளை நாமும் எடுத்துக் கூறுவது பாகுபாடு காட்டுவதாக ஆகாது. ஈஸா நபி தந்தையின்றி பிறந்தார்கள். இன்று வரை உயிருடன் இருக்கிறார்கள் என்று எழுதுகிறார்.

**நம் விளக்கம்:**

இவற்றில் ஈஸா நபிக்கு அல்லாஹ் வழங்காத சிறப்புகளை அவர்க்கு மட்டும் இருப்பதாக காட்டுகிறார்.

தந்தையின்றி அவர் மட்டும் பிறக்கவில்லை. அவர்க்கு முன்பும் அவர்க்கு பின்பும் பலர் பிறந்துள்ளனர். மேலும் இன்றுவரை உயிருடன் இருக்கிறார் என்பதும் தவறான கருத்தாகும்.

ஈஸா நபி தந்தையின்றிப் பிறந்துள்ளார்கள். **அவரைத் தவிர வேறு எவரும் அவ்வாறு பிறக்கவில்லை என்று அல்லாஹ்வோ, நபி (ஸல்) அவர்களோ கூறியுள்ளதாக எடுத்துக்காட்ட முடியுமா?**

ஆதம் நபி (அலை) அவர்கள் தாயும் தந்தையுமின்றி பிறந்ததாக பீ.ஜே நம்புகிறாரே?அன்னை ஹவ்வா (அலை) அவர்களுக்கு தந்தையும் தாயும் யார்? பீ.ஜே எடுத்துக் காட்டுவாரா? இவை பீ.ஜே யின் நம்பிக்கை ஆகும்!

இறைவன் திருக்குர்ஆனில் ஈஸா நபியின் பிறப்பைக் குறித்து இரு இடங்களில் கூறியுள்ளான். இதிலிருந்து அல்லாஹ் இவ்வாறும் **தந்தையின்றி தாய்க்கு மட்டும் பிள்ளைகளை பிறக்கச் செய்வதும் அல்லாஹ்வின் நடைமுறைகளுள் ஒன்று என்று கொள்ள வேண்டுமே தவிர வேறு எவரும் அவ்வாறு பிறக்கவில்லை என்று நம்புவது தவறாகும்.**

திருக்குர்ஆனில் ஈஸா நபியின் பிறப்பு பற்றிக் கூறும் வசனங்களுக்கு மேலே ஸகரிய்யா நபிக்கு யஹ்யா நபியின் பிறப்பு பற்றிக் கூறுகிறான்.

**திருக்குர்ஆன் 3:41 வது வசனம்,**

அவர் என் இறைவா! நான் முதுமை அடைந்தும் என் மனைவி மலடியாகவும் இருக்கும் நிலையில் நான் ஒரு ஆண் மகனை எவ்வாறு பெறுவேன்? என்றார். (அதற்கு) அவ்வாறே, அல்லாஹ் தான் விரும்புவதைச் செய்கிறான் என்று கூறினான்.

திருக்குர்ஆன் 19:9 வசனத்திலும் இதே போன்றே கூறப்பட்டுள்ளது. இவ்வசனங்களில் முதிர்ந்த, முதுமையடைந்த ஆணுக்கும் மலடியான ஒரு பெண்ணுக்கும் குழந்தையைக் கொடுத்துள்ளான். அவர் பெயர் யஹ்யா நபியாகும். இவ்வாறும் குழந்தை கொடுக்கிறான். திருக்குர்ஆனில்,

1. கணவன் மனைவியாக இருந்தும் பிள்ளை பேறு இல்லாத நிலை – இதுவும் இறைவனின் நடைமுறை.
2. தாய், தந்தைக்கு ஆண், பெண் இரு குழந்தைகள் பிறக்கின்றன. இதுவும் இறைவனின் நடைமுறை.
3. சில பெற்றோர்க்கு ஆண் குழந்தைகள் மட்டும் சில பெற்றோர்க்கு பெண் குழந்தைகள் மட்டும் பிறக்கின்றன. இதுவும் இறைவனின் நடைமுறை.
4. தந்தையின்றி தாய்க்கு மட்டும் பிள்ளை பிறப்பது இதுவும் இறைவனின் நடைமுறை.
5. தந்தை முதியவர், தாய் மலடி – இவர்களுக்கும் பிள்ளை தருவது இறைவனின் நடைமுறை.

இல்லை என்றால், அல்லாஹ் பொருத்தமற்ற, தவறான உதாரணத்தைக் கூறியுள்ளான் என்று நம்ப நேரிடும். (நவூதுபில்லாஹ்). மேலும் விவரங்களுக்கு ஹஸ்ரத் மஸீஹ் ஈஸப்னு மர்யம் அவர்களின் மரணம் எனும் நூலில் தந்தையில்லாப் பிறப்பு (பக்கம் 101) எனும் தலைப்பில் காண்க.



## 8. ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்கள் மெய்ப்பிக்கும் ஒரு தூதராவார்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 95 - இல் நபிமார்களிடம் எடுத்த உறுதிமொழி என்னும் தலைப்பில் பீ.ஜே கூறியிருப்பதன் சுருக்கமாவது:**

*உங்களுக்கு வேதத்தையும் ஞானத்தையும் நான் தந்த பின் இன்னொரு தூதர் உங்களிடம் வந்தால் அவரை ஏற்று உதவ வேண்டும் என்பது தான் உடன்படிக்கை. (திருக்குர்ஆன் : 3:81)*

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உட்பட எல்லா நபிமார்களிடமும் எடுக்கப்பட்ட உடன்படிக்கையை இவ்வசனம் கூறுகிறது. இதில் உங்களிடம் ஒரு தூதர் வந்தால் என்று அல்லாஹ் கூறுகிறான். ஒரு நபிக்குப் பின் இன்னொரு நபி வருவதை இவ்வசனம் கூறவில்லை. ஒரு நபி வாழ்ந்து கொண்டிருக்கும் போது அவரிடம் இன்னொரு நபி வருவதையே இவ்வசனம் குறிக்கிறது.*

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வாழும் காலத்தில் துணைக்கு மேலும் சிலரை அல்லாஹ் நியமித்திருந்தால் அதை மனப்பூர்வமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதே இதன் கருத்தாகும்.*

*இந்த இடத்தில் இவ்வசனத்திற்கு எதிராக முஸ்லிம்களில் பலரிடம் காணப்படும் தவறான நம்பிக்கையையும் சுட்டிக் காட்டும் கடமை நமக்கு இருக்கிறது.*

*கில்ரு நபி என்று ஒருவர் இருக்கிறார். அவர் ஹயாத் நபி; அவர் பூமியில் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்பது தான் அந்த நம்பிக்கை. அந்த நம்பிக்கை தவறானது என்பதை இவ்வசனம் சந்தேகமற அறிவிக்கிறது.*

*கில்ரு நபி உயிருடன் இருக்கும் போது முஹம்மது நபியவர்கள் தூதராக அனுப்பப்படுகிறார்கள் என்றால் நபிமார்களிடம் எடுக்கப்பட்ட உறுதிமொழியின்படி அவர் என்ன செய்திருக்க*

*வேண்டும்? நபிகள் நாயகத்தை தேடி அவர் ஓடி வந்திருக்க வேண்டும். அவர்கள் கஷ்டப்பட்ட நேரத்தில் உதவிகள் புரிந்திருக்க வேண்டும். பத்ரு, உஹதுப் போர்களில் பங்கெடுத்திருக்க வேண்டும்.*

*அவ்வாறு ஏதும் நடக்கவில்லை. நடந்ததாக எந்தச் சான்றும் இல்லை. உயிருடன் அவர் இருந்திருந்தால் இந்த உடன்படிக்கையை நிறைவேற்றியிருக்க வேண்டும். இவ்வசனத்திலிருந்து கில்ரு நபி உயிருடன் இல்லை என்பதையும் கூடுதலாக அறிந்து கொள்ளலாம்.*

**நம் விளக்கம்:**

**திருக்குர்ஆன் 3:82-83 வசனத்தில் கூறப்பட்டபடி,**

1. எல்லா நபிமார்களிடமும் உடன்படிக்கையை எடுக்கிறான் திருக்குர்ஆன் 33:8 வசனத்தின் படி நபி (ஸல்) அவர்களிடமும், நூஹ், இப்றாஹீம், மூஸா, ஈஸா ஆகிய நபிமார்களிடமும் இந்த உறுதிமொழி எடுக்கப்படுகிறது.
2. உறுதி மொழியாவது : வேதத்ததையும் ஞானத்தையும் தந்த பின் அதை மெய்ப்பிக்கும் தூதர் (உண்மைப்படுத்தும் தூதர்) உங்களிடம் வருவார்.
3. அப்படி வந்தால், அவர் மீது ஈமான் கொண்டு, அவருக்கு உதவி செய்ய வேண்டும்.
4. இந்த உடன்படிக்கையைப் புறக்கணிக்கின்றவர் வரம்பு மீறியவர்கள் ஆவர் என்று கூறுகிறது.

பீ.ஜே, ஒரு நபி வாழ்ந்து கொண்டிருக்கும் போது அவரிடம் இன்னொரு நபி வருவதையே இந்த வசனம் குறிக்கிறது என்கிறார். இது தவறு. எப்படி?

1. தூதரிடம் எடுக்கும் உறுதி மொழிகள் பொதுவாகவே அந்தத் தூதரை அனுப்பியவரிடத்தில் எடுக்கின்ற உறுதிமொழி தான் என்று பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 334 ல் கூறுவதே அவர்க்கு பதிலாகும்.



2. உதாரணமாக மூஸா நபிக்கு வேதத்தையும் ஞானத்தையும் கொடுத்தபின், அவர் காலத்தில் உடன் இருந்த ஹாரூன் நபி வந்தார். அப்படி வந்தவர் அவற்றை மெய்ப்பிக்க வந்தார் என்று திருக்குர்ஆனோ நபிமொழிகளோ கூறவில்லை. வேதத்தையும் ஞானத்தையும் கொண்டு வந்தவர் வாழ்ந்து கொண்டிருக்கும் போது அதை உண்மைப்படுத்தும் தூதர் அவரிடம் ஏன் வர வேண்டும்?

   ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள், இறைத் தூதர்கள் மூஸா (அலை), ஈஸா (அலை) ஆகிய இருவரும் (தற்போது) உயிருடன் இருந்தாலும் என்னைப் பின்பற்றுவதைத் தவிர அவ்விருவருக்கும் வேறு வழியில்லை. (ஆதாரம்: தஃப்ஸீர் இப்னு கஸீர் 3:81 வசனத்தின் விளக்கம்) என்று கூறியுள்ளார்கள்.
3. வேதத்தையும் ஞானத்தையும் உண்மைப்படுத்த வேண்டிய ஒரு காலகட்டம் வரும் போது மெய்ப்பிக்கும் தூதர் வரவேண்டுமே தவிர வேதத்தையும் ஞானத்தையும் கொண்டு வந்தவர் வாழும் காலத்தில் வர வேண்டிய தேவையில்லை. ஏனென்றால் அவரே அவற்றை கற்றுக் கொடுத்துக் கொண்டும் அம்மக்களை அதன் வழியில் நடத்திக் கொண்டும் இருப்பார்.
4. திருக்குர்ஆனில் மெய்ப்பிக்கும் தூதர் என்று ஏறக்குறைய 3 இடங்களில் ஈஸா நபியைப் பற்றி கூறப்பட்டுள்ளது. (3:51, 5:47, 61:7) ஈஸா நபியோ தவ்ராத்தை மெய்ப்பிக்க மூஸா நபியின் காலத்தில் வரவில்லை. மாறாக 1400 ஆண்டுகள் கழித்து தோன்றினார்.

**பீ.ஜே கூறுகிறார்:**

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வாழும் காலத்தில் துணைக்கு மேலும் சிலரை அல்லாஹ் நியமித்திருந்தால் அதை மனப்பூர்வமாக நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதே இதன் கருத்தாகும்.*

இக்கருத்து முற்றிலும் தவறாகும். எப்படி? நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்திலேயே ஒருவர் நபியாக வருகிறார் என்றால்,

1. நபி (ஸல்) அவர்கள் அந்த நபி மீது ஈமான் கொண்டு அவர்க்கு நபி (ஸல்) உதவி புரிய வேண்டும்.
2. அந்த நபி, நபி (ஸல்) அவர்களின் வேதமாகிய திருக்குர்ஆனையும் அதன் ஞானத்தையும் (நபிமொழிகளையும்) உண்மைப் -படுத்துவார். ஏனென்றால் உங்களிடம் வந்தால் என்றால் பீ.ஜே யின் விளக்கத்தின் படி நபி (ஸல்) அவர்களிடம் வேறொரு தூதர் வந்தால் என்பது தான் பொருள். இது சரியா?

**முஸ்லிம்களும் கில்ரு நபியும்:**

நபிமார்களிடம் எடுக்கப்பட்ட உறுதிமொழியின்படி கில்ரு நபி இறந்து விட்டார். எனவே அவர் உயிருடன் இல்லை என்று பீ.ஜே எழுதியுள்ளார் என்றால், ஈஸா நபி உயிருடன் இருக்கும் போது முஹம்மது நபியவர்கள் அல்லாஹ்வின் தூதராக அனுப்பப்படுகிறார்கள் என்றால் நபிமார்களிடம் எடுக்கப்பட்ட உறுதிமொழியின்படி அவர் என்ன செய்திருக்க வேண்டும்?

**நபிகள் நாயகத்தைத் தேடி ஈஸா நபி வந்திருக்க வேண்டும். அவர்கள் கஷ்டப்பட்ட நேரத்தில் உதவிகள் புரிந்திருக்க வேண்டும். பத்ரு, உஹதுப் போர்களில் பங்கெடுத்திருக்க வேண்டும். அவ்வாறு ஏதும் நடக்கவில்லை. நடந்ததாக எந்தச் சான்றும் இல்லை. உயிருடன் ஈஸா நபி இருந்திருந்தால் அவர் இந்த உடன்படிக்கையை நிறைவேற்றி இருக்க வேண்டும்.**

**இவ்வசனத்திலிருந்து ஈஸா நபி உயிருடன் இல்லை என்பதையும் கூடுதலாக அறிந்து கொள்ளலாம்.**

அல்லாஹ் திருக்குர்ஆனில் 33:8 வசனத்தில், உம்மிடத்தில் என்று நபி (ஸல்) அவர்களைக் குறித்தும் ஈஸா நபியிடத்தும் அந்த உடன்படிக்கை வாங்கப்பட்டிருப்பதால் ஈஸா நபியின் உம்மத்தினர்,



ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் மீது ஈமான் கொண்டு அவர்க்கு உதவி செய்ய வேண்டும் என்றும் நபி (ஸல்) அவர்களின் உம்மத்தினர் அவர்க்கு பிறகு வருபவரிடமும் ஈமான் கொண்டு அவர்க்கு உதவி செய்ய வேண்டும் என்றும் தெரிகிறது.

(61:7, 5:47, 3:51 ஆகிய வசனங்கள்) இதில் 61:7 வது வசனத்தைக் காண்போம்.

மர்யமின் மகன் ஈஸா தன் சமுதாயத்தினரிடம், இஸ்ராயீல் மக்களே! நிச்சயமாக நான் எனக்கு முன்னர் தவ்ராத்தில் கூறப்பட்டதை **உண்மைப்படுத்தக் கூடியவனாகவும்** எனக்குப் பின்னர் வரப்போகின்ற அஹ்மது எனும் பெயரைக் கொண்ட ஒரு தூதரைப் பற்றி நற்செய்தி வழங்குபவனாகவும் உங்களிடம் அனுப்பப்பட்ட அல்லாஹ்வின் தூதராவேன் என்று கூறினார்.

உண்மைப்படுத்தும் தூதரின் இலக்கணத்தை இதிலிருந்து நாம் விளங்கிக் கொள்ளலாம்.

1. ஈஸா நபி, மூஸா நபி வாழும் போது அவரிடம் வரவில்லை.
2. மூஸா நபியின் மறைவுக்குப் பின் வேதத்தையும் ஞானத்தையும் உண்மைப்படுத்தக்கூடிய ஒரு காலகட்டத்தில் அதாவது 1400 ஆண்டுகள் கழித்து ஈஸா நபி வருகிறார்.
3. மூஸாவின் உம்மத்தில் தான் வருகிறார்.
4. இஸ்ரவேல் மக்களிடம் அவர் தான் இந்த வேதத்தை உண்மைப்படுத்த உங்களிடமிருந்து வந்த தூதர் என்று இறைவன் கூறுகிறான்.
5. தனக்குப் பிறகு - ஈஸாவின் மரணத்திற்குப் பிறகு உலகில் வரக்கூடிய ஒரு தூதரைப் பற்றி நற்செய்தியும் வழங்குகிறார். அதாவது அஹ்மத் நபியைப் பற்றி.

திருக்குர்ஆன் 61:7 இல், ஈஸா நபி தனக்குப் பிறகு அஹ்மத் என்பவரைப் பற்றி நற்செய்தி கூறுகிறேன் என்று கூறுகிறாரே அவர் யார்?

61 வது அதிகாரம் அவர் முஸ்லிம் உம்மத்தில் வரக்கூடிய உம்மத்தி நபி என்று கூறுகிறது.

1. வானங்களிலும் பூமியிலுமுள்ளவை எல்லாம் **அல்லாஹ்வின் தூய்மையை எடுத்துரைத்தன** என்று கூறி, இஸ்லாத்தில் நின்றுவிட்ட இறைத்தூய்மையை மீண்டும் எடுத்துரைக்க வரக்கூடியவர்.
2. நம்பிக்கை கொண்டவர்கள் என்று திருக்குர்ஆன் முஸ்லிம்களைப் பார்த்துதான் அழைக்கிறது. இச்சொல் (61:3, 61:11, 61:15) இந்த அதிகாரத்தில் மூன்று இடங்களில் இடம்பெற்று முஸ்லிம்களைப் பார்த்து அல்லாஹ் கூறும் சம்பவங்கள் இடம் பெற்றுள்ளன. எனவே இந்த அத்தியாயம் முஸ்லிம்களைப் பற்றி பேசும் அத்தியாயமாகும்.
3. நம்பிக்கை கொண்ட முஸ்லிம்களிடம் பிற்காலத்தில் காணப்படும் நிலையைப் பற்றி 61 வது அதிகாரம் கூறுவதாவது: 61:4-5

   அ) செய்யாததை சொல்லுதல். (61:3)

   ஆ) இவ்வாறு சொல்லி இறைவனின் வெறுப்புக்கு ஆளாகுதல். (61:4)

   இ) உறுதிவாய்ந்த ஒரு சுவரைப் போல் ஒரு வரிசையில் நிற்காமல், 72 பிரிவுகளாக பிரிந்து தமக்குள் சண்டை போடுதல். (61;5)
4. அஹ்மது நபியை - அந்த 72 பிரிவுகளும் நீர் இஸ்லாத்தில் இல்லை. அதற்கு வாரும் என்று அழைப்பார்கள். (61:8)
5. அஹ்மது நபி கொண்டு வந்த இறையொளியை ஆலிம்கள் தங்கள் வாய்களால் ஃபத்வா - மார்க்கத்தீர்ப்பு கூறி அணைக்க முயல்வார்கள். அல்லாஹ்வோ அந்த ஒளியை முழுமைப் -படுத்துவான்.



இவ்வசனத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் இருவகையான தோற்றங்கள் பற்றிய முன்னறிவிப்பு இருக்கின்றது. பழைய ஏற்பாட்டில் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் வருகையைப் பற்றி மூஸா (அலை) செய்துள்ள முன்னறிவிப்பு நிறைவேறும். (உபாகமம் 18:18-20) என்பதும்,

எனக்குப் பின்னர் அஹ்மது என்னும் பெயர் கொண்ட ஒரு தூதரைப் பற்றி நற்செய்தி வழங்குபவர் என்பது, 62:4 இல் குறிப்பிடப்பட்ட நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் இரண்டாவது வருகையைக் குறிக்கும். இது அஹ்மதிய்யா ஜமாஅத்தை தோற்றுவித்த ஹஸ்ரத் அஹ்மத் (அலை) அவர்களின் வருகையின் மூலம் நிறைவேறிற்று.

6. இணை கற்பிப்போர் (இதனை) எந்த அளவு வெறுத்தாலும் சரியே. அவனே தனது தூதரை நேர்வழியுடனும் உண்மையான மார்க்கத்துடனும் - இதனை அவன் எல்லா மார்க்கத்தின் மீதம் வெற்றி பெறச் செய்வதற்காக அனுப்பினான். (61:10)

   இந்த முன்னறிவிப்பு மஸீஹின் காலத்தில் நிறைவேறும் என்று தப்ஸீர்கள் கூறுகின்றன. இவ்வாறு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் காலத்தில் இது நிறைவேறியது. அன்னார் பிற மார்க்கங்களை விட இஸ்லாம் சிறந்தது என்பதை தம் பேச்சு, எழுத்து மூலம் நிரூபித்துள்ளார்கள்.
7. அக்காலத்தில் வியாபாரம் கொடிகட்டிப் பறக்கும். (61:11) எந்த அளவுக்கு என்றால் உலமாக்கள், மார்க்கத்தையும் வியாபாரம் ஆக்கி காசே தான் கடவுளடா என்று வாழ்வர். விலை உயர்ந்த கார், மலைக்க வைக்கும் பங்களா, கறுப்புப் பூனைகள், வங்கியில் பல இலட்சங்கள் இப்படி எத்தனையோ!
8. 72 பிரிவுகளும் அல்லாஹ்வையும், அந்த அஹ்மத் நபியையும் நம்பாமலும் இறைவழியில் அறப்போர் செய்யாமலும் வாழ்வார்கள். இக்காலத்தில் தான் ஈஸா நபி நற்செய்தி கூறிய அஹ்மது எனும் மெய்ப்பிக்கும் தூதர் வருவார். எப்படி?

| | | |
|---|---|---|
| 1. | மூஸா | முஹம்மது |
| 2. | தவ்ராத் | திருக்குர்ஆன் |
| 3. | 1400 ஆண்டுகளுக்குப் பின் ஈஸா நபி | 1400 ஆண்டுகளுக்குப் பின் அஹ்மது நபி |
| 4. | தவ்ராத்தை மெய்ப்பித்தல் | திருக்குர்ஆனை மெய்ப்பித்தல் |

எனவே, முழு உலகமும் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களிடம் எடுத்த உடன்படிக்கையின்படி, ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை ஏற்று, அவர்க்கு உதவி புரிய வேண்டும்.

மேலும் திருக்குர்ஆன் 62:4 இல் அவர்களுடன் சேராத மற்றவர்களுக்கிடையிலும் (அவரை எழுப்புவான்) என்று வருகிறது. இந்த வசனத்திற்கு ஹதீஸில் இவ்வாறு உள்ளது.

ஹஸ்ரத் முஹம்மது நபி (ஸல்) அவர்களிடம் அவர்களின் தோழர்கள், அல்லாஹ்வின் தூதர் அவர்களே! இங்கு கூறியுள்ள மற்றவர்கள் என்பவர் யார் என்று கேட்டார்கள். அதற்கு, அவர்கள் ஹஸ்ரத் ஸல்மான் ஃபார்ஸி (ரலி) அவர்களின் தோளில் கை வைத்து, நம்பிக்கை ஒரு காலத்தில் கார்த்திகை நட்சத்திரம் வரை சென்று விட்டாலும் ஃபாரசீக இனத்தைச் சேர்ந்த இவரின் தோன்றல்களுள் ஒருவர் அல்லது பலர் அதனைக் திரும்பக் கொண்டு வருவர் என்று பதிலளித்தார்கள். (புகாரி 4897)

ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் சல்மானுல் ஃபார்ஸி வம்சத்தில் தோன்றியவர்கள் ஆவார்கள்.

**அப்துல் வஹ்ஹாப் அடிக்குறிப்பு எண் 262 இல்,**

12000 பேர் கொண்ட மக்கத்து படைக்கும் 3000 பேர் கொண்ட முஸ்லிம்களுக்கும் இடையே நடந்த போர் அகழ்ப் போர். 12000 பேரை எப்படி எதிர் கொள்வது என்பது பற்றி நபி (ஸல்) அவர்கள் தன் நபித் தோழரிடம் ஆலோசனை செய்தார்கள். அப்போரை சல்மான் பாரிஸ் (ரலி) அவர்கள், மதீனாவைச் சுற்றி ஒரு அகழ் வெட்டி எதிரிகளைத் தடுக்க வேண்டும் என்று கூறினார்கள்.



10 முழம் ஆழமும், 40 முழம் அகலமும் கொண்ட ஒரு அகழியை வெட்டினர். 25 நாட்கள் முற்றுகை நீடித்தது. இறுதியில் முற்றுகையை கைவிட்டு எதிரிகள் திரும்பினர். அப்போது அன்சார் தோழர்கள் சல்மானு மின்னா (சல்மான் பாரிஸ் எங்களைச் சேர்ந்தவர்) என்றும் முஹாஜிர்கள் (சல்மானு மின்னா) என்றும் கூறினர்.

ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சல்மானு மின்னா அஹ்லுல் பைத் – சல்மான் எம்மைச் சேர்ந்தவர். எம் குடும்பத்தினர் என்று கூறினார்கள்.

ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தைச் சேர்ந்த சல்மான் பார்ஸியின் குடும்பத்தில் தோன்றியவர்கள் தான் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் ஆவார்கள்.

## 9. கோவை விவாதம்

**I. திருக்குர்ஆன் அடிக்குறிப்பு எண் 187 (9வது பதிப்பில்) பீ.ஜே இவ்வாறு எழுதியுள்ளார் :**

*அது போல் பாகிஸ்தானைச் சேர்ந்த காதியான் என்ற ஊரில் பிறந்த மிர்சா குலாம் என்பவர் தன்மை நபி என்று வாதிட்டார். அவர் வாழ்ந்த காலத்திலேயே அவர் பொய்யர் என்று நிரூபணமானது.*

**நம் விளக்கம்:**

1. ஒரு மவ்லவிக்கு எல்லாம் தெரிந்திருக்க வேண்டும் என்பதில்லை. குறைந்த அளவு எதைப் பற்றி எழுதுகிறோமோ அது பற்றிய அடிப்படை அறிவு தேவை. அது பீ.ஜே க்கு இல்லை என்று தெளிவாகிறது. பாகிஸ்தானில் காதியான் என்ற ஊர் இல்லை. அது இந்தியாவில் பஞ்சாப் மாநிலத்தில் குர்தாஸ்பூர் மாவட்டத்தில் உள்ளது. இதனைக்கூட தெரியாதவர் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் நுபுவ்வத் வாதத்தைப் பற்றி எப்படி அறிந்திருக்க முடியும்?

2. அவர் வாழ்ந்த காலத்திலேயே பொய்யர் என்று நிரூபணமானது என்று கூறுகிறார். ஒவ்வொரு உண்மை நபியை பற்றியும் பகைவர்களின் புலம்பல்களையே பீ.ஜே யும் கூறியுள்ளார்.

ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை எடுத்துக் கொண்டால், இஸ்ரா-மிஃராஜ் சம்பவத்திலும், உஹத் போரிலும், அவர்களின் மரணத்தின் போதும் **பல்லாயிரக் கணக்கானவர்கள் இஸ்லாத்தை விட்டு வெளியேறிவிட்டனர்.** இந்த அளவுகோலின் படி, இஸ்லாத்தின் எதிரிகள், மறுப்பவர்கள் பார்வையிலும் அவர் பொய்யர் என்று அவர் காலத்திலேயே நிரூபணமானது (நவூதுபில்லாஹ்) என்று பீ.ஜே முஸ்லிம் அல்லாதவராக அதாவது ஒரு இந்துவாகவோ, யூதராகவோ, நாத்திகராகவோ பிறந்திருந்தால் எழுதியிருக்கக் கூடும்.

**நபிமொழியில் வருகிறது:**

மறுமையில் ஒரு நபி அவரைப் பின்பற்றுபவர்கள் எவருமின்றி தன்னந்தனியே செல்வார்கள். எவரும் அவர்களின் வாழ் நாளில் பின்பற்றவில்லை என்பதினால் அவர் வாழ்நாளில் நபி இல்லை என நிரூபணமாகிவிடுமா?

பீ.ஜே யின் கருத்துப்படி, ஹஸ்ரத் நூஹ் (அலை) அவர்கள் 950 ஆண்டுகள் தம் தூதுச் செய்தியைப் போதித்தும் அவரது மனைவியும் மகனும் ஏற்றுக் கொள்ள வில்லை. அவரைப் பெரும்பாலார் ஏற்றுக் கொள்ளவில்லை என்பதால் பொய்யர் ஆவாரா?

நபி (ஸல்) அவர்களின் சம காலத்தில் அரபுலகில் வாழ்ந்த யூத கிறித்தவர்களும், சிலை வணங்கிகளும் அன்னாரை நபி என்று ஏற்றுக் கொள்ளவில்லை. இந்த அளவுகோலின் படியும் நபி (ஸல்) அவர்கள் பொய்யர் (நவூதுபில்லாஹ்) என்று நடுநிலை தவறியவன் எழுதக்கூடும்.

இதிலிருந்து நபி (ஸல்) அவர்கள் பொய்யர் ஆகாதது போல், மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களும் பொய்யர் இல்லை



என்பது தெளிவாகிறது. மேலும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் காலத்தில் தோன்றிய பொய் நபிமார்கள் தம் வாழ்நாளிலே வேரோடும், வேரடி மண்ணோடும் அழிந்து போனார்கள். அதற்குப் பின்னர் நம் காலம் வரை தோன்றிய பொய் நபிமார்களுக்கும் முகவரி இல்லை. அவ்வளவு ஏன் எனக்குப் பிறகு 30 பொய் நபிமார்கள் தோன்றுவர் என்ற நபிமொழியில் கூறப்பட்ட அனைத்து பொய்யர்களைப் பற்றியும் எந்த மவ்லவிக்கும் தெரியாது. அவர்கள் இருந்த இடம் தெரியாமல் போய் விட்டார்கள். ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களைப் பற்றி பீ.ஜே-க்கும் முகவரி தெரிந்திருக்கிறது!

இதற்கு மாற்றமாக, மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் ஜமாஅத் 120 ஆண்டுகளாக, 200 -க்கும் மேற்பட்ட நாடுகளில் 20 கோடி உறுப்பினர்களைக் கொண்டு ஒரு கலீஃபாவின் கீழ் தொடர்ந்து வளர்ந்து வருவது அவர் உண்மையாளர் என்பதற்கு அடையாளமாகும்.

**II. பி.ஜே எழுதுகிறார்:**

*அவரது மதத்தைச் சேர்ந்தவர்களுடன் கோவையில் 19.11.1994 முதல் 27.11.1994 வரை ஒன்பது நாட்கள் நாம் விவாதம் நடத்தினோம். அந்த விவாதத்தில் காதியானிகளின் தலைமைப் பீடத்திலிருந்து அவர்களது மதகுருமார்கள் வந்து கலந்து கொண்டனர்.*

**நம் விளக்கம்:**

மதம் எனும் சொல்லுக்கு சமயம், போதனை, கொள்கை என்று பொருள். (ஆதாரம் : மதுரைத் தமிழ்ப் பேரகராதி இப்பொருளின் அடிப்படையில், இஸ்லாமிய சமயத்தின், அதன் கொள்கைகளையும் அதன் போதனை களையும் கொண்ட அஹ்மதி முஸ்லிம்களிடம் விவாதம் நடந்தது.

(மதம் என்பதற்கு உலகில் உள்ள முஸ்லிம்களின் 72 பிரிவுகளிடமும் காணப்படாத உண்மையான இஸ்லாத்தின்

கொள்கை உடையதால் ஒரு புதிய மதம் என்ற பொருள் என்று பீ.ஜே கருதினால் அதுவும் சரிதான்)

ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் தூய இஸ்லாத்தைப் போதித்த போது அது அரபு மக்களின் கொள்கைக்கு மாற்றமாக இருந்ததினால், இஸ்லாத்தைச் சேர்ந்தவர்களை சாபி என அழைத்தனர். அதாவது ஒரு புதிய மதத்தைச் சேர்ந்தவர்கள் என்று அழைத்தனர். (ஆதாரம் : புகாரி 3522).

எனவே அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் உண்மையான இஸ்லாம் என்பதனை உறுதி செய்கிறது. விவாத விதிகளில் பலவற்றை பீ.ஜே கடந்த காலங்களில் மீறிச் செயல்பட்டுள்ளார். அதை விரித்துக் கூறினால் பக்கங்கள் பெருகும். இவ்வாறு ஒப்பந்த விதிகளை மீறி செயல்பட்ட அவர் மீது சட்ட பூர்வ கிரிமினல் நடவடிக்கை எடுக்கலாம். மறுமையில் அவர் அல்லாஹ்வுக்குப் பதில் சொல்ல வேண்டும்.

உலகளாவிய தலைமைப் பீடத்தின் மத குருமார்கள் (தலைவர்கள்) வந்து கலந்து கொண்டனர் என்று எழுதியுள்ளார். தமிழக எல்லையை தாண்டாத பிற முஸ்லிம் பிரிவுகள் போன்று இல்லாமல் , உலகளாவிய அஹ்மதிய்யா ஜமாஅத்துடன் தமிழக அளவில் கூட நிலையான ஒரு தலைமையும், கொள்கையும் இல்லாத அமைப்பாகிய ஜாக் தலைவர்களுடன் 19.11.1994 முதல் 27.11.1994 முடிய 9 நாட்கள் விவாதம் நடந்தது.

அதில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் நடுவராக, நானும் (A.P.Y. அப்துல் காதிர்) எனக்கு உதவியாளராக M. பசாரத் அஹ்மதும் இருந்தோம். எங்கள் அணியின் பேச்சாளர்களாக ஆறு பேர் கலந்து கொண்டனர். ஆக எண்மர் அதே ஜமாஅத்தில், இன்று வரை இருந்து வருகிறோம்.

எதிரணியில் அன்று JAQH இருந்தது. அதில் உள்ள 8 பேரில் 8 பேரும் 8 திசையில், 8 க்கும் மேற்பட்ட அமைப்புகளில் தாவித்தாவிச் சென்றுள்ளனர்.



எடுத்துக்காட்டாக,தற்போது 2012 வது ஆண்டில் கடையநல்லூரில் மட்டும் தமிழ்நாடு தவ்ஹீது ஜமாஅத்தில் இருந்து மூன்று மவ்லவிமார்கள் வெளியேறியுள்ளனர் அல்லது வெளியேற்றப்பட்டுள்ளனர். அவர்களாவன மவ்லவி யூசுப் பைஜி, மவ்லவி சைய்புல்லா பைஜி, மவ்லவி முஹிப்புல்லாஹ் உமரி.

**III. பீ.ஜே எழுதுகிறார்:**

*அந்த விவாதத்தில் அவர்களின் முன்னிலையில் மிர்சா குலாம் என்பவர் பெரும் பொய்யர் என்று அவரது நூலில் இருந்தே நாம் எடுத்துக் காட்டினோம். கடைசி வரை காதியானி மதத்தவர்களால் அதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. இது வீடியோவாகவும், ஆடியோவாகவும் பதியப்பட்டுள்ளது. www.onlinepj.com இணைய தளத்திலும் இதைப் பார்த்துக் கொள்ளலாம்.*

**நம் விளக்கம்:**

பொய்யர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக என்பதே இதற்குரிய பதிலாகும். அல்லாஹ்வின் மீது சத்தியம் செய்து, இது அப்பட்டமான பொய் என்று நான் கூறுகிறேன். பீ.ஜே சத்தியம் செய்து கூறத் தயாரா?

இந்த விவாத விதிகளை வகுத்து, இரண்டு படி (நகல்) எடுத்தோம். அதில் எங்கள் சார்பாக கோவை ஜமாஅத்தின் அப்போதைய தலைவர் M.நூருல் அமீன், மவ்லவி அய்யூப், அப்துல் காதிராகிய நானும் கையெழுத்திட்டுள்ளோம்.

அதில் 3 வது தலைப்பைப் பொறுத்தவரையில் விவாதத்தின் விதியாவது அஹ்மதிய்யா ஜமாஅத்தைச் சேர்ந்த நாங்கள் ஒரு உண்மை நபியின் இலக்கணத்தை திருக்குர்ஆனிலிருந்து எடுத்துக் கூறி அந்த இலக்கணத்திற்கு மிர்ஸா குலாம் அஹ்மது பொருந்துகிறார் என்று நிரூபிக்க வேண்டும். பீ.ஜே மதத்தினரும் அதன் மத குருக்களும் ஒரு பொய் நபியின் இலக்கணத்தை திருக்குர்ஆனிலிருந்து எடுத்துக்காட்டி அதற்கு மிர்ஸா குலாம்

அஹ்மது (அலை) அவர்கள் பொருந்துகிறார் என்று நிரூபிக்க வேண்டும். இந்த விதியின்படி நாங்கள் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) உண்மை நபி என நிரூபித்து விட்டோம். ஆனால் பீ.ஜே மூன்று நாட்களிலும் அதனை நிரூபிக்கவில்லை. ஏன், இன்று வரை நிரூபிக்கவில்லை. பொய் நபியின் இலக்கணத்தை திருக்குர்ஆனில் இருந்து எடுத்துக் கூறி அது மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுக்கு பொருந்துகிறது என்று நிரூபிப்பவர்க்கு ஒரு கோடி ரூபாய் பரிசு என்று டிஜிட்டல் போர்டு மூலமாக மேலப்பாளையத்தில் அறிவித்தோம். பீ.ஜே கூட்டத்தினர் கண்ணிருந்தும் குருடராய், காதிருந்தும் செவிடராய், வாயிருந்தும் ஊமையராய் நகரில் நடைப் பிணமாக நடந்து திரிந்தனர்.

ஆனால் **இன்று வரை பதில் சொல்ல முடியாத அந்தக் கேள்விகளில் சிலவற்றை இங்கே சுட்டிக் காட்டுகிறோம்** என்று பீ.ஜே எழுதுகிறார்.

**நம் விளக்கம்:**

பொய்யர்களின் மீது அல்லாஹ்வின் சாபமும் அவனது மலக்குகளின் சாபமும் மனித இனத்தின் சாபமும் உண்டாகட்டும் என்பதே என் பதில். உலகில் தான் ஒரு மாபெரும் பொய்யன் என்பதை இவ்வாறு எழுதியிருப்பதன் மூலம் அவர் தன்னை நிரூபித்துவிட்டார்.

கடுகளவு மனச் சாட்சியும், அணுவளவு இறையச்சமும், அணுவில் 1000 பங்கில் ஒரு பங்கு உண்மையும் நேர்மையும் இவரிடம் இல்லை என்பதனை இது எடுத்துக் காட்டுகிறது.

அவர் குறிப்பிட்ட ஆடியோ, வீடியோ இணையதளம் சிலவற்றைப் பார்த்தால் நான் கூறுவது உண்மை என்பது தெரியும்.

## ரூபாய் ஒரு இலட்சம் பரிசு!

கோவை விவாதத்தில் பீ.ஜே ஒரு பொய் நபியின் இலக்கணத்தைத் திருக்குர்ஆனிலிருந்து எடுத்துக் காட்டி, அது



ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுக்குப் பொருந்துகிறது என்று நிரூபித்துள்ளதாக எடுத்துக் காட்டும் முதல் நபருக்கு 1 லட்ச ரூபாய் பரிசு தரத் தயார். இந்த அறைகூவலை ஏற்க முன்வருவோர் யாரும் உண்டா ?

உலகில் அப்படி யாரும் பிறக்கவும் இல்லை. பிறக்கப் போவதும் இல்லை. ஏனென்றால் பீ.ஜே அப்படி நிரூபித்துக் காட்டவில்லை.

அவர் எடுத்துக் காட்டியுள்ள 13 கேள்விகளையும் (எடுத்துக் காட்டாத கேள்விகளையும்) கேட்பதற்கு விவாத விதியின்படி தகுதியும், உரிமையும், நியாயமும், யோக்கியதையும், அருகதையும் திருக்குர்ஆனிலிருந்து பொய் நபியின் இலக்கணத்தை எடுத்துக் காட்டி நிரூபிக்காதவரை அவர்க்கு இல்லை, இல்லை, இல்லை, இல்லவே இல்லை. மேலும் அவர் எடுத்துக் காட்டியிருக்கும் அக்கேள்விகள் எத்தகையது என்றால்,

திருக்குர்ஆனில் ஒரு உண்மை நபிக்கு மூன்று வித அடையாளங்கள் கூறப்பட்டுள்ளன. அவை 1) அல்லாஹ் அவரது பெயரைக் கூறி அவரை நபி என்றோ, ரஸூல் என்றோ அழைத்திருப்பான். 2) அந்த நபியின் எதிரிகள் அவரை மன நோயாளி, கவிஞன், பில்லி சூனியக்காரன், பொய்யன், மிக இழிந்தவன் என்று கூறி கேலியும் கிண்டலும் செய்திருப்பர். 3) மனித ரஸூல் என்ற முறையில் அனைத்து நபியிடமும் காணப்படும் நடைமுறைகள் ஆகும்.

மேற்கூறிய இந்த மூன்றின்படி இறைவன் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை ரஸூல் என்றும் இமாம் மஹ்தி என்றும் மஸீஹ் என்றும் அழைத்துள்ளான். மேலும் நாங்கள் அந்த கோவை விவாதத்தில் திருக்குர்ஆன் கூறும் ஒரு உண்மை நபியின் இலக்கணத்தைக் எடுத்துக்காட்டி அது ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுக்குப் பொருந்துகிறது என்று நிரூபித்து

விட்டோம். ஆனால் பி.ஜே ஒரு பொய் நபியின் இலக்கணத்தைக் திருக்குர்ஆனிலிருந்து எடுத்துக்கூறி ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுக்குப் பொருந்துகிறது என்று எடுத்துக் காட்டாததினாலும் ஒவ்வொரு உண்மை நபியின் மீதும் மறுப்பாளர்கள் கூறிய மன நோயாளி, பொய்யன் போன்ற இழி சொற்களை கூறியிருப்பதன் மூலமும் அன்னாரை உண்மை நபி என்று பீ.ஜே நிரூபித்து விட்டார். மேலும் பீ.ஜே ஒரு தொலைக்காட்சி நிகழ்ச்சியில், யார் அந்த 72 கூட்டத்தினர் என்ற தலைப்பில் ரமலான் சஹர் நேர சொற்பொழிவில் பேசுகின்ற போது நபி (ஸல்) அவர்கள் கூறிய 30 பொய் நபிமார்களும் **இருந்த இடம் தெரியாமல் அழிந்து விட்டார்கள். அவர்களுள் ஹதீஸில் கூறப்பட்டவர்களைத் தவிர ஏனைய பொய் நபிமார்களைப் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது என்று கூறியிருக்கிறார்.** இதுவே ஒரு பொய் நபியின் இலக்கணமாகும். ஆனால் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுடைய இந்த ஜமாஅத் 120 ஆண்டுகளுக்கும் மேலாக ஒரு தலைமையின் கீழ் நிலைத்திருப்பதும், 200-க்கும் மேற்பட்ட நாடுகளில் பரவி 20 கோடி உறுப்பினர்களைக் கொண்டு விளங்குவதும் இவர் ஓர் உண்மை நபி என்பதை நிரூபிக்கிறது. இதன் மூலம் பீ.ஜே, ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை உண்மை நபி என்று ஏற்றுக் கொண்டுள்ளார். அவர்க்கு நன்றி.

## கேள்வியும் பதிலும்

**IV. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*மர்யமும் நானே ! ஈஸாவும் நானே என்று கிஷ்தீ நூஹ் என்ற நூலில் பக்கம் 68 இல் கூறியுள்ளாரே இவர் மனநோயாளியா, நபியா என்று நேருக்கு நேர் கேட்ட போதும் பதில் சொல்ல முடியவில்லை.*

**நம் பதில்:**

1. நபிமார்களை அவர்களின் பகைவர்கள் கிறுக்கன், பைத்தியம், மனநோயாளி என்று அழைத்ததாகவும், அந்நபிமார்கள்



பைத்தியம் இல்லை என்றும் அல்லாஹ் கூறுவதாக திருக்குர்ஆன் கூறுகிறது. (15:7, 26:28, 37:37, 44:15, 51:40, 51:53, 52:30, 54:10, 68:3, 68:52, 81:23)

ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பின்பற்றி வந்த உம்மத்தி நபியாகிய ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்களையும் பீ.ஜே மன நோயாளி என்று கூறுவதால், ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் உண்மையாளர் என்றும் பீ.ஜே ஒரு நபியின் எதிரி என்றும் உறுதியாகிறது.

2. ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்களுக்கு வந்த வஹியில், **இன்னீ முஹீனுன் மன் அராத இஹானத்தக.** (தத்கிரா). உம்மை இழிவுபடுத்த நாடுபவரை நான் இழிவுபடுத்துவேன் என்று அல்லாஹ் கூறுகிறான்.

பீ.ஜே கடந்த பல ஆண்டுகளாக வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களை பல்வேறு இழிவான சொற்களைக் கொண்டு பேசியும் எழுதியும் வருகிறார். மேற்சொன்ன முன்னறிவிப்பின் அடிப்படையில் பீ.ஜே யைக் குறித்து அவரது பழைய நண்பரும் இன்றைய எதிரியுமான ஜவாஹிருல்லாஹ் கூறிய கூற்றைப் பாருங்கள்.

**நரேந்திர மோடியை விட கருணாநிதி மோசமானவர் என்று தவ்ஹீது ஜமாஅத்தைச் சேர்ந்த ஜெய்னுல் ஆப்தீன் பேசி வருகிறார். அவர் ஒரு மன நோயாளி என்பதை இது எடுத்துக் காட்டுகிறது.** (தமுமுக மாநிலத் தலைவர் ஜவாஹிருல்லாஹ்... ஆதாரம்: தினகரன் 1.5.2006 பக்கம் 2)

**அவரது முன்னாள் நண்பரான அபூஅப்தில்லாஹ் கூறியிருப்பதைப் பாருங்கள்:**

பீ.ஜே ஒரு **கொள்ளைக்காரன்; பச்சைப் பொய்யன்; பித்தலாட்டக்காரன்; தில்லுமுல்லு செய்பவன்; பீ.ஜே ஒரு பரம**

**அயோக்கியன்; அவதூறுகளை அள்ளி வீசுபவன்; நாஸ்திகன்; ஏமாற்றி வயிறு வளர்ப்பவன்; அமானித மோசக்காரன்; கேடுகெட்டவன்; அபூஜஹ்லைவிட கொடியவன்; தஜ்ஜால்** என்று எழுதியுள்ளார். (ஆதாரம் : அந்நஜாத், ஜுன், ஆகஸ்ட், டிசம்பர் 2005 இதழ்கள்)

இந்த முன்னறிவிப்பு பீ.ஜே யின் விசயத்தில், அவரது ஆரம்ப கால நண்பர்களின் கூற்று மூலமும் நிறைவேறிவிட்டது என்பதைக் கண்டீர்கள். இந்த முன்னறிவிப்பு இதைவிட அதிகமாக எதிர்காலத்தில் நிறைவேறுவதை உலகம் கண்டு கொள்ளும் – இன்சா அல்லாஹ்.

3. ஒவ்வொரு நபியின் காலத்திலும் அவர்களின் எதிரிகள் நபிமார்கள் கூறுகின்ற ஆழிய ஞானமும், நுட்பமும் கொண்ட கருத்துக்களை உணராத அரை வேக்காடுகள் அவரைப் பைத்தியம் என்பது நடைமுறையாகும்.

4. அல்லாஹ் எல்லா வகையிலும் தெளிந்த ஞானம் உடையவர்களை தான் நபிமார்களாக ரஸூல்மார்களாகத் தேர்ந்தெடுக்கிறான். அவர்கள் காலத்தில் அவர்களைத் தவிர ஏனையவர்கள் குறிப்பாக எதிரிகள் 1% முதல் 90% வரை பைத்தியமாகத்தான் இருப்பார்கள். இதற்கு பீ.ஜே விதி விலக்கில்லை.

5. பொதுவாக பைத்தியங்கள் **மற்றவர்களை பைத்தியம்** என்று எண்ணுவது வழக்கமாகும்.

**V. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*மர்யமும் நானே! ஈஸாவும் நானே என்று இவர் கூறியுள்ளார்.*

**நம் விளக்கம்:**

மர்யம் என்பது பெண்ணின் பெயர் . மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி. அவர் எப்படி மர்யமாக முடியும் என்பது தான் பீ.ஜே யின் பார்வை. இவருக்கு திருக்குர்ஆன் ஞானமோ, நபிமொழி



ஞானமோ, மொழியறிவோ, பகுத்தறிவோ இல்லை என இவரது கேள்வியிலிருந்து தெரிகிறது.

**திருக்குர்ஆன் 66:13 வசனத்தில்,**

இம்ரானின் மகள் மர்யமையும் நம்பிக்கை கொண்டவர்களுக்கு ஓர் எடுத்துக் காட்டாக இறைவன் விளக்குகிறான். அவள் தன் கற்பைக் காத்துக் கொண்டாள். எனவே நாம் **அவரிடம்** (ஆண்பால் ஒருமை) எமது ரூஹை (வஹியை) ஊதினோம். **அவர்** தன் இறைவனின் வசனங்களையும், அவனுடைய வேதங்களையும் உண்மைப்படுத்தி விளக்கினார்.

அதாவது ஒரு உண்மையான நம்பிக்கை கொண்டவரை மர்யம் என்று அழைக்கலாம். எப்படி யூசுப் நபி மலக்கு (12:32) என்று அழைக்கப்பட்டதால் மலக்காக இருப்பதில்லையோ அது போல் மலக்கின் பண்பைக் கொண்டவரை மலக்கு என்றும் மர்யம் (அலை) அவர்களின் பண்பைக் கொண்ட நல்ல விசுவாசியை மர்யம் என்றும் அழைக்கலாம். இக்ரிமா (ரலி) அவர்களை நபித் தோழர்கள் **இப்னு ஃபிர்அவ்ன்** என்று அழைத்தனர். காரணம் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அபூஜஹ்லை தன் காலத்து பிர்அவ்ன் என்று கூறினார்கள். எனவே இக்ரிமா (ரலி) அவர்கள் இஸ்லாத்திற்கு வந்த பிறகு அவரை இப்னு பிர்அவ்ன் என்று அழைத்தனர். இக்ரிமா (ரலி) பிர்அவுனின் மகன் என்றோ, இக்ரிமாவின் தந்தை பிர்அவுன் என்றோ பீ.ஜே கருதினால் அதை விட அறிவின்மை வேறு எதுவும் இருக்க முடியாது. இப்னு மர்யம் என்று ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் தன்னை மர்யம் என்றும் ஈஸா என்றும் கூறியிருப்பதை கொஞ்சம் விளக்கமாகக் கூற வேண்டும் என்றால், ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் முதலில் மர்யம் எனும் பண்பிலிருந்து ஈஸா எனும் பண்புக்கு மாறினார்கள். அதாவது மர்யம் எனும் பண்பு ஈஸா எனும் பண்பை ஈன்றெடுத்தது.

*அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்*
*செல்வச் செவிலியால் உண்டு - குறள் : 757*

அன்பு எனும் தாய் பெற்ற அருள் எனும் குழந்தை, செல்வம் எனும் வளர்ப்புத் தாயால் வளரும்.இவ்வாறே மர்யம் எனும் பண்பு ஈசா எனும் பண்பைப் பெற்றெடுத்தது.

எல்லாக் குழந்தைகளையும் அது பிறக்கின்ற போது சைத்தான் தீண்டுகிறான். அதனால் அக்குழந்தைகள் அழுகின்றன. ஆனால் அவன் மர்யத்தையும், அவர் பெற்றெடுத்த ஈஸாவையும் தீண்டவில்லை என்பது நபிமொழியாகும்.

(புகாரி, தப்ஸீர் சூரா ஆலி இம்ரான்)

பிறக்கும் அனைத்து நபிமார்களையும் சைத்தான் தீண்டி இருக்கிறான் என்று நம்ப முடியுமா? ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களையும் சைத்தான் தீண்டினான் (நவூதுபில்லாஹ்) என்று பீ.ஜே நம்பத் தயாரா? அவர் நம்பினாலும் ஆச்சரியப்படுவதற்கு இல்லை. இதன் பொருள் என்ன?

மர்யம் (அலை) அவர்களின் பண்பையும், ஈஸா நபியின் பண்பையும் கொண்டவர்களை சைத்தான் தீண்டவில்லை. ஏனையவர்களை சைத்தான் தீண்டுகிறான் என்று பொருள் கொள்வதே சரியாகும். (ஸம்ஹஷ்ரி தப்ஸீர் கஷ்ஃப்)

நஜ்ரான் கிறித்தவர்கள் ஈஸா நபியை அல்லாஹ்வின் மகன் (இப்னுல்லாஹ்) என்று கூறிவாதிட்ட போது, நபி (ஸல்) அவர்கள், **ஈஸா அல்லாஹ்வுக்குப் பிறந்த மகன் என்றால் அல்லாஹ்வின் பண்பாகிய மரணமற்ற நித்திய வாழ்வு அவர் மகனாகிய ஈஸாவுக்கு இருக்க வேண்டும். ஆனால் அவர் இறந்து விட்டார்** என்று கூறி மறுக்கிறார்கள். (ஆதாரம் : அஸ்பாபுன் நுஸுல், பேரூத் பதிப்பு, பக்கம் 68)அதாவது தந்தையின் பண்பு பிள்ளைக்கு இருக்க வேண்டும்.



**இப்னு சபீல்** என்பதற்கு பாதையின் மகன் என்பது சொற் பொருள். வாழ்க்கையில் பயணம் செய்பவர்களை அல்ல, பயணமே தன் வாழ்க்கையாக கொண்டவர்களைத்தான் **இப்னு சபீல்** என்ற சொல் குறிக்கும். ஆனால் இப்னு சபீல் என்றால் பாதையில் கிடக்கும் குழந்தை என்று பீ.ஜே கூறுகிறார் போலும்!

மேலே கூறிய கருத்துக்களைத் தொகுத்துப் பார்த்தால் மர்யம் என்பது ஒரு நல்ல விசுவாசி என்ற பண்பையும் இப்னு மர்யம் என்பது முதன்மையான விசுவாசியாகிய ஈஸா நபியின் பண்பையும் குறிக்கும்.

நல்ல விசுவாசியாகிய மர்யமும் நானே! முதன்மையான விசுவாசியாகிய ஈஸாவும் நானே! என்பது முற்றிலும் சரி என்பது தெளிவாகும். பீ.ஜே போன்றோர் இதனைப் புரிந்து கொள்ள முடியாது.

**VI. பீ.ஜே எழுதுகிறார்:**

*ஒருவரை சபித்துக் கட்டுரை எழுதிய இவர், இவர் மீது ஆயிரம் சாபம் உண்டாகட்டும் என்று எழுதி விட்டு 1 சாபம், 2 சாபம், 3 சாபம், 4 சாபம் என்று ஆயிரம் தடவை பல பக்கங்களில் நூருல் ஹக், பக்கம் 158ல் எழுதியுள்ளாரே இவர் மன நோயாளியா? நபியா? என்று கேட்ட போதும் எந்தப் பதிலும் இல்லை.*

**நம் விளக்கம்:**

அவ்வாறு சபிக்கப்பட்ட ஒருவர் யார்? பீ.ஜே யைப் போல ஒரு மவ்லவியாக இருந்து விட்டு, பின்னர் பாதிரி இமாதுத்தீனாக மாறியவர். திருக்குர்ஆனையும், ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களையும் கேலியும், கிண்டலும் செய்தவர். திருக்குர்ஆனில் எந்தக் கருத்துச் செறிவும் இல்லை. வெறும் பகட்டும், செயற்கைத் தன்மையுமே உள்ளன. திருக்குர்ஆன் காட்டுமிராண்டித்தனமான கருத்துக்களைக் கொண்டுள்ளது. எந்த ஒரு நீதிமானும் அதை ஏற்றுக் கொள்ள மாட்டான் என்றும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை கேவலமாக ஏசிப் பேசியவர்.

இவரிடம் திருக்குர்ஆனைப் பற்றியும் நபி (ஸல்) அவர்களைப் பற்றியும் தரக்குறைவாகப் பேசுவதை நிறுத்த வேண்டும் என்று கூறியும் அதற்கு செவி கொடாததினால் 1000 லஃனத் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் செய்தார்கள். அதில் தான் செய்கின்ற ஒவ்வொரு லஃனத்துக்கும் முழு சமுதாயமும் ஆமீன் சொல்ல வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்து செய்துள்ளார்கள். இது அவர்கள் இஸ்லாத்தின் மீதும், நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மீதும், திருக்குர்ஆன் மீதும் கொண்டிருந்த அளப்பரிய நேசத்தைக் காட்டுகிறது.

இப்படி இஸ்லாத்தின் எதிரிகள் மீது ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் 1000 லஃனத் செய்கிறார்கள் என்றால், அதனை கோவை விவாதத்தில் பீ.ஜே கேலியும், கிண்டலும், நையாண்டியும் செய்வதை வீடியோ கேசட்டைப் பார்ப்பவர்கள் உணரலாம்.

இஸ்லாத்தின் மீது தாக்குதல் நடத்திய ஒரு பாதிரியின் மீது இவர்களும் ஆயிரமோ, பத்தாயிரமோ, லட்சமோ லஃனத் உண்டாகட்டும் என்று கூறியிருக்க வேண்டும். அதை விட்டு விட்டு 1 சாபம், 2 சாபம், 3 சாபம் என்று பல பக்கங்களில் எழுதியிருப்பது தான் இவர்களின் ஆட்சேபனையாம். பீ.ஜே ஒரு மனநோயாளியா, ஒரு முஸ்லிமா? என்ற சந்தேகம் எனக்கு வருகிறது.

தான் நபி என்று ஏற்றுக் கொண்ட ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் சுன்னத்தை – நடை முறையை உணரத் தவறியதால் தான் மற்றொரு நபியின் அதே செய்கையை தரங்கெட்ட முறையில் விமர்சனம் செய்துள்ளார்.

ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், தொழுகைக்குப் பின் 33 முறை சுபுஹானல்லாஹ், 33 முறை அல்ஹம்துலில்லாஹ், 34 முறை அல்லாஹு அக்பர் என்று 1, 2, 3, 4,..., 33 முறை திக்ர் செய்ய கற்றுத் தந்துள்ளார்கள். இந்த இடத்தில் எனக்கு வரும்



சந்தேகம் என்னவென்றால் இந்த பீ.ஜே தொழுகையில் இந்தத் திக்ரை தன் வாழ்நாளில் செய்ததில்லையோ! என்பது தான்.

தன் வாழ்நாளில் குறைந்த பட்சம் 5 முறை தொழுபவன், 5 வேளைகள் இந்தத் திக்ரை செய்து வந்திருந்தால் இப்படிப்பட்ட ஒரு மறுப்பை எழுதியிருக்கவோ, கேலி, கிண்டல், நையாண்டி செய்யவோ மாட்டார். குறைந்த பட்சம் இவர் இந்தத் திக்ரை செய்யவில்லை என்று தெரிகிறது. இவர் யூதராகவோ, கிறித்தவனாகவோ, இந்துவாகவோ பிறந்து இஸ்லாத்தின் எதிரியாக மாறியிருந்தால் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைப் பார்த்து இதே கேள்வியைத் தான் கேட்டிருப்பார்.

ஒரு மவ்லவிக்கு இது தெரியாதா என்றால், அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் மீது கொண்ட வெறுப்பினால், ஒரு உண்மையை மறைப்பதற்கும் அதனை ஒரு பொய் எனக் காட்டுவதற்கும் துணிந்து விட்டார். இதிலிருந்து இவருடைய இன்னொரு முகத்தைத் தெரிந்து கொள்ளுங்கள். இதுதான் ஒரு உண்மை நபியின் பகைவர்களின் முகமாகும்.

33 சுப்ஹானல்லாஹ், 33 அல்ஹம்துலில்லாஹ், 34 அல்லாஹு அக்பர் என்று கூறினால் போதாதா? வேலை கெட்டு உட்கார்ந்து, சுப்ஹானல்லாஹ் 1, சுப்ஹானல்லாஹ் 2, சுபுஹானல்லாஹ் 3 என்று கூறும் இவர் ஒரு மனநோயாளியா? நபியா? (நவூதுபில்லாஹ்) என்று இந்த பீ.ஜே கேட்டிருப்பார். இது போன்ற குற்றச்சாட்டை வேறு யாரும் செய்திருக்கலாம். ஆனால் இந்த பீ.ஜே செய்திருக்கக் கூடாது. ஏனென்றால், இவர்கள் நடத்தும் மாநாட்டுக்கு தொலைக்காட்சியில் விளம்பரம் செய்கிற போது இன்னும் 100 நாட்கள் உள்ளன. இன்னும் 99 நாட்கள் உள்ளன...இப்படியே ஒவ்வொரு நாளும் விளம்பரம் செய்து கடைசியில் இன்னும் 1 நாளே உள்ளது என்று மாநாட்டுக்கு விளம்பரம் செய்யும் இவர்களை மன நோயாளி என்பதா? விளம்பர நோயாளி என்பதா?

எனவே, 1000 லஃனத்தை ஆயிரம் தடவை செய்வது தான் நபி வழி என்றும் இந்த வகையில் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் உண்மையான நபியாக தன்னை நிரூபித்துள்ளார் என்பதும் இதன் மூலம் நிரூபணம் ஆகிறது. இவ்வாறு நபியின் நடைமுறையை கோவையில் கூறினோம். ஆனால்,

**எந்தப் பதிலும் இல்லை என்பது முழுப் பொய்யாகும்.** பொய்யரின் மீதும் லஃனத் உண்டாகட்டும்.

**VII. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*ஈஸா நபியின் கப்ரு பாலஸ்தீனத்தில் உள்ளது என்று நூருல் ஹக் இத்மாமுல் ஹுஜ்ஜா பக்கம் 296 - இல் எழுதிய இந்தப் பொய்யர், ஈஸா நபி கப்ரு காஷ்மீரில் உள்ளது என்று கிஷ்தி நூஹ் பக்கம் 25(14)-ல் எழுதியுள்ளார். இப்படி முரண்பட்டு எழுதியவர் பொய்யனா? நபியா? என்றும் நேருக்கு நேர் கேட்டோம். பதில் இல்லை.*

**நம் விளக்கம்:**

1. பொய்யர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக என்பது தான் எம் பதில். இது போன்ற ஒரு சாபத்தை பீ.ஜே செய்யத் தயாரா ? முடிந்தால் செய்து காட்டட்டும்.
2. பதில் இல்லை என்பது பச்சைப் பொய். இதற்கு ஆடியோ, வீடியோ சான்று. இணையதளத்தில் காணலாம்.
3. ஒவ்வொரு நபியின் மீதும் அக்கால பீ.ஜே ஐப் போன்ற எதிரிகள், அந்தந்த நபிமார்களை பொய்யன் என்று கூறினர் என்று திருக்குர்ஆன் பல்வேறு இடங்களில் கூறுகிறது.

   *தோப்பு வாசிகள் துப்பவுடைய கூட்டத்தார் எல்லாரும் நம் தூதர்களைப் பொய்யாக்கினர். (குர்ஆன் 50:15)*

   *நூஹுடைய சமூகத்தாரும் இறைத் தூதர்களைப் பொய்ப்படுத்தினர் (26:106; 40:6)*

   *ஆது கூட்டத்தினரும் இறைத் தூதர்களைப் பொய்ப்பித்தனர் (26:124)*



   *ஸமூது கூட்டத்தினரும் இறைத் தூதர்களைப் பொய்யாக்கினர். (54:24; 26:142)*

   *ஃபிர்அவ்னும் அவனுடைய கூட்டத்தாரும் நம் தூதர்களை பொய்யர்கள் என்று கூறினர். (38:13)*

   *அவர்கள் உம்மை பொய்யன் என்று கூறியதனால் (வருந்தாதீர்) இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் இவ்வாறே பொய்யன் எனக் கூறினர். (35:26)*

   நபி (ஸல்) காலத்தில் அபூஜஹிலும், அபூலஹப்பும் நபி (ஸல்) அவர்களைப் பொய்ப்படுத்தியதைப் போன்றே இன்று பீ.ஜே யும் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்களைப் பொய்யன் என்று கூறுகிறார்.

   இந்த பீ.ஜே ஆது, ஸமூது, லூத்து, பிர்அவுன், நூஹ் சமூதாயத்தில் பிறந்திருந்தால் அல்லாஹ்வின் நபிமார்களைப் பொய்யன் என்றே கூறியிருப்பார்.

   ஒவ்வொரு நபிமார்களும் பொய்யன் என்று பீ.ஜே ஐப் போன்றவர்களால் கூறப்படுவது நபிமார்களின் காலத்தில் நடக்கும் சுன்னத் என்றும் இவரின் கூற்று ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்களை உண்மையான நபி என்று நிரூபிக்கிறது என்றும் தெளிவாகிறது.

4. ஈஸா நபி, சிலுவையிலிருந்து இறக்கப்பட்டு காயமுற்ற, மயக்க நிலையில் இறந்தவரைப் போன்ற தோற்றமளித்த உடல் பாலஸ்தீனத்தில் ஒரு பாறையைக் குடைந்து செய்யப்பட்ட ஓரிடத்தில் வைக்கப்பட்டது. அந்த இடத்தை இன்றும் கிறித்தவர்கள் அவரது உடல் வைக்கப்பட்டிருந்த இடம் என்று தரிசனம் செய்து வருகிறார்கள். இதனையே ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் தம் நூலில் எழுதியுள்ளார்கள்.

   (ஆதாரம் : சத்பச்சன் அடிக்குறிப்பு, பக்கம் 162)

   ஈஸா நபி காஷ்மீர் சென்று அங்கு வாழ்ந்த இஸ்ரவேல் மக்களிடம் தம் தூதுச் செய்தியை எடுத்துக் கூறி, இயற்கை மரணம் அடைந்து அங்கு அடக்கம் செய்யப்பட்டார்கள். அது

காஷ்மீரில் கான்யார் வீதியில் காணப்படுகிறது என்று தம் நூலில் எழுதியுள்ளார்கள்.

இவ்வாறு இரு நூல்களிலும் எழுதப்பட்ட செய்தி உண்மையே. இதில் என்ன முரண்பாடு உள்ளது ?

**VIII. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*மஸீஹ் ஈஸா அவர்கள் வானிலிருந்து இறங்குவார்கள் என்பதை மக்கள் அறிய வேண்டாமா? ஏன் இதை அறியாமல் இருக்கிறார்கள் என்று ஆயினே கமாலாதே இஸ்லாம் என்ற நூலில் பக்கம் 409 இல் எழுதிய இந்தப் பொய்யர், அதே நூலின் 44 ஆம் பக்கத்தில் ஈஸா நபி இறங்குவார் என்று நம்புவது ஷிர்க் எனும் இணை வைத்தலாகும் என்று கூறியுள்ளாரே இவர் எப்படி நபியாக இருக்க முடியும்?*

**நம் விளக்கம்:**

இந்த இடத்தில் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் கூற வருவதாவது,

உங்கள் கருத்துப்படியே ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்கள் விண்ணிலிருந்து வந்தாலும் எல்லா ஞானங்களையும் பெற்றவராகவே வர வேண்டும். பிறகு அவரது வஹியை அந்நிலையிலும் உங்களால் மறுக்க முடியாது என்பதாகும்.

இதிலிருந்து வஹி வர முடியும் என்பதை ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் மாற்றுக் கருத்துடையவரின் கொள்கைப்படியே நிரூபித்துள்ளார்கள்.

எனவே ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் விண்ணிலிருந்து ஈஸா நபி இறங்குவார் என்று நம்புவதாகவோ தமது கொள்கையை விட்டும் முரண்பட்டதாகவோ பொருள் அல்ல.

**IX. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*முஹம்மதீ பேகம் என்ற பெண்ணை மணமுடித்துத் தருமாறு அப்பெண்ணின் தந்தை அஹமத் பேக் என்பவரிடம்*



*கேட்டார். அவர் மறுத்து விட்டார். சுல்தான் முஹம்மது என்பவருக்கு மணமுடித்துக் கொடுக்க அவர் முடிவு செய்தார்.*

*அப்போது மிர்ஸா குலாம், சுல்தான் முஹம்மத் அவளைத் திருமணம் முடித்தால் முப்பது மாதத்தில் சுல்தான் முஹம்மத் மரணிப்பார். அவர் மரணித்து இத்தா காலம் முடிந்ததும் நான் முஹம்மதீ பேகத்தைத் திருமணம் செய்வேன்; அவ்வாறு செய்யாவிட்டால் அதுவே நான் பொய்யன் என்பதற்கு ஆதாரம் என்று இவர் தனது ஆயினே கமாலாதே இஸ்லாம் என்ற நூலில் பக்கம் 325-ல் எழுதினார். ஆனால் சுல்தான் முஹம்மதுக்கு முன் இவர் மரணித்து தன்னைத் தானே பொய்யன் என்று நிரூபித்தார்.*

**நம் விளக்கம்:**

1) அஹ்மது பேக் குடும்பத்தினர் இஸ்லாத்தை விட்டு வெளியேறும் நிலை ஏற்பட்ட போது அவருக்கு இஸ்லாத்தின் மேன்மையை உணர்த்தி ஈமானில் தக்க வைப்பதற்காக எச்சரிக்கை வடிவிலான முன்னறிவிப்பு செய்தார்கள். இதற்காக இறைவனின் கட்டளையால் முஹம்மதி பேகத்தை திருமணம் செய்ய பெண் கேட்டார்கள். அஹ்மது பேக் என்பவர் தனது மகள் முஹம்மதி பேகத்தை தனக்குத் திருமணம் செய்து கொடுக்க மறுத்து வேறு ஒருவர்க்கு திருமணம் செய்து கொடுத்தால் 3 வருடத்திற்குள் மரணிப்பார் என்று ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் முன்னறிவிப்பு செய்தார்கள். ஆனால் அவர் தனது மகளை சுல்தான் முஹம்மது என்பவருக்கு திருமணம் செய்து வைத்தார். அவ்வாறே முன்னறிவிப்பிற்கேற்ப அவர் 6 மாதத்தில் மரணம் எய்தினார். இச்சம்பவம் நடந்ததும் அக்குடும்பத்தினர் அச்சமடைந்து சுல்தான் முஹம்மது என்ற அவரது மருமகன் பாவமன்னிப்புக் கோரி ஒரு கடிதம் எழுதினார். அக்கடிதம் இன்று வரை அஹ்மதிய்யா ஜமாஅத்தில் உள்ளது. பிறகு அவரது குடும்பத்தினர் பத்து பேர்கள் ஜமாஅத்தில்

இணைந்தனர். எனவே, முகம்மதி பேகத்தின் கணவன் மரணத்திற்கோ, அவளை மண முடித்தல் என்ற பேச்சுக்கோ இடமில்லை. ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்களுக்கு வந்த வஹியில் இந்த சம்பவங்கள் முடிந்த பின்னரும் சில நாய்கள் மட்டும் குரைத்துக் கொண்டிருக்கும் என்றும் வந்துள்ளது. இதன்படி, இந்த சம்பவத்தைப் பற்றி உலகில் சிலர் ஆட்சேபனை செய்து கொண்டே இருக்கின்றனர். இதோ கடிதத்தின் நகல் இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது.





2. ஒரு நபியின் முன்னறிவிப்பு அப்படியே நிறைவேறா விட்டால் அவர் நபி இல்லை என்றால், யூனுஸ் நபியின் முன்னறிவிப்பு நிறைவேறாததினால் தான் அவர் கப்பலேறிச் சென்றதும், கப்பலில் இருந்து கடலில் வீசப்பட்டதும், ஒரு பெரிய மீன் அவரை விழுங்கியதும் ஆகிய சம்பவங்கள் நடந்தன.

இறைவன் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து நீர் மீனுடையவர் போல் (யூனூஸ் நபி) ஆகிவிடாதீர் என்றும், ஒரு சமுதாயம் யூனூஸ் நபியின் சமுதாயம் போல் ஆக வேண்டாமா என்றும் திருக்குர்ஆனில் கூறுகிறான். காரணம், யூனூஸ் நபியின் சமுதாயம் அவரை ஏற்க மறுத்ததும், அவர் இறைவனின் முன்னறிவிப்பை மக்களுக்கு அறிவித்து இறைத்தண்டனை வருவதைப்பற்றியும் கூறிவிட்டு, ஊரைவிட்டு வெளியேறி விடுகிறார். உடனே அச்சமுதாயம் சுல்தான் முஹம்மது செய்தது போல் இறைவனிடம் பாவ மன்னிப்புக் கோரி மன்றாடினர். அல்லாஹ் அவர்களுக்கு இறக்க வேண்டிய தண்டனையை, சுல்தான் முஹம்மதின் மரணத்தை நிறுத்தியது போல் நிறுத்தி விடுகிறான். யூனூஸ் நபி மீண்டும் தன் சமுதாயத்திடம் வந்ததும் ஒரு லட்சத்துக்கும் மேற்பட்ட மக்கள் யூனூஸ் நபியை ஏற்றுக் கொண்டனர். இவ்வாறே சுல்தான் முஹம்மதுவின் குடும்பத்தினர் பத்து பேரும் ஜமாஅத்தில் இணைந்தனர். **யூனூஸ் நபியின் முன்னறிவிப்பு பொய்த்து விட்டதால் அவரை நபி இல்லை என்று பீ.ஜே கூறத் தயாரா?**

### X. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:

*மஸீஹ் வரக்கூடிய காலத்தில் வானத்தில் இருந்து இவர் அல்லாஹ்வின் கலீஃபா மஹ்தீ என்ற சப்தம் வரும். குர்ஆனுக்கு அடுத்த நிலையில் உள்ள ஸஹீஹுல் புஹாரி என்ற ஹதீஸ் நூலில் இது உள்ளது என்று மிர்ஸா குலாம் சஹாததுல் குர்ஆன் என்ற நூலில் பக்கம் 41ல் கூறியுள்ளார். ஸஹீஹுல் புகாரி இதோ உள்ளது. அந்த ஹதீஸை காட்டுங்கள் என்று கேட்டோம். புகாரியில் அவ்வாறு இல்லாததால் காதியான் மதத்தினர் அதை எடுத்துக் காட்ட*

*முடியவில்லை. பெரும் பொய்யர் என்று தனக்குத் தானே நிரூபித்துக் கொண்டவர் எப்படி நபியாக இருக்க முடியும்.*

**நம் விளக்கம்:**

நபிமொழியில் கூறப்பட்ட சம்பவம் உண்மை என்றும் அது ஸஹீஹ் புகாரி என்று மறதியாக ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் கூறிவிட்டார்கள் என்றும் கோவை விவாதத்திலேயே கூறப்பட்டது. மறதியின் காரணமாக ஒருவர் பொய் நபி என்றால், திருக்குர்ஆன் 20:116 வசனத்தில் ஆதம் நபி மறந்து விட்டார் என்பதால் அவர் நபி இல்லை என்றும் ஆதம் நபி அல்லாஹ்வின் கட்டளையை மீறியதால் அவர் நபி இல்லை என்றும் பீ.ஜே கூறத் தயாரா?

திருக்குர்ஆன் 18:74 இல் மூஸா நபியிடம் மறதி காணப்பட்டதால் அவர் நபி இல்லை என்று பீ.ஜே கூறத் தயாரா? நபி (ஸல்) அவர்கள் லைலத்துல் கத்ர் இரவு ரமலானில் எந்த இரவு என்பதை மறந்து விட்டார்கள் என்றும் தொழுகையில் அவர்களுக்கு மறதி ஏற்பட்டுள்ளது என்றும் நபிமொழியில் காண்கிறோம். இதனால் பீ.ஜே நபி (ஸல்) அவர்களை நபி இல்லை என்று கூறத் தயாரா ?

திருக்குர்ஆன் 2:107, ஏதேனும் வசனத்தை நாம் மாற்றினால் அல்லது அதை மறக்கச் செய்தால் அதை விடச் சிறந்ததையோ அதற்குச் சமமானதையோ நாம் தருவோம் (பீ.ஜே யின் தமிழாக்கம்) என்று இறைவன் கூறுகிறான். **அல்லாஹ் தன் நபிக்கு மறதியை கொடுப்பது அவனது நடைமுறை என்றும், மறப்பது நபிமார்களின் நடைமுறை என்றும், இந்த நடைமுறையின் அடிப்படையில் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் புகாரி என்று மறதியாக கூறியதால் அவர் உண்மையான நபியின் நடைமுறையை நிறைவேற்றியுள்ளார்கள் என்றும் தெள்ளத் தெளிவாகிறது.** மேலும் இந்த ஹதீஸ் ஹாக்கிம் என்ற நபிமொழித் தொகுப்பில் இடம் பெற்றுள்ளது.



இவ்வாறு ஒரு நபியின் அடிப்படை அடையாளத்தைக் கூட குர்ஆன், நபிமொழியிலிருந்து அறியாத பி.ஜே இதன் மூலம் தன்னைத் தானே அறிவிலி என்று நிரூபித்து விட்டார். திருக்குர்ஆன், நபிமொழி பற்றிய ஞான சூனியம் என்றும் தன்னைத் தானே நிரூபித்துள்ளார்.

**XI. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*மிர்ஸா குலாம் மதத்தைப் பின்பற்றும் காதியானிகள் எதை இறைச் செய்தி என்று கூறுகின்றார்களோ அதை அனைத்து மக்களுக்கும் சென்றடையும் வகையில் பரவலாக அச்சிட்டு வெளியிடத் தயாரா என்று முஸ்லிம்கள் எழுப்பும் கேள்விக்கு இன்று வரை அந்த மதத்தினர் பதில் கூறவில்லை. அதைப் பரப்பவுமில்லை. திருட்டுப் பொருளைப் பதுக்கி வைத்திருப்பதைப் போன்று தான் காதியானி மதத்தவர்கள் மிர்ஸா குலாமின் உளறல்களைப் பதுக்கி வைக்கிறார்கள். (9 வது பதிப்பு பக்கம் 1264)*

**நம் விளக்கம்:**

1. உலக மகா பொய்யர் பீ.ஜே யின் இந்த உளறல், இவரது திருக்குர்ஆன் மொழியாக்கத்தில் 9 வது பதிப்பில் உள்ளது. இது மே 2010 இல் வெளியானது.

   ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் நூல்கள் அனைத்தும், அதன் இணையதளம் www.alislam.org இல் உள்ளது. இது 1995ல் எமது இணையதளத்தில் வெளிவந்து விட்டது. கடந்த நூறு ஆண்டுகளுக்கு முன்னால் வரை திருக்குர்ஆன் தமிழ் மொழிபெயர்ப்புகளும் நபிமொழிகளின் தமிழ் மொழிபெயர்ப்புகளும் இருந்ததில்லை. எனவே இறை வேதம் திருக்குர்ஆனையும், நபி (ஸல்) அவர்களின் கூற்றுக்களையும் 1300 வருடங்களாக திருடர்களைப் போல் பதுக்கி வைத்ததாக ஆகுமா? அல்லது அவை பீ.ஜே கூறுவது போல் உளரல்கள் ஆகுமா? (நவூதுபில்லாஹ்)

2. **அனைத்து மக்களுக்கும் சென்றடையும் வகையில் பரவலாக அச்சிட்டு வெளியிடத் தயாரா என்று முஸ்லிம்கள் எழுப்பும் கேள்விக்குப் பதில் இல்லை** என்று பீ.ஜே எழுதியுள்ளார்.

பொதுவாக தமிழ் நாட்டிலும், குறிப்பாக மேலப்பாளையத்திலும் TNTJ சம்பந்தமாக பல பிரசுரங்களை, பல சுவரொட்டிகளை, 50 –க்கும் மேற்பட்ட டிஜிட்டல் போர்டுகளின் மூலமும் எங்கள் கருத்துகளை வெளியிட்டோம். பல பொதுக் கூட்டங்கள் மூலமும் எங்கள் செய்திகளை வெளியிட்டுள்ளோம்.

அதற்கு TNTJ –யின் நிலைபாடு என்னவென்றால், அவற்றைப் படிக்காதீர்கள், அவர்களின் கூட்டங்களுக்குச் செல்லாதீர்கள். அது பற்றி எங்களிடம் எந்தக் கேள்வியையும் கேட்காதீர்கள் என்று கண்ணைக் கட்டி, காதை அடைத்து, வாயையும் மூட வைத்துள்ளார்கள்.

மேலப்பாளையம் தவ்ஹீத் ஜமாஅத்தினர் ஈஸா (அலை) அவர்கள் மரணம், நபிக்குப் பிறகு நபி வர முடியுமா ? ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் உண்மைத்துவம் – இந்த மூன்று தலைப்புகளைப் பற்றி கருத்தரங்கம் ஒன்று நடத்தினார்கள். இதற்கு மேலப்பாளையம் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் சார்பாக 11.05.2002, 12.05.2002 ஆகிய நாட்களில் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் எழுதிய நூல்கள் அனைத்தையும் பசார் திடலில் மேடையில் வைத்து மேலப்பாளைம் தவ்ஹீத் ஜமாஅத்திற்கும் பிற அமைப்பிற்கும் அழைப்பு விடுத்தோம். ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் நூல்களில் ஏதேனும் சந்தேகம் இருந்தால், விளக்கம் தேவைப்பட்டால் **எங்களிடம் மூல நூல்கள் உள்ளன. நேரில் வந்து சந்தேகங்களைக் கேட்டு விளக்கத்தைப் பெறலாம். முன்வருவோர் யாரும் உண்டா என்று அழைப்பு விடுத்தோம்.** தவ்ஹீத் ஜமாஅத்தினர் யாரும் முன்வரவில்லை. காதியானிகள் நூல்களை திருடர்கள் போல் பதுக்கி



வைத்து பிறருக்கு காட்டுவதில்லை என்று கூறுகின்ற இவருக்கும் இவரது கூட்டத்தாருக்கும் இது தெரியாமல் போனது தான் பெரும் வியப்பு!

ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் நபிமொழிகளை அஹ்லே குர்ஆன்வாதிகள் உளறல்கள் என்று கூறுகின்றனர். இந்த அஹ்லே குர்ஆன் வாதிகளைப் போல் பீ.ஜே ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் நூல்களை உளறல்கள் என்கிறார்.

அல்லாஹ்வின் வசனங்களை அக்கால காபிர்கள் கட்டுக் கதைகள் என்று கூறியதாக திருக்குர்ஆன் கூறுகிறது. (8:32; 16:25; 27:69) இதிலிருந்து இறைச் செய்திகளையும், நபியின் கூற்றுகளையும் உளறல் என்று கூறுவது அதன் உண்மைக்கு ஒரு அடையாளம் என்று தெரிகிறது.

**XII. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*தனக்கு ஆங்கிலத்தில் வஹீ வந்ததாகச் சில வாசகங்களைக் கூறினார். ஆனால் அது இலக்கணப்பிழையுடன் இருந்தது. வஹீ வேகமாக வருவதால் இது போன்ற பிழைகள் வருவது சகஜம் என்று உளறினார். (நூல் : ஹகீகதுல் வஹி, பக்கம்317) அல்லாஹ்வே பிழையாகப் பேசுவான் என்று கூறியவர் நபியா?*

**நம் விளக்கம்:**

1. இவர் ஒரு நபியாக இருக்கிறார் என்பதற்கு இந்த ஆங்கில வஹியே சான்றாகும். தனக்கு வந்த வஹியை தான் புரிந்து கொண்டவாறு அப்படியே தன் நூலில் பதிவு செய்து வைத்துள்ளது அதற்குச் சான்றாகும். அது சரியா தவறா என்று ஆங்கிலம் தெரிந்தவரிடம் கேட்டுத் திருத்தி வெளியிடவில்லை என்பதும் இவர் உண்மையாளர் என்பதற்குச் சான்றாகும்.

ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் தாம் எழுதிய ஹகீகத்துல் வஹீ எனும் நூலில் பக்கம் 317–இல் அடிக்குறிப்பில் இந்த ஆங்கில வஹி தொடர்பாக எழுதியிருப்பதை கீழே தருகிறோம்.

அன்னார் கூறுகின்றார்கள்:

**இது வேற்று மொழியில் வந்த இல்ஹாம் ஆகும். மேலும் இல்ஹாம் இறங்குவதில் ஒரு வேகத்தன்மை இருக்கும். எனவே சில சொற்களை உச்சரிப்பதில் வித்தியாசம் ஏற்பட்டிருக்கலாம். மேலும் சில இடங்களில் மனிதனால் உருவாக்கப்பட்ட வழக்குச் சொற்களை பயன்படுத்துவதற்கு இறைவன் நிர்பந்தப்பட்டவன் அல்ல என்றும் நிரூபிக்கப் -பட்டுள்ளது. ஏதாவது ஒரு காலத்தில் மனிதன் கைவிட்ட வழக்குச் சொற்களையும் இறைவன் பயன்படுத்துவான். மேலும் மனிதனால் உருவாக்கப்பட்ட இலக்கணங்கள் அதாவது சர்ஃப் வ நஹு ஆகிவற்றை இறைவன் கடைபிடிப்பதில்லை என்றும் நிரூபிக்கப்பட்டுள்ளது. இதற்கான உதாரணங்கள் திருக்குர்ஆனில் பல உள்ளன. உதாரணத்திற்கு இன் ஹாதானி லசாஹிரானி (சூரா தாஹா: 64). மனிதனால் உருவாக்கப்பட்ட இலக்கணத்தின் அடிப்படையில் இன் ஹாதைனி என்று வந்திருக்க வேண்டும்.** இவ்வாறு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் கூறியிருக்கின்றார்கள். பீ.ஜே கூறியது போல் எதுவுமில்லை.

2. அல்லாஹ்வே பிழையாகப் பேசுவான் என்று கூறியவன் நபியா என்று பீ.ஜே கேட்கிறார். ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் அவ்விதம் கூறவில்லை. வஹி வேகமாக வருவதாலும் அது தனக்குத் தெரியாத பிற மொழி என்பதாலும் தனக்குப் பிழை ஏற்பட்டிருக்கலாம் என்று தான் கூறியுள்ளார்கள். அல்லாஹ்வே பிழையாகப் பேசுவான் என்று அவர் சொல்லாததை சொல்லி அல்லாஹ்வின் கண்ணியத்தைப் பீ.ஜே தான் களங்கப்படுத்தி யுள்ளதால் நமக்கு இவர் ஒரு முஸ்லிமா? ஒரு மனிதனா? என்ற சந்தேகம் எழுகிறது. ஆங்கில வஹியில் தவறு என்பது இருக்கட்டும். பீ.ஜே திருக்குர்ஆன் தமிழாக்கத்தில் குர்ஆனில் உள்ள பிழைகளைப் பட்டியல் போட்டுக் காட்டியுள்ளார். இந்த நகலைப் பாருங்கள்.





| பிழையாக எழுதப்பட்டது | எழுத வேண்டிய முறை | வசன எண் | அத்தியாயம் |
|---|---|---|---|
| أَفَائِنْ | أَفَإِينْ | 144 | 3 |
| لَاْاِلَى اللّٰهِ | لَإِلَى اللّٰهِ | 158 | 3 |
| تَبُوْٓءَا | تَبُوْٓءَ | 29 | 5 |
| مَلَائِهِ | مَلَإِيْهِ | 103 | 7 |
| لَاْاَوْضَعُوْا | لَأَوْضَعُوْا | 47 | 9 |
| ثَمُوْدَاْ | ثَمُوْدَ | 68 | 11 |
| لِشَاْيْءٍ | لِشَيْءٍ | 23 | 18 |
| لَنْ نَّدْعُوَاْ | لَنْ نَّدْعُوَ | 14 | 18 |
| لٰكِنَّاْ | لٰكِنَّ | 38 | 18 |
| لِتَتْلُوَاْ | لِتَتْلُوَ | 30 | 13 |
| اَوْلَاْاَذْبَحَنَّهٗ | اَوْلَأَذْبَحَنَّهٗ | 21 | 27 |
| اَطَعْنَا الرَّسُوْلَاْ | اَطَعْنَا الرَّسُوْلَ | 66 | 33 |
| لِيَبْلُوَاْ | لِيَبْلُوَ | 4 | 47 |
| لَاْاِلَى الْجَحِيْمِ | لَإِلَى الْجَحِيْمِ | 68 | 37 |
| لَاْاَنْتُمْ اَشَدُّ | لَأَنْتُمْ اَشَدُّ | 13 | 59 |
| قَوَارِيْرَاْ | قَوَارِيْرَ | 15 | 76 |
| سَلٰسِلَاْ | سَلٰسِلَ | 4 | 76 |
| السَّبِيْلَاْ | السَّبِيْلَ | 67 | 33 |
| وَنَبْلُوَاْ | وَنَبْلُوَ | 31 | 47 |

பிழையாக எழுதப்பட்ட அலிஃப் மீது சிறிய வட்டமிடப்பட்டு அதை வாசிக்கக் கூடாது என எல்லா குர்ஆனிலும் அச்சிடப்பட்டுள்ளது.

64

3. இவருடைய 9 -வது பதிப்பில் 64-65 ஆகிய பக்கங்களில், திருக்குர்ஆனில் உள்ள எழுத்துப் பிழைகளைப் பட்டியல் போட்டுக் காட்டியுள்ளார். இந்தப் பிழைகள் எப்படி ஏற்பட்டன? பீ.ஜே எழுதியுள்ளதைப் பாருங்கள்.

பக்கம் 65 இல், இது தவிர இரண்டு இடங்களில் எழுத்தே மாற்றி எழுதப் பட்டிருப்பதைக் காண்கிறோம். 2:245 வது வசனத்தில் யப்சுது வில் ஸீன் என்ற எழுத்தை எழுதுவதற்குப் பதிலாக ஸாத் என்ற எழுத்தை எழுதியுள்ளார். ஸாத் இடம் பெற்றால் அதற்கு அர்த்தம் வராது. எனவே அந்தத் தவறை அப்படியே எழுதி ஸாத் என்ற எழுத்தின் மீது ஒரு சிறிய அளவில் ஸீனை எழுதி அடையாளம் காட்டியுள்ளார்.

அதே போல 7 வது அத்தியாயத்தின் 69 வது வசனத்தில் பஸ்(ரீ)தத் என்று ஸீன் எழுதுவதற்குப் பதிலாக பஸ்(ரீநி)தத் என்று ஸாத் எழுதியுள்ளனர். இரண்டும் ஏறக்குறைய நெருக்கமான உச்சரிப்பைக் கொண்ட எழுத்துக்களாக இருப்பதால் இந்தத் தவறு நேர்ந்திருக்கலாம்.

இந்தச் சிறிய அளவிலான எழுத்துப் பிழைகளைத் தவிர மற்ற அனைத்துமே சரியாகவே மூலப் பிரதியில் எழுதப் பட்டுள்ளன. இந்தப் பிழைகளும் கூட பாரதூரமான பிழைகள் இல்லை. மனிதர்களுக்கு ஏற்படக் கூடிய பிழைகள் தான்.

குர்ஆன் இறைவனிடமிருந்து எழுத்து வடிவில் அருளப்பட -வில்லை. ஒலி வடிவமாகத் தான் அருளப்பட்டது. ஒலி வடிவமாக அருளப்பட்டதை எழுத்து வடிவமாக ஆக்கியது மனிதர்கள் தான். எனவே எழுத்துக்களில் ஒன்றிரண்டு பிழைகள் இருப்பதற்கு, இது மனிதர்களின் செயல் என்பது தான். காரணம், இறைவனே எழுதித் தந்திருந்தால் எழுத்திலும் பிழை ஏற்பட்டிருக்காது.

எனவே மனிதர்களால் ஏற்பட்ட இந்தத் தவறுகளை நாம் சுட்டிக் காட்டுவதால், திருக்குர்ஆன் பாதுகாக்கப்படவில்லை என்று



ஆகிவிடாது. ஏனெனில் திருக்குர்ஆன் அதன் ஒலி வடிவத்தில் பாதுகாக்கப்பட்டே இருக்கின்றது. அதில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. இதுவே பீ.ஜே யின் விளக்கம். இது போன்றே ஆங்கில வஹி சம்பந்தமாகவும் ஏற்பட்டுள்ளது என்று நாம் கூறுகிறோம்.

பீ.ஜே முஸ்லிம் அல்லாத பெற்றோருக்குப் பிறந்திருந்தால், திருக்குர்ஆனில் இலக்கணப் பிழைகள் உள்ளன என்றும், எனவே திருக்குர்ஆன் இறைவேதம் அல்ல என்றும் கூறியிருப்பார்.

**XIII. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*நீ எனது அர்ஷின் அந்தஸ்தில் இருக்கிறாய்! நீ என் மகனுடைய அந்தஸ்தில் இருக்கிறாய்! எந்தப் படைப்புகளும் அறிந்து கொள்ள முடியாத ஒரு அந்தஸ்தில் நீ இருக்கிறாய் என்று அல்லாஹ் என்னிடம் கூறினான் என்று மிர்ஸா குலாம் ஹகீகதுல் வஹீ பக்கம் 86 முதல் 89 வரை கூறியுள்ளார்.*

*அல்லாஹ்வுக்குப் பிள்ளை இருக்க முடியாது. இது அல்லாஹ்வுக்குக் கடும் கோபத்தை ஏற்படுத்தும் சொல் என்று அல்லாஹ் கூறியிருக்கிறான். இப்படிக் கூறலாம் என்பதற்குச் சான்றைக் காட்டுங்கள் என்று அடுக்கடுக்கான ஆதாரங்களுடன் கேள்வி கேட்டோம். கடைசி வரை பதில் இல்லை. அல்லாஹ்வின் பார்வையில் காஃபிராக ஆகிவிட்ட இவர் எப்படி நபியாக இருக்க முடியும்?*

**நம் விளக்கம்:**

1. அல்லாஹ் திருக்குர்ஆனில் 12:4 வசனத்தில் (பீ.ஜே யின் மொழியாக்கம்)

**என் தந்தையே! பதினோரு நட்சத்திரங்களையும், சூரியனையும், சந்திரனையும் நான் (கனவில்) கண்டேன் என்று யூஸுஃப் தமது தந்தையிடம் கூறியதை நினைவூட்டுவீராக என்று கூறியுள்ளான்.**

இதில் யூசுஃப் நபி தன்னை இறைவனாக ஆக்கி விட்டார் என்று பீ.ஜே கூறத் தயாரா?

2. திருக்குர்ஆன் 39:11 இல், நபி (ஸல்) அவர்கள், நம்பிக்கை கொண்ட என் அடியார்களே! என்று அழைப்பதாக வருகிறது. இறைவன் என் அடியார்களே! என்று அழைக்கலாம். நபி (ஸல்) இந்த ஆயத்தில் மக்களை என் அடியார்களே! என்று அழைத்திருப்பதனால் நபி (ஸல்) அவர்கள் இறைத் தகுதிக்குத் தன்னை உயர்த்தியிருப்பதாகக் காட்டுகிறது (நவூதுபில்லாஹ்) என்று பீ.ஜே நம்பத் தாயரா?
3. மேலும் நபி (ஸல்) அவர்கள் பத்ருப் போரின் போது நபியே ! எறிந்தது நீர் அல்ல. நாமே எறிந்தோம் – என்று (8:18) கூறி, அன்னாரை அல்லாஹ், அல்லாஹ்வாக ஆக்கிக் கொண்டான் (நவூதுபில்லாஹ்) என்று காட்டுகிறது என்று பீ.ஜே நம்பத் தயாரா?

**தஃதீருல் அனாமில் இவ்வாறு எழுதப்பட்டுள்ளது:**

1. ஒருவர் தம் கனவில் தாம் இறைவனாகிவிடுவதாகக் கண்டால் அவருக்கு நேர்வழி கிடைக்கும் என்பதே அதன் விளக்கமாகும்.
2. ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் அந்த வசனங்களுக்கு தவ்ஹீதுக்கு மாற்றமான பொருளில் தான் கூறவில்லை என்று அதற்குரிய பொருள் இதுதான் என்று விளக்கிக் கூறியிருக்கும் போது, அந்தப் பொருளில் கூறவில்லை. அதற்கு இது தான் பொருள் என்று கூறுவதற்கு உலகில் எவனுக்கும் அதிகாரமோ, தகுதியோ, உரிமையோ இல்லை என்று உண்மையாளர்களும், சிந்தனையாளர்களும் ஒப்புக் கொள்வர். எனவே இந்த இல்ஹாமுக்கு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் கொடுத்த விளக்கத்தையே ஏற்றுக் கொள்ள வேண்டும். வஹீ வந்தவர் கூறிய பொருளுக்கு மாற்றமாக பொருள் கொடுக்கக் கூடாது.



3. பீ.ஜே கிறித்தவர்களின் கொள்கைகளுக்கு பல முறை வக்காலத்து வாங்குவதைப் பார்க்கும் போதும், கிறித்தவக் கொள்கைகளைக் கொண்டிருப்பதைப் பார்க்கும் போதும், இவர் கிறித்தவ கொள்கைகளைத் தன்னை அறியாமலே இஸ்லாத்தில் புகுத்த நினைக்கிறாரோ என்று அவற்றைப் படிப்போருக்கு எண்ணத் தோன்றுகிறது. அவற்றுள் ஒன்று தான் இதுவாகும்.

**ஈஸா நபியை அல்லாஹ்வுக்கு மகன் உண்டு என்று கூறுபவர்கள் அல்லாஹ்வுக்கு பிறந்தவர் என்று கூறவில்லை. மகனுடைய அந்தஸ்தில் உள்ளவர் என்று தான் கூறினார்கள். இதனால் தான் அவர்கள் காபிர்கள் ஆனார்கள்** என்று பீ.ஜே எழுதியுள்ளார். (9வது பதிப்பு – பக்கம் 1262)

பீ.ஜே க்கு ஏன் இப்படி புத்தி போய் விட்டது என்று எனக்குத் தெரியவில்லை. அல்லாஹ் தன் திருமறையில் 5:73 மர்யமின் மகன் மஸீஹ்தான் அல்லாஹ் எனக் கூறியவர்கள் மறுத்து விட்டனர் என்றும் 5:74 மூவரில் அல்லாஹ் ஒருவன் என்று கூறியோர் மறுப்பவர்களாகி விட்டனர் என்றும் திருக்குர்ஆன் 9:30 உசைர் அல்லாஹ்வின் மகன் என்று யூதர்கள் கூறுகின்றனர். மஸீஹ் அல்லாஹ்வின் மகன் என்று கிறித்தவர்கள் கூறுகின்றனர் – என்றும் அல்லாஹ்வே கூறும் போது இவர் இப்படி கிறித்தவர்கள் கூறவில்லை என்று கூறுவதும் தவறு. அல்லாஹ் பொய் கூறுகிறான் என்று (நவூதுபில்லாஹ்) கருதுகிறார் போலும். மேலும் கிறித்தவர்களின் உள்ளத்தில் உள்ளது அல்லாஹ்வை விட தனக்குத் தான் தெரியும் என்று இதன் மூலம் நிரூபித்து விட்டார்.

இறைவனுக்கு மகனா? என்று பீ.ஜே எழுதிய நூலில் (பதிப்பு 3) கிறித்தவர்கள் இயேசுவை இறைவனுக்குப் பிறந்த மகன் என்று நம்புவதை தவறு என்று எழுதியுள்ளார்.

1. ...இந்தச் சாதாரண உண்மையைக் கிறித்தவர்கள் விளங்கிக் கொண்டால் இயேசு இறைவனுக்குப் பிறந்தவர்; அதனால் இறைவனாகவே ஆகிவிட்டார் என்று கூற மாட்டார்கள் – பக்கம் 19

2. ...கிறித்தவர்கள் இறைமகன் என்பதைத் தவறாக விளங்கிக் கொண்டு இறைமகன் இயேசுவிடம் வேண்டுதல் செய்வதும் அவரை வழிபடுவதும் சரிதானா? - பக்கம் 23

3. இறைமகன் என்பதை இறைவன் என்று தவறான பொருளில் புரிந்து கொண்ட கிறித்தவர்கள்.... - பக்கம் 23

4. இயேசு கடவுள் தன்மை பெற்ற கடவுளின் மகனாக ஆகிவிட்டார் என்றால் அவர் தம்மை மனு- குமாரன் என்று ஏராளமான சந்தர்ப்பங்களில் குறிப்பிட்டது ஏன்? நாம் எடுத்துக் காட்டிய இந்த வசனங்கள் யாவும் இயேசு கடவுளாக - கடவுளுக்குப் பிறந்தவராக - கடவுள் தன்மை பெற்றவராக இருக்கவில்லை என ஐயத்திற்கிடமின்றி அறிவிக்கின்றன - பக்கம் 27

பீ.ஜே கிறிஸ்தவர்களிடம் அவர்களது கடவுட் கொள்கையை சுட்டிக் காட்டி மஸீஹ் அல்லாஹ்வின் மகன் என்று அவர்கள் கொண்டிருக்கும் கொள்கை தவறு என்று நிரூபிக்கிறார். ஆனார் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை காஃபிர் என்று சொல்ல வேண்டும் என்பதற்காக கிறிஸ்தவர்களின் கடவுள் கொள்கையில் தமக்கு இருக்கும் இந்த நிலைபாட்டை மாற்றி மஸீஹை கிறிஸ்தவர்கள் அல்லாஹ்வின் மகன் என்று கூறவில்லை. மாறாக அவரை அல்லாஹ்வின் மகனின் அந்தஸ்தில் உள்ளார் என்றே நம்புகின்றனர் என்று கூறி இரட்டை வேடம் போடுகிறார்.

ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை எப்படியாவது பொய்யராக ஆக்க வேண்டும் என்று நினைப்பவர்கள் இப்படித் தான் தரங்கெட்டு, தாழ்ந்து போவார்கள் என்பதை பீ.ஜே உணர வேண்டும் என்பது தான் நம் வேண்டுகோள். இறை நபி விசயத்தில் இரட்டை வேடம் போட வேண்டாம் என பீ.ஜே யிடம் வேண்டுகிறோம்.

4. அல்லாஹ்வின் பார்வையில் காஃபிராக ஆகிவிட்ட இவன் எப்படி நபியாக இருக்க முடியும் என்று பீ.ஜே எழுதியுள்ளார்.



ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள், தான் இறைமறுப்பு எனும் பொருளில் கூறவில்லை என்று கூறியிருக்கும் போது அவரது ஒப்புதல் வாக்குமூலத்தை வைத்து தான் மனிதர்கள் தீர்ப்பு கொடுக்க வேண்டுமே ஒழிய இது இறைவன் பார்வையில் குப்ர் என்று பீ.ஜே கூறுவது இவர் தன்னை அல்லாஹ்வின் தகுதிக்கு உயர்த்தி விட்டதனைச் சுட்டிக் காட்டுகிறது.

மேலும் நபியின் எதிரிகள் ஒவ்வொரு காலகட்டத்திலும் நபியை காபிர்கள் என்றே கூறி வந்துள்ளனர். ஹஸ்ரத் சுலைமான் (அலை) காபிராக இருக்கவில்லை என்று இறைவன் 2:103 வசனத்தில் கூறியிருப்பது, சுலைமான் நபி காலத்தில் வாழ்ந்த பீ.ஜே-க்கள் அவரைக் காபிர் என்று கூறியிருப்பதையும், அல்லாஹ் அதனை மறுத்திருப்பதையும் எடுத்துக் காட்டுகிறது. இதுவும் சுலைமான் நபியைப் போல் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களும் உண்மையான நபி என்றும் காஃபிர் இல்லை என்பதை எடுத்துக் காட்டுகிறது.

**XIV. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*கமர் என்ற சொல் மூன்று நாட்களுக்குப் பிறகு உள்ள பிறைக்குத் தான் சொல்லப்படும். இது அன்று முதல் இன்று வரை அனைத்து அரபுகளும் ஒன்று பட்டுக் கூறும் கருத்தாகும். இதற்கு மாற்றமாக அரபு மொழி அறிஞர் யாரும் சொன்னதில்லை. மொழி அறியாத மடையன் தான் இதற்கு மாற்றமாகச் சொல்வான் என்று மிர்ஸா குலாம் நூருல் ஹக் 10/98 ல் எழுதியுள்ளார். ஆனால் கமர் என்ற வார்த்தையை அல்லாஹ் முதல் பிறைக்கும் பயன்படுத்தி -யுள்ளானே என்று ஏராளமான சான்றுகளுடன் கேள்வி கேட்டோம். அல்லாஹ்வையே விமர்சனம் செய்பவரும், இல்லாததை இட்டுக்கட்டும் மடையரும் எப்படி நபியாக இருக்க முடியும் என்று கேட்ட போதும் அவர்களிடம் பதில் இல்லை.*

**நம் விளக்கம்:**

1. இது எது சம்பந்தப்பட்ட பிரச்சனை என்றால், நபி (ஸல்) அவர்கள், நம்முடைய மஹ்திக்கு இரண்டு அடையாளங்கள் இருக்கின்றன. வானமும் பூமியும் உண்டான காலத்திலிருந்து இத்தகைய அடையாளங்கள் ஏற்பட்டதில்லை. ஒரு ரமலான் மாதத்தில் சந்திர கிரகணத்திற்காக கணிக்கப்பட்ட இரவுகளில் (13,14,15 ஆகிய இரவுகளில்) முதலாவது இரவில் சந்திர கிரகணமும் சூரிய கிரகணத்திற்காக கணிக்கப்பட்ட நாட்களில் (27,28,29 ஆகிய நாட்களில்) மத்திய நாளில் அதாவது பிறை 28 இல் சூரிய கிரகணமும் ஏற்படும். வானமும் பூமியும் உண்டானதிலிருந்து இத்தகைய ஒரு நிகழ்ச்சி நிகழ்ந்ததில்லை.

இச்சம்பவம் 1894 ஆம் ஆண்டில் அதாவது ஹிஜ்ரி 1311-ம் ஆண்டு ரமலான் மாதம் 13-ம் நாள் (மார்ச் 21,1894) இரவில் சந்திர கிரகணமும் அதே மாதம் 28 வது நாளில் (ஏப்ரல் 6) சூரிய கிரகணமும் ஏற்பட்டது.

1). இது ரமலான் மாதத்தில் நடக்க வேண்டும். 2) சூரியனுக்கும் சந்திரனுக்கும் குறிப்பிட்ட நாள்களில் 28, 13-ஆகிய நாள்களில் கிரகணம் நிகழ வேண்டும். அது வானமும், பூமியும் தோன்றிய நாள் முதல் நடந்திருக்காது.

அல்லாஹ்வுடைய மஹ்தி அப்போது பூமியில், தான் மஹ்தி என்று வாதித்துக் கொண்டிருக்க வேண்டும். இப்படிப்பட்ட கிரகணங்கள் நடந்ததில்லை.

அடுத்து, சந்திர கிரகணம் முதல் பிறையிலும், சூரிய கிரகணம் மத்திய நாளிலும் ஏற்பட்டது.

**முதல் பிறை என்றால், சந்திர கிரகணத்தின்** முதல் பிறை தான் என்றும், 13 ம் பிறை இல்லை என்றும் கூறுகின்றனர்.

அல்லாஹ் சந்திரனைப் படைத்து, அதற்கு கிரகணம் ஏற்பட்ட நாளிலிருந்து இன்று வரை, சந்திர கிரகணம் என்பது 13,14,15



ஆகிய **மூன்று பிறைகளில் ஏதாவது ஒன்றில் தான் கிரகணம் பிடிப்பது அல்லாஹ்வின் நடைமுறையாகும்.** எனவே, நபி (ஸல்) அவர்கள் கூறிய முதல் பிறை என்பது 13 ம் பிறையைத் தான் குறிக்குமே அல்லாமல் 1 வது பிறையைக் குறிக்காது. இதனை விளக்கவே ஹிலால், கமர் பற்றிய விவாதம் ஆகும். ஒரு வாதத்திற்காக பி.ஜே யின் கூற்று சரி என்று வைத்துக் கொண்டாலும், அல்லாஹ்வின் நடைமுறை அதனைப் பொய் என்று நிரூபிக்கிறது. உலகம் தோன்றிய நாள் முதல் பல கோடி ஆண்டுகளாக சந்திர கிரகணம் இப்படியே நிகழ்ந்து வருகிறது. சந்திர கிரகணம் 13,14,15 ஆகிய பிறைகளைத் தவிர ஏனைய பிறைகளில் பிடிக்காது என்பதால் முதல் பிறை என்பது 13-ம் பிறையைத் தான் குறிக்கும்.

இவ்வாறு நிகழ்ந்த சூரிய சந்திர கிரகணங்கள் தாமே இமாம் மஹ்தி என எவ்வித சந்தேகத்திற்கும் இடமின்றி எடுத்துக்காட்டுவதாக ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்கள் தெரிவித்தார்கள். துஹ்ஃபா கோல்ட்விய்யா எனும் அவர்களின் நூலில் கீழ்வருமாறு காணப்படுகிறது.

என்னுடைய உயிர் யாருடைய கையில் இருக்கின்றதோ அந்த இறைவன் மீது ஆணையிட்டுக் கூறுகின்றேன். என்னுடைய உண்மைத் தன்மையை உலகிற்கு உணர்த்தும் பொருட்டே இறைவன் இந்த மகத்தான அடையாளத்தை வானத்தில் காட்டியிருக்கின்றான். ஆலிம்கள் என்னை தஜ்ஜால் என்றும் பொய்யன் என்றும் காபிர் என்றும் தூற்றி கொண்டிருக்கும் இவ்வேளையிலேயே இறைவன் இவ்வடையாளத்தை வெளிப்படுத்தி இருக்கின்றான். ஆதம் நபி முதல் இன்று வரை எவருக்காகவும் வெளிபடுத்தப்படாத ஓர் அற்புத அடையாளம் எனக்காக எனது வாதத்தை உண்மைப்படுத்தும் வகையிலே வெளிப்பட்டது என்பதை நான் கஃபதுல்லாவில் கூட சத்தியம் செய்து கூறத் தயாராக இருக்கின்றேன்.

(துஹ்ஃபா கோல்டவிய்யா பக்கம் 33)

இத்துணை உறுதியாகவும் ஆணித்தரமாகவும் தாமே அந்த இமாம் மஹ்தி என ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்கள் அறிவித்தார்கள். இஸ்லாத்திற்கு அவர்கள் ஆற்றிய தொண்டின் மூலமாகவும் அதனை நிரூபித்தார்கள். அஹ்மதிய்யா இயக்கத்தை நிறுவுவதன் மூலம் இஸ்லாத்தின் மறுமலர்ச்சிக்காகவும் முஸ்லிம் சமுதாயத்தின் எழுச்சிக்காகவும் ஒருபலமான அடித்தளத்தை அம்மகான் அமைத்தார்கள்.

**XV. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*நான் என்னையே முற்றிலும் இழந்தேன். இப்போது என் இறைவன் எனக்குள் நுழைந்து விட்டான். நானே அல்லாஹ்வாகி விட்டேன். நானே வானத்தைப் படைத்தேன். பின்னர் நட்சத்திரங்களால் அலங்கரித்தேன். பின்னர் நானே களிமண்ணால் மனிதனைப் படைத்தேன் என்று ஆயினே கமாலாதே இஸ்லாம் என்ற நூலில் பக்கம் 565ல் கூறியுள்ளாரே? தன்னையே இறைவன் என்று கூறிய இவர் ஃபிர்அவ்னா? நபியா என்ற கேள்விக்கும் பதில் இல்லை.*

**நம் விளக்கம்:**

**இச்சம்பவம் கஷ்பு எனும் ஆத்மீகக் காட்சியில் பார்த்தது என்று ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் அதில் கூறியுள்ளார்கள். கனவு, கஷ்பு ஆகிய காட்சிகளில் கண்டவற்றுக்கு சொற்பொருள் கொடுக்கக்கூடாது என்ற சாதாரண விசயம் கூட இந்த மவ்லவிகளுக்குத் தெரியவில்லை என்பது ஒரு சாபக்கேடு தான்.**

யூசுப் நபி கண்ட கனவுக்கு ஒரு பொருள் இருந்தது போல் இந்தக் காட்சிக்கும் சொற் பொருள் கொள்ளாமல் வேறு பொருள் கொள்ள வேண்டும்.

பீ.ஜே ஒரு மோசடிப் பேர்வழி என்பது அவரது கருத்தால் விளங்குகிறது. காரணம் **இது கஷ்பு காட்சி என்பதை மறைத்து நேரில் கூறியது போல் கூறியுள்ளார்.** கனவு, கஷ்பு என்று ஹஸ்ரத்



மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் தன் நூலில் கூறியுள்ளார் என்று எழுதினால் கனவில் இவை போலும் காட்சிகள் வரும். அதற்கு அப்பொருள் இல்லை என்பதை அற்ப அறிவு படைத்தவனும் அறிவான். எனவே **அதனை இருட்டடிப்பு செய்து மக்களை வழிகெடுக்கும் நோக்கத்துடன் அவர் எழுதியுள்ளார்.**

இந்த இழி செயல் இஸ்லாத்தின் எதிரிகளின் செயலாகும். நீங்கள் தொழுகையின் பக்கம் நெருங்காதீர்கள் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. ஆனால் முஸ்லிம்களோ தொழுகையை 5 நேரம் செய்வது குர்ஆன் போதனைக்கு மாற்றம் என்று எதிரிகள் எழுதுவார்கள். மயக்க நிலையில் இருக்கும் போது தொழகையை நெருங்காதீர்கள் என்பதில் மயக்க நிலையை மறைத்து இருட்டடிப்பு செய்வதைப் போல் பீ.ஜே யும் இது ஒரு கஷ்பு எனும் ஆத்மீகக் காட்சி என்று மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் எழுதியிருப்பதை இருட்டடிப்பு செய்துள்ளார்.

**ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

நான் என் இறைவனை ஒரு இளைஞனின் வடிவத்தில் பார்த்தேன். அவனுக்கு நீண்ட முடியும், அவனது கால்களில் தங்க காலணிகளும் இருந்தன. (அல்யவாகீது வல் ஜவாஹிரு பாகம், 1 பக்கம் 71, திப்ரானி மற்றும் மவ்ஸூஆரே கபீர் பக்கம் 46)

இதிலிருந்து கனவு, கஷ்பு காட்சிகளில் இறைவனைக் காண முடியும் என்பது தெளிவாகிறது.

பின்னர் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களே இந்த கஷ்ஃபிற்கு விளக்கமும் அளித்துள்ளார்கள். ஆனால் ஆட்சேபணை செய்பவர்கள் அறிந்தும் அதனைப் புறக்கணித்து விட்டார்கள். ஹஸ்ரத் மஸீஹ் மவ்வூது (அலை) அவர்கள் கூறுகிறார்கள்:

நாங்கள் இந்த கஷ்ஃபிற்கு வஹ்ததுல் வஜுது (அத்வைதக் கொள்கையுடையவர்கள்) மற்றும் ஹுலூல் (மனிதர்களுள் இறைவன்

தோன்றுவான்) என்ற கொள்கையுடையவர்களைப் போல் பொருள் தருவதில்லை. மாறாக இந்த கஷ்ஃப் புகாரியில் நஃபில் தொழுபவர்களின் இறை நெருக்கத்தை குறிக்கும் ஹதீஸிற்கு முற்றிலும் ஒத்ததாக இருக்கின்றது.

**புகாரியில் வரும் ஹதீஸ்:**

நஃபில் தொழும் அடியான் என்னுடைய நெருக்கத்தில் எந்த அளவு முன்னேற்றம் அடைந்து கொண்டே இருக்கின்றான் என்றால், நான் அவனை நேசிக்கத் துவங்குகிறேன். அப்போது நான் அவன் கேட்கின்ற காதாக ஆகிவிடுகின்றேன். அவன் பார்க்கின்ற கண்களாகி விடுகிறேன்; அவன் பிடிக்கின்ற கைகளாகி விடுகிறேன்; அவன் நடக்கின்ற கால்களாகி விடுகிறேன். (ஆதாரம்: புகாரி)

இந்த ஹதீஸிற்கு என்ன பொருள் தருவீர்களோ அதே பொருள் தான் ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்களின் கஷ்ஃபின் பொருளுமாகும்.

இந்தக் காட்சியைப் பற்றி எதிரிகள், ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது சாஹிப் வானம் பூமியை படைத்ததாக வாதித்துவிட்டதாக கூறுகின்றனர். நினைவில் கொள்ளுங்கள். இந்த இயற்கையான வானமும் பூமியும் ஏற்கனவே படைக்கப்பட்ட ஒன்றாகும். அவற்றைப் படைத்ததாக அவர்கள் வாதம் புரியவில்லை என்பது மட்டுமின்றி இது சாத்தியமற்றதுமாகும். ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் கூறுகின்றார்கள் :

இந்த பிரபஞ்சத்தை (வானம், பூமி, உலகம்) ஒரு தொன்மையான, வல்லமையுடைய மற்றும் மதிப்பிற்குரிய இறைவன் படைத்தான். அவன் அனைத்து வெளிப்படையானவற்றின் மீதும் ஆற்றல் உடையவன் என்று நான் உறுதியான உள்ளத்துடன் நம்பிக்கை கொண்டுள்ளேன்.

உண்மை இவ்வாறிருந்தும் நபிமார்களின் நடைமுறையைப் போல் ஒரு ஆன்மீக வானம், பூமியைப் படைத்ததாக அன்னாரது



வாதம் உள்ளது. எல்லா நபிமார்களும் அப்படிப்பட்ட ஆன்மீக வானத்தையும் பூமியையும் படைத்துள்ளார்கள். சந்தேகத்திற்கு இடமின்றி அன்னாரும் அத்தகைய ஒரு வானத்தையும் பூமியையும் படைத்துள்ளார்கள். அந்த வானம், பூமி ஆன்மீகமானதாகும்.

**அன்னார் கூறுகிறார்கள்:**

ஒவ்வொரு மாபெரும் சீர்த்திருத்தவாதி தோன்றும் வேளையில் ஆன்மீக ரீதியான ஒரு புதிய வானம், பூமி படைக்கப்படுகின்றது. (ஆதாரம் :ஹகீகத்துல் வஹி, பக்கம் 99)

இவ்வாறான புதிய வானம், புதிய பூமி ஒவ்வொரு நபியின் காலத்திலும் படைக்கப்பட்டு வருகிறது. எனவே தான் பைபிளில் பேதுருவின் வார்த்தைகள் இன்றுவரை இவ்வாறு எழுதப்பட்டுள்ளது:

அந்த வாக்குறுதிக்கேற்ப நல்லவர்கள் வசிக்கக்கூடிய புதிய வானம் மற்றும் பூமியை எதிர்நோக்கியுள்ளோம். (பேதுரு 2-3:13)

மேலும் திருக்குர்ஆனும் நிலத்திலும் நீரிலும் குழப்பம் பரவியுள்ளது (30:42) என்பதில் இதன் பக்கமே சுட்டிக் காட்டுகிறது. அதாவது ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் காலத்தில் பிரம்மாண்டமான புதிய வானமும் புதிய பூமியும் படைக்கப்படும்.

**ஹஸ்ரத் வாக்களிக்கப்பட்ட மஸீஹ் (அலை) அவர்கள் கூறுகிறார்கள்:**

ஒரு முறை நான் கஷ்ஃப் காட்சியில், நான் புதிய பூமியையும் வானத்தையும் படைப்பதாக கண்டேன். பின்பு இப்போது மனிதனைப் படைக்கப் போகிறோம் எனக் கூறினேன். இதற்கு இந்த அறிவற்ற மவ்லவிகள், பாருங்கள் இவர் இறைவாதம் புரிந்து விட்டார் என கூச்சலிடுகின்றனர். இந்த கஷ்ஃப் (ஆன்மீகக்) காட்சிக்கான விளக்கம், இறைவன் எனது கையால் வானம் பூமி ஆகியவற்றை புதிதாக்கி உண்மையான மனிதர்கள் தோன்றும் அளவிலான மாற்றத்தை ஏற்படுத்துவான் என்பதாகும். (சஷ்மயே மஸீஹீ, ரூஹானி கஸாயின் பாகம் 20 பக்கம் 275-276 அடிக்குறிப்பு)

**XVI. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*மஸீஹ் வரக்கூடிய காலத்தில் பிளேக் நோய் ஏற்படும் என்று குர்ஆனிலும் தவ்ராத்திலும் உள்ளது என்று கிஷ்தீ நூஹ் என்ற நூலில் பக்கம் 5 முதல் 9 வரை மிர்ஸா குலாம் எழுதியுள்ளார். குர்ஆனில் அல்லாஹ் கூறியதை எடுத்துக் காட்டுங்கள் என்று கேட்டோம். குர்ஆனில் அப்படி இல்லாததால் கடைசி வரை எடுத்துக் காட்ட முடியவில்லை. குர்ஆனில் இல்லாததைக் குர்ஆனில் உள்ளது என்று சொன்னவர் பொய்யனா? நபியா? என்ற கேள்விக்கும் கடைசி வரை பதில் சொல்லவில்லை.*

**நம் விளக்கம்:**

பீ.ஜே 34:15 வசனத்திற்கு செய்த தமிழாக்கத்தில் **அவருக்கு நாம் மரணத்தை ஏற்படுத்திய போது பூமியில் ஊர்ந்து செல்லும் உயிரினம் (கரையான்) தான் அவரது மரணத்தைக் காட்டிக் கொடுத்தது** என்று எழுதியுள்ளார்.

பூமியில் ஊர்ந்து செல்லும் உயிரினம் தாபத்துல் அர்ழ் ஆகும். இச்சொல்லுக்கு கரையான் என்று இவர் எப்படி பொருள் கொண்டார். தாப்பா எனும் அரபிச் சொல்லுக்கு கரையான் என்று பொருள் கொள்வதற்கு நபிமொழி சான்றோ, அகராதிப் பொருளோ உண்டா? இல்லை என்றால், சுலைமான் நபி வாழ்வில் கைத்தடியை கரையான் தின்றதற்கான சம்பவம் நடந்ததற்கு வரலாற்றுச் சான்றாவது உண்டா?

இப்படி திருக்குர்ஆனிலோ, நபிமொழிகளிலோ, அகராதியிலோ, வரலாற்றிலோ சான்றுகள் இல்லையே! இவ்வாறிருந்தும் தாப்பா எனும் சொல்லுக்கு கரையான் என்று பீ.ஜே பொருள் கொண்டுள்ளதால் இவரை மவ்லவிக்கு தகுதியற்றவர் என்று நம்பலாமா?



**திருக்குர்ஆனில் 27:82 இல் பீ.ஜே விளக்க அட்டவணை எண் 308 பதிப்பு 9 இல் இவ்வாறு எழுதுகிறார்:**

**இது உலகம் அழிக்கப்படும் நாளுக்கு சற்று முன் இறைவன் பூமியிலிருந்து வெளிப்படுத்தும் ஓர் உயிரினம் ஆகும்.**

இதில் வரும் தாப்பா என்பதற்கு பிளேக் கிருமி என்று ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் கூறியுள்ளார்கள். தாப்பா என்பதற்கு கரையான் என்று பொருள் கொள்ள முடியும் என்றால் பிளேக் கிருமி என்று திருக்குர்ஆன், நபிமொழியின் அடிப்படையில் ஏன் பொருள் கொள்ள முடியாது?

நபி (ஸல்) அவர்களின் நபிமொழிகளில் மஸீஹின் காலத்தில் பிளேக் வரும் என்றும் கூறப்பட்டுள்ளது. ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்கள் தன்னை மஸீஹ் என்று வாதித்த காலத்தில் இந்தியாவில், பஞ்சாப் மாநிலத்தைப் பிளேக் பெருமளவில் பாதித்தது. அதனால் இந்தியாவிலிருந்து அந்த ஆண்டில் ஹஜ்ஜுக்கு யாரும் வரக்கூடாது என்ற தடை வந்தது.

இவ்வாறு தாப்பா எனும் சொல்லுக்கு பிளேக் கிருமி என்பது நபிமொழி, வரலாறு ஆகியவற்றின் மூலமும் நிரூபிக்கப்பட்டுள்ளது.

1. ஈஸாவின் இரண்டாவது வருகையில் யஃஜுஜ், மஃஜுஜ் கூட்டத்தின் கழுத்தில் ஒரு கொப்புளம் ஏற்படும். இது பிளேக்கைச் சேர்ந்த கட்டியாகும் என்று முஸ்லிம் ஹதீஸ் வருகிறது. (முஸ்லிம் 5629)

2. இமாம் பாக்கர் அவர்கள் பிஹாருல் அன்வார் எனும் நூலின் பாகம் 13 பக்கம் 156 இல், இமாம் மஹ்தியின் காலத்தில் இருவித மரணம் ஏற்படும். 1) சிவப்பு மரணம் 2) வெள்ளை மரணம். சிவப்பு மரணம் என்பது வாளினால் ஏற்படுகிறது. வெள்ளை மரணம் என்பது பிளேக் நோயினால் ஏற்படுகிறது.

**XVII. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*என்னை நபி என்று ஏற்றுக் கொள்ளாதவன் காஃபிர் ஆக மாட்டான் என்று திர்யாகுல் குலூப், பக்கம்432 ல் கூறியவர், என்னை நபி என்று ஏற்றுக் கொள்ளாதவன் முஸ்லிம் அல்ல என்று ஹகீகதுல் வஹி பக்கம் 167 ல் கூறுகிறார். இப்படி முரண்பட்டுப் பேசியவர் எப்படி நபியாக இருக்க முடியும்? என்று கேட்டதற்கும் பதில் இல்லை.*

**நம் விளக்கம்:**

திரியாகுல் குலூப் பக்கம் 432 ல் பீ.ஜே கூறும் செய்தியை பக்கம் 431 - 433 வரைப் படித்தால் பீ.ஜே யின் கூற்று முழுக்க முழுக்க பொய் என்றும், இவர் அந்த நூலைப் படிக்காமல் எவரோ எழுதி வைத்திருப்பதை அப்படியே எடுத்துக் கூறியுள்ளார் அல்லது வேண்டுமென்றே பொய்யைக் கூறுகிறார் என்பது தெரியவரும். காரணம்,

அஹ்மதிய்யா ஜமாஅத்தின் எதிரியும், அஹ்லே ஹதீஸின் தலைவருமாகிய **முஹம்மது உசேன் பட்டாலவி என்பவர்,** குர்தாஸ்பூர் நீதிமன்றத்தில் அதன் நீதிபதியும் டிப்டி கமிஷ்னருமாகிய M.J. டூயி முன்னிலையில் 24-2-1899 இல் நடந்த சம்பவம் குறித்து ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் மேற்கண்ட நூலில் இவ்வாறு கூறுகின்றார்கள் :

**இனிமேல் ஒருவருக்கொருவர் காஃபிர் என்றோ, தஜ்ஜால் என்றோ பொய்யர் என்றோ கூறமாட்டோம் என்று கொடுத்த ஒப்புதல் வாக்குமூலப் பத்திரத்தில் நானும் கையெழுத்திட்டேன்.**

இதனைப்பற்றி **நீதிமன்றத்தில் மிர்ஸா குலாம் அஹ்மது நீதிபதிக்குப் பயந்து கூறிவிட்டார்** என்று பீ.ஜே உளறிக் கொட்டி உள்ளார். மேலும் அதே நூலில் பக்கம் 433 இல் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள், கலிமா கூறுகின்ற எவரையும் நான் காபிர் என்று கூற மாட்டேன் என்றும் இறைவனால் மஹ்தி மஸீஹ்



என்று கூறப்படுகின்ற என்னை அவர் காஃபிர் என்று கூறி, ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் கூற்றின்படி, ஒரு முஸ்லிமை காஃபிர் என்பவன் தன்னைத் தானே காஃபிர் ஆக்கி விடுகிறான் என்பதற்கு ஏற்ப அவன் தன்னைத் தானே காஃபிர் ஆக்கிக் கொள்கிறான் என்றும் எழுதியுள்ளார்கள்.

ஹகீகதுல் வஹி பக்கம் 167 இல் என்னை நபி என்று ஏற்றுக் கொள்ளாதவன் முஸ்லிம் அல்ல என்று கூறுகிறார். இப்படி முரண்பட்டுப் பேசியவர் எப்படி நபியாக இருக்க முடியும்? என்று பீ.ஜே கேட்கிறார்.

**எம் விளக்கம்:**

ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள், அதே நூல் அதே பக்கத்தில் அல்லாஹ் என்னை மஹ்தி என்று கூறியிருக்கும் போது என்னை இட்டுக் கட்டிச் கூறியவன் என்று ஒருவர் கூறினால் அவர் எப்படி மூமினாக இருக்க முடியும் என்றும் அதே நூல் பக்கம் 165 இல் கிப்லாவை நோக்கியவர்களை நான் காஃபிர் என்று கூறமாட்டேன். ஆனால் அவர்கள் என்னைக் காஃபிர் என்று கூறி, தன்னைத் தானே காஃபிராக ஆக்கிக் கொள்கிறார்கள் என்று எழுதியுள்ளார்கள்.

மொத்தத்தில், அல்லாஹ் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை, அல்லாஹ்வின் மஹ்தி என்று கூறும் போது, அதை மறுப்பவர்கள் நபி (ஸல்) அவர்களின் கூற்றுப்படி தன்னைத் தானே காஃபிர் ஆக்கிக் கொள்கிறார்கள் என்பதால், இதில் முரண்பாடு எதுவும் இல்லை.

நான் கேட்கிறேன். ஈஸா நபி (அலை) அவர்கள் மீண்டும் வரும் போது அவரை ஏற்றுக் கொள்ளாது மறுப்பவர்களுக்கு என்ன பெயர்?

காஃபிர் என்று தான் அரபி மொழி தெரிந்தவர்கள் கூறுவார்கள். இந்த அளவுகோளின்படி ஹஸ்ரத் மிர்ஸா குலாம்

அஹ்மது (அலை) அவர்கள் இறைவனால் அனுப்பப்பட்ட ஈஸா மஸீஹ் என்றால், அதை மறுப்பவர்கள், நபி (ஸல்) அவர்களின் கூற்றின்படி காஃபிர்கள் என்று தன்னைத்தானே ஆக்கிக் கொள்கிறார்கள்.

**XVII. பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*மூஸா நபி மரணிக்கவில்லை. அவர் வானத்தில் உயிருடன் உள்ளார். அவர் இறந்தவர்களில் ஒருவர் இல்லை என்று ஈமான் கொள்வதை அல்லாஹ் நமக்கு கடமையாக்கி இருக்கிறான் என்று மிர்ஸா குலாம், நூருல் ஹக் என்ற நூலில் பக்கம் 68,69 ல் கூறியுள்ளார். அல்லாஹ் எந்த வசனத்தில் இவ்வாறு கூறியுள்ளான்? எடுத்துக் காட்டுங்கள் எனக் கேட்டோம். கடைசி வரை பதில் அவர்கள் சொல்லவில்லை. அல்லாஹ்வின் மீது பொய் சொன்னவர் எப்படி நபியாக இருக்க முடியும் என்ற கேள்விக்கும் பதில் இல்லை.*

**நம் விளக்கம்:**

கோவையில் நடந்த விவாதத்தில் இந்த வசனத்தைக் காட்டி பதில் கூறினோம். ஆனால், எந்த பதிலும்இல்லை என்று பீ.ஜே பகிரங்கமாக பொய் சொல்கிறார். எனவே, லஃனதுல்லாஹி அலல் காதிபீன் என்பதே பதில்.

திருக்குர்ஆன் 32:23 மூஸாவுக்கு வேதத்தை வழங்கினோம். (முஹம்மதே) அவரைச் சந்தித்ததில் நீர் சந்தேகம் கொள்ளாதீர். அவரை இஸ்ராயீல் மக்களுக்கு வழிகாட்டியாக்கினோம். (பீ.ஜே மொழியாக்கம்)

இவ்வசனத்திற்கு **பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவனை எண் 315 இல், மிஃராஜ் என்ற விண்வெளிப் பயணம் எனும் தலைப்பில்,**

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குப் பல ஆயிரம் வருடங்களுக்கு முன் மரணித்து விட்ட மூஸா நபியவர்களை நபிகள் நாயகம் (ஸல்) எப்படி பார்த்திருப்பார்கள்? என்ற கேள்வி இவ்வசனத்தை (32:23) வாசிப்பவர்களுக்கு எழலாம்.



இறந்து போனவரை உயிரோடு இருப்பவர்கள் ஒருக்காலும் பார்க்க முடியாது. ஆயினும் இறைவன் தனது ஆற்றலைக் காட்டுவதற்காக நபிகள் நாயகம் (ஸல்) அவர்களை மிஃராஜ் என்ற விண்வெளிப் பயணம் அழைத்துச் சென்றான்.

அங்கே அவர்கள் மூஸாவை சந்தித்தார்கள். மற்றவர்களை விட அவர்களிடம் அதிகமான நேரம் உரையாடினார்கள். அந்த சந்திப்பைத் தான் அல்லாஹ் இங்கே குறிப்பிடுகிறான்.

மூஸாவைச் சந்தித்ததில் நீர் சந்தேகம் கொள்ள வேண்டாம்; நீர் உண்மையாகவே சந்தித்தீர்; நீர் சந்தித்தது அவரைத் தான் என்ற கருத்துப்பட அல்லாஹ் இந்த வசனத்தில் குறிப்பிடுகிறான் என்று பீ.ஜே எழுதி, கோவை விவாதத்தில் தன் கேள்வி தவறு என்றும், ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் கருத்தே சரி என்றும் ஒப்புதல் வாக்குமூலம் தந்துள்ளார். நன்றி.

இதிலிருந்து வாசகர்களாகிய நீங்கள், பீ.ஜே உண்மை என்று தெரிந்தும் அதை மறைத்து, அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் உண்மையை எதையாவது சொல்லி மறுக்கவும் மறைக்கவும் செய்கிறார் என்று விளங்கிக் கொள்ளுங்கள். அல்லாஹ் உங்களுக்கு நேர்வழி காட்டுவானாக. ஆமீன்.

இது, மிஃராஜ் என்ற நிகழ்ச்சி நேரடியாகவே நடந்தது என்பதற்குரிய தெளிவான சான்றுகளில் ஒன்றாகும் என்று எழுதுகிறார்.

நபி (ஸல்) அவர்கள் மூஸா நபி (அலை) அவர்களைச் சந்தித்த நிகழ்ச்சி இதுவேயாகும். **ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் நூருல் ஹக் என்ற நூலில் 70-ம் பக்கத்திலும், பிற நூல்களிலும் அவர்கள் கூறியதாவது,**

1. நபி (ஸல்) அவர்களுக்கு முன்னர் தோன்றிய எல்லாத் தூதர்களும் இறந்து விட்டார்கள். ஈஸா நபி (அலை) அவர்கள் உட்பட எந்தத் தூதரும் உயிருடன் இல்லை. ஆனால்,

2. நபி (ஸல்) அவர்கள் உட்பட எல்லாத் தூதர்களும் ஆத்மீக முறையில் இன்றும் உயிருடன் உள்ளனர்.

3. மிஃராஜின் போது நபி (ஸல்) அவர்கள் எல்லாத் தூதர்களைப் போல் மூஸா நபியையும் சந்தித்தார்கள்.

4. ஈஸா நபி (அலை) அவர்களும் எல்லாத் தூதர்களைப் போன்றே காணப்பட்டார்கள். அவர் இறக்காமல் உயிருடன் இருக்கிறார் என்று அவரிடம் எந்தச் சிறப்பைக் கொண்டு நீங்கள் கருதுகிறீர்கள். அப்படி கருதுவதற்கு திருக்குர்ஆனில் எந்தச் சான்றும் இல்லை என்றாலும் மூஸா உயிருடன் (ஆத்மீகமாக) வானில் இருப்பதாகக் கருதுவதற்கு திருக்குர்ஆனில் 32:23 வசனத்தில் சான்று உள்ளது.

5. ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறந்து ஈஸா நபி (அலை) இறக்காமல் இருக்கிறார் என்று கருதுவது ஒரு அநியாயமான பங்கீடாகும். எல்லாத் தூதர்களும் இறந்து, ஆத்மீகமான முறையில் அவர்கள் எல்லாரும் உயிருடன் உள்ளனர் என்று கூறியுள்ளளார்கள்.

   நபி (ஸல்) அவர்கள் மூஸா நபி (அலை) அவர்களைச் சந்தித்தது ஆத்மீக சந்திப்பாகும் என்பதே அவரின் கருத்தாகும். எனவே அவ்வாறு இல்லை என்று எவரும் கூறுவதற்கு உரிமை இல்லை. ஒருவர் கூறும் கருத்துக்கு அவர் இது தான் விளக்கம் என்று கூறினால் அதனை மறுத்து எவர் எந்த விளக்கத்தைக் கூறினாலும் அது ஏற்பதற்கில்லை.

6. மவ்லவி அப்துல் ஹக் முஹத்தஸ் தஹ்லவி ஒரு முஹத்தஸின் கூற்றை எடுத்துக் கூறுகிறார்.

   நபி (ஸல்) அவர்களை விட இன்னொரு நபி உயிருடன் இருக்கிறார் என்று ஒரு முஸ்லிம் கூறினால், அவர் இஸ்லாத்தின் வட்டத்தை விட்டே வெளியேறி விடவோ, காஃபிராகி விடவோ கூடும்.



## 10. ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு ஒரு உம்மத்தி நபி வருவார்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 187 இல் இறுதி நபித்துவம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தான் இறுதி நபி; இறுதித் தூதர். அவர்களுக்குப் பின் எந்த நபியும் தூதரும் வரவே முடியாது என்பதற்கு இவ்வசனங்கள் (4:79,170, 7:158, 9:33, 10:57,108, 14:52, 21:107, 22:49, 25:1, 33:40, 34:28, 62:3) சான்றுகளாக உள்ளன.*

*மனித குலத்திற்கே உம்மைத் தூதராக அனுப்பியுள்ளோம். (திருக்குர்ஆன் 4:79, 4:170, 6:19, 7:158, 14:52, 33:40) என்பதும் அவர்களுக்குப் பின் நபியோ தூதரோ வரமாட்டார்கள் என்பதைக் குறிக்கிறது.*

**நம் விளக்கம்:**

பீ.ஜே காட்டியுள்ள வசனங்கள் முழுவதையும் படித்தால் அவற்றுள் 4 வகையான கருத்துகள் கூறப்பட்டுள்ளன. இந்த வசனங்களின் பொருளை இத்தலைப்பின் இறுதியில் பார்க்கவும். நான்கு வகையான கருத்துகள்.

**1) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் முழு உலகுக்கும் அனுப்பப்பட்ட தூதர் ஆவார்.**

**2) திருக்குர்ஆன் முழு உலகுக்கும் அனுப்பப்பட்ட வேத நூல்.**

3) நபி (ஸல்) அவர்கள் நபிமார்களுள் காத்(த்)தம் ஆவார்.

4) நபித் தோழர்களுடன் சேராத பிற மக்களுக்காக (ஒரு தூதரை அனுப்புவான்)

(அ) நபி (ஸல்) அவர்கள் மனித இனம் முழுமைக்கும் அனுப்பப்பட்டவர். அவர் கொண்டு வந்த வேதம் முழு உலகுக்கும்

இறுதிநாள் வரை வேதம் என்பதால், இனி மேல் உலகுக்கு ஒரு வேதம் வராது என்று ஏற்றுக் கொள்ளலாமே தவிர அவர்தான் இறுதி நபி என்று ஆகாதே!

(ஆ) அப்படி என்றால் இதற்கு முன்னர் வந்த நபிமார்கள் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்துக்கு மட்டும் வந்துள்ளனர். அவர்களுக்கு வந்த வேதமும் அக்காலத்துக்கு, அம்மக்களுக்கு முழுமையான வேதம் தான். எனவே அந்த சமுதாயத்தில் ஒரே ஒரு தூதர் மட்டும் வந்திருக்க வேண்டும். வேறு எந்தத் தூதரும் வரவில்லை என்பதனை உலகில் யாராவது எடுத்துக் காட்ட முடியுமா?

மூஸா நபி (அலை) அவர்கள் இஸ்ரவேல் சமுதாயத்துக்கு மட்டும் வந்த ஒரு தூதர். அவருக்கு இறைவன் தவ்ராத் எனும் வேதத்தை அனுப்பினான். அது அம்மக்களுக்கு அக்காலத்துக்கு வேண்டிய **முழுமையான வேதமாகத்தான் இருந்தது.** (6:155) ஆனால் மூஸா நபியின் அடிச்சுவட்டில் தவ்ராத்தைப் போதிக்க ஏராளமான நபிமார்கள் வந்துள்ளனர் (2:88) என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

ஆக ஒரு சிறிய சமுதாயத்துக்கு ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு வேதத்தைப் போதிக்க பல நபிமார்கள் வந்துள்ளதால் நபி (ஸல்) அவர்கள் முழு உலகுக்கும் நபியாக அனுப்பப்பட்டுள்ளதாலும் முழுஉலகுக்கும் இறுதிவரை முழுமையான வேதமாக திருக்குர்ஆன் இருப்பதாலும் அவர்களுக்குப் பிறகு நபி வரத் தேவையில்லை என்பது தவறாகும்.

(இ அல்லாஹ்வின் பார்வையில் நபி (ஸல்) அவர்கள் தான் இறுதி நபி அவர்களுக்குப் பின்னர் எந்த நபியும் வரமாட்டார்கள் என்றால் அல்லாஹ் தன் திருமறையில் தெள்ளத் தெளிவாக பல இடங்களில் முஹம்மது நபி தான் இறுதித் தூதர். இனிமேல் எந்தத் தூதரும் வரமாட்டார் என்று சொல்லியிருக்க வேண்டுமே. அப்படி ஒரு இடத்தில் கூட சொல்லவில்லையே. பீ.ஜே மேலே எடுத்துக் காட்டிய வசனங்களில் இப்படி எங்காவது சொல்லப்பட்டுள்ளதா?இல்லையே



(ஈ) லா நபிய்ய பஅதீ என்று நபிமொழிகளில் வந்துள்ளதே. அதற்கு எனக்குப் பிறகு நபி இல்லை என்று தானே பொருள் என்று கேட்டால் அந்த நபிமொழி இடம் பெற்றுள்ள நூல்களின் விளக்கவுரை நூல்களில் லா நபிய்ய பஅதீ என்பதற்கு **சரீஅத்துடைய எந்த நபியும் இல்லை** என்று தான் பொருள். இனிமேல் **புதிய சரீஅத்துடன் எந்த நபியும் வரமாட்டார்** என்று விளக்கம் தந்துள்ளார்கள். (அல்யவாகீது வல் ஜவாஹீர், பாகம் 2, பக்கம் 24 இமாம் ஷஃரானி (ரஹ்) )எனவே தவ்ராத்தைப் போதிக்க மூஸா நபியின் அடிச்சுவட்டில் ஏராளமான நபிமார்கள் வந்தது போல் திருக்குர்ஆனைப் போதிக்க நபி (ஸல்) அவர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி நபிமார்கள் வருவார்கள் என்பது தான் திருக்குர்ஆனின் கருத்தாகும்.

(உ) காத்தம் என்பதற்கு நபி (ஸல்) அவர்களுக்குப் பின்னர் வந்த மார்க்க அறிஞர்கள் தந்துள்ள விளக்கத்தைக் காண்போம்.

காத்தமுன்னபிய்யீன் என்பதற்கு இறுதி நபி எனப் பொருள் கொள்பவர்கள் காத்தம் என்ற சொல்லுடன் நபிய்யீன் (நபிமார்கள்) போன்ற ஒரு பன்மை பெயர்ச்சொல் சேர்ந்து, அதற்கு காலத்தால் இறுதி என்ற பொருள் கொடுக்கப்பட்டிருப்பதற்கான ஒரேயொரு எடுத்துக்காட்டை ஹதீஸ்களிலிருந்தோ, அரபி நூல்களிலிருந்தோ, அரபி பத்திரிகைகளில் இருந்தோ காட்ட முடியுமா? ஒருபோதும் முடியாது.

காத்தம் என்ற சொல்லுடன் ஒரு பன்மை பெயர்ச் சொல் சேரும் போது அதற்கு சிறப்பு என்பதே பொருள் என்பதற்கான பல உதாரணங்களை ஹதீஸ்களிலிருந்தும், அரபி நூல்களிலிருந்தும், பத்திரிகைகளிலிருந்தும் நாங்கள் காட்டுகிறோம். இதோ சில உதாரணங்கள்:

**நபிமொழிகள்:**

1) ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஹஸ்ரத் அலி (ரலி) அவர்களைப் பார்த்து, அலியே! **நீர் காத்தமுல் அவ்லியா**

(இறை நேசர்களில் சிறந்தவர்) ஆவீர். நான் **காத்தமல் அன்பியா** (நபிமார்களில் சிறந்தவர்) ஆவேன் என்று கூறினார்கள். (ஆதாரம் : ஸஹ்பின் ஸஹீது தைலம் தஃப்ஸீருஸ் ஸாபி – அல்அஹ்ஸாப்)

இந்த நபிமொழியில் வந்துள்ள காத்தமுல் அன்பியா என்பதற்கு நபிமார்களுள் இறுதியானவர் என பொருள் கொண்டால், ஹஸ்ரத் அலி (ரலி) அவர்களை இறுதியான வலியுல்லாஹ் என்றும், அவர்களுக்குப் பின்னர் எந்த வலியும் (இறைநேசரும்) தோன்றவில்லை எனவும் தவறாக நம்ப வேண்டியது வரும்.

2) ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஹஸ்ரத் அப்பாஸ் (ரலி) அவர்களை **காத்தமுல் முஹாஜிரீன்** (ஹிஜ்ரத் செய்தவர்களில் சிறந்தவர்) என குறிப்பிட்டார்கள். (ஆதாரம் : கன்ஸுல் உம்மால், பாகம் 13, பக்கம் 519)

**அரபி மொழி நூல்கள் / பத்திரிகைகளிலிருந்து...**

1) **காத்தமுஷ் ஷுஅரா:** புகழ்பெற்ற அரபி கவிஞராகத் திகழ்ந்த அபுதமாம் (கி.பி 788-845) என்பவரைக் குறித்து **காத்தமுஷ் ஷுஅரா – கவிஞர்களுள் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல் : வாஃபியத்துல் அயான், பாகம் 1, பக்கம் 123, கெய்ரோ, எகிப்து)

2) **காத்தமுல் அவ்லியா:** இமாம் சாஃபி (ரலி) அவர்களை **காத்தமுல் அவ்லியா – இறை நேசர்களுள் சிறந்தவர்** என்று சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. (நூல்: அல் துஹ்ஃபதஸ் ஸுன்னியா, பாகம் 45)

3) **காத்தமுல் அயிம்மா:** எகிப்தைச் சேர்ந்த இமாம் அப்தா (1845-1905) **காத்தமுல் அயிம்மா – இமாம்களுள் சிறந்தவர்** என அழைக்கப்படுகிறார். (நூல்: தஃப்ஸீர் அல் ஃபாத்திஹா, பக்கம் 148)

4) **காத்தமுல் முஜாஹிதீன்:** அஸ்ஸெய்யத் அஹ்மத் ஸனூஸி என்பவர் **காத்தமுல் முஜாஹிதீன் – போராளிகளுள் சிறந்தவர்** என அழைக்கப்படுகிறார். (பத்திரிகை : அல் ஜாமியத்துல் இஸ்லாமிய்யா, பாலஸ்தீன், நாள் : 27, முஹர்ரம், ஹிஜ்ரி 1352)



5) **காத்தமத்துல் முஹக்கிகீன் :** அஹ்மத் பின் இத்ரீஸ் என்பவரை குறித்து **காத்தமுல் முஹக்கிகீன் – ஆராய்ச்சி –யாளர்களுள் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல்: அல் அகாதுன் நஃபீஸ்)

6) **காத்தமுல் முஹத்திஸீன்:** டில்லியைச் சேர்ந்த இறைநேசர் ஹஸ்ரத் சாஹ் வலியுல்லாஹ் அவர்கள் **காத்தமுல் முஹத்திஸீன் – ஹதீஸ் கலையில் சிறந்தவர்** என அழைக்கப்படுகிறார்கள். (நூல்: இஜாஸா நாஃபியா பாகம் 1)

7) **காத்தமுல் ஹுஃப்பாஸ்:** அல் சைகு சம்சுத்தீன் அவர்களை **காத்தமுல் ஹுஃப்பாஸ் – திருக்குர்ஆனை மனனம் செய்தவர்களுள் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல்: அல் தஜ்ரீதுல் ஸரீஹ் முகத்திமா, பக்கம் 4)

8) **காத்தமுல் ஃபுக்கஹா:** அல் சைகு நஜீத் என்பவரை **காத்தமுல் ஃபுக்கஹா – மார்க்க சட்ட வல்லுனர்களுள் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (ஆதாரம் : ஸிராத்தல் முஸ்தகீம், யாஃபா, நாள் : 27 ரஜப் ஹிஜ்ரி 1354)

9) **காத்தமுல் முஃபஸ்ஸிரீன்:** அல் சைகு ரஷீத் ரஸா என்பவரை **காத்தமுல் முஃபஸ்ஸிரீன் – திருக்குர்ஆன் விரிவுரையாளர்களுள் சிறந்தவர்** என அழைத்துள்ளனர்.

10) **காத்தமுல் ஹுக்காம்:** சிறந்த ஆட்சியாளரை **காத்தமுல் ஹுக்காம் – மன்னர்களுள் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது.

11) **காத்தமுல் அவுஸியா:** ஹஸ்ரத் அலி (ரலி) அவர்களைக் குறித்து **காத்தமுல் அவுஸியா – ஆலோசனை கொடுப்பவர்களில் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல் : மினாருல்ஹுதா, பக்கம் 106)

12) **காத்தமுஷ் ஷுஅரா:** சிரியா நாட்டைச் சேர்ந்த புகழ்பெற்ற அரபி கவிஞரும் எழுத்தாளருமான அபுஅலா அல்மெரி (கிபி 973 – 1058) என்பவரைக் குறித்து **காத்தமுஷ் ஷுஅரா – கவிஞர்களுள் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல் : முகத்தமா தீவானுல் முதனப்பி, எகிப்து, பக்கம் 4)

13) **காத்தமுல் முஹக்கிக்கீன்:** அப்துல் ஃபஸ்ல் அலூஸி என்பவர் **காத்தமுல் முஹக்கிக்கீன் – ஆராய்ச்சியாளர்களுள் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல் : ரூஹுல் மஆனி, முதற்பக்கம்)

14) **காத்தமுல் ஃபுக்கஹா:** சைகு அப்துல் ஹக் என்பவர் **காத்தமுல் ஃபுக்கஹா – மார்க்க சட்ட வல்லுநர்களில் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல்: தஃப்ஸீருல் அக்லீல், முதற்பக்கம்)

15) **காத்தமுல் முஹத்திஸீன் வல் முஃபஸ்ஸிரீன்:** சாஹ் அப்துல் அஜீஸ் என்பவர் **காத்தமுல் முஹத்திஸீன் வல் முஃபஸ்ஸிரீன் – சிறந்த ஹதீஸ் கலை வல்லுனரும், திருக்குர்ஆன் விரிவுரையாளரும் ஆவார்** என கூறப்பட்டுள்ளது. (நூல்: ஹதீயத்துல் ஷியா, பக்கம் 4)

16) **காத்தமுல் முஹக்கிக்கீன்:** இமாம் ஸுயூத்தி (ரஹ்) அவர்களை **காத்தமுல் முஹக்கிக்கீன் – ஆராய்ச்சியாளர்களுள் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல் : தஃப்ஸீருல் அதகான், முதற்பக்கம்)

17) **காத்தமுல் ஹுஃப்பாஸ்:** சைகு முஹம்மது அப்துல்லாஹ் அவர்களை **காத்தமுல் ஹுஃப்பாஸ் – திருக்குர்ஆன் மனனம் செய்தவர்களில் சிறந்தவர்** என கூறப்பட்டுள்ளது. (நூல்: தப்காதுல் மத்லஸீன், முதற்பக்கம்)

மேற்கண்ட சான்றுகள் இடம்பெற்றுள்ள நூற்களும், பத்திரிகைகளும் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தால் வெளியிடப்பட்டவை அல்ல. மேற்கண்ட சான்றுகள் அனைத்தும் காத்தம் என்ற சொல்லுடன் ஒரு பன்மை பெயர்ச்சொல் சேரும் போது அதற்கு சிறப்பு என்ற பொருளே தவிர காலத்தால் இறுதி என்ற பொருள் இல்லை என்பதை ஆணித்தரமாக அறிவிக்கின்றன.

இதிலிருந்து காத்தம் என்னும் சொல்லிற்குப் பிறகு இறைநேசர்கள் கவிஞர்கள், அறிஞர்கள், விரிவுரையாளர்கள் என்று பன்மைச் சொல் வந்தால் அறிஞர்களுள் மிகச் சிறந்தவர், இறை



நேசர்களுள் மிகச் சிறந்தவர்; கவிஞர்களுள் மிகச் சிறந்தவர் என்று தான் பொருள் கொள்ள வேண்டும். நபிமார்களுள் காத்தம் என்பதும் நபிமார்களுள் மிகச் சிறந்தவர் என்று தான் வரும். இறுதி நபி என்று பொருள் கொள்வது தவறாகும் என்று விளங்குகிறது.

**பீ.ஜே காட்டியுள்ள வசனங்கள்:**

*நாம் உம்மை மக்களுக்குத் தூதராக்கி அனுப்பியுள்ளோம் (4:80). மனிதர்களே! இத்தூதர் உங்களிடம் உங்கள் இறைவனிடம் இருந்து வந்துள்ளார். எனவே நம்பிக்கை கொள்ளுங்கள் (4:171). மக்களே! நிச்சயமாக நான் உங்கள் எல்லாருக்கும் அல்லாஹ்வின் தூதராக இருக்கிறேன் (7:159). மக்களே! நிச்சயமாக உங்கள் இறைவனிடமிருந்து உங்களிடம் அறிவுரை வந்து விட்டது (10:58). இது மக்களுக்கு முழுமையான அறிவுரையாகும் (14:53). முஹம்மத் உங்களுள் எந்த ஆணுக்கும் தந்தை இல்லை. ஆனால் (அவர்) அல்லாஹ்வின் தூதராகவும் நபிமார்களுக்கெல்லாம் சிறந்தவராகவும் விளங்குகின்றார் (33:41). அவனே எழுதப் பிடிக்கத் தெரியாத மக்களுக்கு அவர்கள் இதற்கு முன்னர் தெளிவான வழிகேட்டில் இருந்த போதிலும் அவனது கட்டளைகளைப் படித்துக்காட்டி, அவர்களைத் தூய்மைப்படுத்தி, அவர்களுக்கு வேதத்தையும் நுட்பமான அறிவையும் கற்றுக் கொடுக்கும் ஒரு தூதரை அவர்களிலிருந்தே அனுப்பினான். மேலும் இதுவரை அவர்களுடன் சேராத மற்றவர்களுக்கிடையிலும் (அவரை எழுப்புவான்) - (62:3-4).*

# III. ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்களின் உண்மைத்துவம்

## 11. ஈஸப்னு மர்யம் என்பதன் விளக்கம்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 206 இல் நாடோடிகள் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*நாடோடிகள் என்று தமிழாக்கம் செய்த இடத்தில் இப்னு ஸபீல் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இச்சொல்லின் நேரடிப் பொருள் பாதையின் மகன் என்பதாகும்.*

*ஒருவனிடம் ஒரு செயல் அதிக அளவில் காணப்படும் போது அச்செயலுடன் மகன் என்பதைச் சேர்த்துக் கூறுவது அரபியர்களின் வழக்கம்.*

*எப்போது பார்த்தாலும் போரில் பங்கெடுப்பவன் போரின் மகன் என்று குறிப்பிடப்படுவது வழக்கம். எப்போது பார்த்தாலும் ஊர் ஊராகச் சென்று கொண்டிருப்பவன் பாதையின் மகன் என்று குறிப்பிடப்படுவான்.*

*சாதாரணமாகப் பயணம் செய்பவர்கள் இச்சொல்லால் குறிக்கப்படமாட்டார்கள். பயணமே வாழ்க்கையாக மாறியவர்கள் தான் இச்சொல்லால் குறிப்பிடப்படுவர். எனவே நாடோடிகள் என்பது இச்சொல்லுக்கு நெருக்கமான சொல் எனலாம்.*

**நம் விளக்கம்:**

இந்த விளக்கத்தை சிந்தனையில் வைத்துக் கொண்டு திருக்குர்ஆனில் இறைவன் ஈஸா நபியை இப்னு மர்யம் என்று கூறியிருப்பதையும் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் தன்னை ஈசப்னு மர்யம் என்று கூறியிருப்பதையும் காண்போம்.



அல்லாஹ் திருக்குர்ஆனில் 66:13 இல் **நம்பிக்கை கொண்டவர்களுக்கு எடுத்துக்காட்டாக மர்யம் (அலை)** அவர்களைக் குறிப்பிடுகிறான். ஏதோ பெயரளவில் நம்பிக்கை கொள்ளாமல் நம்பிக்கையையே தன் வாழ்க்கையாக கொண்டு வாழ்பவர்கள். அதில் முதன்மையாக விளங்குபவர்களை இப்னு மர்யம் என்று கூறவேண்டும். அதாவது எப்போதும் போரில் பங்கெடுப்பவன் **போரின் மகன்** என்பது போலும், வாழ்க்கையையே பயணமாக கொண்டவனை **இப்னு ஸபீல்** என்பது போலும், **தன் வாழ்க்கையையே நம்பிக்கையாக கொண்டு வாழ்பவரை இப்னு மர்யம்** என்று அழைப்பதே மிகப் பொருத்தம் ஆகும்.

அல்லாஹ் நம்பிக்கை கொள்வதற்கும் நிராகரிப்பிற்கும் பெண்களைத் தான் எடுத்துக்காட்டாக கூறியுள்ளான். நிராகரிப்போருக்கு நூஹ் நபியின், லூத் நபியின் மனைவிமார் -களையும் நம்பிக்கையாளர்களுக்கு ஃபிர்அவ்னின் மனைவியும், மர்யம் (அலை) அவர்களும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளனர். ஏன் ?

திருக்குர்ஆன் ஆண்களை நபிமார்களாகவும், அவர்களிடத்து விசுவாசம் கொள்கிறவர்களைப் பெண்களாகவும் கூறுகிறது. இவ்வாறே நபிமார்களை விசுவாசம் கொள்ளாதவர் -களையும் பெண்களாகவே கூறுகிறது.

இதன் அடிப்படையில் ஒருவரை மர்யம் என்றோ பிர்அவ்னின் மனைவி என்றோ சொன்னால் அவர் **நம்பிக்கையாளர் என்றும்,** ஒருவரை நூஹ் நபியின் மனைவி என்றோ லூத் நபியின் மனைவி என்றோ சொன்னால் **அவர் காஃபிர் என்றும் பொருள்.** இவ்வாறே ஒருவரை இப்னு மர்யம் என்று சொன்னால் **அவர் ஒரு மிகச் சிறந்த நல்ல மூமின்** என்று பொருள். **ஒருவருக்கு ஒரு தன்மை இருப்பதைக் காட்ட வேண்டுமாயின் அதனுடன் அரபியர் அபூ** (தந்தை) **இப்னு** (தனயன்) **அகு** (சகோதரன்) என்ற பதங்களில்

ஏதேனும் ஒன்றை அதனுடன் சேர்த்துக் கூறுவது அரபியரின் வழக்கம். இக்கருத்தில் தான் சந்திரனுக்கு **இப்னுல் லைல்** (இரவின் புதல்வன்) என்றும், அரபி நாட்டானுக்கு **அகுல் அரப்** (அரபியரின் சகோதரன்) என்றும் வழிப்போக்கனுக்கு **இப்னுஸ் ஸபீல்** (பாதையின் மகன்) என்றும் அரபியர் கூறுகின்றனர்.

*(துஃப்ஸீருல் ஹமீத் : 111 வது அதிகாரத்தில் கூறப்பட்டுள்ள விளக்கம்)*

நபித்தோழர்கள் இக்ரிமா (ரலி) அவர்களை ஃபிர்அவுனின் மகன் **(இப்னு ஃபிர்அவ்ன்)** என்று கூறினர். காரணம், நபி (ஸல்) அவர்கள் அபூஜஹிலை, தன் காலத்தின் ஃபிர்அவ்ன் என்று கூறினார்கள். எனவே நபித் தோழர்கள் அபூஜஹிலின் மகனை **இப்னு ஃபிர்அவ்ன்** என்று அழைத்தனர்.

அவ்வாறே **ஈஸப்னு மர்யம்** என்றால், மிகச் சிறந்த மூமினாக இருந்து, ஈஸா நபியின் தகுதியை அடைந்தவர் என்று பொருள். அதாவது மர்யம் (அலை) அவர்களின் தகுதியிலிருந்து ஈஸா நபியின் தகுதிக்கு அல்லாஹ்வால் உயர்த்தப்பட்டவர் என்று பொருள்.

இந்த அடிப்படையில் தான் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் தன்னை **ஈஸப்னு மர்யம்** என்று கூறினார்கள்.

மேலே சொல்லப்பட்ட எடுத்துக் காட்டுகளிலிருந்து தன்னை **இப்னு மர்யம்** என்று அல்லாஹ் அழைக்கிறான் என்று ஒருவர் கூறினால் மர்யம் (அலை) அவர்களின் மகனாகத் தான் இருக்க வேண்டும் என்று கூறுவது அவர் தன்னை அபூ ஜஹில் என்று ஏற்றுக் கொள்வதாக பொருள். அதாவது அறியாமையின் தந்தை என்று தன்னைத்தானே ஏற்றுக் கொள்கிறார் என்பதாகும்.



## 12. அஹ்மது எனும் பெயரைக் கொண்ட தூதர்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 25 இல் முஹம்மது நபியைப் பற்றி முன்னறிவிப்பு என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*தவ்ராத், இன்ஜீல் வேதங்களில் முஹம்மது நபியைப் பற்றிய முன்னறிவிப்பு இருந்தது. (பார்க்க திருக்குர்ஆன் 7:157, 48:29, 61:6) என்று எழுதியுள்ளார்.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆன் 61 :7 வசனத்தில் மர்யமின் மகன் ஈஸா தன் சமுதாயத்திடம் இஸ்ராயீலின் மக்களே ! நிச்சயமாக நான் எனக்கு முன்னர் தவ்ராத்தில் கூறப்பட்டதை நிறைவேற்றக் கூடியவனாகவும், எனக்குப் பின்னர் வரப்போகிற அஹ்மத் எனும் பெயரைக் கொண்ட ஒரு தூதரைப் பற்றி நற்செய்தி வழங்குபவனாகவும் உங்களிடம் அனுப்பப்பட்ட அல்லாஹ்வின் தூதராவேன் என்று கூறிய நேரத்தை (நினைத்துப் பாருங்கள்). பின்னர் அ(த்தூது)வர் தெளிவான சான்றுகளுடன் வந்த போது இது மிகத் தெளிவான சூனியம் என்று அவர்கள் கூறினர்.

இவ்வசனத்தில் அஹ்மத் எனும் பெயர் கொண்ட ஒரு தூதர் என்பது முஹம்மது நபியைப் பற்றிய முன்னறிவிப்பு என்று பீ.ஜே கருதுகிறார். நபி (ஸல்) அவர்களின் பெயர் முஹம்மது என்றிருக்க, அஹ்மத் எனும் பண்புப் பெயரைக் குறிப்பிட்டு ஈஸா நபி முன்னறிவித்ததாக எண்ணுகிறார். இதனால், ஹஸ்ரத் மிர்சா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் இந்த அஹ்மது என்பது தன்னைக் குறித்து கூறப்பட்ட முன்னறிவிப்பு என்று கூறிய போது பீ.ஜே போன்றோர் அன்னாரை மறுத்தனர். இச்செயல், ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களைக் குறித்து தவ்ராத்தில் வந்த முன்னறிவிப்பை யூதர்கள் அது முஹம்மது நபிக்குப் பொருந்தாது என்று கூறியதைப் போன்றதாகும். அதாவது உபாகமம் 18:18-20 இல்,

இந்த வசனத்தில் கர்த்தர் மூஸா நபியிடம், உன்னைப் போல ஒரு தீர்க்கதரிசியை நான் அவர்களுக்காக அவர்கள் சகோதரரிலிருந்து எழும்பப்பண்ணி, என் வார்த்தைகளை அவர் வாயில் அருளுவேன். நான் அவருக்குக் கற்பிப்பதையெல்லாம் அவர்களுக்குச் சொல்லுவார்.

என் நாமத்தினாலே அவர் சொல்லும் என் வார்த்தைகளுக்குச் செவிகொடாதவன் எவனோ அவனை நான் விசாரிப்பேன்.

சொல்லும்படி நான் கட்டளையிடாத வார்த்தையை என் நாமத்தினாலே சொல்லத் துணியும் தீர்க்கதரிசியும், வேறே தேவர்களின் நாமத்தினாலே பேசும் தீர்க்க தரிசியும் சாகக்கடவன் என்று வருகிறது. இதில்,

1) ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களைக் குறித்து கூறப்பட்டுள்ளது. அவர் மூஸா நபியைப் போன்ற ரஸுல் என்று (திருக்குர்ஆன் 73:16 வசனம்) கூறுகிறது.
2) அவர் இஸ்ரவேலர்களின் சகோதரர் இஸ்மவேலர்களிலிருந்து அதாவது இஸ்மாயீல் நபி (அலை) அவர்களின் சந்ததிகளில் இருந்து வருவார்.
3) அவர்க்கு திருக்குர்ஆன் எனும் வேத வஹி வரும்.
4) அவ்வேதத்தில் பிஸ்மில்லாஹ் என்று அல்லாஹ்வின் பெயரைக் கொண்டு அதன் அத்தியாயங்கள் காணப்படும்.
5) அவர் எந்தச் செயலையும் அல்லாஹ்வின் பெயரைக் கூறியே செய்வார்.

இவ்வாறு தெளிவாகக் காணப்பட்டும் யூதர்கள், அந்தத் தீர்க்கதரிசி, மூஸா நபியின் சகோதரர்களாகிய இஸ்ரவேலர்களிலிருந்து வர வேண்டும். முஹம்மதோ, இஸ்மவேலர்களிலிருந்து வந்துள்ளார் என்று கூறி மறுத்து விட்டனர்.



இதைப் போன்றே முஸ்லிம்களும் அஹ்மத் என்பது முஹம்மது நபியைத் தான் குறிக்கும் என்று கூறி, இஸ்லாத்தில் பின்னாளில் முஹம்மது நபியைப் பின்பற்றி வரும் அன்னாருடைய அஹ்மத் என்னும் பண்பைக் கொண்ட உம்மத்தி நபியாகிய ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை மறுத்து வருகின்றனர்.

61:7 வசனத்தில் வரும் அஹ்மது என்பவர், முஹம்மது நபியின் உம்மத்தில் பிற்காலத்தில் வரக்கூடியவர் என்பதைக் காண்போம்.

1) நம்பிக்கை கொண்டோர் என்பது திருக்குர்ஆனில் முஸ்லிம்களை மட்டுமே குறிக்க வருகிறது. இச்சொல், அந்த அத்தியாயத்தில் 3 இடங்களில் வந்து முஸ்லிம் சமுதாயத்தில் பிற்காலத்தில் வருபவரைப் பற்றியும் முஸ்லிம்கள் செய்யாததைச் சொல்லக் கூடாது என்றும், துன்புறுத்தும் வேதனையிலிருந்து காப்பாற்றும் ஒரு வியாபாரம் பற்றியும் முஸ்லிம்களிடம் எடுத்துச் சொல்கிறது.
2) மூஸா நபி முதல் ஈஸா நபி காலம் வரை யூதர்கள் அந்தந்த கால நபிமார்களிடம் நடந்து கொண்டது போல் உங்களிடம் வந்துள்ள அஹ்மத் எனும் தூதரிடமும் நடக்கக் கூடாது என்று முஸ்லிம்களிடம் 61:6-7 வசனத்தில் எடுத்துக் கூறப்பட்டுள்ளது.
3) 61:8 வசனத்தில் அஹ்மத் எனும் தூதரை நீங்கள் இஸ்லாத்திற்கு வருமாறு அழைப்பீர்கள் என்றும்; அவர்க்கு அநீதியிழைக்கும் கூட்டத்திற்கு அல்லாஹ் நேர்வழி காட்ட மாட்டான் என்றும் முஸ்லிம்களிடம் அல்லாஹ் கூறுகிறான்.
4) 61:9 இல் அஹ்மத் நபி கொண்டு வரும் அந்த இறையொளியை தம் வாய்களால் ஃபத்வா கூறி அணைக்க முயல்வார்கள். ராபிதத்துல் ஆலமீன், பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் போன்ற அமைப்புகள் ஃபத்வாக்களை கூறி அஹ்மதின் இறை ஒளியை அணைக்க முயல்பவர்களை காஃபிர்கள் என்று அல்லாஹ் கூறுகிறான்.

5) அன்னார் அனைத்து மார்க்கங்களையும் வெற்றி கொள்வதற்காக வந்து, நேர்வழியையும், உண்மை மார்க்கத்தையும் நிலை நாட்டுவார் என்று 61:10 வசனம் கூறுகிறது. இது எதிர்காலத்தில் வரும் மஹ்தியின் காலத்தில் நடக்கும் என்று திருக்குர்ஆன் விரிவுரையாளர்கள் கூறுகின்றனர். (துப்ஸீர் இப்னு ஜரீர் தப்ஸீர் ஜாமிஉல் பயான் தொகுதி 29)

6) 61:11-12 வசனம், பிற்காலத்தில் வியாபாரம் கொடி கட்டிப்பறக்கும் என்றும் அச்சமயத்தில் முஸ்லிம்கள் செய்ய வேண்டிய வியாபாரம் பற்றியும் அதனால் கிடைக்கும் கூலி பற்றியும் கூறுகிறான்.

7) 61:15 வசனத்தில் மூஸா நபியைப் போன்ற முஹம்மத் நபியின் உம்மத்தில், ஈஸா நபியின் சமுதாயத்தைப் போன்று ஒரு சமுதாயம் உருவாகும் என்றும் அவர்கள் ஈஸா நபியைப் போன்ற அஹ்மத் நபியைப் பின்பற்றுவோர் என்றும் மற்றொரு பிரிவினர் அவரை மறுத்து விடுவர் என்றும் கூறுகிறது.

8) 61:7 வசனம்,

அ) ஈஸா நபி இஸ்ரவேல் சமுதாயத்திற்கு மட்டும் அனுப்பப்பட்ட ஒரு தூதர். அன்னார் முழு உலகுக்கோ, முஸ்லிம் சமுதாயத்துக்கோ வர முடியாது.

ஆ) ஈஸா நபி தவ்ராத்தை மெய்ப்பிக்க வந்த ஒரு தூதர். அவர் திருக்குர்ஆனை மெய்ப்பிக்க வந்தவரல்ல.

இ) எனக்குப் பின்னர் என்று ஈஸா நபி கூறுவதினால், ஈஸா நபியின் மரணத்திற்கு பிறகு தான் அஹ்மத் நபி தோன்றுவார்.

ஈ) மூஸா நபியும் முஹம்மது நபியும் வேதம் கொண்டு வந்த நபிமார்கள் என்றும் ஈஸா நபி தவ்ராத்தையும் அஹ்மது நபி திருக்குர்ஆனையும் மெய்ப்பிக்க வந்த தூதர்கள் என்றும் இவ்வசனம் கூறுகிறது.



61:1 வசனம், வானங்களிலும், பூமியிலும் உள்ளவை அல்லாஹ்வைத் துதித்தன என்று வருகிறது. அல்லாஹ்வின் துதி இல்லாத காலத்தில் அத்துதியை மீண்டும் உண்டாக்கி அஹ்மத் - புகழக் கூடியவர், துதிக்கக் கூடியவர் வருவார் என்று கூறுகிறது.

**தான் முழுக்க முழுக்க திருக்குர்ஆனையும், ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களையும் பின்பற்றியதால் தான் இறைவன் எனக்கு இந்த உம்மத்தி நபி என்ற பதவியைத் தந்தான். அதனை விட்டு விட்டு மலையளவு நல்ல அமல்களைச் செய்திருந்தாலும் இப்பதவி எனக்குக் கிடைத்திருக்காது** என்று ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் கூறியுள்ளார்கள். அன்னார் தன் வாழ்நாள் முழுவதும் அல்லாஹ்வின் புகழையும், நபி (ஸல்) அவர்களின் புகழையும் போற்றிப் புகழ்வதில் செலவிட்டார்கள்.

எனவே, பிற்காலத்தில் தோன்றிய ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்களே இங்கு **இஸ்முஹு அஹ்மது** என்று கூறப்பட்டவராவார்.

காரணம், 61-வது சூரா மூமீன்களாகிய முஸ்லிம்களைக் குறித்து மட்டுமே பேசுகிறது. எனவே அஹ்மது எனும் பெயர் முஸ்லிம்களில் தோன்றும் ஒரு தூதரைக் குறிக்குமே தவிர, முஸ்லிம்களுக்காகத் தோன்றும் தூதரைக் குறிக்காது. முஸ்லிம் -களுக்காகத் தோன்றிய தூதர் முஹம்மது என்று திருக்குர்ஆனில் 4 இடங்களில் கூறப்பட்டுள்ளார். அல்லாஹ் அவர் இல்லை என்று கூறுவதற்காகத்தான் அவர் பெயர் என்று கூறி அஹ்மது என்று அழைத்துள்ளான். அவர் பெயர் என்று யஹ்யா நபியுடனும் (3:45) ஈஸா நபியுடனும் (19:8) வந்து, நற்செய்தி என்றும் கூறப்பட்டுள்ளது. இதே நற்செய்தியைத் தான் ஈஸா நபி பிற்காலத்தில் இஸ்லாத்தில் தோன்றும் ஒருவராகிய அஹ்மது நபிக்கும் கூறுகிறார். எனக்குப் பின்னர் என்பது ஈஸா நபியின் மரணத்திற்குப் பிறகு என்பதைக் குறிப்பதால், அன்னார் மரணித்து விட்டார் என்று ஏற்றுக் கொள்ள

வேண்டும். இல்லை என்றால், ஈஸா மீண்டும் வந்து மரணித்த பிறகு ஒருவர் வருவார். அவர் தான் அஹ்மது என்று எண்ணி ஏமாற வேண்டும்.

இந்த அதிகாரத்தின் இறுதியில் அல்லாஹ் ஒரு கட்டளையிட்டுள்ளான். ஈஸா நபி, தமது சீடர்களிடம் அல்லாஹ்வுக்காக எனது உதவியாளர்கள் யார் என்று கேட்ட போது நாங்கள் அல்லாஹ்வுக்காக உதவி செய்பவர்களாக இருக்கிறோம் என்று அந்த சீடர்கள் பதிலளித்தது போன்று நம்பிக்கை கொண்டவர்களே நீங்களும் பதிலளிக்க வேண்டும் என்று கட்டளையிடப்பட்டுள்ளது. அதே வேளையில் இந்த கருத்து திருக்குர்ஆனில் 3:53 இல் செய்தியாக மட்டுமே வருகிறது. ஆனால் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் வருகையைக் குறிப்பிடும் போது நம்பிக்கைக் கொண்டவர்களுக்கு கட்டளையாகவே இடப்பட்டுள்ளது என்பது கவனிக்கத்தக்கது.

## IV. அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் உண்மைத்துவம்

### 13. பிரார்த்தனைக்கு அறைகூவல்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 94 இல் அசைக்க முடியாத கொள்கை உறுதி என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*ஒருவர் ஒரு கொள்கையை பிரச்சாரம் செய்கிறார் என்றால் அவனுக்கு அக்கொள்கையில் முழுமையான நம்பிக்கை இருக்க வேண்டும். நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒரே ஒரு கடவுள் தான் இருக்கிறான் என்றார்கள். கடவுளுக்கு மகன் கிடையாது என்றும் ஈஸா நபியவர்கள் கடவுளின் மகன் கிடையாது எனவும் அடித்துக் கூறினார்கள்.*

*இயேசு இறைவனின் மகன் என்று வாதிட்டவர்களுக்கு தமது கொள்கையில் இருந்த நம்பிக்கையைவிட ஆயிரம் மடங்கு*



*அதிகமான நம்பிக்கை அதற்கு எதிரான கொள்கையில் நபிகள் நாயகத்துக்கு இருந்தது.*

*இதனால் தான் இவ்வசனத்தில் (திருக்குர்ஆன் 3:61) இது பற்றி இறைவனிடம் பிரார்த்தனை செய்வோம் என்று அறைகூவல் விடுக்கப்பட்டது. நானும் என் மனைவி மக்களுடன் வருகின்றேன். நீங்களும் உங்கள் மனைவி மக்களுடன் வாருங்கள்! இரு சாராரில் யார் தவறான கொள்கையில் இருக்கிறார்களோ அவர்கள் மீது அல்லாஹ்வின் சாபத்தை இருவரும் சேர்ந்து வேண்டுவோம் என நபிகள் நாயகம் (ஸல்) அழைப்பு விடுத்தார்கள்.*

*இந்த அறைகூவலை அன்றைக்கு இருந்த கிறித்தவர்கள் எவருமே ஏற்றுக் கொள்ளவில்லை. இதிலிருந்து நபிகள் நாயகத்துக்கு தமது கொள்கையின் மீது இருந்த அசைக்க முடியாத நம்பிக்கை உறுதி செய்யப்படுகிறது.*

**நம் விளக்கம்:**

நஜ்ரானிலிருந்து அல் ஆகிபு இப்னுல் ஹாரிது என்பவன் தலைமையில் நஸாராக்களின் ஒரு குழு பெருமானாரைச் சந்தித்து மர்யம் (அலை) ஈஸா (அலை) ஆகியோரைப் பற்றித் தர்க்கிக்க வந்தது. இவ்விருவரும் அல்லாஹ்வின் நல்லடியார்கள் என்றும் ஆனால் வணக்கத்துக்குரியவர்கள் அல்லர் என்றும் ஆதாரங்களை எடுத்து வைத்து பெருமானார் (ஸல்) அவர்கள் விளக்கினார்கள். எனினும் அவர்கள் விதண்டாவாதங்களில் மூழ்கினர். அப்போது அல்லாஹ் தஆலா இந்த ஆயத்தை இறக்கினான். (ஆதாரம் : திருக்குர்ஆன் தர்ஜுமா M. அப்துல் வஹ்ஹாப் 3:61 வசனத்தின் அடிக்குறிப்பு எண் 42-ன் சுருக்கம்)

**நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நஜ்ரான் குழுவிடம் எங்கள் இறைவன் உயிருடன் இருக்கிறான் என்பது உங்களுக்குத் தெரியாதா? அவனுக்கு மரணம் இல்லை. ஆனால் ஈஸாவோ இறந்து விட்டார் என்று கூறினார்கள்.** (ஆதாரம் : அஸ்பாபுன் நுஸூல் பக்கம் : 68)

இந்த வாதத்தில் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வைத்த ஆதாரமானது, ஈஸா நபி அல்லாஹ்வின் மகன் என்றால், மரணமற்ற வாழ்க்கை அவனுடைய மகனுக்கும் இருக்க வேண்டும். ஆனால் ஈஸாவோ என்றோ இறந்து விட்டார். எனவே அந்த ஈஸா எப்படி இறை மகனாக இருக்க முடியும் என்பதாகும்.

ஆங்கிலேய ஆட்சியின் போது ஆங்கிலேயர்கள் கடவுள் என விசுவாசம் கொண்டிருந்த ஈஸா (அலை) அவர்களை, ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் ஈஸா நபி (அலை) அவர்கள் சிலுவையிலிருந்து தப்பிச் சென்று, காணாமல் போன தம் சமுதாய மக்களைத் தேடிச் சென்றார் என்றும் சிரியா, ஆப்கானிஸ்தான் வழியாக இந்தியா வந்து இந்தியாவில் இயற்கை மரணம் அடைந்து விட்டார்கள் என்றும், அன்னாரது கல்லறை காஷ்மீரில் கான்யார் வீதியில் உள்ளது என்றும் கூறினார்கள். இது தொடர்பாக இந்தியாவில் மஸீஹ் எனும் நூலையும் எழுதினார்கள். இதனை ஆங்கிலேயே ஆட்சியார்களுக்கும், பாதிரிமார்களுக்கும் அனுப்பி வைத்தார்கள். கிறிஸ்தவ பாதிரிமார்களுடன் இது பற்றி பல நாட்கள் விவாதம் செய்தார்கள். ஜங்கே முகத்தஸ் (புனித யுத்தம்) எனும் நூலில் இது காணப்படுகிறது. இது ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் கொள்கை உறுதியைக் காட்டுகிறது.

இஸ்லாத்திலுள்ள அனைத்து முஸ்லிம் பிரிவுகளும் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் (அலை) அவர்களை பொய் நபி என்றும், ஆங்கிலேய அரசால் உருவாக்கப்பட்டவர் என்றும், அஹ்மதிய்யா ஜமாஅத்தின் கொள்கைகள் பொய் என்றும் கூறி வருகிறீர்கள். இக்கொள்கையில் நீங்கள் உறுதி உடையவர்கள் என்றால், உங்களிடம் ஒரு வேண்டுகோள்.

அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் இஸ்லாத்திலுள்ள அனைத்துப் பிரிவுகளிடமும் - அதாவது 72 பிரிவுகளிடமும் அழைப்பு விடுக்கிறது. தமிழகத்திலுள்ள அனைத்துப் பிரிவுகளும் ஒன்று சேர்ந்து ஒரு திடலில் கூடி அஹ்மதிய்யா ஜமாஅத் பொய்



என்றால் அதனை அழித்து விடுமாறும் அது உண்மை என்றால் ஏற்றுக் கொள்ளும் பாக்கியம் கிடைக்குமாறும் துஆ செய்ய முன் வாருங்கள். நீங்கள் உண்மையாளர்கள் என்றால் அல்லாஹ் இந்தத் துஆவை ஏற்றுக் கொள்வான். அல்லது ஹஜ்ஜின் போது மக்காவில் கஃபதுல்லாஹ்வின் திரைச்சீலையை பிடித்து இந்த துஆவை செய்ய முன்வருமாறு வேண்டுகிறேன்.

## 14. தூய இஸ்லாம் என்பது அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தே

**சில வினாக்கள்:**

1) திருக்குர்ஆன் மற்றும் நபிமொழிகளிலிருந்து ஒரு உண்மை நபியின் அளவுகோலை எடுத்துக்காட்டி அந்த அளவுகோல் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுக்குப் பொருந்தவில்லை என்றோ அல்லது திருக்குர்ஆன் மற்றும் நபிமொழிகளிலிருந்து ஒரு பொய் நபியின் அளவுகோலை எடுத்துக்காட்டி அந்த அளவுகோல் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுக்குப் பொருந்துகிறது என்றோ எடுத்துக் காட்ட முடியுமா?

2) ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் **காத்தமன் நபிய்யீன்** என்று திருக்குர்ஆன் (33:41) கூறுகிறது. அதற்கு இறுதி நபி என்று பிறர் கூறுகின்றனர். அப்படி என்றால், காத்தம் என்ற சொல்லை அடுத்து **நபிய்யீன்** (நபிமார்கள்) என்று பன்மைச் சொல் வருவது போல், அவுலியாக்களுள் காத்தம், முஹாஜிர்களுள் காத்தம், அறிஞர்களுள் காத்தம், கவிஞர்களுள் காத்தம், திருக்குர்ஆன் விரிவுரையாளர்களுள் காத்தம் என்று வரும் சொற்களில் **காத்தம்** என்பதற்கு இறுதி என்று தான் பொருள் என்று நிரூபித்துக் காட்டுபவர்கள் உலகில் யாரும் உண்டா?

3) அல்லாஹ், ஈஸா நபியை தவஃப்பா செய்தான் என்றால், அல்லாஹ் அவருடைய ரூஹைக் கைப்பற்றி விட்டதன் மூலம் அவரை மரணிக்கச் செய்து விட்டான் என்று தான் பொருள்.

அல்லாஹ் ஈஸா நபியை இரவிலோ தூக்கத்திலோ தவஃப்பா செய்தான் என்றால், அல்லாஹ் அவருடைய ரூஹைத் தூக்கத்தின் போது கைப்பற்றியிருக்கிறான் என்று தான் பொருள்.

எனவே, அல்லாஹ் ஒரு மனிதரைப் தவஃப்பா செய்தான் என்பதற்கு அவரது உயிரைக் கைப்பற்றி விட்டான், மரணிக்கச் செய்து விட்டான் என்பதைத் தவிர வேறு ஒரு பொருள் இல்லை. அப்படி ஒரு பொருள் இருக்கிறது என்றால் தக்க சான்றுடன் அதனை எடுத்துக் காட்ட முடியுமா?

4) நபி (ஸல்) அவர்கள் பிற்காலத்தில் **நுபுவ்வத் வழியில் கிலாஃபத்** அமையும் என்று (முஸ்னத் அஹ்மத் பின் ஹம்பல்) கூறியுள்ளார்கள். இந்த நபிமொழியின் அடிப்படையில் பிற்காலத்தில் உம்மத்தி நபி வரவேண்டும். இந்த நபி வழியில் கலீஃபாக்கள் வரவேண்டும் என்பது தான் திருக்குர்ஆன், நபிமொழி கூறும் கருத்தாகும். அதன்படி இன்று உலகளாவிய அளவில் நுபுவ்வத் வழியில் கிலாஃபத் அதாவது ஒரு உம்மத்தி நபி வந்து பிறகுஅவர் வழியில் கலீஃபாக்கள் வருவது **அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தில்** மட்டுமே உள்ளது. பிற பிரிவுகள் எதிலும், நாடு அளவிலோ, மாநில அளவிலோ கூட கிலாஃபத் அமைப்பு இல்லை.

எல்லா பிரிவுகளும் ஒன்று சேர்ந்து மாநில அளவிலாவது ஒரு கிலாஃபத் அமைப்பை உண்டாக்கிக் காட்ட முடியுமா? முடிந்தால் செய்து காட்டுங்கள்.

5) அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் பொய்யானது என்றால், உலகில் ஒரு பொய் நபிக்கு ஜமாஅத் இருந்து அதற்கு கடந்த 100 ஆண்டுகளுக்கு மேல் ஒரு கிலாஃபத் இருக்கிறது என்றோ, இருந்தது என்றோ எடுத்துக் காட்ட முடியுமா?

6) ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் பொய்யர் என்றால் (நவூதுபில்லாஹ்) உலகில் தோன்றிய பொய் நபிமார்கள் முகவரி இல்லாமல், வேரோடும் வேரடி மண்ணோடும்



இல்லாமல் போய் விட்டது போல் ஆகாமல் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து 204 நாடுகளில், பல கோடி மக்களைக் கொண்டதாக கடந்த 120 ஆண்டுகள் நிலைத்து நிற்கிறதே! இது அவர் உண்மையாளர் என்பதைக் காட்டவில்லையா?

7) ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் பொய்யர் (நவூதுபில்லாஹ்) என்று நீங்கள் கருதினால் 72 பிரிவுகளும் ஒன்று சேர்ந்து ஓரிடத்தில் ஒன்றுகூடி அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் அழிவுக்காக துஆ செய்து காட்டுங்கள் அல்லது அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் உண்மை என்றால் அதை ஏற்றுக் கொள்ளும் பாக்கியம் கிடைக்க வேண்டும் என்று துஆ செய்து காட்டுங்கள். நீங்கள் **உண்மையாளர்கள்** என்றால் அல்லாஹ் உங்களின் துஆக்களை ஏற்றுக் கொள்வான்.

8) 72 பிரிவுகளைச் சேர்ந்த **கூட்டுக்குழு** மக்கா சென்று கஃபதுல்லாஹ்வின் திரைச் சீலையைப் பிடித்து மேலே சொன்னபடி துஆ செய்து காட்ட முடியுமா?

9) கடந்த 120 ஆண்டுகளில் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் உலகந்தழுவிய அளவில் இஸ்லாத்திற்குச் செய்த சேவைகளாவன: 1. பள்ளிவாசல்கள் 2. பள்ளிக் கூடங்கள் 3. மருத்துவமனைகள் ஆகியவற்றைக் கட்டுதல் 4. பல்வேறு மொழிகளில் திருக்குர்ஆனுக்கு செய்துள்ள தர்ஜுமாக்கள் 5. இஸ்லாமிய பிரச்சாரத்திற்காக பல நூற்றுக்கணக்கான பிரச்சாரகர்கள் உலகின் செய்து வரும் இஸ்லாமிய தொண்டு 6. இஸ்லாத்திற்கு எதிரான குற்றச்சாட்டுகளுக்குப் பதில் நடவடிக்கை 7. இஸ்லாம் சம்பந்தப்பட்ட நூல்களை, உலகின் பிற மொழிகளில் வெளியிடுதல் 8. Humanity First மூலம் இயற்கை அழிவுகளின் போது மீட்புப் பணிகளை செய்தல் 9. M.T.A (முஸ்லிம் டெலிவி-ன் அஹ்மதிய்யா) மூலம் 24 மணி நேரமும் இஸ்லாத்தின் தூதுச் செய்திகளை ஒளிபரப்புதல்

10. உலகளாவிய பைத்துல் மால் அமைப்பு. 72 பிரிவுகளைச் சேர்ந்த முஸ்லிம் அமைப்புகள் உலகம் தழுவிய அளவில் இது போன்ற சேவைகளை செய்ததாக காட்ட முடியுமா?

10. பொய் நபிமார்கள் இறைத்தண்டனைக்கு ஆளாகி அரசு அல்லது மனிதர்கள் மூலம் கொல்லப்படுகின்றனர். ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது காதியானி (அலை) அவர்கள் வெள்ளையர் ஆட்சியில் அவர்களின் கடவுட் கொள்கைக்கு மாற்றமாக ஈஸா நபி (அலை) கடவுள் இல்லை; அவர் ஒரு மனித நபி; அன்னார் இயற்கை மரணம் அடைந்து, காஷ்மீரில் கான்யார் வீதியில் அடக்கம் செய்யப்பட்டுள்ளார் என்று கூறினார்கள். இக்கொள்கைக்காக கிறித்துவ அரசால் அவரைக் கொல்ல முடியவில்லை. முஸ்லிம்களும், கிறித்தவர்களும் பிறரும் அன்னாரைக் கொல்ல முயன்றும் அது பலிக்கவில்லை. அல்லாஹ் அவர்களைப் பிறரது கொலை முயற்சிகளிலும் இருந்து காப்பாற்றியுள்ளான். இது அன்னார் **உண்மையான நபி** என்பதனைக் காட்டவில்லையா?

11. திருக்குர்ஆன் 39:42 -இல், அல்லாஹ் எந்த உயிரின் மீது மரணத்தை விதித்து விட்டானோ அந்த உயிரை தன்னிடமே நிறுத்தி வைத்துக் கொள்கிறான் என்று கூறுகிறான். இறந்தவர்களின் உயிர்கள் இறைவனின் கைவசத்தில் உள்ளன. அவை மீண்டும் இவ்வுலகிற்கு வருவதில்லை என்பதைக் குறிக்கும் வசனங்கள் திருக்குர்ஆனில் ஏறக்குறைய 16 வசனங்கள் உள்ளன. இது அல்லாஹ்வின் மாறாத சட்டமாகும். இந்த சட்டத்திற்கு மாற்றமாக, ஈஸா நபி இறந்தவர்க்கு உயிர் கொடுத்தார் என்பதை திருக்குர்ஆன் நபிமொழிகளிலிருந்து நிரூபித்துக் காட்ட முடியுமா?

12. திருக்குர்ஆனில் முன்னர் வந்த சட்டத்தை பின்னர் வந்த சட்டம் நீக்கி விட்டது என்றும், இது போன்ற நாசிக் மன்சூக் வசனங்கள் 5 முதல் 500 வசனங்கள் வரை உள்ளன என்றும் ஆலிம்கள்



தவறாக நம்புகின்றனர். ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு கூறியதாக அனைத்து நபித்தோழர்களும் சாட்சி கூறும் ஏதாவது ஒரு சான்றை நீங்கள் காட்ட முடியுமா ?

13. **ரஃபஅ** உயர்த்துதல் எனும் சொல்லை அல்லாஹ் ஒரு மனிதர்க்குப் பயன்படுத்தி அவர் உடலோடு வானுக்கோ, இறைவனளவிலோ உயர்த்தப்பட்டார் என்று பொருள் தரும் ஒரு சான்றை உங்களால் திருக்குர்ஆன், நபிமொழி ஆகியவற்றிலிருந்து எடுத்துக் காட்ட முடியுமா?

14. நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மஸ்ஜிதே அக்ஸா சென்று அங்கு பல்லாயிரம் (ஏறக்குறைய 1 லட்சம்) நபிமார்களுக்கு இமாமாக நின்று தொழுதார்கள் என்று நீங்கள் நம்புவதாக இருந்தால் அத்தனை பேரும் நின்று தொழுவதற்குரிய இடம் அன்று இருந்தது என்றோ, ஏன் இன்று இருக்கிறது என்றோ நிரூபித்துக் காட்ட முடியுமா? இது ஒன்றே, அப்பயணம் உடலளவில் நடந்தது இல்லை. ஆத்மீகப் பயணம் என்பதைக் காட்டவில்லையா?

15. ஹஸ்ரத் ஈஸா (அலை) அவர்கள் உடலோடு வானத்திற்கு உயர்த்தப்பட்டு மீண்டும் வானத்திலிருந்து அதே உடலுடன் திரும்பி வருவார் என்று திருக்குர்ஆனிலிருந்தும் நபிமொழியி -லிருந்தும் ஏதாவது ஒரு சான்றை உங்களால் தர முடியுமா? இதில் வானம் என்ற சொல்லையும் மீண்டும் வருவார் என்ற சொல்லையும் எடுத்துக் காட்டக் கூடியவர் உலகில் யாரும் உண்டா?

16. ஈஸா நபி வானுக்கு உயர்த்தப்படும் போது நபியாக சென்றார். ஆனால் வரும் போது நபியாக இருக்க மாட்டார் என்றால் நபிப்பட்டம் ஏன் போனது? எங்கே போனது? அவர் நபியாக வரமாட்டார் என்பதற்கு திருக்குர்ஆன், நபிமொழி சான்று உண்டா? நபிமொழியில் (முஸ்லிம் 5629) வரக்கூடிய **ஈஸாவை நபியுல்லாஹ்** என 4 முறை கூறப்பட்டுள்ளதே!

17. ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நான் என் அடியார்களுள் சிலரை வெளிவரச் செய்துள்ளேன். அவருடன் போரிட யாருக்கும் ஆற்றல் கிடையாது. எனவே என் அடியார்களை தூர் (மலைக்கு) அழைத்துச் சென்று பாதுகாத்து வையுங்கள் என்று ஈஸா நபிக்கு வஹீ அறிவிப்பான். (முஸ்லிம் 5629)

வரக்கூடிய **ஈஸா நபிக்கு வஹீ வரும்** என்று இந்த நபிமொழி கூறுகிறது. இதற்கு உங்கள் பதில் என்ன?

18. நபி (ஸல்) அவர்கள், நான் உங்களிடையே (உயிருடன்) இருக்கும் போது அவன் (தஜ்ஜால்) தோன்றினால் அவனிடமிருந்து உங்களைக் காக்க நானே அவனுடன் வாதாடுவேன். நான் உங்களிடையே இல்லாத போது அவன் வெளிப்பட்டால் அப்போது ஒவ்வொரு மனிதரும் தமக்காக வாதாடிக் கொள்ள வேண்டும். அல்லாஹ் ஒவ்வொரு மனிதருக்கும் என் சார்பில் பொறுப்பாளனாக இருப்பான். (முஸ்லிம் 5629)

தஜ்ஜாலுக்கும் நமக்கும் இடையே நடக்கும் போர் சொற்போரா? வாட்போரா?

19. உங்களுள் யார் அவனை (தஜ்ஜாலை) அடைகிறாரோ அவர் அவனுக்கு எதிராக சூரா கஹ்ஃப்பின் (18 வது அத்தியாயம்) ஆரம்ப வசனங்களை ஓதிக் கொள்ளட்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம் 5629) தஜ்ஜாலுக்கும் இவ்வசனங்களுக்கும் இடையேயுள்ள பொருத்தத்தை விளக்கிக் கூற முடியுமா?

20. எனக்குப் பின்னர் முப்பது பொய்யர்கள் தன்னை இறைத்தூதர் என்று வாதிடும் வரை யுக முடிவுநாள் வராது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி 3609, 7121) எனக்குப்பிறகு எந்த நபியும் வர மாட்டார். அப்படி யார் வந்தாலும் அவர் பொய்யர் ஆவார் என்று கூறாமல், எனக்குப் பிறகு 30 பொய்யர்கள் வருவார்கள் என்று கூறியது ஏன்? ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுக்கு முன்னரே 30 பொய்யர்களும் வந்து விட்டதாக இந்த ஹதீஸின் விளக்கவுரை கூறுகிறதே. இதற்குப் பதில் என்ன?



21. தங்கள் நாவுகளை (மூலதனமாகக்) கொண்டு சாப்பிடக் கூடியவர்கள் தோன்றும் வரை யுக முடிவுநாள் ஏற்படாது என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (நபிமொழி அஹ்மது 1511) இதன்படி, ரமலானில் தராவீஹ் தொழுகையில் திருக்குர்ஆனை ஓதி, கையேந்தி காசுவாங்கி சாப்பிடாத மவ்லவியோ, ஐவேளை தொழுகைக்கு கூலி வாங்கி சாப்பிடாத மவ்லவியோ, சொற்பொழிவு மூலம் சாப்பிடாத மவ்லவியோ இல்லை என்று உங்களால் கூற முடியுமா?

22. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஓர் இமாமின் கீழ் இயங்கும் முஸ்லிம் ஜமாஅத்தில் நீங்கள் சேர்ந்து கொள்ளுங்கள். அப்படி ஒரு ஜமாஅத்தும் இல்லை என்றால் அனைத்து பிரிவுகளையும் விட்டு விலகி (காட்டுக்குச் சென்று) தின்பதற்கு மரத்தின் வேரைத் தின்றாவது கடைசிவரை (காட்டிலேயே) வாழுங்கள் (புகாரி: 7084, 3606). நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்.

23. சூரியன் மேற்கில் உதிக்கும் என்ற இந்த நபிமொழி உண்மை தான். என் இறைவன் சூரியனை கிழக்கே உதிக்கச் செய்கிறான். (திருக்குர்ஆன் 2:260) என்று இப்ராஹீம் நபி (அலை) அவர்கள் கூறியதற்கேற்ப அது மேற்கில் உதிக்காது, இது இறைவனின் மாறாத சட்டம் என்பதும் உண்மை. இவ்விரண்டுக்கும் இணக்கமான விளக்கத்தை உங்களால் தர முடியுமா?

24. நம்பிக்கை கொண்டு நற்செயல்களைச் செய்பவர்களுக்கு நீரருவிகள் ஓடும் சொர்க்கம் உண்டு என்று மறுமை சொர்க்கத்தின் இலக்கணத்தைக் குர்ஆன் கூறுகிறது. ஆதம் நபி இம்மையில் வாழ்ந்து நம்பிக்கை கொண்டு நற்செயல் செய்யாமல் மரணத்திற்குப் பிறகு கிடைக்கும் சொர்க்கத்தை எப்படி அடைந்தார்?

25. அஸ்ராவும் மிஃராஜும் வெவ்வேறு காலத்தில் நிகழ்ந்த வெவ்வேறு சம்பவங்கள். இரண்டும் ஒன்று என்றால் திருக்குர்ஆன் நபிமொழி மூலம் இதனை நிரூபித்துக் காட்ட முடியுமா?

26. **சலபூஹு** எனும் சொல் திருக்குர்ஆனில் **சிலுவையில் அறைந்து கொல்லுதல்** எனும் பொருளில் தான் எடுத்தாளப்பட்டுள்ளது. **மா சலபூஹு** என்றால் **சிலுவையில் அறைந்து கொல்லவில்லை** என்று தான் பொருள். அச்சொல்லுக்கு சிலுவையில் அறையப்படவில்லை என்பது தான் பொருள் என்றால், சிலுவையில் அறைந்து கொல்வதற்கு உரிய அரபிச் சொல் எது?

27. திருக்குர்ஆனின் சொல் பாதுகாப்பு பற்றி இரண்டு கருத்து இல்லை. ஆனால் பொருள் பாதுகாப்பு இல்லை என்பதை நாஸிக் மன்சூக் எடுத்துக் காட்டுகிறது. இந்த பொருள் பாதுகாப்புக்கு இறைவன் என்ன ஏற்பாட்டைச் செய்துள்ளான்?

28. நபிமார்கள் காலத்தில் நபியை மறுத்து அவரையும் அவரைப் பின்பற்றுபவர்களையும் வரம்பு கடந்து அநியாயம் செய்கின்ற பகைவர்களை இறைவன் பூமியதிர்ச்சி, வெள்ளப் பெருக்கு, கொள்ளை நோய், புயற்காற்று போன்றவற்றின் மூலம் தண்டித்துள்ளான். இன்று உலகெங்கும் இயற்கை சீற்றங்கள் நாளும் நடக்கிறது. இது இறைவனின் தூதர் மறுக்கப்பட்டு அவரைப் பின்பற்றுபவர்கள் அநியாயத்துக்கு ஆளாக்கப் -படுகின்றனர் என்பதைக் காட்டவில்லையா?

29. தவ்ராத்திலும் இஞ்சீலிலும் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களைப் பற்றிய முன்னறிவிப்பு உள்ளது. ஆனால் இன்றும் யூதர்களும் கிறித்தவர்களும் அந்த முன்னரிவிப்பை மறுத்து, நபி (ஸல்) அவர்களை ஏற்க மறுத்து வருகின்றனர். இதுவும் உண்மை நபிக்கு ஒரு அடையாளம் என்றால், ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களைப் பற்றி திருக்குர்ஆனில்



காணப்படும் முன்னறிவிப்பையும் நீங்கள் மறுத்து, அன்னாரை நம்ப மறுப்பதும் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் உண்மைக்கு அடையாளம் இல்லையா?

30. திருக்குர்ஆன் 19:16 இல் ஈசா நபி பிறந்த நாளிலும், மரணிக்கும் நாளிலும், உயிருடன் எழுப்பப்படும் நாளிலும் அவர் மீது சாந்தி (ஸலாம்) இருக்கும் என்று அல்லாஹ் கூறுகிறான். இதில் பிறப்பு இறப்பு, (மீண்டும்) உயிர்பெற்று எழுப்பப்படும் நாள் என்ற 3 காலகட்டம் தான் கூறப்பட்டுள்ளது. இதில் வேறு எந்த நபிக்கும் இல்லாத – ஈஸா நபிக்கு மட்டும் இருப்பதாக நம்பும் – வானுக்கு உயர்த்தப்பட்டு, அங்கு வாழ்ந்து, மீண்டும் உலகுக்குத் திரும்பும் போதும் சாந்தி இருந்தது என்று கூறப்படாததினால் அவ்வாறு நிகழவில்லை என்பது தெளிவாகவில்லையா?

31. திருக்குர்ஆன் 5:111 இல், அல்லாஹ் ஈஸா நபிக்குச் செய்த அருட்கொடைகளைப் பட்டியல் போட்டுக் காட்டுகிறான். அந்த அருட்கொடைப் பட்டியலில், பிற எந்த நபிக்கும் செய்யாத, ஈஸா நபிக்கு மட்டும் செய்ததாக நம்பும் அருட்கொடையாகிய வானத்திற்கு உயர்த்தப்பட்டு, அங்கு வாழ்ந்து, மீண்டும் உலகுக்கு வரும் செயல் கூறப்படவில்லை. எனவே ஈஸா நபிக்கு அவ்வாறு நிகழவில்லை என்று ஆலிம்கள் நம்பத் தயாரா?

32. ஆபரணங்களை உருக்கி சாமிரியால் செய்யப்பட்ட காளைக் கன்றுக்கு **இரத்தமும் சதையும் இருந்தது** என்று பீ.ஜே கூறுகிறார். இதனை திருக்குர்ஆன், நபிமொழி மூலம் நிரூபித்துக் காட்ட முடியுமா?

33. சாலிஹ் நபியின் ஒட்டகம் பாறையைப் பிளந்து கொண்டு வந்து, வந்தவுடன் குட்டி போட்டது என்று ஆலிம்கள் எல்லாரும் நம்புகின்றனர். இதனைத் திருக்குர்ஆன், நபிமொழி சான்றுகள் மூலம் நிரூபிக்க முடியுமா?

34. திருக்குர்ஆன் சாலிஹ் நபியின் ஒட்டகத்தை **அல்லாஹ்வின் பெண் ஒட்டகம்** என்று கூறுகிறது. எல்லா தர்ஜுமாக்களும்

இவ்வாறு தான் மொழியாக்கம் செய்துள்ளனர். ஆனால் பீ.ஜே மட்டும் அல்லாஹ்வின் ஒட்டகம் என்று எழுதியுள்ளார். அந்த ஒட்டகம் அல்லாஹ்வின் பெண் ஒட்டகமா? அல்லாஹ்வின் ஒட்டகமா?

35. மன்னு சல்வா-வை அல்லாஹ் வானத்திலிருந்து இறக்கினான் என்று பீ.ஜே கலைச்சொல் விளக்கத்தில் எழுதியுள்ளார். வானம் என்ற சொல்லைத் திருக்குர்ஆன், நபிமொழிகளிலிருந்து எடுத்துக் காட்ட முடியுமா?

36. சாமிரி உருவாக்கிய கன்றின் சிலையும் இப்ராஹீம் நபி (அலை) உடைத்த கற்சிலைகளும் பேசாது என்றும், போசாதவற்றை ஏன் கடவுளாக என்று வழிபடுகிறீர்கள் என்றும் கேட்டதாக திருக்குர்ஆன் கூறுகிறது. அன்றும் இன்றும் என்றும் பேசக்கூடியவனே இறைவன் என்பது தான் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையாகும். அப்படிஎனில், அல்லாஹ் அன்று பேசினான். இன்று பேசுவதில்லை என்று ஆலிம்கள் கூறுகின்றனர். அப்படி என்றால், அல்லாஹ்வை, இறைவன் இல்லை என்றும், கற்சிலை என்றும் நம்புவது ஆகாதா?

37. சுலைமான் நபி (அலை) நின்ற நிலையில் இறந்து விட்டார். அவர் கைத்தடியை ஊன்றிக் கொண்டு நின்றதால் கீழே விழாமல் நின்றார். கைத்தடியைக் கரையான் அரித்ததால் கீழே விழுந்து விட்டார் என்ற கட்டுக்கதைக்கு ஆலிம்கள் திருக்குர்ஆன் நபிமொழி ஆதாரம் தர முடியுமா? உயிர் பிரியும் நிலையில் ஒருவர் கைத்தடியை ஊன்றிக் கொண்டு கீழே விழாமல் நிற்க முடியுமா?

38. இப்ராஹீம் நபி (அலை) நோயாளி எனக் கூறியதாக (37:89) அல்லாஹ் கூறுகிறான். ஆனால் அவர் பொய் கூறினார் என பீ.ஜே போன்ற ஆலிம்கள் கூறுகின்றனர். அல்லாஹ் பொய் கூறுகிறான் என்று தானே அதற்குப் பொருள். ஒரு நபி பொய் சொல்வாரா? பொய் சொல்லக் கூடியவர் நபியா?



39. தவ்ராத் வேதத்தைப் போதித்து அதன் வழியில் மக்களை அழைக்க பல நபிமார்கள் வந்ததாக திருக்குர்ஆன் கூறுகிறது. இவ்வாறு ஒரு சிறிய சமுதாயத்துக்கு, சிறிது காலத்துக்கு மட்டும் வந்த வேதத்தைப் போதிக்க பல நபிமார்கள் வந்துள்ளனர் என்றால் முழு உலகுக்கும் கியாமத் நாள் வரை உள்ள வேதமாகிய திருக்குர்ஆனைப் போதிக்க நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு எந்த நபியும் வரமாட்டார் என்பது முரண்பாடாகத் தெரியவில்லையா?

40. திருமணத்தின் போது, யூசுப் நபி (அலை) அவர்களும் சுலைகாவும் போல் வாழுங்கள் என்று ஆலிம்கள் மணமக்களை வாழ்த்தி துவா செய்கின்றனர். அப்படி என்றால் சுலைகா ஒருவருடைய மனைவியாக இருந்த போது யூசுப் நபியை அழைத்தது போல் உங்கள் வாழ்க்கையும் அமையட்டும் என்று ஆலிம்கள் வாழ்த்துகிறார்களா?

41. சுலைமான் நபி (அலை) அவர்களும் பல்கீசும் போல் வாழுங்கள் என்று இந்த ஆலிம்கள் மணமக்களை வாழ்த்துகிறார்கள். சுலைமான் நபியின் மனைவி தான் பல்கீஸ் என்ற அரசி என்பதற்கு திருக்குர்ஆன், நபிமொழி சான்று உள்ளதா?

42. அய்யூப் நபி (அலை) அவர்களும் அவரது மனைவியும் போல் வாழுங்கள் என்று ஆலிம்கள் மணமக்களை வாழ்த்துகிறார்கள். அய்யூப் நபியை ஷைத்தான் தீண்டி அவர் பெரும் நோய்க்கு ஆளாகி, அவரை விட்டு உறவினர்களும், மனைவி மக்களும் பிரிந்து சென்று விட்டனர் என்று இந்த ஆலிம்கள் தான் கூறுகின்றனர். இவ்வாறு மணமக்கள் வாழ வேண்டும் என்று தான் ஆலிம்கள் ஆசைப்படுகிறார்களா?

43. பொதுவாக சாதாரண காலங்களிலும், சிறப்பாக நோன்புக் காலங்களிலும் ஏழை எளியவர்களும் பிச்சைக்காரர்களும் ஊர் ஊராகச் சென்று, வீடுவீடாகச் சென்று கையேந்திப் பிச்சை எடுக்கிறார்கள். முஸ்லிம் அமைப்புகளோ, உங்கள்

ஸக்காத்துகளை எங்களுக்கு அனுப்புங்கள் என்று போட்டி போட்டுக் கொண்டு டீ.வி, பத்திரிக்கை விளம்பரம் செய்து, லட்சங்களை வசூல் வேட்டை ஆடுகிறார்கள். இது போக ஊர்கள் தோறும் பைத்துல் மால் அமைப்புகள் வேறு. இவர்களுள் யாரிடமாவது முஸ்லிம்கள் பிச்சை எடுக்காமல் செய்யும் திட்டம் உள்ளதா? ஏழை எளிய மக்களுக்கு வாழ்வளிக்கும் திட்டமாவது உள்ளதா? கலீஃபாக்கள் காலத்திற்குப் பின்னர் உலகந்தழுவிய பைத்துல் மால் அமைப்பு அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தைத் தவிர முஸ்லிம்களின் 72 பிரிவுகளுள் யாரிடமாவது உள்ளதா?

44. அல்லாஹ்வின் பள்ளியில் அவனைத் தொழ வருபவர்களை தடை செய்து அதனை பாழாக்குபவனை விட பெரிய அக்கிரமக்காரன் யார் என்று (2:115) அல்லாஹ் கேட்கிறான். ஆனால் நீங்களோ இந்த பள்ளியில் அஹ்மதிகள் நுழையக்கூடாது; தொழக்கூடாது. இது சரீஅத் பேரவையின் தீர்மானம் என்று எழுதி அதனை கயிற்றில் கட்டித் தொங்க விட்டுள்ளீர்களே! இச்செயல் அல்லாஹ்வின் பார்வையில் உங்களை அநியாயக்காரனாகக் காட்டவில்லையா?

45. திருக்குர்ஆன் 24:56 இல், அல்லாஹ் உங்களுள் நம்பிக்கை கொண்டு நற்செயல் ஆற்றுபவர்களுக்கு அவர்களின் முன்னோர்களை கலீஃபாவாக ஆக்கியதைப் போன்று இப்பூமியில் கலீஃபாக்களாக ஆக்குவதாக வாக்குறுதி அளித்துள்ளான்.

அல்லாஹ்வின் இந்த வாக்குறுதியின்படி உங்களுள் 72 பிரிவினிடத்தில் கிலாஃபத் இல்லையே? ஏன்? 1. அல்லாஹ்வின் வாக்குறுதி பொய்த்து விட்டது என்று (நவூதுபில்லாஹ்) ஏற்க வேண்டும் அல்லது 72 பிரிவுகளிடமும் நம்பிக்கையும் நற்செயலும் இல்லை என்பதை ஏற்க வேண்டும்? ஆலிம்கள் இவ்விரண்டில் எதனை ஏற்கப் போகிறார்கள்?

46. நீங்கள் அல்லாஹ்வுக்கு உவமை கூறாதீர்கள் (திருக்குர்ஆன் 16:75) என்று அல்லாஹ் கூறுகிறான். எனவே அல்லாஹ்வை



நீதிபதி என்றும் அவ்லியாக்களை வக்கீல்கள் என்றும் உவமைப் -படுத்தக்கூடாது என்று பீ.ஜே எழுதியுள்ளார். இது சரியா?

அல்லாஹ்வுக்கு மட்டுமே படைக்கும் ஆற்றல் உள்ளது. அல்லாஹ்வுக்கு மட்டுமே உயிர் கொடுக்கும் ஆற்றல் உள்ளது. வேறு எவருக்கும் அந்த ஆற்றல்கள் இல்லை. எனவே அல்லாஹ்வுக்கு இருப்பது போல ஈஸா நபிக்கும் அந்த ஆற்றல்கள் இருக்கிறது என்று நம்புவது தான் அல்லாஹ்வுக்கு ஈஸா நபியை உவமை கூறுவதாகும். அதாவது ஷிர்க் ஆகும். இதிலிருந்து ஈஸா நபி அல்லாஹ் படைத்தது போன்றோ, இறந்தவர்க்கு உயிர் கொடுப்பது போன்றோ படைக்கவில்லை. உயிர் கொடுக்கவில்லை என்றும் தெரியவில்லையா?

47. ஈஸா (அலை) என்ற இறைத்தூதரின் பிறப்பு அதிசயமான பிறப்பு... தந்தையின்றி இறைவனின் தனிப்பெரும் ஆற்றலால் அவர்கள் படைக்கப்பட்டார்கள். இதைத் திருக்குர்ஆனும் பல இடங்களில் குறிப்பிட்டுக் காட்டுகிறது (3:48; 19:20) என்று பீ.ஜே திருமறையின் தோற்றுவாய் எனும் நூலில் ஈஸா (அலை) எனும் தலைப்பில் எழுதியுள்ளார். திருக்குர்ஆனிலும் நபிமொழிகளிலும் அதிசயமான பிறப்பு, இறைவனின் தனிப்பெரும் ஆற்றலால் படைக்கப்பட்டார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறதை பீ.ஜே எடுத்துக் காட்ட முடியுமா? இது அல்லாஹ்வின் பெயரில் இட்டுக்கட்டிக் கூறிய குற்றமாகாதா?

48. அல்லாஹ்வையன்றி நீங்கள் பிரார்த்திக்கும் உங்கள் தெய்வங்களை நீங்கள் கவனித்தீர்களா? அவர்கள் பூமியில் எதைப் படைத்திருக்கின்றனர் என்பதை எனக்குக் காட்டுங்கள் என்று அல்லாஹ் (35:40) கேட்கிறான்!

பீ.ஜே போன்ற ஆலிம்கள் ஈஸா நபி படைத்த பறவைகளைக் கொண்டு சென்று அல்லாஹ்விடம் காட்டுவார்களா? ஈஸா நபி படைத்த பறவை வவ்வால் என்று நம்புகிறீர்களே! வவ்வால் ஒரு பறவை என்று நிரூபித்துக் காட்ட முடியுமா?

49. உங்களுக்கு உயிர் கொடுக்கக்கூடிய ஒரு காரியத்திற்காக இந்தத் தூதர் அழைக்கும் போது இத்தூதருக்கும் அல்லாஹ்வுக்கும் பதிலளியுங்கள் என்று 8:24 வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்.

இப்ராஹீம் நபி (அலை) அவர்களுடன் வாதிட்டவன் நானும் இறந்தவர்க்கு உயிர் அளிப்பேன் என்று கூறியதாக 2:260 வசனம் கூறுகிறது. தஜ்ஜால்ஒரு தடவை இறந்தவரை அவன் உயிர்ப்பிப்பான் என்று முஸ்லிம் ஹதீஸில் காணப்படுகிறது.

ஈஸா நபி (அலை) அவர்களும் இறந்தவர்களுக்கு உயிர் கொடுப்பார் என்று திருக்குர்ஆன் கூறுகிறதே. அப்படி என்றால், உயிர் கொடுத்தல் எனும் ஆற்றல் அல்லாஹ்வுக்கு இருப்பது போலவே, நபி (ஸல்) அவர்களுக்கும், ஈஸா நபிக்கும், தஜ்ஜாலுக்கும், இப்ராஹீம் நபியுடன் வாதிட்டவனுக்கும் இருக்கிறது என்று கூறி இவர்களும் அல்லாஹ்வைப் போன்றவர்களே (நவூதுபில்லாஹ்) என்று நம்பப்போகிறீர்களா? அல்லது உயிர் கொடுத்தல் எனும் சொல் அல்லாஹ்வுக்கு வரும் போது எப்படிப் பொருள்படுமோ, அது போன்று மற்றவர்களுக்கு வரும்போது பொருள்படாது என்று கூறப்போகிறீர்களா?

50. முழுக்க முழுக்க இறைத்தன்மை பெற்றவர்களாக மற்றவர்களை எண்ணுவது மாத்திரம் இணைவைத்தல் அன்று; மாறாக, இறைவனது தன்மைகளில் ஏதேனும் ஒரு தன்மை இறைவனுக்கு இருப்பது போலவே, மற்றவர்களுக்கும் இருப்பதாக எண்ணுவதும் இணை வைத்தல் ஆகும். இதைப் புரிந்து கொள்ளாததாலேயே இறைவன் அல்லாதவர்களைப் பிரார்த்திக்கத் துணிகின்றனர். இது பீ.ஜே ஷிர்க்குக்குத் தரும் இலக்கணம் ஆகும். இதன் அடிப்படையில்,

ஈஸா நபி இறைவனைப் போலவே பறவையைப் படைத்தார் என்றும் இறைவனைப் போலவே இறந்தவர்களுக்கு உயிர் கொடுத்தார் என்றும் நம்பி, அல்லாஹ்வுக்கு இணை வைத்து விட்டார் என்று ஆகாதா?



51. ஒரு சொல்லை அல்லாஹ்வுக்கு பயன்படுத்தும் போது அவனது தகுதிக்கும் அந்தஸ்தக்கும் ஏற்றவாறு பொருளைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

அல்லாஹ்வைத் தவிர மற்றவர்களுக்கு அந்த வார்த்தையைப் பயன்படுத்தும் போது இறைவனின் அந்தஸ்தைக் குறைத்துவிடக் கூடாது என்பதற்காக அவர்களுக்கு ஏற்றவாறு பொருளை எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற சாதாரண உண்மையைக் கூட இவர்கள் உணர்வதில்லை. பீ.ஜே திருமறையின் தோற்றுவாயில் தரும் கருத்தின் சுருக்கம்.

படைத்தல், உயிர் கொடுத்தல் எனும் சொற்களுக்கு அல்லாஹ்வுக்குக் கொடுத்த பொருளையே ஈஸா நபிக்கும் கொடுத்து, அல்லாஹ்வின் தகுதியைக் குறைத்துள்ளாரே பீ.ஜே. இந்த சாதாரண உண்மையைக் கூட தெரியாத இவர்கள் தவ்ஹீத் வாதிகளா?

52. நபிமொழி புகாரியில் (1242, 3670,4484) அபூபக்ர் (ரலி) அவர்கள் நபித்தோழர்களைப் பார்த்து, யார் அல்லாஹ்வை வணங்கி வந்தார்களோ அவர்கள் தெரிந்து கொள்ளட்டும். அவன் உயிருடன் இருக்கிறான். யார் முஹம்மதை வணங்கி வந்தார்களோ அவர்கள் தெரிந்து கொள்ளுங்கள். அவர் இறந்து விட்டார் என்று கூறினார்கள். மரணித்து விட்ட நபி (ஸல்) அவர்களை உயிருடன் இருக்கிறார் என்று கூறியதையே அன்னாரை வணங்கியதாக அபூபக்ர் (ரலி) கூறினார்கள் என்றால், கடந்த 2000 ஆண்டுகளுக்கு முன்னர் இறந்து விட்ட ஈஸா நபியை இன்னும் உயிருடன் இருக்கிறார் என்று நம்பும் நீங்கள் ஈஸா நபியை வணங்குவது ஆகாதா?

53. மேலே கூறியுள்ள நபிமொழிகளில் நபி (ஸல்) அவர்கள் மரணித்து விட்டார்கள் என்று நபித்தோழர்களுள் ஒரு பிரிவினரும் அவர்கள் மரணிக்கவில்லை என்று மற்றொரு பிரிவும் கூறிய போது, ஹஸ்ரத் அபூபக்ர் (ரலி) அவர்கள் நபி

(ஸல்) அவர்கள் மரணித்து விட்டார்கள் என்பதற்கு ஆதாரமாக திருக்குர்ஆனின் 3:145 வசனத்தை ஓதிக்காட்டினார்கள்.

முஹம்மது ஒரு தூதரேயன்றி வேறில்லை. அவர்க்கு முன்னர் வந்த தூதர்கள் சென்று விட்டார்கள். இவ்வசனத்தில் முஹம்மது ஒரு தூதர் என்று மட்டுமே கூறப்பட்டுள்ளது. அவர்க்கு முன்னர் வந்த தூதர்கள் இறந்து விட்டார்கள் என்று தான் கூறப்பட்டுள்ளதே தவிர முஹம்மது நபி இறந்து விட்டார் என்று கூறப்படவில்லை. ஆனால் இந்த வசனத்தைக் கேட்டதும் மரணிக்கவில்லை என்று வாதித்த பிரிவினரும் முஹம்மது (ஸல்) அவர்கள் மரணித்து விட்டார்கள் என்று ஏற்றுக் கொண்டனர். இதே போல் திருக்குர்ஆன் 5:75 வசனத்திலும் மஸீஹ் ஈஸப்னு மர்யம் ஒரு தூதரேயன்றி வேறில்லை. அவர்க்கு முன்னர் வந்த தூதர்கள் சென்று விட்டனர் என்று கூறுகிறது. 3:145 வசனத்தின் தீர்ப்பைப் போல் 5:75 வசனத்துக்கும் நாம் தீர்ப்பு வழங்கினால், ஈஸா நபி (அலை) மரணித்து விட்டார்கள் என்பது தெளிவாகும். (இன்னாலில்லாஹி...) எனவே ஈஸா நபி உயிரோடிருக்கிறார் என்று நம்புவது அன்னாரை வணங்குவது ஆகாதா?

54. திருக்குர்ஆன் 11:35, 34:50, 40:28, 69:44-47 ஆகிய வசனங்களைக் காண்க.

40:28 இல், என் இறைவன் அல்லாஹ்வே என்று கூறும் ஒரு மனிதரைக் கொல்லப் போகிறீர்களா? உங்கள் இறைவனிடம் இருந்து தெளிவான சான்றுகளை அவர் உங்களிடம் கொண்டு வந்துள்ளார். அவர் பொய்யராக இருந்தால் அவரது பொய் அவரையே சேரும். அவர் உண்மையாளராக இருந்தால் அவர் உங்களுக்கு எச்சரிப்பதில் ஏதேனும் உங்களுக்கு ஏற்படும் என்று கூறுகிறது.

ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் பொய்யராக இருந்தால் (நவூதுவில்லாஹ்) அவரது பொய் அவரையே சேரும். ஆனால் அவர் உண்மையாளராக



இருந்தால், அவர் உங்களை எச்சரித்ததில் ஏதேனும் உங்களுக்கு ஏற்படும். முழு உலகிலும் முஸ்லிம் உலகுக்கு இழிவும் அழிவும் ஏன் ஏற்படுகிறது? நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?

55. திருக்குர்ஆன் 38:31-32 வசனத்தில், போர்க்குதிரைகளின் தோற்றத்தில் மயங்கி, சுலைமான் நபி (அலை) அவர்கள் இறைவனை நினைக்க மறந்து விட்டார் என்று ஆலிம்கள் நம்புகின்றனர். ஒரு நபி இறைவனை நினைக்க மறப்பாரா? ஒரு நபிக்கு தொழுகையில் மறதி ஏற்படலாம்; தொழுவதை மறக்க மாட்டார். ஆலிம்கள் தங்களை வைத்து ஒரு நபியை அளவிடலாமா?

56. சுலைமான் நபி (அலை) அவர்கள், ஜின்னை ஏவி பக்கத்து நாட்டு அரசியின் அரியணையைத் தூக்கிவரச் செய்தாராம்! (நவூதுபில்லாஹ்) ஒரு நல்ல மனிதன், பக்கத்து வீட்டிலுள்ள விலை மிக்க பொருளை வீட்டுக் காரருக்குத் தெரியாமல் தூக்கி வரச் செய்வானா? அப்படி என்றால் ஒரு நபி செய்தார் என்று நம்புவதற்கு ஈமான் என்றா பெயர்? (திருக்குர்ஆன் 27:39)

57. திருக்குர்ஆன் 27:17-20 வசனங்களில் சுலைமான் நபி (அலை) பற்றியும் எறும்பு சம்பவமும் கூறப்பட்டுள்ளது.

1. சுலைமான நபிக்கு பறவை மொழி தெரியுமே தவிர எறும்பு மொழி எப்படித் தெரியும்?
2. எறும்புகளுக்கு சுலைமான் நபி (அலை) அவர்கள் படையுடன் வருகிறார் என்று எப்படித் தெரிந்தது?
3. காலாட்படையும் குதிரைப்படையும், தேர்ப்படையும், உணவுப் பொருள் வண்டிகளும் எழுப்பும் பேரிரைச்சலில் எறும்பு பேசியது சுலைமான் நபிக்கு எப்படி கேட்டது? எறும்புக்கு காது கேட்காது; கண் தெரியாது என்பது அறிவியல் கூறும் உண்மை (ஆதாரம்: தினத்தந்தி, இளைஞர் மலர் 18.09.2010). நீங்கள் சிந்திக்க மாட்டீர்களா?

58. திருக்குர்ஆன் 5:32 வசனத்தில் ஆதம் நபியின் இரு பிள்ளைகள் சம்பவம் கூறப்படுகிறது. ஒரு சகோதரன் மற்றொரு சகோதரனைக் கொன்று விடுகிறான். அவனது உடலை எவ்வாறு மறைப்பது என்று காட்ட அல்லாஹ் ஒரு காகத்தை அனுப்பினான். அது, பூமியைத் தோண்டிக் காட்டியது என்று வருகிறது.

ஆதம் நபியின் காலத்து சம்பவத்தை 1400 ஆண்டுக்கு முன்னர் வந்த வேதத்தில் அல்லாஹ் இந்த முஸ்லிம் உம்மத்துக்கு சொல்லிக் காட்ட வேண்டிய தேவை என்ன வந்தது?

தேலையில்லாத ஒரு வி-யத்தை அல்லாஹ் சொல்லிக் காட்டியுள்ளானா? (நவூதுபில்லாஹ்) பிணத்தைப் பூமியில் புதைக்க வேண்டும் என்றும், புதைத்த பிணத்தை தோண்டி எடுக்கக் கூடாது என்பதை பெயர் தாங்கி முஸ்லிம் கூட்டத்துக்கு கற்றுக் கொடுக்க நாடினானா?

59. திருக்குர்ஆன் 21:88-89 வசனத்தில் யூனுஸ் நபி (அலை) இறைவனிடம் கோபித்துக் கொண்டு சென்றார் என்று பீ.ஜே எழுதியுள்ளார். அந்த வசனத்தில் யூனுஸ் நபி இறைவனிடம் கோபித்துக் கொண்டு சென்றார் என்று வருகிறதா? அல்லாஹ் சொல்லாத ஒன்றை நபி செய்யாத ஒன்றை பீ.ஜே செய்ததாகக் கூட எழுதுவது ஏன்? (ஆதாரம்: கலைச்சொல் யூனுஸ் நபி என்னும் தலைப்பில்)

60. திருக்குர்ஆன் 13:24 வசனத்தில் வானவர்கள் சொர்க்கவாசிகளுக்கு சலாமும் நற்செய்தியும் கூறுவார்கள் என்று தான் வருகிறது. வானவர்கள் சொர்க்கவாசிகளுக்குப் பணிவிடை செய்வார்கள் என்று எழுதியிருப்பது சரியா? (15:46, 21:103, 41:31 காண்க)

61. சித்ரத்துல் முன்தஹா - ஆறாவது வானத்தில் உள்ளது என்று பீ.ஜே எழுதியுள்ளார். இதனை நபிமொழியைக் கொண்டு பீ.ஜே நிரூபிக்கத் தயாரா?



62. தொழுகையில், இப்ராஹீம் நபி (அலை) அவர்களுக்கு அருள்புரிந்தது போல் தமக்கும் அருளை வேண்டுமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கற்றுத் தந்தார்கள். அந்த அருள்களுள் முதலாவது அருள், இபுறாஹீம் நபியும் அவரது குடும்பத்தில், இஸ்மாயீல், இஸ்ஹாக், யாக்கூபு, யூசுப் ஆகியோரும் நபிமார்களாகத் தோன்றினர். இதுபோல், நபி (ஸல்) அவர்களின் ஆத்மீகக் குடும்பத்திலும் அன்னாரைப் பின்பற்றி சரீஅத்து வழியில் உம்மத்தி நபி வர வேண்டும் என்று துஆ செய்ய வேண்டும் என்பது தானே அந்தத் துஆ? எனவே, நபி (ஸல்) அவர்களும் அவர்களது உம்மத்தும் செய்த துஆ ஏற்கப்பட்டதா? மறுக்கப்பட்டதா?

63. திருக்குர்ஆன் 43:78 வசனத்தில் வரும் மாலிக் என்பது ஒரு வானவரின் பெயர் என்று பீ.ஜே எழுதியுள்ளார். நரகவாசிகள் நரகின் மலக்கை, யா மாலிக் என்று அழைப்பதனால், அது அவர் பெயராகி விடுமா? யூசுப் நபியை, அவரது சகோதர்கள் யா அஸீஸ் என்று அழைத்ததினால் யூசுப் நபியின் பெயர் அஸீஸ் என்று பீ.ஜே கூறுவாரா? (12:79)

64. திருக்குர்ஆன் விளக்க அட்டவனை எண் 299 இல், திருமணம் செய்தவர்கள் விபச்சாரம் செய்தால் மரண தண்டனையும் திருமணம் செய்யாதவர்கள் விபச்சாரம் செய்தால் அவர்களுக்கு 100 சவுக்கடி தண்டனையும் வழங்கப்பட வேண்டும் என்றும் பீ.ஜே எழுதியுள்ளார்.

நபிமொழிகளில் கல்லெறிந்து கொல்லுதல் என்றுதான் கூறப்பட்டுள்ளது. அதனை மரண தண்டனை என்று மாற்றிக் கூறுவது சரியா?

திருக்குர்ஆன் விபச்சாரம் செய்தவர்கள் என்று எல்லாரையும் உள்ளடக்கி 100 சவுக்கடி தண்டனை என்று கூறிய பிறகு கல்லெறி தண்டனை தேவையா?

65. திருக்குர்ஆனின் 3 : 62 வசனம், யூதர்களை முபாஹலாவுக்கு அழைக்கச் சொல்லி அல்லாஹ் கட்டளையிடும் வசனம் என்று P.J திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 449-இல் எழுதியுள்ளார். இது தவறாகும். அவ்வாறு அழைக்கப்பட்டவர்கள் யூதர்கள் என்று P.J, திருக்குர்ஆன், நபிமொழி, வரலாறு ஆகியவற்றின் மூலம் நிரூபிக்க முடியுமா?

**மேலே கூறப்பட்ட வினாக்கள் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தே உண்மை இஸ்லாம் என்பதை எடுத்துக் காட்டும் சான்றுகள் ஆகும்.**

## 15. திருக்குர்ஆனின் பொருள் பாதுகாப்பு

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 143 இல் பாதுகாக்கப்படும் திருக்குர்ஆன் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*23 வருடங்களில் சிறிது சிறிதாக அருளப்பட்ட திருக்குர்ஆன் 14 நூற்றாண்டுகள் கடந்து விட்ட பிறகும் இன்றளவும் பாதுகாக்கப்பட்டு வருகிறது. எவ்வித மாறுதலுக்கும் இடந்தராமல் அருளப்பட்ட மூல மொழியிலேயே இவ்வேதம் பாதுகாக்கப்பட்டு வருகிறது.*

*திருக்குர்ஆன் 15:9 வது வசனத்தில் இதை நாமே அருளினோம், நாமே இதை பாதுகாப்போம் என்ற உத்திரவாதம் அளிக்கிறது. திருக்குர்ஆனுக்குப் பிறகு உருவாக்கப்பட்ட எத்தனையோ நூல்கள் இருந்த இடம் தெரியாமல் அழிந்து போன நிலையில் திருக்குர்ஆன் அருளப்பட்ட வடிவத்திலேயே பாதுகாக்கப்பட்டு வருவது இறைவனின் வேதம் என்பதற்குச் சான்றாக உள்ளது.*

**நம் விளக்கம்:**

ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்கு திருக்குர்ஆன் ஒலி வடிவத்தில் அருளப்பட்டு அது திருக்குர்ஆன் எழுத்தாளர்களால்



வரிவடிவத்தில் ஆக்கப்பட்டது. அன்று திருக்குர்ஆன் எந்த வடிவத்தில் இருந்ததோ அதே வரிவடிவம் மாறாமல் அப்படியே பாதுகாக்கப்பட்டு காணப்படுகிறது. திருக்குர்ஆனின் முதற் பிரதியும் இன்றுள்ள திருக்குர்ஆனின் பிரதிகளையும் ஒப்பிட்டுப் பார்த்தால் அதில் எந்தப்பாட பேதமும் இல்லை என்று சொல்லும் அளவுக்கு பாதுகாக்கப்பட்டுள்ளது.

செய்யித் குதுப் சஹீது - அவர்களின் திருக்குர்ஆனின் நிழலில் பக்கம் 500-501 இல், இமாம் அஹ்மது (ரஹ்) அவர்களுக்கு அப்துர் ரஸ்ஸாக் என்பவரும் அவருக்கு முஅம்மர் பின் ஜுஹ்ரீ என்பவரும் அவருக்கு உர்வா என்பவரும் அவருக்கு ஆயிசா அவர்களும் அறிவித்ததாக இதே வரலாற்றை இமாம் அஹ்மது அவர்களும் தமது நூலில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

அண்ணலார் சொன்னார்கள்; **நான் தூங்கிக் கொண்டிருந்த போது பட்டுத் துணி விரிக்கப்பட்ட ஒரு தட்டைக் கொண்டு வந்தார்கள். அதில் ஒரு புத்தகம் இருந்தது.** அவர் என்னை நோக்கி ஓதுவீராக! என்றார். நான் ஓதியதே இல்லையே என்றேன். உடனே அவர், நான் இறந்து விடுவேன் என்று கருதும் அளவுக்கு என்னைக் கட்டியணைத்தார். பிறகு என்னை விடுவித்து விட்டு மீண்டும் ஓதுவீராக என்றார். நான் எதை ஓதுவேன் எனக் கேட்டேன். முதலில் என்னை இறுக்கி அணைத்தது போல் மீண்டும் செய்து விடக் கூடாது என்பதற்காகவே நான் இம்முறை அவ்வாறு கேட்டேன். அப்போது 96 வது அதிகாரத்தின் 5 வசனங்களையும் ஓதினார். நானும் அவற்றை ஓதினேன். அத்துடன் முடித்துக் கொண்டு அவர் என்னை விட்டுப் போய் விட்டார். நானும் எனது **தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டேன்.**

இவ்வாறு துவங்கிய முதல் வஹி கனவில் காட்டப்பட்ட புத்தகமாக எழுத்து வடிவில் முழுமை பெற்றது. **ஆனால் அன்று முதல் இன்று வரை உலகத்தில் ஆயிரக்கணக்கில் தர்ஜுமாக்களும் தப்ஸீர்களும் வெளிவந்த வண்ணம் உள்ளன.**

தமிழ் மொழியில் மட்டும் ஏறக்குறைய 14 தர்ஜுமாக்களும் தப்ஸீர்களும் வெளிவந்துள்ளன. வரிவடிவம் ஒன்று என்றால் மொழியாக்கம் பற்பல வந்துள்ளனவே ஏன்? **சொல் பாதுகாக்கப் –பட்டுள்ளது. ஆனால் பொருள் பாதுகாப்புக்கு அல்லாஹ் என்ன ஏற்பாட்டை செய்துள்ளான் ?**

திருக்குர்ஆனில் நாஸிக் மன்சூக் – ரத்து செய்யப்பட்ட வசனங்களும் ரத்து செய்த வசனங்களும் உள்ளன என்ற கருத்தும், அவ்வாறு ஒரு வசனமும் கூட இல்லை என்ற கருத்தும் காணப்படுகிறது. நாசிக் மன்சூக் வாதிகள் அத்தகு வசனங்கள் 5 முதல் 500 வரை உள்ளன என்று கூறுகிறார்கள். இது திருக்குர்ஆனில் பொருள் பாதுகாப்பு இல்லை என்பதை வெட்ட வெளிச்சமாக்க வில்லையா? ஒவ்வொருவரும் தத்தம் மொழியாக்கமே சரி என்று வாதிடுகின்றனர். பிறருடைய மொழியாக்கத்தில் இன்ன இன்ன தவறுகள் உள்ளன என்று கூறுகிறார்கள். திருக்குர்ஆன் அல்லாஹ்வுடைய வேதம் என்றால் **அதனுடைய சொல் பாதுகாக்கப்பட்டது போல் அதனுடைய பொருளுக்கும் பாதுகாப்பை அல்லாஹ் செய்துள்ளானா? இல்லையா?**

1) திருக்குர்ஆனின் 3:23 வது வசனத்துக்கு, பீ.ஜே வேதம் எனும் பாக்கியம் வழங்கப்பட்டோர் என மொழியாக்கம் செய்துள்ளார். ஏனைய 10 மொழியாக்கங்களில், வேதத்தின் ஒரு பகுதி கொடுக்கப்பட்டோர் என மொழியாக்கம் காணப்படுகிறது. இவற்றுள் எது சரி? எது தவறு?

2) திருக்குர்ஆனின் 10:87 வசனத்துக்கு, பீ.ஜே யும், அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தும் உங்கள் வீடுகளை ஒன்றையொன்று எதிர் நோக்கும் வகையில் அமைத்துக் கொள்ளுங்கள்; தொழுது வாருங்கள் என தமிழாக்கம் செய்துள்ளனர். ஆனால் பிறர் எல்லாரும், உங்கள் வீடுகளையே பள்ளிகளாக்கி, தவறாது தொழுது வாருங்கள் என்று தமிழாக்கம் செய்துள்ளனர். வீடும், பள்ளியும் ஒன்று என்பதா? இரண்டு என்பதா?



3) திருக்குர்ஆன் 3:200 வசனத்தில் வரும் ராபித்தூ எனும் சொல்லுக்கு, தமிழ் மொழியாக்கத்தில்,

அ) பலப்படுத்திக் கொள்ளுங்கள். (சிராஜுத்தீன், அப்துல் வஹ்ஹாப், ஜான் டிரஸ்ட்)

ஆ)(எதிரியை எதிர்க்க) எந்நேரமும் சித்தமாக, ஆயத்தமாக. தயாராக இருங்கள் எனவும் (பாகவி, பாக்கியத்துஸ் ஸாலிஹாத், அன்வாருல் குர்ஆன்)

இ) உறுதியாக நில்லுங்கள். (பீ.ஜே.)

ஈ) (கோட்டைகளில் குதிரைகளை) கட்டுங்கள். (துப்ஸீருல் ஹமீதி)

உ) (எதிரியிடம்) விழிப்போடு இருங்கள். (இப்னு கஸீர்)

ஊ)எப்போதும் ஒருங்கிணைந்து முனைப்புடன் இருப்பீர்களாக! (மவ்தூதி)

எ) எல்லைகளைக் கண்காணித்துக் கொள்ளுங்கள். (அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்)

இவ்வாறு 7 விதமாக 11 மொழிபெயர்ப்புகளில் பொருள் காணப்படுகிறது. இவற்றுள், எல்லாமே சரி என்பதா? எல்லாமே தவறு என்பதா? ஏதோ ஒன்று தான் சரி என்பதா? ஏதாவது ஒன்று எனின் அது எது?

4) 68:16 வது வசனத்தில், விரைவில் நாம் அவனது மூக்கில் அடையாளம் இடுவோம் என்று கூறப்பட்டுள்ளது. இதில் மவ்தூதி மூக்கை – தும்பிக்கை என்றும் அன்வாருல் குர்ஆன் – துதிக்கை என்றும் ஏனையோர் மூக்கு என்றும் மொழியாக்கம் செய்துள்ளனர். எது சரி? எது தவறு?

5) திருக்குர்ஆன் 27:20 வது வசனத்தில் ஹூத் ஹூத் – என்பதை பறவை என்று பலர் கூற, மவ்தூதி மரங்கொத்தி என்று கூறுகிறார். எது சரி? எது தவறு?

6) திருக்குர்ஆனின் 2 வது அத்தியாயத்தின் பெயர், பீ.ஜே காளை என்கிறார். ஏனையோர் எல்லோரும் பசு என்று மொழியாக்கம் செய்துள்ளனர். எது சரி? எது தவறு?

அல்லாஹ் இதனை நானே இறக்கினேன், நானே பாதுகாப்பேன் என்று கூறவில்லை. மாறாக, **நாமே இறக்கினோம் நாமே பாதுகாப்போம் என்று கூறியுள்ளான்.** (15:10) எனவே அல்லாஹ் தன் வேதமாகிய திருக்குர்ஆனின் பொருட் பாதுகாப்புக்கும் ஒரு ஏற்பாட்டை செய்துள்ளான். அது தான், வேதத்தை உண்மைப்படுத்தும் தூதரை அனுப்புவதாகும். அல்லாஹ் திருக்குர்ஆனில் 3:82 வசனத்தில், எல்லா நபிமார்களிடத்தும் ஓர் உறுதிமொழி வாங்கியுள்ளான். அவர்களிடம் வேதமும் ஞானமும் வந்த பின்னர் அதை உண்மைப்படுத்தும் ஒரு தூதர் அவர்களிடம் வந்தால் அவர்கள் அவரை ஏற்றுக் கொண்டு அவருக்கு உதவி செய்ய வேண்டும் என்பதாகும்.

இந்த உறுதிமொழியை திருக்குர்ஆனில் 33:8 வசனத்தின் மூலம் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களிடமும் வாங்கியுள்ளதாகக் கூறுகின்றான். எனவே ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்கு வழங்கப்பட்ட வேதத்தினை உண்மைப்படுத்துவதற்கு ஒரு தூதர் வருவார். அவரை இஸ்லாமிய உலகு ஏற்றுக் கொண்டு அவருக்கு உதவி செய்ய வேண்டும் என்று நாம் விளங்கிக் கொள்கிறோம். அந்த மெய்ப்பிக்கும் தூதர் யார் என்று அல்லாஹ் திருக்குர்ஆன் 61:7 வது வசனத்தில் ஹஸ்ரத் ஈஸா நபி மூலம் கூறுகிறான். அவர் ஈஸா நபியின் மரணத்திற்குப் பிறகு **திருக்குர்ஆனை மெய்ப்பிக்கும் தூதராக அஹ்மத் எனும் பெயரில் வருவார்** என்று அல்லாஹ் கூறுகிறான்.

எனவே ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்கள் மூலம் திருக்குர்ஆனின் பொருளும் பாதுகாக்கப்படும் என்று விளங்குகிறது. சொல் பாதுகாக்கப்பட்டதைப் போல் பொருள் பாதுகாப்பும் அமைந்தால் தான் பாதுகாப்பு முழுமை பெறும். திருக்குர்ஆன் பாதுகாக்கப்பட்டதாகவும் கூற முடியும். இது அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் மூலம் நிறைவேறிவிட்டது. அது மட்டுமின்றி அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் உலகந்தழுவிய ஒரு



தலைமையின் கீழ், உலகின் 70 -க்கும் மேற்பட்ட மொழிகளில் திருக்குர்ஆனை வெளியிட்டுள்ளது. 100 மொழிகளில் திருக்குர்ஆனைப் பற்றியும் நபிமொழிகளைப் பற்றியும் முக்கிய தலைப்புகளில் சுருக்கமாக அறிமுகம் செய்துள்ளது. M.T.A மூலம் திருக்குர்ஆனின் ஒளியை உலக நாடுகள் முழுவதும் 24 மணி நேரமும் பரப்புகிறது. உலக மொழிகளில் ஈடு இணையற்ற ஒரு விரிவுரையையும் பல மொழிகளில் வெளியிட்டுள்ளது. இந்த அருட்கொடை, உலகில் வேறு எந்த முஸ்லிம் பிரிவுக்கும் கிடைக்கவில்லை என்பது அறிவுடைய மக்களுக்கு ஒரு சான்றாகும். (அல்ஹம்துலில்லாஹ்)

## 16. அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தும் ஸலாமும்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 159 இல் ஸலாம் கூறும் முறை என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*முஸ்லிம்கள் ஒருவரை ஒருவர் சந்திக்கும் போது அஸ்ஸலாமு அலைக்கும் என்று முகமன் கூறுவதை அனைவரும் அறிவோம். நபிகள் நாயகம் (ஸல்) அவர்களும் இவ்வாறே நடைமுறைப்படுத்தி 14 நூற்றாண்டுகளாக தொடர்ச்சியாக இந்த நடைமுறை கடைபிடிக்கப்பட்டு வருகிறது.*

*ஆனால் திருக்குர்ஆனில் சில வசனங்களைக் கவனிக்கும் போது அஸ்ஸலாமு அலைக்கும் என்று கூறாமல் வெறும் ஸலாமுன் அலைக்கும் என்று கூறுமாறு வழிகாட்டப்பட்டுள்ளது.*

*திருக்குர்ஆனின் 7:46, 13:24, 16:32 39:73 ஆகிய வசனங்களில் சொர்க்கத்தில் நல்லோர்களுக்கு வானவர்கள் ஸலாமுன் அலைக்கும் என்று கூறுவார்கள் எனக் கூறப்படுகிறது.... வேறு சில வசனங்களில் ஸலாம் என்று மட்டுமே கூறுப்பட்டுள்ளது.... ஸலாம் என்பது தான் அதிகமான இடங்களில் குறிப்பிடப்படுகிறது.*

*ஒருவருக்கு ஸலாம் கூறும் போது ஸலாமுன் அலைக என்று கூறுவதற்கும் சான்று உள்ளது. (பார்க்க 19:47).... அஸ்ஸலாமு என்று கூறுவதற்கும் சான்று உள்ளது (பார்க்க 19:33)*

*அதே நேரம் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அஸ்ஸலாமு அலைக்கும் என்று பல சந்தர்ப்பங்களில் கூறியுள்ளார்கள். இதைப் பயன்படுத்துவது மேற்கண்ட அவ்வசனங்களுக்கு எதிரானது அல்ல.*

*ஏனெனில் ஸலாமுன் அலைக்கும் என்பதும், அஸ்ஸலாமு அலைக்கும் என்பதும் ஒரு வாக்கியத்தின் இரு வேறு வடிவங்கள் ஆகும். ஸலாமுன் அலைக்கும் என்றால் உங்கள் மீது அமைதி நிலவட்டும் என்பது பொருள். அஸ்ஸலாமு அலைக்கும் என்றால், அந்த அமைதி உங்கள் மீது நிலவட்டும் என்று பொருள். அதாவது எந்த ஸலாமைப் பற்றி அல்லாஹ் குர்ஆனில் கூறியுள்ளானோ அந்த ஸலாம் உங்கள் மீது உண்டாகட்டும். இது தான் இதன் பொருள்.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆனில் ஸலாமுன் அலைக்கும் என்று கூறப்பட்டுள்ளது. ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் அஸ்ஸலாமு அலைக்கும் என்று நடைமுறைப்படுத்திக் காட்டியுள்ளார்கள். இதன்படி பார்த்தால் அந்த ஸலாம் உங்கள் மீது உண்டாகட்டும் என்று கூறுவதில் உள்ள **அந்த ஸலாம் என்பது திருக்குர்ஆனில் அல்லாஹ் வானவர்கள் மூலம் சொர்க்கவாசிகளுக்கு எந்த ஸலாத்தைக் கூறும்படி கூறி அனுப்புவானோ அந்த ஸலாம் உங்கள் மீது உண்டாகட்டும் என்று பொருள்.**

இந்த ஸலாத்தை முஸ்லிம்கள் எல்லார் மீதும் கூறலாம். குறிப்பாக முஸ்லிம் அல்லாதவர்கள் மீது கூறுவதன் மூலம் ஒரு அற்புதமான துஆவைச் செய்கிறோம். அதாவது நீங்கள் இஸ்லாத்தை ஏற்று, ஒரு முஸ்லிமாக வாழ்ந்து ஒரு உண்மையான முஸ்லிமாக மரணித்து சொர்க்கம் சென்று அங்கு அல்லாஹ் தன் வானவர்கள் மூலம் தன் சொர்க்கவாசிகளுக்கு எந்த ஸலாமைக் கூறி



அனுப்புவானோ அந்த ஸலாம் உங்களுக்கு கிடைக்கட்டும் என்று ஒவ்வொரு முஸ்லிமும் துஆ செய்வதாக அமையும்.

**இந்த அற்புதமான துஆவை அறியாத முஸ்லிம்கள் குறிப்பாக மூட முல்லாக்கள் அஹ்மதி முஸ்லிம்களுக்கு நீங்கள் ஸலாம் கூறக்கூடாது என்றும் அவர்கள் ஸலாம் கூறினால் அதற்குப் பதில் ஸலாமும் கூறக்கூடாது என்றும் மார்க்கத்தீர்ப்பு கூறி அதனைப் பள்ளிவாசல்களிலும் அச்சடித்து கயிற்றில் தொங்கப் போட்டுள்ளார்கள்.**

அல்லாஹ்வின் சொல்லையும் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் தீர்ப்பையும் நாங்கள் கயிற்றில் கட்டி தொங்க விட்டிருக்கிறோம் பாருங்கள் என்று காட்டுகிறார்கள். உலகில் ஸலாத்தை (அமைதியை) பரப்புமாறு நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். இது தான் இஸ்லாத்தின் (அமைதியின்) தூதுச் செய்தியாகும். ஆனால் இந்த மூட முல்லாக்களோ, அமைதியை (இஸ்லாத்தை) அழிக்க அவதாரம் எடுத்து வந்துள்ளார்கள். நபி (ஸல்) அவர்கள் தன் இறுதி ஹஜ்ஜின் போது ஆற்றிய பேருரையில் **ஹஜ்ஜின் மாதத்தையும், ஹஜ்ஜின் நாளையும், அந்த மக்கா நகரையும் புனிதமானதாக குறிப்பிட்டு இது போல் ஒவ்வொரு மனிதனின் உயிரும், உடைமையும், கண்ணியமும் மேலே கூறிய அந்த மூன்றைப் போன்று புனிதமானது என்று கூறினார்கள்.** இஸ்லாத்தின் மூட முல்லாக்களோ, அஹ்மதியின் உயிரையும், உடைமையையும், கண்ணியத்தையும் பாழாக்குவதன் மூலமாக ஹஜ்ஜின் புனித மாதத்தையும், ஹஜ்ஜின் புனித நாளையும், புனிதமான மக்கா நகரையும் பாழாக்கிவிட்டார்கள். இவர்கள் செய்யும் ஹஜ் ஹஜ்ஜாகுமா?

அல்லாஹ்வின் தூதர் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் யூதர்கள் கூறிய ஸலாமுக்குப் பதில் கூறியுள்ளார்கள் என்பதை நாம் அறிவோம்.

திருக்குர்ஆனில் ஹஸ்ரத் இப்றாஹீம் நபி (அலை) தன் தந்தை ஆஸருக்கு ஸலாம் கூறியுள்ளார்கள். (பார்க்க 19:48) தன்னை நபி என்று நம்பாத ஒரு காஃபிர்க்கு ஒரு நபி ஸலாம் கூறுகிறார். தன்னை நபி என்று நம்பாத ஒரு யூதர் சொன்ன ஸலாமுக்கு ஒரு நபி பதில் சொல்கிறார். திருக்குர்ஆன் நபி வழி இவ்வாறிருக்க அந்த ஸலாம் என்பது ஒரு அற்புதமான துஆவாக இருக்க, இந்த வழிகெட்ட முஸ்லிம் மூட முல்லாக்கள் அஹ்மதிகளுக்கு ஸலாம் கூறாதீர்கள், பதில் ஸலாமும் சொல்லாதீர்கள் என்று அல்லாஹ்வுக்கும் ரசூலுக்கும் எதிராக தீர்ப்பு வழங்குகின்றனர் என்றால் **இவர்களுக்கு மறுமையில் அல்லாஹ்வின் அந்த ஸலாம் கிடைக்குமா? என்று அவர்கள் சிந்திக்க வேண்டும்.** ஏனென்றால், அஹ்மதிகள் திருக்குர்ஆனையும், நபிவழியையும், நபிமொழிகளையும் பின்பற்றுகிற உண்மை முஸ்லிம்கள் என்பதையும், அவர்களைக் காஃபிர்கள் என்று ஃபத்வா கொடுத்தால் அந்த ஃபத்வா அஹ்மதி முஸ்லிம்களுக்குப் பொருந்தாததினால் ஃபத்வா கொடுத்தவர்களிடமே சென்று சேரும் என்பதையும் நினைவில் கொள்வார்களாக.

தெரிந்தவர்களுக்கும் தெரியாதவர்களுக்கும் ஸலாம் கூறுங்கள் என்பது நபிமொழி. **தெரிந்தவர்களுக்கு மட்டும் ஸலாம் கூறுவது கியாமத் நாளின் அடையாளம்** என்று ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (நூல் : ஹாகிம் பாகம் 4, பக்கம் 493)

இவ்வாறு அல்லாஹ்வின் உண்மையான அடியார்களாகிய அஹ்மதி முஸ்லிம்கள் கூறும் ஸலாத்தை இவர்கள் இழந்து விட்டார்கள்.

இன்று உலகில் ஸலாம் இல்லை. குறிப்பாக முஸ்லிம் நாடுகளில் ஸலாம் இல்லை. முஸ்லிம்களை முஸ்லிம்களும் பிறரும் கொன்று குவித்து வருகிறார்கள். காரணம், எந்த ஸலாமை இஸ்லாத்தின் மூலம் பரப்ப இறைவன் திட்டமிட்டு தன் தூதரை இந்த உலகிற்கு அனுப்பினானோ அந்த தூதரையும், அவரால் முன்னறிவிக்கப்பட்ட



அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தையும் இந்த உலகம் ஏற்றுக் கொள்ளவில்லை. குறிப்பாக பெயர் தாங்கி முஸ்லிம் அமைப்புகள் ஏற்றுக் கொள்ளவில்லை. **அந்த ஜமாஅத்திற்கு எதிராக கொலைவெறி தீர்ப்பை வழங்கி அவர்களின் உயிரையும், உடைமைகளையும், கண்ணியத்தையும் அழித்து வருகிறார்கள். இதனால் இறை கோபம் உலகெங்கும் இயற்கை சீற்றங்களாக இறங்குகிறது என்பதை இந்த முஸ்லிம் உலகு உணர்ந்து திருந்தும் நாள் எந்நாளோ?**

## 17. வானத்தின் வாசல் திறத்தல்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 177 இல் வானத்தின் வாசல் திறக்கப்பட மாட்டாது என்னும் தலைப்பில் பீ.ஜே திருக்குர்ஆன் 7:40 வது வசனத்திற்கு இவ்வாறு எழுதியுள்ளார்:**

*இறைவசனங்களை மறுத்துப் பெருமையடித்தவர்கள் இவ்வுலகில் வாழும் போது செய்யும் பிராத்தனைகள் வானத்தை அடையாது. இவ்வுலகிலும் நஷ்டமடைவார்கள்; மறுமையில் நரகத்தையும் அடைவார்கள் என்பது தான் இதன் கருத்தாக இருக்க முடியும்.*

**நம் விளக்கம்:**
**பீ.ஜே யின் கருத்தின் படி,**

1) நீங்கள் உண்மையாளர்கள்; அஹ்மதிகளாகிய நாங்கள் பொய்யர்கள் என்றால், எங்களுக்கு எதிராக பிராத்தனை செய்து காட்டுங்கள். உங்கள் பிரார்த்தனைகளை அல்லாஹ் வானத்தின் வாசல்களை திறந்து ஏற்றுக் கொள்வான்.

72 பிரிவுகளாகிய நீங்கள் அனைவரும் ஒன்றுகூடி அழுதழுது துஆ செய்தாலும், நீங்கள் பொய்யர்கள் என்றால் உங்கள் பிரார்த்தனைகளுக்கு அல்லாஹ் வானத்தின் வாசலை திறக்க மாட்டான். அந்த துஆக்களைச் சுருட்டி உங்கள் முகத்தில் எறிவான். எனவே நீங்கள் உண்மையாளர்களாயின் உங்கள்

பிரார்த்தனை மூலம் உண்மையை நிரூபிக்க முன்வருமாறு அன்புடன் வேண்டுகிறேன்.

கோவை விவாதத்தில் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்கள் உண்மையாளர் என்பதனை திருக்குர்ஆனில் இருந்து அஹ்மதி முஸ்லிம்களாகிய நாங்கள் உண்மை நபியின் இலக்கணத்தை எடுத்துக் காட்டி நிரூபித்து விட்டோம்.

**ஆனால் ஜாக் தரப்பில் வாதிட்ட பீ.ஜே ஒரு பொய் நபியின் இலக்கணத்தை எடுத்துக் காட்டி அதற்கு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்கள் பொருந்துகிறார் என்பதனை மூன்று நாள் விவாதத்திலும் கடைசி வரை அவர் நிரூபிக்கவே இல்லை.** இவ்வாறு திருக்குர்ஆனிலிருந்தும் நபிமொழியிலிருந்தும் நிரூபிக்க முடியாத நிலையில், அவர் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மத் (அலை) அவர்களின் நூல்களிலிருந்து பல குற்றச்சாட்டுகளை மட்டும் வைத்தார். அவரை பொய் நபி என்று நிரூபிக்கத் தவறியதாலும் அஹ்மதிகள் அவர் உண்மை நபி என்று நிரூபித்திருந்த காரணத்தினாலும், பீ.ஜே எடுத்துக் காட்டிய குற்றச்சாட்டுகள் அனைத்தும் அவர் உண்மை நபி என்பதையே காட்டுகின்றன.

அல்லாஹ் உண்மை நபிமார்களைப் ஆதாரங்களுடன் அனுப்பியிருந்தும் நபியின் பகைவர்கள் அதனை மறுத்து, நபிமார்களை கிறுக்கன், சூனியக்காரன், கவிஞன் போன்ற இழிசொற்களால் மறுக்கின்றனர். பகைவர்கள் கூறும் இக்குற்றச்சாட்டுகளும் உண்மை நபிக்குரிய மற்றொரு வகையான ஆதாரங்கள் ஆவது போல், பீ.ஜே யின் குற்றச்சாட்டுகளும் அமைந்துள்ளன. எனவே, இதனை உணர்ந்து அஹ்மதிய்யா ஜமாஅத் உண்மை என ஏற்றுக் கொள்ள முன்வருமாறு அன்புடன் அழைக்கிறோம்.



**நபிமொழி புகாரியில் ஹதீஸ் எண் 3887 இல்,**

நபி (ஸல்) அவர்கள் மிஃராஜின் போது ஜிப்ரீல் (அலை) அவர்களுடன் ஏழு வானங்களையும் கடந்து செல்கிறார்கள். அதில் ஒவ்வொரு வானத்திலும் அதன் காவலர்கள் நீங்கள் யார்? உடன் வந்திருப்பவர் யார்? என்று கேட்டு வானத்தின் வாசலை திறந்து விட அந்த வானங்களில் உள்ள கடந்த கால நபிமார்களை நபி (ஸல்) அவர்கள் சந்திக்கிறார்கள். இவ்வாறு இரண்டாவது வானத்தில் ஹஸ்ரத் ஈஸா நபி (அலை) அவர்களையும், ஹஸ்ரத் யஹ்யா நபி (அலை) அவர்களையும் சந்திக்கிறார்கள்.

இந்த சந்திப்பில், கடந்த காலத்தில் இறந்து போன நபிமார்களையும் நபி (ஸல்) அவர்கள் கண்டார்கள். இறக்காமல் உயிருடன் இருப்பதாக பீ.ஜே தவறாக நம்பும் ஈஸா நபி (அலை) அவர்களையும் சந்திக்கிறார்கள். நபி (ஸல்) அவர்கள் ஈஸா நபியினை சந்தித்த காட்சியை, வானில் உயிருடன் இருந்த ஈஸா நபியைக் கண்டேன். அவர்கள் மற்றவர்களிடமிருந்து வேறுபட்டு இப்படி இப்படி இருந்தார்கள் என்று கூறவில்லையே ஏன் ?

**திருக்குர்ஆன் 7:40 வது வசனத்தின் பொருள் பீ.ஜே தன் தமிழாக்கத்தில்,**

நமது வசனங்களைப் பொய்யெனக் கருதி, அதைப் புறக்கணிப்போருக்கு வானத்தின் வாசல்கள் திறக்கப்பட மாட்டாது. **ஊசித் துவாரத்தில் ஒட்டகம் நுழையும் வரை அவர்கள் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள். இவ்வாறே குற்றவாளிகளைத் தண்டிப்போம்** என்று எழுதியுள்ளார். இந்த வசனத்தில் சொர்க்கமும் நரகமும் எடுத்துக் கூறப்படுகிறது. இதற்கு முன் பின் வசனங்களும் (7:39;7:41) சொர்க்கம் நரகம் பற்றியே கூறுகின்றன. எனவே இங்கு வானத்தின் வாசல் என்பது சொர்க்கத்தின் வாசல் என்றே பொருள்படும். மேலும் 7:40 வது வசனத்தை 7:36 வது வசனத்துடன் ஒப்பிட்டுப் பார்ப்போம்.

| திருக்குர்ஆன் 7:40 வது வசனம் | திருக்குர்ஆன் 7:36 வது வசனம் |
|---|---|
| 1) நமது வசனங்களைப் பொய் எனக் கருதி | 1) நமது வசனங்களைப் பொய் எனக் கருதி |
| 2) அதைப் புறக்கணிப்போருக்கு | 2) அதைப் புறக்கணிப்போர் |
| 3) வானத்தின் வாசல் திறக்கப்பட மாட்டாது | 3) நரகவாசிகளே |

இதிலிருந்து வானத்தின் வாசல் திறந்தால் சொர்க்கம் என்றும், திறக்கவில்லை என்றால் நரகம் என்றும் வெள்ளிடை மலைபோல் விளங்குகிறது.

நபி (ஸல்) அவர்கள், எனக்கு முன்னர் வந்த இஸ்ரவேல் சமுதாயத்தினர் 72 பிரிவுகளாகப் பிரிந்தனர். என் சமுதாயம் 73 பிரிவுகளாகப் பிரியும். அந்த 72 பிரிவுகளும் என்னைச் சேர்ந்தவர்கள் இல்லை. நான் அவர்களைச் சேர்ந்தவனும் இல்லை. அவர்கள் நரகிற்கு உரியவர்கள். அந்த ஒரு பிரிவு யார் என்றால், நானும் என் தோழர்களும் எப்படி இருக்கிறோமோ அப்படி அவர்கள் இருப்பார்கள் என்று கூறியுள்ளார். இதில் சொர்க்கத்திற்கு உரிய ஜமாஅத்தும், நரகிற்கு உரிய 72 பிரிவுகளும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. பைசல் மன்னர் காலத்தில் இஸ்லாத்தின் 72 பிரிவுகளும் அவரது தலைமையில் ஒன்றுகூடி காதியானிகள் முஸ்லிம்கள் இல்லை என்று தீர்ப்பு வழங்கியதும், பூட்டோ தலைமையில் பாகிஸ்தானில் 72 பிரிவுகளும் காதியானிகள் முஸ்லிம்கள் இல்லை என சட்டசபையில் தீர்மானம் நிறைவேற்றியதும் அந்த 72 பிரிவுகள் யார் என்பதை உலகுக்கு வெளிச்சம் போட்டு விளக்கி விட்டது.



# V. இஸ்லாத்தின் கடமைகள்

## 18.நோன்பு

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 47 இல் நோன்பை விட்டு விடுவதற்குப் பரிகாரம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*ஆரம்பத்தில் நோன்பு கடமையாக்கப்பட்ட போது நோன்பு நோற்கச் சக்தி உடையோர் விரும்பினால் நோன்பு நோற்கலாம்; அல்லது ஒரு நோன்புக்குப் பதிலாக ஒரு ஏழைக்கு உணவு அளிக்கலாம் என்ற சலுகை இருந்தது. அது தான் இவ்வசனத்தில் (திருக்குர்ஆன் 2:184) கூறப்பட்டுள்ளது.*

*ரமலான் மாதத்தை அடைபவர் நோன்பு நோற்க வேண்டும் என்ற கட்டளை வந்த பின், சக்தி பெற்றவர் நோன்புதான் நோற்க வேண்டும் என்ற புதுச் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. இந்தச் சட்டம் அடுத்த வசனத்தில் (2:185) கூறப்பட்டுள்ளது. (நூல் : புகாரி 4507)*

**நம் விளக்கம்:**

1) திருக்குர்ஆன் 2:186 வது வசனத்தின் சட்டம் 2:185 வசனத்தின் சட்டத்தை மாற்றிவிட்டது என்றால், இவ்வளவு முக்கியமான நோன்பு பற்றிய சட்ட மாற்றம் பற்றி நபி (ஸல்) அவர்கள் அறிவித்துள்ளார் என்று பீ.ஜே ஆதாரம் காட்ட முடியுமா ?

2) 4505 வது ஹதீது 4507 வது ஹதீஸை மாற்றுகிறதா ?

**4505 வது ஹதீது:**

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் (2:184) வது இறை வசனத்தை ஓதி இது சட்டம் மாற்றப்பட்ட வசனம் அன்று; நோன்பு நோற்க இயலாத தள்ளாத முதியவரையும், தள்ளாத வயதுடைய பெண்ணையும் இது குறிக்கும். அவர்கள் ஒவ்வொரு நாளுக்கும் பகரமாக ஓர் ஏழைக்கு உணவளிக்கட்டும் என்று சொன்னார்கள்.

**இது பற்றிய அடிக்குறிப்பில்,**

நோன்பு நோற்கச் சக்தியில்லாமல் சிரமப்படுகிறவர்கள் ஒரு நோன்பிற்கு ஓர் ஏழை வீதம் உணவளித்திட வேண்டும். இது நோன்பே நோற்கவியலாத அளவிற்குத் தள்ளாத வயதில் உள்ள முதியோருக்குரிய சட்டமாகும். இச்சட்டம் இன்னும் நீடிக்கிறது. மாற்றப்படவில்லை. இது, அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி) முதலானோரின் கருத்தாகும். (புகாரி பாகம் : 5 அடிக்குறிப்பு 43). இமாம் புகாரி (ரஹ்) அவர்களின் கருத்தும் இதுவே ஆகும்.

அடுத்து இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களும் இச்சட்டம் நீடிக்கிறது; மாற்றப்படவில்லை என்றே கூறுகின்றார்கள். (தஃப்ஸீர் இப்னு கஸீர், ஃபதஹுல் பாரீ

இதன் மூலம் 2:186 வது வசனத்தின் சட்டம் 2:185 வது வசனத்தின் சட்டத்தை மாற்றவில்லை என்பது நிரூபணமாகிறது.

## 19. நோன்புக் கால இரவும் மனைவியரும்

**திருக்குர்ஆன் அட்டவணை எண் 50 இல் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*நோன்புக் கால இரவுகளில் மனைவியருடன் தாம்பத்ய உறவு வைத்துக் கொள்ள அனுமதி உள்ளது என்பதை இவ்வசனம் (திருக்குர்ஆன் 2:187) நேரடியாக கூறும் கருத்தாகும்.*

*ஆனால் இந்த அனுமதிக்கு முன்னர் இதற்குத் தடையிருந்தது என்பதும் இவ்வசனத்தில் விளங்குகிறது. அதாவது ஏற்கனவே நோன்பின் இரவுக் காலங்களில் உடல் உறவு தடை செய்யப்பட்டிருந்தும் அதைப் பலரும் மீறியுள்ளனர். இவ்வாறு மீறுவதைக் கண்ட இறைவன் அவர்களின் அந்தக் குற்றத்தை மன்னித்து இப்போது முதல் அதற்கு அனுமதி உண்டு என அறிவிக்கிறான்.*

*உங்களுக்கே நீங்கள் துரோகம் செய்தீர்கள்! அதை அல்லாஹ் மன்னித்தான் இனி மேல் இரவுகளில் தாம்பத்யத்தில் ஈடுபடலாம் என்ற சொற்களிலிருந்து இந்த விசயத்தை அறியலாம்.*



*...அந்தத்தடை குர்ஆனில் இல்லை... குர்ஆன் தடை செய்யாவிட்டாலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை விதித்திருந்தார்கள். அவர்கள் விதித்த தடையை இறைவன் தனது தடையாகக் கருதி தடையை மீறியது குற்றம் என்று கூறுகிறான். அக்குற்றத்தை மன்னித்து விட்டதாகவும் கூறுகிறான்.*

**நம் விளக்கம்:**

1) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தடை விதித்திருந்தார்கள் என்பதனை பீ.ஜே நம்பத்தக்க நபிமொழிகளிலிருந்து காட்ட வேண்டும். அப்படிக் காட்டாத வரை, அவர் எழுதிய விளக்கத்தை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது.

   நபிகள் நாயகம் (ஸல்) அவ்வாறு ஒரு தடை செய்திருப்பதாகத் தெரியவில்லை. எனவே நோன்பு நோற்றிருப்பவர் இரவு நேரத்தில் தம் மனைவியருடன் உடலுறவு கொள்ளக் கூடாது என்று மக்கத்து மக்கள் கருதி வந்துள்ளனர் என்று தெரிகிறது. இக்கருத்து தவறானது என்பதை அல்லாஹ் திருக்குர்ஆனில் (2:188) நோன்பின் இரவில் உங்கள் மனைவியரிடம் செல்ல உங்களுக்கு அனுமதிக்கப் -பட்டுள்ளது என்று கூறுவதிலிருந்து தெரிகிறது.

2) நபித்தோழர்கள் அந்தத் தவறான கருத்தின் காரணமாக தம்மைத் தாமே துன்பத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தனர். அவ்வாறு தேவையற்ற வருத்தத்திற்கு ஆளாக்கிக் கொள்ளக் கூடாது என்பதற்காக இது அனுமதிக்கப்பட்டது தான் என்று அல்லாஹ் கூறியுள்ளான்.

எனவே பீ.ஜே உடைய மேற்கண்ட விளக்கம் முற்றிலும் தவறானதாகும்.

## 20. நடுத் தொழுகை

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 71 இல் நடுத்தொழுகை என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*திருக்குர்ஆன் 2:238 –ம் வசனத்தில் நடுத்தொழுகையைப் பேணுமாறு கூறப்படுகிறது. நடுத்தொழுகை என்பது அஸர் தொழுகை தான் என்று நபி (ஸல்) அவர்கள் விளக்கமளித்துள்ளார்கள். (நூல் : புகாரி 6396) நபி (ஸல்) அவர்கள் நடுத்தொழுகைக்கு விளக்கம் தந்த பின் மற்றவர்களின் கருத்தை நாம் கவனத்தில் கொள்ளக் கூடாது.*

**நம் விளக்கம்:**

தொழுகைகளையும், நடுத்தொழுகையையும் பேணிக் கொள்ளுங்கள் என்று திருக்குர்ஆன் 2:239 கூறுகிறது. தொழுகைகள் ஐவேளைத் தொழுகை என்பதை திருக்குர்ஆன் நபிமொழி மூலம் அறியலாம்.

அதாவது, ஒவ்வொரு மனிதனுக்கும் ஏதாவது ஒரு தொழுகை நடுத்தொழுகையாக வரும். அது அவன் செய்யும் வேலை, தொழில் ஆகியவற்றைப் பொருத்தது. எனவே, நடுத்தொழுகை என்பது ஒருவனின் பணியிடையில், வேலைகளுக்கு நடுவில், செயலின் மத்தியில் வருவதால் அது நடுத்தொழுகை ஆகிறது.

பீ.ஜே கருதுவது போல் ஐவேளைத் தொழுகைகளுக்கு நடுவில் வருவதால் நடுத்தொழுகை என்பதில்லை. நபி (ஸல்) அவர்கள் முதலில் சுப்ஹ் தொழுகையை தொழுததினால் அஸர் நடுத்தொழுகையாகாது. நபி (ஸல்) அவர்கள் அஸர் தொழுகையை நடுத்தொழுகை என்று அந்த அர்த்தத்திலும் கூறவில்லை.

நபிமொழியாகிய புகாரி 6396 கூறுவது போல் அகழ்ப் போரின் நடுவில் அஸர் தொழுகை வந்ததினால் அதனை நடுத்தொழுகை என்று கூறினார்கள். அதாவது போரின் நடுவில்



அஸர் தொழுகையை நிறைவேற்ற முடியாமல் பகைவர்கள் செய்து விட்டனர். எனவே நபி (ஸல்) அவர்கள் அஸர் தொழுகையை நடுத்தொழுகை என்று குறிப்பிட்டார்கள். எனவே அவ்விடத்தில் நடுத்தொழுகை என்றால் அது அஸர் தொழுகை தான். எந்தத் தொழுகையை நம் பணிகளுக்கு இடையிலும் விடாமல் நிறைவேற்றுகிறோமோ அதுவே சிறந்த தொழுகையாகும். எனவே தான் **உஸ்தா** என்பதற்கு சிறந்த தொழுகை என்றும் பொருள் கூறுகின்றனர். இப்பொருள்களில் தான் திருக்குர்ஆனில் 2:144, 100:6, 5:90, 68:29 ஆகிய இடங்களில் வருகிறது. அஸர் தொழுகை தான் நடுத்தொழுகை என்றால், ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் அஸர் தொழுகை பற்றி வரும் பிற இடங்களில் எங்கும் அதனை நடுத்தொழுகை என்று கூறவில்லை. ஆனால் போரின் இடையில் வரும் இந்த அஸர் தொழுகையை மட்டுமே நபி (ஸல்) அவர்கள் நடுத்தொழுகை என்று குறிப்பிட்டுக் கூறியுள்ளார்கள். எனவே நடுத்தொழுகை என்பது அஸர் தொழுகையைக் குறிக்காது. பணியிடையில் வரும் எல்லாத் தொழுகைகளையும் குறிக்கும் என்று தெளிவாகிறது. (காண்க : புகாரி 2931, 4111, 4533)

மனிதன் சாதாரணமாக தொழுகைகளை நிறைவேற்றி விடுவான். பணிகளின் இடையில், அவசியமான அவசரமான வேலையின் நடுவில் வந்தால் அந்த தொழுகையைத் தொழுவது தான் சிறந்தது. எனவே இறைவன் அதனைப் பிரித்துக் காட்டி நடுத்தொழுகையையும் பேண வேண்டும் என்று கூறுகிறான்.

## 21. ஹஜ்

*பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண்களான 56,57,58,59,60 ஆகியவற்றில் நபி (ஸல்) அவர்கள் செய்து காட்டிய ஹஜ் குறித்து பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார். அவை ஹஜ்ஜின் 3 வகைகள் பற்றிய விளக்கமாகும்.*

*இதில் ஹஜ்ஜின் மாதங்கள், ஹஜ்ஜின் போது வியாபாரம், தீண்டாமை, இரண்டு நாட்களில் புறப்படுதல் பற்றிய செய்திகள் கூறப்பட்டுள்ளன. மொத்தத்தில் இவை ஹஜ்ஜைப் பற்றிய விளக்கங்களாகும்.*

**நம் விளக்கம்:**

1) நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களுடன் ஹஜ்ஜூற்குச் சென்றார்கள். மக்கத்து குறைஷிகள் அவர்களை ஹஜ் செய்ய விடாது தடுத்து விடுகிறார்கள். ஹூதைபியா உடன்படிக்கையின் போது முஹம்மது ரஸூலுல்லாஹ் என்ற சொல்லை நீக்கச் சொன்னார்கள். அப்துல்லாஹ்வின் மகன் முஹம்மது என்று எழுதச் சொல்லி முஹம்மது அல்லாஹ்வின் ரஸூல் இல்லை என்பது தான் தங்களின் கொள்கையாகும் என்று கூறினார்கள். இவ்வாறே,

இன்று அனைத்துப் பிரிவுகளும் அஹ்மதிகளுக்கு எதிராக ஹஜ் செய்வதற்கு தடை விதிக்கிறார்கள். காரணம் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) பொய் நபி. எனவே அஹ்மதிகள் ஹஜ் செய்யக் கூடாது என்கின்றனர்.

இதிலிருந்து தடை செய்யப்படுபவர்கள் உண்மையான நபியின் உம்மத்து என்பதும் தடை செய்பவர்கள் நபியின் பகைவர்கள் என்பதும் விளங்குகிறது அல்லவா?

2) நபி (ஸல்) அவர்கள் ஹஜ்ஜுக்குச் செல்வதாக கனவு கண்டு, அதன் அடிப்படையில் அந்த வருடம் ஹஜ்ஜுக்குச் செல்கிறார்கள்.ஆனால் மக்கத்து மாக்கள் அந்த வருடம் ஹஜ் செய்ய முடியாத படி திருப்பி அனுப்பி விடுகிறார்கள். ஆனால் அடுத்த வருடம் அந்த ஹஜ் நிறைவேறுகிறது. நபி (ஸல்) அவர்கள் தான் கண்ட கனவுக்கு கொடுத்த விளக்கம் தவறு என்பதால் அன்னாரை பொய் நபி என்று சொல்ல முடியுமா?

ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் கண்ட கனவுகளைக் கூறும் இடங்களில் கனவு என்பதை மறைத்து



உண்மை சம்பவம் போல் எழுதி ஓர் உண்மை நபி இப்படிச் சொல்வாரா என்று மறுப்பதால் அவர் பொய் நபி ஆகிவிடுவாரா? நபி (ஸல்) அவர்கள் சம்பவத்திலிருந்து ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் உண்மை நபி என்பது உறுதியாகிறது அன்றோ!

3) மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் ஹஜ்ஜுக்கு தம் வாழ்நாளில் செல்லவில்லை. ஒரு நபி என்றால் ஹஜ் செய்திருக்க வேண்டுமே! இவர் செய்யவில்லையே! எனவே இவர் பொய்யர் என்று எதிரிகள் கூறுகின்றனர்.

ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் தம் **வாழ்நாளில் ஸக்காத்து கொடுத்ததே இல்லை.** காரணம் ஸக்காத்து கொடுக்க வேண்டிய நிபந்தனைக்கு அவர்கள் ஆளாகவில்லை. எனவே அன்னார் ஸக்காத்து கொடுக்க வில்லை. நபி (ஸல்) அவர்கள் தம் வாழ்நாளில் ஒரு தடவை கூட ஸக்காத்து கொடுக்காததினால் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நபி இல்லை என்று கூற முடியுமா?

இவ்வாறே ஹஜ் செய்ய வேண்டிய நிபந்தனைக்கு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் உட்பட வில்லை. எனவே அன்னார் ஹஜ் செய்யவில்லை. இவ்வாறு ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் நபி என்பது உண்மையாகிறது.

4) மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களின் காலத்தில் இந்தியாவில் பிளேக் நோய் பரவியது. எனவே, இந்தியாவிலிருந்து ஹஜ் செய்ய தடை விதிக்கப்பட்டது.

ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்கள் தமக்குரிய அடையாளமாக பிளேக் பரவும் என்று முன்னறிவிப்புச் செய்திருக்கிறார்கள். இமாம் மஹ்தியின் காலத்தில் ஹஜ் செய்ய தடை ஏற்படும் என்ற நபிமொழியும் உண்டு. இவ்விரண்டுமே அதாவது பிளேக் நோயும், ஹஜ்ஜுக்கு தடையும் அவர்கள் மஹ்தி என்று வாதித்த காலத்தில் நிறைவேறிவிட்டது. இவ்வாறு அவர் உண்மை நபி என்று நிரூபணமானது.

5) திருக்குர்ஆன் 22:28 வது வசனம், அவர்கள் ஹஜ் செய்ய நடந்தும், நெடுந் தொலைவிலிருந்தும், மெலிந்த ஒட்டகங்களிலும் உம்மிடம் வருவார்கள் என்று கூறுகிறது.

அவ்வாறு யாரும் இன்று ஒட்டகங்களில் வருவதில்லை. அந்த ஒட்டகங்களை அரபிகள் கைவிட்டு விட்டனர். இவ்வாறு ஒட்டகங்கள் கைவிடப்பட்டு, அந்த இடத்தை நவீன போக்குவரத்து வாகனங்கள் இடம் பிடித்துக் கொண்டன. இவ்வாறு இமாம் மஹ்தியின் காலத்தில் நிகழும் என்று முன்னறிவிப்பு உள்ளது. (திருக்குர்ஆன் 81:5). 10 மாத கருவுற்ற பெண் ஒட்டகம் கைவிடப்படும் என்ற வசனமும் அதனையே கூறுகிறது.

6) நபிமொழிக் களைஞ்சியத்தில், மஸ்ஜிதுன் நபவியில் தொழுவது, ஏனைய பள்ளிகளில் தொழப்படும் 1000 தொழுகைகளை விட மேலானதாகும். திரு மக்காவிலுள்ள மஸ்ஜிதுல் ஹராம் என்னும் புனித கஆபா பள்ளியில் தொழுவது உலகின் மற்ற பள்ளிகளில் தொழப்படும் ஒரு லட்சம் தொழுகைகளை விட மிக மேலானதாக இருக்கும். (ஆதாரம் : முக்தஸர் அத்தர்ஹீபு வத்தர்ஹீபு, ஹதீஸ் எண் 389 ன் விளக்கவுரை)

(கஆபா பள்ளியில் தொழுவது ஏனைய பள்ளிகளில் தொழுவதை விட ஒரு லட்சம் மடங்கு மேலானதாகும் என்று அஹ்மதி, இப்னு குஜைமா, இப்னு ஹிப்பான் ஆகியவற்றில் காணப்படுகிறது)

ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் தம் பள்ளியில் நஜ்ரான் கிறித்தவர்களை அவர்களின் வழிபாட்டு முறையில் ஜபம் செய்ய அனுமதித்துள்ளார்கள். (ஆதாரம் : தப்ஸீர் இப்னு கஸீர் 3:61 வசனத்தின் அடிக்குறிப்பு) முஸ்லிம்களோ, தங்கள் பள்ளியில் காதியானிகள் நுழையக் கூடாது என்ற அறிவிப்பை கயிற்றில் கட்டி தொங்கவிட்டுள்ளார்கள். உங்கள் பள்ளி நபியின் பள்ளியை விட சிறந்ததுமில்லை; கிறித்தவர்களை விடவோ ஏன் உங்களை விடவோ நாங்கள் குறைந்தவர்களும் இல்லை என்பதை இதன் மூலம்



உணருங்கள். அல்லாஹ்வின் பள்ளிக்கு வரத் தடை செய்பவன் அக்கிரமக்காரன் என்று திருக்குர்ஆனின் (2:115) வசனம் கூறுவதை உணருங்கள்.

7) கஆபா பள்ளியில் தொழுவது உங்கள் பள்ளியில் தொழவதை விட 1,00,000 மடங்கு மேலாகும். அங்கு கேட்கப்படும் துஆவும் அவ்வாறே மேலானதாகும்.

நான் கேட்கிறேன். ஹஜ்ஜுக்குச் செல்லும் நீங்கள் அப்பள்ளியின் கஆபாவின் திரைச்சீலையைப் பிடித்து, அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் உண்மை என்றால், அதை ஏற்றுக் கொள்ளும் பாக்கியத்தைத் தரும்படியும், அது பொய் என்றால் அதனை அழித்து விடுமாறும் துஆ கேட்கத் தயாரா? நீங்கள் உண்மையாளர் என்றால் நாங்கள் பொய்யர்கள் என்றால் உங்கள் துஆவை அல்லாஹ் ஏற்றுக் கொள்வான். உலகில் அப்படி செய்ய முன் வருபவர் யாரும் உண்டா?

8) இறுதி ஹஜ்ஜின் போது நபி (ஸல்) அவர்கள், புனித நகரமாகிய மக்காவையும், புனித ஹஜ் மாதத்தையும், அதன் புனித பத்தாம் நாளைப் போன்றும், ஒவ்வொரு மனிதனின் உயிரும், உடைமையும், மானம் மரியாதையும் புனிதமாகும் என்று கூறினார்கள். ஆனால் புனித நபி (ஸல்) அவர்களின் வாரிசுகள் என்று வாய்கிழிய பேசும் இந்த ஆலிம்கள், அஹ்மதிகளின் உயிர்களையும், உடைமைகளையும், மானம் மரியாதையையும் கொன்றழித்து வருகிறார்கள். இவர்கள் ஆயிரம் முறை ஹஜ் செய்தாலும் அதன் கூலி இவர்களுக்கு கிடைக்குமா?

# VI. அல்லாஹ்வைப் பற்றிய தவறான விளக்கம்

## 22. இறைவன் பேசும் தெய்வமா? பேசாத சிலையா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 19 -ல் காளைக் கன்று என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*மூஸா நபியின் காலடி மண்ணை எடுத்து அதில் போட்டவுடன் அந்தச் சிற்பத்திலிருந்து ஒரு சப்தம் வந்தது. இது தான் கடவுள். மூஸா வழி மாறிச் சென்று விட்டார் எனக் கூறி அம்மக்களை நம்ப வைத்து அதற்கு வழிபாடு நடத்தச் செய்து விட்டான்.*

*(திருக்குர்ஆன் 20:96)*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆன் 20:95-96 வசனத்துக்கு,பீ.ஜே யின் மொழியாக்கம்:

சாமிரியே! உனது விசயமென்ன? என்று (மூஸா) கேட்டார். அவர்கள் காணாததைக் கண்டேன். இத்தூதரின் காலடியில் ஒரு பிடி அள்ளினேன். அதை எறிந்தேன். என் மனம் இவ்வாறு என்னைத் தூண்டியது என்றான்.

தமிழின் பிற தமிழாக்கங்கள் எல்லாம் ஏறக்குறைய இவ்வாறே உள்ளன. அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் மொழியாக்கம்:

சாமிரியே உன் விசயம் என்ன என்று (மூஸா) கேட்டார். அவன் கூறினான், இவர்கள் காணாததை நான் கண்டேன். அந்தத் தூதர் கூறியவற்றுள் சிலவற்றை நான் தேர்ந்தெடுத்துக் கொண்டேன். பின்னர் நான் அவற்றைத் தூக்கி எறிந்து விட்டேன். என் உள்ளம் இதனையே அழகு வாய்ந்ததாக்கிக் காட்டிற்று.



**இந்த வசனத்திற்கு சிலர் தரும் விளக்கத்தைக் காண்போம்:**

1) **அப்துல் வஹ்ஹாப் தன் அடிக்குறிப்பு 194 - ல்,**

அத் தூதர் (ஜிப்ரீலின்) காலடி மண்ணிலிருந்து ஒரு பிடி எடுத்து இக்காளைக்கன்று சிலை மீது நான் போட்டேன். ஏனென்றால் அத்தூதர் காலடி பட்டவுடன் அந்த இடங்களில் புற்பூண்டுகள் பசுமையாகக் கண்டேன் என்று சாமிரி கூறினான் என்று எழுதுகிறார்.

2) **மவ்தூதி 20:96 வசனத்தின் அடிக்குறிப்பு எண் 27 இல்,**

அய்யா! உருக்கப்பட்ட தங்கத்தில் தங்களின் (மூஸா நபி) காலடி மண்ணை நான் போட்டதுமே அதிலிருந்து சிறப்பு வாய்ந்த இக்காளைக் கன்று வெளிப்படலாயிற்று. தங்களின் காலடி மண்ணின் பாக்கியமாகும் இது என்று சாமிரி கூறியதாக எழுதுகிறார்.

3) **தப்ஸீருல் ஹமீதில் 20:96 வசனத்திற்கு உத்தமபாளையம் மவ்லானா தரும் விளக்கமானது,**

ஹஸ்ரத் ஜிப்ரீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் குதிரையின் மீது ஏறி வந்ததையும் அக்குதிரை வழியில் வறண்ட இடங்களில் தன் கால்களை வைக்கும் போதெல்லாம் அக்காலடிபட்ட இடத்திலிருந்து அதே நொடியில் புற்பூண்டுகள் உண்டானதைப் பார்த்து இதில் விசேசமிருக்கிறது எனக்கருதி அதிலிருந்து ஒரு பிடி மண்ணை எடுத்து வைத்துக் கொண்டான் என்று எழுதியுள்ளார்.

4) **பாக்கியாத்துஸ் ஸாலிஹாத் வெளியிட்ட தப்ஸீரில்** ஜிப்ரீல் வந்த குதிரையின் குளம்புபட்ட மண்ணெடுத்து இச்சிலைக்குள் போட்டுப் பார்த்தேன். இது கனைக்கத் துவங்கியது என்று எழுதப்பட்டுள்ளது.

5) **அன்வாருல் குர்ஆன்,** தூதரின் பாதத்தடியிலிருந்து ஒரு பிடியை (மண்ணை) எடுத்து அதன் வாயில் போட்டேன். அது சப்தமிட்டது என்று எழுதப்பட்டுள்ளது.

**மேலே கூறப்பட்ட விளக்கத்திலிருந்து,**

1) ஒருவர் மூஸா நபியின் காலடி மண் என்கிறார். 2) ஒருவர் ஜிப்ரீலின் காலடி மண் என்கிறார். 3) ஜிப்ரீல் வந்த குதிரையின் காலடி மண் என்று ஒருவர் கூறுகிறார். 4) காளைக்கன்றின் சிலையிலிருந்து சப்தம் வந்தது என்கிறார் ஒருவர். 5) உருக்கிய உலோகக் கலவை தானே சிலையாகி சப்தமிட்டது என்கிறார் ஒருவர். 6) ஒருவரோ, குதிரையின் காலடி மண் என்பதால் கன்றின் சிலை கனைத்தது என்கிறார்.

மூஸா நபியின் காலடி மண்ணுக்கு இத்தகு அற்புதம் இருப்பதை இஸ்ரவேல் மக்களும், பிர்அவுனும் அவன் கூட்டாளிகளும் அறியாமல் போனது ஆச்சரியம் தான்.

**மண் எதில் வீசப்பட்டது?**

7) சிலர் காளைக்கன்றின் மீது என்றும், ஒருவர் காளைக் கன்றின் வாயில் என்றும், மற்றொருவர் உருக்கப்பட்ட தங்கத்தில் என்றும் இன்னொருவர் சிலைக்குள் என்றும் கூறுகின்றனர்.

8) மேலே கூறப்பட்டவர்கள் எல்லோரும் மண் என்பதில் ஒன்றுபடுகின்றனர். அந்த மண் எங்கிருந்து வந்தது? **திருக்குர்ஆனில் மூலத்தில் மண் என்றும் வரவில்லை.சிலை என்றும் வரவில்லை. மண்ணையும் சிலையையும் அவர்கள் எங்கிருந்து கொண்டு வந்தார்கள்.** அதாவது மண்ணையும் சிலையையும் குறிக்கும் சொல் குர்ஆனின் மூலப்பாடத்தில் இல்லை. அதனால் சிலர் மண்ணையும் சிலையையும் பற்றி மொழியாக்கத்தில் கூறவில்லை. சிலர் அடைப்புக்குள் மண்ணையும் சிலையையும் போட்டு எழுதியுள்ளனர். அப்துல் ஹமீது பாகவி மண்ணையும் சிலையையும் வெளிப்படையாக எழுதியுள்ளார்

9) திருக்குர்ஆனில் கூறப்படாத சொற்களாகிய மண்ணையும் சிலையையும் விளக்கத்தில் கொண்டு வந்து, நபிமொழியிலும் கூறப்படாத ஒரு கட்டுக் கதையை இவர்கள்



கூறியுள்ளனர். அல்லாஹ்வும் ரஸூலும் கூறாததைக் கூறுபவர்கள் அவர்கள் மீது இட்டுக்கட்டிக் கூறிய குற்றத்திற்கு ஆளாவர். அல்லாஹ் தான் இவர்களை மன்னிக்க வேண்டும்.

**இறுதியாக, பீ.ஜே தர்கா வழிபாடு எனும் நூலின் பக்கம் 37 - ல்,**

ஸாமிரி என்பவன் மூஸா நபியின் காலத்தில் வாழ்ந்தவன். அவன் தங்கத்தால் ஒரு காளை மாட்டைச் செய்து அதை இரத்தமும் சதையும் கொண்ட காளையாக ஆக்கி அதை சப்தமிடச் செய்தான். இந்த விபரங்களைப் பின்வரும் திருக்குர்ஆன் வசனங்களில் அல்லாஹ் கூறுகின்றான். அவர்களுக்காக உடலுடன் கூடிய காளைக்கன்றை (ஸாமிரி) வெளிப்படுத்தினான். அது சப்தமும் போட்டது.....(அல் குர்ஆன் 20:88-90) என்று எழுதியுள்ளார்.

1) படைக்கும் சக்தி அல்லாஹ்வுக்கு மட்டுமே இருக்கின்றது என்று திருக்குர்ஆன் கூறுகிறது. ஆனால் பீ.ஜே அந்த சக்தி சாமிரிக்கும் இருந்தது என்று நம்புகிறார். இது தவறாகும்.

2) திருக்குர்ஆனில் காளைக்கன்று என்று தான் வருகிறது. பீ.ஜே காளைக் கன்றை மாடாக மாற்றி விட்டார்.

3) தங்கத்தால் உருக்கப்பட்ட ஒரு சிற்பம் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. உலோக சிற்பத்தை சதையும், இரத்தமும் கொண்டதாக பீ.ஜே மாற்றி விட்டார்.

4) அதிலிருந்து ஒரு சப்தம் வந்தது என்று திருக்குர்ஆன் கூறுகிறது. அதனால் உயிர் இருக்கிறது என்ற முடிவுக்கு வந்து இரத்தமும் சதையும் அக்கன்றுக்கு பீ.ஜே வைத்து விட்டாரா? இன்றைய நாகரீக உலகில் பிளாஸ்டிக், தகரம் போன்றவற்றால் செய்யப்பட்ட விளையாட்டுப் பொருட்கள் அந்தந்த உருவங்களின் சப்தத்தை வெளியிடுவதால், அதற்கு உடலும், உயிரும், இரத்தமும், சதையும் இருக்கிறது என்று பீ.ஜே ஒப்புக் கொள்வாரா?

5) இன்றைய நவீன கட்டட கலைஞர்களும் வியக்கவும் திகைக்கவும் செய்யுமளவுக்கு பிரமிடுகளைப் படைத்து பிரமிக்க

வைத்த எகிப்தியர்களுடன் வாழ்ந்த சாமிரி ஒரு காளைக்கன்றின் உலோக சிற்பத்திலிருந்து ஒரு சப்தத்தை கொண்டு வர முடியாதா?

மொத்தத்தில் சாமிரிக்கு படைக்கும் ஆற்றல் வழங்கி அவனை அல்லாஹ்வின் தகுதிக்கு உயர்த்தி விட்டார்கள். இவர்கள் தங்களைத் தவ்ஹீது வாதி என்று தம்பட்டம் அடிப்பது தான் இந்த நூற்றாண்டின் ஈடிணையில்லா ஜோக்.

6) 20:90 -ல் அந்தக் கன்றுக் குட்டி அவர்களுக்கு எவ்விசயத்திற்கும் பதிலளிக்கவில்லை என்பதையும், மேலும் அவர்களுக்கு எந்தத் தீமையையோ நன்மையையோ செய்ய அதற்குத் தகுதியில்லை என்பதையும் அவர்கள் காணவில்லையா ? என்று இறைவன் கேட்கிறான். இதிலிருந்து நாம் தெரிவது என்னவென்றால், **கடவுள் என்றால், அவர் பேச வேண்டும்; தீமையோ நன்மையோ செய்ய வேண்டும்.** இந்த கன்றின் சிலை பேசாது. தீமையோ நன்மையோ செய்யாது. எனவே இது கடவுள் இல்லை. சிலை என்பதாகும்.

பீ.ஜே யும் அவரைப் போன்றோரும், அல்லாஹ் வஹி அனுப்புவதை நிறுத்தி விட்டான். அதாவது பேசுவதை நிறுத்தி விட்டான் என்று நம்புகின்றனர். அப்படி என்றால், அல்லாஹ்வை சிலையாகிய பொய்த் தெய்வம் என்று நம்புவதாகும். (நவூதுபில்லாஹ்) என்பது விளங்கவில்லையா ?

41:31-32 எங்கள் இறைவன் அல்லாஹ் எனக்கூறி, அதில் நிலைத்திருப்பவர்களிடம் நீங்கள் அஞ்சவும் வேண்டாம்; கவலைப்படவும் வேண்டாம்; உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட சொர்க்கத்தைப் பற்றிய நற்செய்திகளை ஏற்றுக் கொள்ளுங்கள் என்று (கூறியவாறு) வானவர்கள் இறங்குவர். (மேலும் அவர்கள்) நாங்கள் இவ்வுலக வாழ்க்கையிலும், மறுமையிலும் உங்கள் நண்பர்கள் என்றும் கூறுவர். வஹீ வரும் என்பதை இவ்வசனங்கள் காட்டவில்லையா?



## 23. இவ்வுலகில் இறைவனைக் காண முடியும்!

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 21 இல் பீ.ஜே இறைவனைக் காண முடியுமா ? என்னும் தலைப்பில் இவ்வாறு எழுதியுள்ளார் :**

*இறைவனை இவ்வுலகில் காண முடியாது என்ற கருத்தை வலியுறுத்தி எழுதியுள்ளார்.*

*அவனை பார்வைகள் அடைய முடியாது. அவனோ பார்வைகளை அடைகிறான் என்று அல்லாஹ் கூறுகிறான் (திருக்குர்ஆன் 6:103)*

**நம் விளக்கம்:**

இறைவனை இவ்வுலகில் யாரும் புறக்கண்ணால் காண முடியாது. ஆனால் அகக் கண்ணால் காண முடியும் என்பதை பீ.ஜே எடுத்துக் காட்டிய திருக்குர்ஆன் வசனம் கூறுகிறது.

உலகில் யாரும் அவனைப் புறக்கண்ணால் காண முடியாது. அவனோ அகக்கண்ணின் மூலம் பார்வைகளை அடைகிறான். மறுமையில் அல்லாஹ்வை காண முடியும் என்று நபிமொழி மூலம் அறிகிறோம். இம்மையில் குருடராக இருப்பவர் மறுமையிலும் குருடராகவே இருப்பார் (17:73) என்ற திருக்குர்ஆன் வசனம், இம்மையில் யார் தம் அகக்கண் மூலம் அல்லாஹ்வை காணவில்லையோ அவர்கள் மறுமையிலும் காண முடியாது என்பதை விளக்குகிறது.

திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 21 இல், திருக்குர்ஆன் 6:104 வசனத்துக்கு அவனைப் பார்வைகள் அடையாது; அவனோ பார்வைகளை அடைகிறான் என்று பொருள் கூறும் பீ.ஜே, தன் தர்ஜுமாவில்,

**அவனைக் கண்கள் பார்க்காது; அவனோ கண்களைப் பார்க்கிறான் என்று தவறான பொருளைக் கூறியுள்ளார்.** இவ்வாறு தவறான பொருளை பீ.ஜே கூறுவதன் காரணம் இவ்வுலகில்

இறைவனை அகக்கண்ணாலும் காண முடியாது என்ற தன் கருத்தை தவறான பொருளின் மூலம் நிலை நாட்ட முயன்றுள்ளார்.

ஹஸ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், புறத்தில் இறைவனைப் பார்க்க முடியாதே தவிர அகத்தில் இறைவனைப் பார்க்க முடியும் என்று கூறியுள்ளார்கள். நபி (ஸல்) அவர்கள் தமது அகத்தால் இறைவனை இரண்டு முறை பார்த்துள்ளார்கள் என்று கூறியுள்ளார்கள். **(முஸ்லிம் 285)** இது அக்ககண்ணால் அல்லாஹ்வை பார்க்க முடியும் என்பதை உறுதி செய்கிறது. பீ.ஜே கூறுகிறார் : இவ்வுலகில் இறைவனைக் காண முடியும் என்ற நம்பிக்கையினால் மனித குலத்துக்கு கேடு தான் ஏற்படும். நன்மை ஏற்படாது என்று எழுதுகிறார். இது தவறான வாதமாகும். நாத்திகர்கள், இறைவன் உண்டு; மறுமை உண்டு என்ற நம்பிக்கையினால் மனித குலத்துக்கு கேடு தான் ஏற்படும். நன்மை ஏற்படாது என்று கூறுவதற்கும் பீ.ஜே கூறுவதற்கும் அணுவளவும் வித்தியாசம் இல்லை.

இறைவனை இவ்வுலகில் அகக்கண்ணால் காண முடியும் என்று ஒருவன் நம்பி அவனைக் கண்டறிவதே அறிவுடைமையாகும்.

திருக்குர்ஆன் 17:73 வசனம், இந்த உலகத்தில் குருடராக இருப்பவர், மறுமையில் குருடராகவே இருப்பார் என்று கூறுகிறது. இந்த வசனம் இவ்வுலகில் இறைவனைக் காண முடியும் என்றும், அகக்கண்ணால் இவ்வுலகில் இறைவனைக் காணாதவர்கள் மறுமையில் குருடராகவே இருப்பார்கள் என்றும் கூறுகிறது.

**பீ.ஜே எழுதுகிறார்:**

*தாம் இறைவனைப் பார்த்ததாக எத்தனையோ ஆன்மீகவாதிகள் மக்களை ஏமாற்றி விடுகின்றனர். இறைவனை எவரும் காண முடியாது என்று மக்கள் நம்பினால் ஆன்மீகத்தின் பெயரால் நடக்கும் பெருமளவிலான மோசடியை ஒழித்து விட முடியும். இது பீ.ஜே யின் வாதம்.*



இறைவன் இருப்பதாகக் கூறி எத்தனையோ ஆன்மீக வாதிகள் மக்களை ஏமாற்றி வருகின்றனர். இறைவன் இல்லை என்று மக்கள் நம்பினால் ஆத்மீகத்தின் பெயரால் நடக்கும் பெருமளவிலான மோசடியை ஒழித்து விட முடியும் என்று இறை மறுப்பாளர்கள் கூறுவதற்கும், பீ.ஜே யின் வாதத்திற்கும் இடையில் இம்மியளவும் வேறுபாடில்லை.

இறைவனை அகக்கண்ணால் காண முடியும் என்பது உண்மையா? பொய்யா? என்பதைக் காண வேண்டும். உண்மை என்றால் நன்மைதான் விளையும். பொய் என்றால் கேடுதான் விளையும் என்று நம்புவதே அறிவுடையோரின் செயலாகும்.

## கனவும் இறைச் செய்தியும்

1) நபி (ஸல்) அவர்களுக்கு துவக்கத்தில் இறைச்செய்தி தூக்கத்தில் தோன்றும் நல்ல கனவுகளிலேயே வந்தது. அப்போது அவர்கள் எந்தக் கனவு கண்டாலும் அது அதிகாலைப் பொழுதின் விடியலைப் போலத் தெளிவாக இருக்கும். (புகாரி ஹதீஸ் எண் 3)

ஹஸ்ரத் இப்ராஹீம் நபி (அலை) அவர்கள் தன் மகனை அறுப்பது போல் கண்ட கனவும் ஓர் இறைச் செய்தியே. அதனால் தான் இஸ்மாயீல் (அலை) அவர்கள் தந்தையே! அல்லாஹ் உங்களுக்கு இட்ட கட்டளையை நிறைவேற்றுங்கள் என்று கூறி தந்தை கண்ட கனவை இறை கட்டளை என்று கூறுகிறார்.

புறக்கண்ணை விட அகக்கண்ணுக்கு ஆற்றல் மிகமிக அதிகம் என்பதினாலும் இறைவன் தன் கட்டளைகளையும், வஹீயையும், இறைக் காட்சியையும் அகக்கண் மூலம் காட்டுகிறான். மிஃராஜில் அல்லாஹ்வை தன் அகக்கண்ணால் இரு முறை கண்டதைத் திருக்குர்ஆன் கூறுகிறது (53:12,14) ஹஸ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் இதனையே (முஸ்லிம் 285) கூறியுள்ளார்கள்.

எனவே, இம்மையில் இறைவனை அகக் கண்ணால் காண முடியும் என்று திருக்குர்ஆனும் நபிமொழியும் கூறுகிறது. இவ்வாறு

காண முடியாது என்பவர்கள் வேறுபட்ட கருத்தைக் கூறுகின்றனர் என்பது தெளிவு.

மேலும், மூஸா நபி, என் இறைவா! நான் உன்னைப் பார்க்கும் பொருட்டு நீ (உன்னை) எனக்குக் காட்டுவாயாக என்று வேண்டினார். இதற்கு அவன் உம்மால் என்னை ஒரு போதும் காணவியலாது. (7:144) என்று கூறுகிறான். அதாவது புறக்கண்ணால் தன்னைக் காண வியலாது என்றே இறைவன் கூறுகிறான். அதனை நிரூபிக்க மலையைத் தவிடு பொடியாக்கிக் காட்டுகிறான். அவ்வளவு ஏன் ? நம் புறக்கண்ணால் சூரியனின் ஒளியைக் காணும் போது கண் கூசுகிறது. எனவே, ஒளிமயமான இறைவனைப் புறக்கண்ணால் காண முடியாது. அகக் கண்ணால் காண முடியும் என்பதையே அந்த உள்ளம் தான் கண்டதைக் குறித்துப் பொய்யுரைக்கவில்லை. அவர் பார்த்தது குறித்து நீங்கள் அவருடன் வாக்குவாதம் செய்கிறீர்களா ? நிச்சயமாக அவர் மற்றொரு முறையும் அவனைக் கண்டார். (53:12-14) இந்த வசனங்கள் கூறுகின்றன.

உள்ளம் கண்டது என்றும், மறு முறையும் அவனைக் கண்டார் என்றும், இறைவனை நபி (ஸல்) அவர்கள் மிஃராஜில் தன் அகக் கண்ணால் இருமுறை கண்டது கூறப்பட்டுள்ளது. **மேலும் மக்கள் அவருடன் வாக்குவாதம் செய்தது மிஃராஜ் சம்பவத்தைத் தானே தவிர, ஜிப்ரீல் (அலை) அவர்களைச் சந்தித்தது பற்றி அன்று.** இச்சம்பவங்கள் மிஃராஜ் சம்பவங்கள் என்பதை நபிமொழியுடன் ஒப்பு நோக்கிப் பார்த்தால் தெளிவாகும். திருக்குர்ஆன் முதல் வசனம் இறங்கும் போதே நபி (ஸல்) அவர்கள், ஜிப்ரீல் (அலை) அவர்களை ஹிரா குகையில் கண்டுவிட்டார்கள். அதன் பின்னர் பல முறை அவர்களைக் கண்டு விட்டார்கள். எனவே மிஃராஜின் போது நபி (ஸல்) அவர்கள் தன் மனக்கண்ணால் கண்டது இறைக்காட்சியைத் தவிர ஜிப்ரீல் (அலை) அவர்களை அல்ல.

மேலும் மிஃராஜ் பயணத்தின் இறுதியில் **அல்லாஹ்வின் பெயர் கூறி இறங்குங்கள்** என்று ஜிப்ரீல் கூற ஹஸ்ரத் நபி (ஸல்)



அவர்கள் **புனித பள்ளியில் விழித்து எழுந்தார்கள்** (புகாரி 7517) என்று நபிமொழியில் காணப்படுகிறது.

புனிதப்பள்ளியில் விழித்து எழுந்தார்கள் என்பதிலிருந்து நபி (ஸல்) அவர்கள் பள்ளியில் தூங்கிக் கொண்டிருந்தார்கள் என்பதும், அல்லாஹ்வின் பெயர் கூறி இறங்குங்கள் என்பது தூக்கத்தின் போது அல்லாஹ்வைக் கண்டது ரூஹ் என்பதும் மிஃராஜில் இருமுறை அல்லாஹ்வை கண்டது ரூஹ் ஆகிய ஆத்மா என்றும் புறக்கண் இல்லை என்றும் தெளிவாகிறது.

## 24. வானவர்களும் ஜிப்ரீலும் அல்லாஹ்விடம் ஏறிச் செல்லும் கால அளவு

*பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவனை எண் 293 இல், ஒரு நாள் என்பது 1,82,50,000 நாட்களுக்கு நிகரானது. மேலும் பீ.ஜே, வானவர்களும் ஜிப்ரீலும் ஒரு நாளில் சென்றடையும் தூரத்தை நாம் சென்றடைய 1,825,0000 நாள்கள் ஆகும். இது வேகத்தைக் குறிக்க வருவதாகும் என்று கூறுகிறார்.*

**நம் விளக்கம்:**

வானவர்களும் ஜிப்ரீலும் ஐம்பதாயிரம் ஆண்டு அளவுடைய ஒரு காலத்தில் அவனிடம் ஏறிச்செல்கின்றனர் என்ற திருக்குர்ஆன் 70:4 வசனம் இறைவனின் கணக்கின்படி உள்ள கால அளவைக் குறிக்கும். திருக்குர்ஆன் 22:48, 32:6 ஆகிய வசனங்களில் இறைவனிடம் ஒரு நாள் என்பது நீங்கள் கணக்கிடும் ஆயிரம் வருடங்களைப் போன்றது என்று கூறப்பட்டுள்ளது.

எனவே இறைவனின் கணக்கின்படி, 50,000 ஆண்டு கால அளவை மனித கணக்கின் அளவில் கூற வேண்டும் என்றால், 50,000 X 365 என்பது இறைவனின் நாட்கள் ஆகும். அல்லாஹ்விடம் ஒரு நாள் என்பது மனித கணக்கின்படி, 1000 வருடங்கள் என்றால் 50,000 X 365 X 1000 வருடங்கள் ஆகும். அதாவது வானவர்களும் ஜிப்ரீலும் இறைவனிடம் ஏறிச்செல்லும் கால அளவு இறைவன்

கணக்கின்படி 50,000 ஆண்டுகள் என்றும், மனித கணக்கின்படி 50,000 x 365 x 1000 வருட கால அளவு என்றும் வரும். அதாவது 1,82,500,0000 ஆண்டுகள் ஆகும்.

மேலும் வேகம் என்ற சொல்லோ, வேகத்தைக் குறிக்கும் கருத்தோ 70:4 இல் கூறப்படாததினால் இது வேகத்தைக் குறிக்கும் என்ற பீ.ஜே யின் கருத்து தவறாகும்.

## 25. திருக்குர்ஆன் ஜிப்ரீலின் கூற்று இல்லை

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை 492 -ல் குர்ஆன் ஜிப்ரீலின் கூற்றா? அல்லாஹ்வின் கூற்றா? எனும் தலைப்பில் பீ.ஜே. எழுதுகிறார்: (12-வது பதிப்பு)**

*அனைத்து படைப்புகளையும் படைப்பதற்கு முன்பே அல்லாஹ் மட்டுமே இருந்த போது இனி என்னென்ன நடக்குமோ அவை அனைத்தையும் ஒரு ஏட்டில் பதிவு செய்து விட்டான். அதன்படியே இப்பிரபஞ்சமும் இயங்குகிறது. அந்தப் பதிவேட்டில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இறை தூதராக அனுப்பப்படுவார்கள் என்பதும் அவர்களுக்குத் திருக்குர்ஆன் அருளப்படும் என்பதும் திருக்குர்ஆனின் ஒவ்வொரு வசனமும் உள்ளிட்ட அனைத்து விபரங்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன.*

*...இப்படி ஒரு நிகழ்ச்சி நடக்கும். அப்போது இவ்வசனங்கள் அருளப்படும் என்றும் அல்லாஹ் அந்தப் பதிவேட்டில் எழுதி விட்டான். அந்தப் பதிவேட்டில் உள்ளதை அல்லாஹ் உத்தரவிடும் போது ஜிப்ரீல் கொண்டு வருவார். இதன்படி பார்த்தால் செய்தி அல்லாஹ்வுடையது; குரல் ஜிப்ரீல் உடையது. அல்லாஹ்வுடைய குரலில் நபியவர்களுக்கு திருக்குர்ஆன் அருளப்படவில்லை.*

*செய்தி அல்லாஹ்வுடையது என்ற அடிப்படையில் அல்லாஹ்வின் வேதம் என்றும் சொல்லலாம். அதைத் தன் குரலில் வாசிப்பவர் என்ற அடிப்படையில் ஜிப்ரீலின் கூற்று என்றும்*



*சொல்லலாம். ஜிப்ரீலின் சொல் என்று கூறப்படுவதற்கு இன்னொரு காரணமும் உண்டு என்று எழுதியுள்ளார்.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆன் 42:52 வசனத்தில், அல்லாஹ் மனிதர்களிடம் மூன்று வகைகளில் பேசுவதாகக் கூறுகிறான். அவை 1) வஹீ மூலம் நேரடியாக, 2) திரைக்கப்பால் இருந்து, 3) தன் தூதராகிய வானவர் மூலம்.

**இதில் முதல் வகையாகிய வஹீ என்பது, திருக்குர்ஆன் 19:12வது வசனத்தில்,**

இதன் பின்னர் அவர் (ஸக்கரிய்யா) தமது (தொழும்) இடத்திலிருந்து வெளியேறித் தம் சமுதாயத்தினரிடம் சென்று பகலும் இரவும் (இறைத்) தூய்மையைப் புகழ்ந்து கொண்டிருங்கள் என்று சைகை மூலம் அவர்களுக்குக் கூறினார்.

**திருக்குர்ஆன் 6:113 வசனத்தில்,**

நாம் மனிதர்களிலிருந்தும் ஜின்களிலிருந்தும் சய்த்தான்களை ஒவ்வொரு நபிக்கும் பகைவர்களாக ஆக்கியுள்ளோம். அவர்கள் ஒருவர் மற்றவரை ஏமாற்றுவதற்காக பகட்டு மொழிகளால் தீய எண்ணத்தை உருவாக்குகின்றனர்.

இவ்வசனங்களில் **வஹீ எனும் சொல் இடம் பெற்றுள்ளது.** இதில் ஒருவர் மற்றவர்க்குத் **தன் கருத்துகளை நேரடியாகத் தெரிவித்தல்** என்றே திருக்குர்ஆன் கூறுகிறது.

**திருக்குர்ஆன் 20:39-40 வசனங்களில்,**

உம் தாயாருக்கு நாம் வஹீ அறிவித்த போது, அவ்வஹீயானது, நீர் அவரை (மூஸாவை)ப் பேழையில் வைத்து பின்னர் அதனை நதியில் வைத்து விடுவீராக. நதி அதனைக் கரையில் கொண்டு வந்து சேர்த்து விடும். எனக்கும் அவருக்கும் பகைவனாக இருப்பவன் அவரை எடுத்துக் கொள்வான். நீர் என் கண்

முன்னால் வளர்க்கப்படுவதற்காக நான் உமக்கு என்னிடமிருந்து அன்பைச் சொரிந்தேன் என்று அல்லாஹ் மூஸாவின் தாயிடம் **தன் குரல் மூலம் பேசிய பேச்சும் வஹீ** என்று வருகிறது.

**திருக்குர்ஆன் 5:112வது வசனத்தில்,**

நான் (ஈசாவின்) சீடர்களிடம் என்னிடத்தும் என் தூதரிடத்தும் நம்பிக்கை கொள்ளுங்கள் என்று (வஹீ) இறை அறிவிப்பு இறக்கிய போது...

இதில் அல்லாஹ் ஈசா நபியின் சீடர்களிடம் இறக்கிய வஹீயைப் பற்றிக் கூறுகிறான்.

மேலே கூறிய வசனங்களைத் தொகுத்துப் பார்த்தால், அல்லாஹ் தன் நல்லடியார்களான மூஸா நபியின் தாயிடமும், ஈசா நபியின் சீடர்களிடமும் தன் குரல் மூலம் **நேரடியாகப் பேசிய பேச்சுகளே வஹீ** என்று கூறப்பட்டுள்ளது.

**அல்லாஹ் நூஹ் நபியுடன் தன் வஹீ மூலம் பேசிய சம்பவம்: திருக்குர்ஆன் 23:28.**

அதற்கு நாம் அவருக்கு இவ்வாறு வஹீ அறிவித்தோம். நீர் எம்முடைய கண்களுக்கு முன்னால் எமது வஹீக்கு ஏற்ப கப்பலைக் கட்டுவீராக. எனவே எமது கட்டளை வந்து, பூமியில் நீரூற்று பெருக்கெடுத்து ஓடும் போது, ஒவ்வொரு பிராணியிலிருந்தும் இரு இணைகளையும் உம்முடைய உறவினர்களுள் எவர்களுக்கு எதிராக எம் கட்டளை முன்பே இறங்கி விட்டதோ அவர்களைத் தவிர ஏனையவர்களையும் (கப்பலில்) ஏற்றிக் கொள்வீராக. அநீதியிழைத்தவர்கள் குறித்து நீர் எம்மிடம் எதுவும் பேசாதிருப்பீராக. ஏனென்றால் நிச்சயமாக அவர்கள் மூழ்கடிக்கப்படுவார்கள்.

இதில் அல்லாஹ்வின் குரல் மூலம் நேரடியாகப் பேசிய பேச்சு கூறப்பட்டுள்ளது.



இந்த வஹீ என்னும் சொல் தான் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்கும் அனுப்பப்பட்டதாக திருக்குர்ஆன் கூறுகிறது. திருக்குர்ஆன் 6:51வது வசனம், எனக்கு இறைவனிடமிருந்து வஹீயின் மூலம் அறிவிக்கப்படுவதையே நான் பின்பற்றுகிறேன் என்று கூறுகிறது. இந்த வஹீ நபி (ஸல்) அவர்களுக்கு அனுப்பப்பட்டதாக திருக்குர்ஆன் பற்பல இடங்களில் கூறுகிறது. (7:204; 10:16; 10:110; 11:13; 18:111; 20:14; 21:109 இன்னும் பல) இவ்வசனங்கள் அல்லாஹ் நபி (ஸல்) அவர்களிடம் தன் குரல் மூலம் நேரடியாகப் பேசியுள்ளான் என்பதை தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

அடுத்து பீ.ஜே., **திருக்குர்ஆனை ஜிப்ரீலின் கூற்று என்றும் சொல்லலாம்** என்று எழுதியுள்ளார்.

**நம் விளக்கம்:**

2002 கலவரம் தொடர்பாக அவர் இதுவரை நாட்டு மக்களிடம் வருத்தமும் தெரிவிக்கவில்லை. கலவரத்தைத் தடுக்கத் தவறிய குற்றத்திற்காக மன்னிப்பும் கோரவில்லை. (ஆதாரம் : மூத்த பத்திரிகையாளர் என். ராம் கூறிய கூற்று)

இதனை தி இந்து, 7:11-13 - பக்கம் 9 -இல் வெளியிட்டுள்ளது. 2002 -இல் குஜராத்தில் நடந்த இனப்படுகொலை சம்பந்தமாக மோடியைக் குறித்த செய்தியாகும். இச்செய்தியை எனக்கு வாசித்துக் காட்டியவர் என் நண்பர் ஒருவர். இச்செய்தியைத்தான் நான் உங்களுக்கு எடுத்து எழுதியுள்ளேன்.

இதுபற்றி என் கேள்வி என்னவென்றால்,

1) இச் செய்தி என்.ராம் உடையதா?
2) தி இந்து பத்திரிகை உடையதா?
3) என் நண்பருடையதா?
4) என்னுடையதா?

இதனை வாசகர்களின் சிந்தனைக்கு விட்டு விடுகிறேன்.

ஒருவர் தன் தாயாருக்கு ஒரு கடிதம் எழுதுகிறார். அதனைத் தபால்காரர் அத்தாயிடம் கொடுக்கும் போது, அம்மா, உங்கள் மகன் உங்களுக்கு எழுதிய கடிதம் என்று கொடுக்கிறார். அதற்கு அநதத்தாய், ஐயா அதை எனக்கு வாசித்துக் காட்டுங்கள் என்று கேட்க, தபால்காரர் வாசித்துக் காட்டுகிறார் என்று வைத்துக் கொள்வோம். அதனைப் பற்றி அந்தத் தாய் பிறரிடம், என் மகன் எனக்கு எழுதிய கடிதத்தில் இந்த இந்த செய்திகளை எழுதியுள்ளான் என்று கூறுவாளே தவிர, தபால்காரர் இந்த இந்த செய்திகளை என்னிடம் சொன்னார் என்று கல்வியறிவில்லாத அந்தப் பெண் பிறரிடம் கூறமாட்டாள்.

திருக்குர்ஆனை ஜிப்ரீலின் சொல்தான் என்ற வாதத்தில் பீ.ஜே. உறுதியாக இறுதி வரை நிலைப்பார் என்றால், அவர் இனிவரும் திருக்குர்ஆன் தமிழாக்க வெளியீடுகளில் முகப்பு அட்டையில் ஜிப்ரீலின் சொற்களாகிய திருக்குர்ஆன் என்று அச்சிட்டு வெளியிடத் தயாரா?

திருக்குர்ஆனில் ரஸூல் என்ற சொல், நபியைக் குறிக்கவும், மலக்கைக் குறிக்கவும் வருவது போல், எகிப்திய மன்னன், தான் கண்ட கனவின் செய்தியை யூசுப் நபியிடம் கூறி விளக்கம் கேட்கச் சென்ற தூதருக்கும் வருகிறது. எனவே இவர்கள் ஒருவரிடமிருந்து ஒரு செய்தியை அப்படியே பிறரிடம் எடுத்துக் கூறுகிறார்கள்; அவ்வளவுதான். எனவே திருக்குர்ஆன் அல்லாஹ்வின் சொல்லே தவிர, ஜிப்ரீலின் சொல்லோ, ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் சொல்லோ இல்லை. அல்லாஹ் திருக்குர்ஆன் வசனங்களைத் தன் குரல் மூலமும் ஜிப்ரீல் மூலமும் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிவித்துள்ளான்.



# VII. மலக்குகளைப் பற்றிய தவறான விளக்கம்

## 26. மலக்குகள்

*ஈமான் கொள்ள வேண்டியவற்றுள் ஓர் அம்சம் மலக்குகள் மீது ஈமான் கொள்வதாகும். மலக்குகளைப்பற்றி பீ.ஜே தன் திருக்குர்ஆன் விளக்கம் எனும் நூலில் பில்லி சூனியம் என்ற தலைப்பில் இவ்வாறு எழுதுகிறார் :*

*மனிதனின் தகுதியைப்பற்றி முன்பே விமர்சனம் செய்து அந்த விமர்சனம் தவறு என்று இறைவன் விளக்கிய பிறகு தவறு என்று ஒப்புக் கொண்டவர்கள் வானவர்கள்.*

*இத்தகைய இயல்பு படைத்த வானவர்கள் இன்னொரு முறை எப்படி இறைவனிடம் ஆட்சேபனை செய்திருப்பார்கள்? மலக்குகள் ஆரம்பத்தில் ஆட்சேபனை செய்தபோது அவர்களுடன் சைத்தான் இருந்தான். மேற்கண்டவாறு ஆட்சேபனை செய்யுமாறு அவர்களை அவன் தூண்டி விட்டிருக்க முடியும்?*

*சைத்தான் அவர்களை விட்டும் வெளியேற்றப்பட்ட பிறகு முதல் ஆட்சேபனைக்காக ஏற்கனவே சூடுபட்டிருந்த மலக்குகள் எப்படி மறுபடியும் ஆட்சேபனை செய்திருப்பார்கள்?*

**நம் விளக்கம்:**

**சொர்க்கத்தில் மலக்குகளுடன் சைத்தானும் இருந்ததால் ஆதமின் படைப்பு பற்றி ஆட்சேபனை செய்யுமாறு அவர்களை அவன் தூண்டி விட்டிருக்க முடியும்** – என்று பீ.ஜே எழுதுகிறார்.

**இந்த அபத்தமான கருத்துக்கு பீ.ஜே,**

1. திருக்குர்ஆன் மற்றும் நபிமொழி ஆதாரம் தரமுடியுமா ?
2. அல்லாஹ் அவர்களுக்கு (மலக்குகளுக்கு) எதைக் கட்டளை இடுகின்றானோ அதற்கு அவர்கள் மாறு செய்யமாட்டார்கள்

(திருக்குர்ஆன் 66:6) என்ற இறைவசனத்திற்கு மாற்றமாக, சைத்தானின் தூண்டுதலுக்கு இரையாகி மலக்குகள் ஆட்சேபனை செய்து, சூடுபட்டார்கள் என்று பீ.ஜே-யினால் எப்படி எண்ண முடிகிறது ?

**இரண்டாவதாக கலைச் சொற்கள் (அரபி) எனும் தலைப்பில், இப்லீஸ் எனும் சிறு தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார் :**

*முதல் மனிதர் ஆதம் படைக்கப்படுவதற்கு முன் நல்லோரில் ஒருவனாக இருந்தான் இப்லீஸ்.*

**நம் விளக்கம்:**

இவருடைய இக்கூற்றுக்கு, திருக்குர்ஆன், நபிமொழி ஆதாரங்களை இவர் காட்ட முடியுமா? **அவன் (ஏற்கனவே) நிராகரிப்பவர்களைச் சேர்ந்தவனாக இருந்தான் (2:35)** என்று திருக்குர்ஆன் கூறுகிறது. எனவே இப்லீஸ் நல்லவனாக இருந்தான் என்ற பேச்சுக்கே இடமில்லை என்றும் அவன் நிராகரிப்பவனாகவே இருந்தான் என்றும் இவ்வசனம் கூறுகிறது.

**மூன்றாவதாக வானவர்களை - மலக்குகள் நம்புதல் எனும் தலைப்பில் வானவர்கள் நரகின் காவலர்கள் எனும் சிறு தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*வானவர்கள் சொர்க்க வாசிகளுக்குப் பணிவிடை செய்வார்கள். -13:23, 15:46, 21:103, 41:31.*

**நம் விளக்கம்:**

பீ.ஜே குறிப்பிட்டுள்ள திருக்குர்ஆன் வசனங்களை நாம் பார்க்கின்ற போது மலக்குகள் பணிவிடை செய்தார்கள் என்று எங்கும் வரவில்லை. மாறாக, அவர்கள் சொர்க்கத்தில் நுழைந்து சுவர்க்கவாசிகளுக்கு ஸலாம் கூறுவார்கள் என்றும் சொர்க்கவாசி -களுக்கு கிடைக்கக்கூடிய அருட்கொடைகளை எடுத்துக்கூறுவார்கள் என்றுமே வருகிறது. எனவே பீ.ஜே கூறியுள்ள மலக்குகள் பணிவிடை செய்வார்கள் என்பது தவறான கருத்தாகும்.



**நான்காவதாக, மரணத்தின் போது ரூஹைக் கைப்பற்றும் மலக்குகளை மலக்குல் மவ்த் என்று திருக்குர்ஆன் கூறுகிறது.**

பீ.ஜே சுயமாக தரும் விளக்கத்தின் அடிப்படையில், ஈஸா நபி இறந்தவர்க்கு உயிர் கொடுத்தார் என்றால், மலக்குல் மவ்த்தால் கைப்பற்றப்பட்ட உயிர்களைத் திரும்ப அவர்களின் உடலில் புகுத்தும் மலக்கின் பெயர் என்ன? அந்த மலக்கு அப்படி ஒரு செயலைச் செய்வார் என்பதற்கு திருக்குர்ஆன் மற்றும் நபிமொழி ஆதாரம் உண்டா?

# VIII. நபிமார்களைப் பற்றிய தவறான விளக்கம்

## 27. ஆதம் நபி பற்றிய தவறான விளக்கம்

**(திருக்குர்ஆனுக்கு தவறான விளக்கம் வசனம் எண் 2:38)**

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 15 இல் அனைவரும் வெளியேறுங்கள் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*ஆதம் (அலை) அவரது மனைவி ஆகிய இருவரைத்தான் அல்லாஹ் வெளியேற்றினான். அனைவரும் வெளியேறுங்கள் என்று ஏன் திருக்குர்ஆன் 2:38 வசனத்தில் குறிப்பிட வேண்டும் ? என்று சிலர் நினைக்கலாம்.*

*உலகில் அழியும் வரை தோன்றும் அனைவரையும் அவ்விருவரும் தமக்குள் சுமந்திருந்தார்கள். அவர்களிடமிருந்து தோன்ற இருப்பவர்களையும் கருத்தில் கொண்டு இவ்வாறு கூறப்பட்டுள்ளது.*

**நம் விளக்கம்:**

1. ஆதம் நபி செய்த தவறுக்காக ஆதம் நபியும் ஹவ்வாவும் சொர்க்கத்திலிருந்து வெளியேற்றப்பட்டனர். இதனால் கியாமத் வரை உள்ள எல்லாரும் சொர்க்கத்தினை இழந்து விட்டோம்

என்று பீ.ஜே கருதுகிறார். ஆதம் செய்த பாவம் பரம்பரை பரம்பரையாக மனித இனம் முழுவதும் பரவுகிறது. இது பரம்பரை பாவம் ஆகும் என்பது கிறிஸ்தவக் கொள்கையாகும். ஆதம் நபி செய்த தவறுக்காக நாமும் சொர்க்கத்தை இழந்து விட்டோம் என எண்ணுவது பீ.ஜே கொண்டுள்ள கிறித்தவக் கொள்கை ஆகும்.

2. பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 189 – ல், ஆதமின் முதுகுகளிலிருந்து என்று மட்டும் கூறினால் அவருடைய நேரடிப் பிள்ளைகளை மட்டுமே எடுத்துக் கொள்ளும். ஆதமுடைய **மக்களின்** முதுகுகளிலிருந்து என்று கூறினால் ஆதமுடைய நேரடி மக்களையும், அந்த மக்கள் வழியாக தொடர்ந்து வரக்கூடிய அனைத்து மக்களையும் குறிக்கும். எனவே மிகவும் பொருத்தமாகவே இவ்வார்த்தை பயன்படுத்தப்பட்டுள்ளது. (திருக்குர்ஆன் 7:172) என்று எழுதுகிறார்.

பீ.ஜே யின் இந்த வாதத்தின்படி இங்கு கியாமத் வரை உள்ளவர்கள் அனைவரும் வெளியேறுங்கள் என்ற பொருள் கொடுக்க வேண்டுமென்றால் 2:38 வது வசனத்தில் ஆதமின் சந்ததிகள் அனைவரும் வெளியேறிவிடுங்கள் என்று வந்திருக்க வேண்டும். ஆனால், இங்கு அவ்வாறு வரவில்லை. மாறாக இஹ்பித்தூ ஜமீஆ என்று மட்டுமே வந்துள்ளது.

இவ்விடத்தில் ஜமீஆ என்ற சொல் வருவதால் கியாமத் வரை வரும் மனிதர்கள் அனைவரையும் குறிக்கும் என்று கூறுவதாயின் பீ.ஜே வகுத்த இலக்கணத்தின்படி இஹ்பித்தூ ஜமீஆ என்பதுடன் **சந்ததிகள்** என்ற சொல்லும் வந்திருக்க வேண்டும். அவ்வாறு வராததால் பீ.ஜே யின் வாதத்தின்படி பார்த்தால் கூட இங்கு ஆதமுடன் வாழ்ந்த மக்களை மட்டுமே குறிக்கும் என்பது நிரூபணம் ஆகிறது.



3. நீங்கள் அனைவரும் வெளியேறுங்கள் என்று அல்லாஹ் கூறியிருக்கும் போது அதனை அப்படியே பொருள் கொள்வது தான் அல்லாஹ்வுடைய வார்த்தைக்கு கொடுக்கும் கண்ணியமாகும். அதனை விட்டு விட்டு கற்பனையாக சுயவிளக்கம் தருவது அல்லாஹ்வின் வார்த்தைக்கு மீறிய விளக்கமாகும். இதற்கு நபிமொழி ஆதாரம் எதுவும் இருந்தால் பீ.ஜே தரும் வரம்புமீறிய விளக்கத்தை ஏற்றுக் கொள்ளலாம்.
4. அனைவரும் வெளியேறி விடுங்கள் என்பது வசனமாகும். 2:37 வது வசனத்தில் உங்களுள் சிலர் மற்றும் சிலருக்கு எதிரிகள் என்று இறைவன் கூறுகிறான். இதில் சிலர் மற்றும் சிலர் என்பதினால் சொர்க்கத்தில் பலரைக் கொண்ட ஒரு கூட்டம் இருந்துள்ளது என்பது விளங்க வில்லையா?

## 28. ஈஸா நபி செய்த அற்புதங்கள்

**திருக்குர்ஆன் விளக்கவுரை அட்டவணை எண் 41-ல் இறந்த பின்னர் உயிருடன் இருப்போர் எனும் தலைப்பில் பி.ஜே இவ்வாறு எழுதுகிறார் :**

*ஈஸா நபியவர்கள் இவ்வுலகில் ஏராளமான அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார்கள்.*

**நம் விளக்கம்:**

பி.ஜே யின் திருமறையின் தோற்றுவாய் எனும் நூலிலும் அந்த அற்புதங்களைப் பட்டியல் போட்டுக் காட்டியுள்ளார்.

1. தந்தையின்றி பிறந்தது.
2. தொட்டிலில் பேசியது.
3. பறவைகளைப் படைத்தது.
4. இறந்தவரை உயிர்ப்பித்தது.
5. பிறவிக் குருட்டையும்
6. குஷ்டத்தையும் நீக்கியது.

இக்கருத்துகள் திருக்குர்ஆனின் 5:110, 3:46, 3:47, 3:49 ஆகிய வசனங்களில் வருகின்றன.

படைத்தல், உயிர் கொடுத்தல் என்று இறைவனுக்கு மட்டும் உரிய செயல்கள் ஈஸா நபிக்கும் வருகிறது. அதற்கு பொருள் கொடுக்கும் போது கருத்தில் கொள்ள வேண்டியவற்றை பீ.ஜே போன்றோர் கருத்தில் கொள்ளவில்லை.

ஒரு சொல்லை அல்லாஹ்வுக்கு பயன்படுத்தும் போது அவனது தகுதிக்கும் அந்தஸ்துக்கும் ஏற்றவாறு பொருள் கொடுக்க வேண்டும். அல்லாஹ்வைத் தவிர மற்றவர்களுக்கு அச்சொல்லைப் பயன்படுத்தும் போது இறைவனின் தகுதியைக் குறைத்து விடாதபடியோ நபியின் தகுதியை அளவுக்கு மீறி உயர்த்தி விடாதபடியோ பொருள் கொடுக்க வேண்டும் என்ற சாதாரணமான உண்மையைக் கூட பீ.ஜே உணரவில்லை. இதனால் அவர் அல்லாஹ்வின் தகுதிக்கு ஈஸா நபியின் தகுதியை உயர்த்தி விட்டார்.

**எப்படி,**

மக்களே உங்களிடம் கூறப்படுகின்ற உவமையைக் கவனமாகக் கேளுங்கள். நீங்கள் அல்லாஹ்வையன்றி எவர்களை அழைக்கின்றீர்களோ அவர்களால் ஒரு ஈயைக் கூடப் படைக்க முடியாது. அதற்காக அவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்தாலும் சரியே. இது மட்டுமின்றி, ஓர் ஈ அவர்களிடமிருந்து ஒரு பொருளைப் பறித்துச் சென்றால், அவர்களால் அதனிடமிருந்து அதனை(க் கூட) விடுவிக்க முடியாது. அழைப்போரும் அழைக்கப்படுவோரும் மிகப் பலவீனமானவர்களேயாவர்.

அவர்கள் அல்லாஹ்வை (அவனது பண்புகளை) கண்ணியப்படுத்த வேண்டியவாறு கண்ணியப்படுத்தவில்லை. நிச்சயமாக அல்லாஹ் மிக்க வல்லமையுள்ளவனும் மிகைத்தவனும் ஆவான். (திருக்குர்ஆன் 22 : 74-75) பீ.ஜே யின் தமிழாக்கம்.

ஒருவரை அழைத்து பிரார்த்தனை செய்ய வேண்டுமானால் அதற்குரிய ஒரு தகுதியை இவ்வசனத்தில் அல்லாஹ் குறிப்பிடுகின்றான். **படைப்பாற்றல் எவனிடம் உள்ளதோ அவன் மட்டுமே பிரார்த்தனை செய்யப்பட தகுதியுடையவன்.** இறைவனை விட்டு விட்டு பிரார்த்திக்கப் படுபவர்கள் நபிமார்களாயினும், இறைநேசர்களாயினும் அவர்கள் எவருமே ஓர் ஈயைக் கூட படைத்ததில்லை. படைக்க இயலாது. எனவே, **அல்லாஹ் பறவைகளைப் படைத்ததைப் போன்று ஈஸா நபி பறவையைப் படைக்கவில்லை என்று ஏற்றுக் கொள்ள வேண்டும். இல்லை என்றால் அவரிடம் பறவையைப் படைக்கும் ஆற்றல் உள்ளதால் அவரிடம் பிரார்த்தனை செய்யலாம் என்று ஏற்க வேண்டும். பீ.ஜே எதனை ஏற்கப் போகிறார்?**

22:75 - ல் அல்லாஹ் கூறுகின்றான், அவர்கள் அல்லாஹ்வை (அவனது பண்புகளை) கண்ணியப்படுத்த வேண்டியவாறு கண்ணியப்படுத்தவில்லை. அதாவது, ஈஸா நபிக்கும் அல்லாஹ்வைப் போல் படைப்பாற்றல் இருக்கின்றது என்று நம்புவதன் மூலம் அல்லாஹ்வின் கண்ணியத்தை ஈஸா நபிக்கு கொடுத்து அல்லாஹ்வின் கண்ணியத்தை குறைத்து விட்டார்கள்.

இதிலிருந்து நாம் தெரிவது என்னவென்றால், படைத்தல் எனும் பண்பு அல்லாஹ்வுக்கு வரும் போது அவனுடைய கண்ணியத்துக்கும் தகுதிக்கும் ஏற்ப பொருள் கொடுக்க வேண்டும். **அப்பண்பு ஒரு நபிக்கு வரும் போது ஒரு மனித நபி என்ற அளவில் களிமண் போன்ற மனிதர்களை பச்சை நிறப் பறவைகள் போன்று சொர்க்கத்தில் பறந்து திரிபவர்களாக மாற்றுபவர் என்று நம்ப வேண்டும்.**

அடுத்து திருக்குர்ஆன் 16:20-21 வது வசனத்தில் அவர்கள் அல்லாஹ்வையன்றி எவர்களை அழைக்கின்றார்களோ அவர்களால் (பொய்க்கடவுள்களால்) எதனையும் படைக்க முடியாது. மேலும் அவர்களோ (இறைவனால்) படைக்கப்பட்டவர்கள் என்று அல்லாஹ் கூறுகின்றான். இன்று கிறித்துவ மக்களால் கடவுள் என்று அழைக்கப்படும் ஈஸா நபி எதனையும் படைக்க முடியாது என்று கூறும் போது அவர் பறவையைப் படைத்தார் என்று நம்புவது சரியா?

அப்படி நம்பினால், ஈஸா நபி இறைவனால் படைக்கப்பட்டவர் என்றால் அவரால் பறவையை படைக்க முடியாது என்று நம்ப வேண்டும். பறவையை படைத்தார் எனின் இறைவனால் படைக்கப்பட்டவர் அல்லர் என்று நம்ப வேண்டும். பீ.ஜே எதனை நம்ப போகிறார்?

(பொய்க்) கடவுளர் எதனையும் படைத்ததில்லை. அவர்களோ படைக்கப் படுகின்றனர் (திருக்குர்ஆன் 16:17). பீ.ஜே யின் தமிழாக்கம்.

இவ்வசனத்தில் அல்லாஹ்வால் படைக்கப்பட்டவர்கள் எதனையும் படைக்க முடியாது என்ற கருத்து கூறப்பட்டுள்ளது.

இது அல்லாஹ்வின் படைப்பாகும். எனவே, நீங்கள் அவனையன்றி மற்றவர்கள் எதனைப் படைத்துள்ளனர் என்பதை எனக்குக் காட்டுங்கள். (திருக்குர்ஆன் 31 : 12)

(பொய்த் தெய்வங்கள்) அவை பூமியில் படைதிருப்பதை நீங்கள் எனக்குக் காட்டுங்கள். (35:40; 46:5)

அல்லாஹ் தான் அனைத்தையும் படைத்தவன். வேறுயாரும் எதனையும் படைத்ததில்லை என்றால், ஈஸா நபி பறவையைப் படைத்திருக்கிறார் என்று நம்புபவர்கள் அல்லாஹ்விடம் ஈஸா நபி படைத்த பறவையைக் கொண்டு காட்டுவார்களா ?

முதன் முறையாகப் படைத்து அதனையும் திருப்பவும் செய்கின்ற எவராவது இணை வைப்பவர்களுள் இருக்கின்றனரா? முதன் முறையாகப் படைத்து அதனைத் திருப்பவும் செய்கின்றவன் அல்லாஹ் (மட்டும்) தான் (10:35)

ஏதோ ஒரு பறவையை முதலில் படைத்தவர் ஈஸா நபி தான் என்று இவர்கள் ஈஸா நபியை இறைவன் முன் நிறுத்தப் போகிறார்களா?

அவன் படைத்ததைப் போன்று அவை (பொய்க் கடவுள்கள்) படைத்ததன் காரணமாகவா அவற்றை அவர்கள் அல்லாஹ்வுக்கு



இணையாக ஆக்கிக் கொண்டனர்? எனவே (தான் இரு) படைப்புகளும் அவர்களுக்கு ஒன்று போல் தெரிகிறதோ? (திருக்குர்ஆன் 13:17)

ஈஸா நபி பறவையைப் படைத்தார் என்று நம்பும் பீ.ஜே ஈஸா நபியை அல்லாஹ்வுக்கு இணையாக ஆக்கிக் கொள்கிறார். மேலும் ஈஸா நபி படைத்த பறவையும் அல்லாஹ் படைத்த பறைவகளும் ஒன்று போல் அவர்களுக்குத் தெரிகிறது என்று இந்த வசனத்தின் மூலம் விளங்கிக் கொள்கிறோம்.

அல்லாஹ்வே உங்களைப் படைத்தவன். பின்னர் அவனே உங்களுக்கு உணவு அளித்தான். பின்னர் அவன் உங்களை மரணிக்கச் செய்தான். பின்னர் அவன் உங்களை உயிர் பெறச் செய்வான். உங்களால் இறைவனுக்கு இணையாக்கப்பட்டவர்களுள் எவரேனும் இச்செயல்களில் எதையாவது செய்கின்றாரா? அவன் தூயவனும் மேலும் அவர்கள் (அவனுக்கு) ஏற்படுத்தும் இணைகளை விட்டும் அவன் மிக்க மேலானவன் (திருக்குர்ஆன் 30:41)

ஈஸா நபி பறவையைப் படைத்துள்ளார். இறந்தவர்க்கு உயிர் கொடுத்துள்ளார். எனவே இரண்டு செயல்களைச் செய்துள்ளார் என்று நம்பும் பீ.ஜே இறைவனின் கேள்விகளுக்குப் என்ன பதில் சொல்லப் போகிறார்? அப்படி நம்பினால் அவர் இறைவனுக்கு இணை வைத்தவரும் அல்லாஹ்வின் தூய்மைக்கும் அல்லாஹ்வின் மேன்மைத் தன்மைக்கும் களங்கம் கற்பித்தவரும் ஆவார்.

அப்படி என்றால், ஈஸா நபி களி மண்ணால் பறவையைப் படைத்துள்ளார் என்று திருக்குர்ஆன் 2 இடங்களில் கூறுகிறதே? என்ற கேள்வி எழும்.

அல்லாஹ் உலகில் உள்ள பறவைகள் முதல் ஈஸா நபி போன்ற மனிதர்கள் வரை அனைத்துப் படைப்புகளையும் படைத்தது போன்று ஈஸா நபி படைக்கவில்லை. **மாறாக ஒரு மனித நபி களிமண் போன்ற மனிதர்களை மனிதனாக மாற்றி பிறகு அவனை மனிதப் புனிதனாக்கி ஆத்மீக வானில் பறந்து திரியும் பறவை போல் மாற்றினார் என்று பொருள்.**

## உயிர் கொடுத்தல்

அல்லாஹ் மட்டுமே இறந்தவர்களுக்கு உயிர் கொடுக்கிறான். அவனைத் தவிர வேறு யாரும் இறந்தவர்க்கு உயிர் கொடுக்க முடியாது. இதுவே இஸ்லாத்தின் அடிப்படை கொள்கையாகும்.

1. ஈஸா நபி இறந்தவர்க்கு உயிர் கொடுத்தார் என்று திருக்குர்ஆனில் வருகிறதே என்றால் இறந்தவர்கள் மீண்டும் இந்த உலகிற்கு வர முடியாது என்று ஏறக்குறைய 16 இடங்களில் வருகிறது. இதில் ஒன்று 23:100 வசனம். இந்த வசனத்தைப் பற்றி பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 298 இல்,

**உயிர்ப்பிக்கப்படும் நாள் வரை அவர்களுக்குப் பின்னால் திரை எனும் தலைப்பில் எழுதியுள்ளார். அதில், ஒருவர் மரணித்து விட்டால் அவருக்கும் இந்த உலகத்திற்கும் இடையில் எந்த விதமான தொடர்பும் கிடையாது. அவர்களுக்குப் பின்னால் புலனுக்குத் தெரியாத மிகப் பெரிய திரை போடப்பட்டு விடுகிறது என்று இந்த வசனம் (திருக்குர்ஆன் 23:100) கூறுகிறது** என்று எழுதியுள்ளார்.

பீ.ஜே இவ்வாறு உண்மையில் நம்புகிறார் என்றால் **ஈஸா நபி உயிர் பெறச் செய்த அந்த ரூஹ் அந்தத் திரையைத் தாண்டி எப்படி வந்தது?**

மலக்குல் மவ்த் – ரூஹைப் பறித்துச் செல்வார். ஆனால் பறித்த உயிரை திரையைக் கிழித்துக் கொண்டு எந்த மலக்கு அந்த ரூஹைக் கொண்டு வந்து அந்த சடலத்தில் புகுத்தினார்? மலக்குல் மவ்த் போன்று மலக்குல் ஹயாத் பற்றி திருக்குர்ஆனிலோ, நபிமொழியிலோ இல்லையே ஏன்?

2. பேய் பிசாசு உண்டா எனும் தலைப்பில் பீ.ஜே எழுதியுள்ள நூலில் **இறந்து போன உயிர்கள் மீண்டும் இந்த உலகிற்கு வருவதில்லை** என்பதற்கு பீ.ஜே காட்டும் திருக்குர்ஆன், நபிமொழி ஆதாரங்கள் ஊருக்குத் தான் உபதேசமா ? அந்நூலில்



பீ.ஜே எடுத்து வைக்கும் ஆதாரங்கள் ஈஸா நபி இறந்தவர்க்கு உயிர் கொடுக்கவில்லை என்பதற்குப் பொருந்தாதா?

3. திருக்குர்ஆன் 8:25 வசனத்தில், நபி (ஸல்) உயிர் கொடுப்பதற்காக உங்களை அழைக்கும் போது அவர்க்குப் பதிலளியுங்கள் என்று வருகிறதே. நபி (ஸல்) இறந்தவர்க்கு உயிர் கொடுத்தார் என்று பீ.ஜே ஏற்றுக் கொள்வாரா? ஈஸா நபியுடனும் நபி (ஸல்) அவர்களுடனும் உயிர் கொடுத்தல் எனும் ஒரே சொல்தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.

4. என் இறைவன் உயிர் கொடுப்பவன். மரணிக்கச் செய்பவன் என்று இப்ராஹீம் கூறிய போது நானும் உயிர் கொடுப்பேன்; மரணிக்கச் செய்வேன் என்று அவன் (இறை மறுப்பாளன்) கூறினான் என்று வருகிறது. (திருக்குர்ஆன் 2:259)

இப்ராஹீம் நபியுடன் வாதிட்ட இறைமறுப்பாளனுக்கும் அல்லாஹ்வைப் போல் இறந்தவனுக்கு உயிர் கொடுக்கும் ஆற்றல் உள்ளது என்று பீ.ஜே ஏற்றுக் கொள்வாரா?

5. தஜ்ஜால் இறந்தவரை உயிர்ப்பிப்பான். ஆனால் மற்றொரு தடவை அவனால் இதைச் செய்ய முடியாது என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தி விட்டனர் என்று பீ.ஜே திருமறையின் தோற்றுவாய் எனும் நூலில் அவ்லியாக்களின் அற்புதங்கள் எனும் தலைப்பில் எழுதியுள்ளார்.

**முழுக்க முழுக்க இறைத்தன்மை பெற்றவர்களாக மற்றவர்களை எண்ணுவது மாத்திரம் இணை வைத்தல் அன்று. மாறாக இறைவனது தன்மையில் ஏதேனும் ஒரு தன்மை இறைவனுக்கு இருப்பது போல மற்றவர்களுக்கும் இருப்பதாக எண்ணுவதும் இணை வைத்தலாகும்.** ஷிர்க்கின் இந்த இலக்கணத்தை பீ.ஜே திருமறையின் தோற்றுவாய் எனும் நூலில் பரிந்துரையை வேண்டுவது குற்றமா எனும் தலைப்பில் எழுதியுள்ளார். இதன் அடிப்படையில் தஜ்ஜால் அல்லாஹ்வின் ஒரு

பண்பாகிய உயிர் கொடுத்தல் எனும் பண்பை, ஒரே ஒரு முறை செய்ததாக பீ.ஜே நம்புகிறார். இது இணை வைத்தல் இல்லையா? இணை வைத்தல் எனும் **கொடிய விசத்தை ஒருவன் ஒரே ஒரு முறை சாப்பிட்டால் அவன் சாக மாட்டான்** என பீ.ஜே நம்புகிறாரா?

6. பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 24 ல் கொலையாளியைக் கண்டு பிடித்தல் எனும் தலைப்பில் 2:72 வசனத்திற்கு விளக்கமாக, **மூஸா நபியவர்கள் இறந்தவனை மாட்டின் ஒரு பகுதியால் அடித்து அவனை உயிர் பெறச் செய்திருப்பதாக நம்புகிறார். ஆனால் மூஸா நபியின் மீது அவரது சமுதாயம் ஹாரூன் நபியைக் கொன்றதாக பழி சுமத்திய போது மூஸா நபி, தான் குற்றமற்றவன் என்பதை நிரூபிக்க மாட்டின் ஒரு பகுதியால் ஹாரூன் நபியின் உடலில் அடித்து உயிர் பெறச் செய்யவில்லையே ஏன்?** (பீ.ஜே திருக்குர்ஆன் விளக்கவுரை அட்டவணை எண் 394 காண்க)

7. மேலே கூறியவற்றை தொகுத்துப் பார்க்கும் போது,

1) அல்லாஹ்வுக்கு மட்டுமே இறந்தவர்க்கு உயிர் கொடுக்கும் ஆற்றல் உள்ளது. வேறு எவர்க்கும் இல்லை.

2) இறந்த உயிர்கள் மீண்டும் திரும்பி இந்த உலகத்திற்கு வராது என்ற கருத்தை நிரூபிக்கும் திருக்குர்ஆன், நபிமொழி சான்று பற்பல உள்ளன. இது ஒரு பக்கம், இன்னொரு பக்கம் ஈஸா நபி, நபி (ஸல்), மூஸா நபி, இறை மறுப்பாளன், தஜ்ஜால் ஆகியோர் இறந்தவர்க்கு உயிர் கொடுத்துள்ளர் என்ற தவறான நம்பிக்கை காணப்படுகிறது. **அப்படியெனில், திருக்குர்ஆனில் முரண்பட்ட கருத்துக்கள் உள்ளன (நவூதுபில்லாஹ்) என்று பீ.ஜே நம்புகிறாரா?**

8. அல்லாஹ் இறந்தவர்க்கு உயிர் கொடுத்து எழுப்புவது கியாமத் நாளில் தான். அதற்கு முன் உயிர் கொடுப்பதில்லை. ஆனால் ஈஸா நபி (அலை) உடனே உயிர் கொடுத்து எழுப்பியதாக பீ.ஜே நம்புகிறார். அப்படி எனில் ஈஸா நபியை அவர் அல்லாஹ்வை விட அதிகமாக உயர்த்தியிருப்பதாக தெரிகிறது (நவூதுபில்லாஹ்)



9. திருக்குர்ஆனில் இரண்டு வகை வசனங்கள் உள்ளன. ஒன்று அடிப்படை வசனங்கள். இரண்டு உவமை வடிவிலான வசனங்கள்.

**அல்லாஹ் ஒருவன்; அவனே அனைத்தையும் படைத்தவன்; அவன் அனைத்தையும் மரணிக்கச் செய்பவன்; அவனே இறந்தவர்களை உயிர்ப்பிப்பவன். இவை திருக்குர்ஆனின் அடிப்படை வசனங்களாகும்.**

**ஈஸா நபி படைத்தார்; உயிர் கொடுத்தார்; குருடர்களை குணப்படுத்தினார்; தொழு நோயாளிகளை குணப்படுத்தினார் என்பவை உவமை வடிவிலானவை.** இவற்றிக்கு, அடிப்படை வசனங்களுக்கு முரண்படாத வகையில் பொருள் கொடுக்க வேண்டும். உதாரணமாக, ஈஸா நபி இறந்த பிறகு மறுமையில் அவர்க்கு உயிர் கொடுத்து எழுப்புபவன் அல்லாஹ்வே. ஆனால் ஈஸா, நபி என்ற அடிப்படையில் அவரது சமுதாய மக்கள் ஆத்மீக மரணம் அடைந்து கிடந்த போது அம்மக்களுக்கு ஆத்மீக உயிர் கொடுத்து எழுப்பியவர் ஈஸா நபி என்று அதற்குப் பொருள் கொடுக்க வேண்டும். ஈமான் இல்லாதவர்கள் இறந்தவர்கள் ஆவர். அவர்களுக்கு ஈமானைக் கொடுப்பது உயிர் ஊட்டுவதாகும்.

இக்கருத்தை திருக்குர்ஆன் 6:123 வசனம் விளக்குகிறது. ஒருவன் (நிராகரிப்பினால்) மரணித்தவனாக இருந்து பிறகு (நேர்வழியின் மூலம்) அவனை நாம் உயிர்ப்பித்து அவனுக்கு (ஈமான் எனும்) ஒளியை நாம் கொடுத்து அதன் மூலம் மனிதர்களிடையே நடக்கிற அவன் (குப்ர் எனும்) இருள்களில் (சிக்கி) இருந்து அவற்றை விட்டும் வெளியேற முடியாதவனைப் போல் ஆவானா?

10. ஈஸா நபியின் சிறப்பு எதுவென்றால் அவர் உவமை வடிவில் தான் தூதுச் செய்தியை மக்களுக்கு ஊட்டினார். எனவே அவர் பற்றிய இந்த செய்திகளும் உவமை வடிவில் கூறப்பட்டுள்ளன.

11. அல்லாஹ்வுக்கு உவமை கூறாதீர்கள் என்று திருக்குர்ஆன் கூறுகிறது (16:75)

இதற்கு பீ.ஜே அல்லாஹ்வைப் பற்றி கூறுவதென்றால், வக்கீல், நீதிபதி, அதிகாரி என்றெல்லாம் உதாரணம் கூறுவதைத் தவிர்க்க வேண்டும். அல்லாஹ்வைப் போல் எதுவும் இல்லாததால் எதையும் உதாரணம் காட்டிப் பேசலாகாது என அல்லாஹ் சொல்லித் தருகிறான் என்று திருமறையின் தோற்றுவாய் எனும் நூலில், உதாரணங்கள் ஆதாரங்கள் ஆகுமா எனும் தலைப்பில் எழுதியுள்ளார்.

அல்லாஹ் தனக்கு உவமை கூறாதீர்கள் எனக் கூறியது வக்கீல், நீதிபதி என்று கூறும் உவமைகள் அல்ல. ஈஸா நபி இறந்தவர்க்கு அல்லாஹ்வை போல் உயிர் கொடுத்தார் என்று கூறுவது தான் அல்லாஹ்வுக்கு, ஈஸா நபியை உவமை கூறுவதாகும். எனவே அவனைப் போல் எதுவுமில்லை. (திருக்குர்ஆன் 42:11) என்றும் அவனுக்கு நிகராக எவனுமில்லை (112:4) என்றும் திருக்குர்ஆன் கூறுவதால் ஈஸா நபி இறந்தவர்க்கு அல்லாஹ்வைப் போல் உயிர் கொடுத்தார் என்று கூறுவது அல்லாஹ்வுக்கு உவமை கூறுவதாகும். அதாவது ஈஸா நபி அல்லாஹ்வைப் போல அவனுக்கு நிகராக உள்ளார் என்று நம்புவதாகும்.

**குருடர்களையும் நோயளிகளையும் குணப்படுத்துதல்:**

இவையும் உவமை வடிவில் கூறப்பட்டவையாகும். ஈஸா நபி புறக்கண் குருடர்களையும், உடல் நோயாளிகளையும் குணப்படுத்த வரவில்லை. அவர் அகக் குருடர்களையும் அறிவுக் குருடர்களையும் ஆத்மீக நோயாளிகளையுமே குணப்படுத்த வந்தார். உலகில் வந்த அனைத்து நபிமார்களும் இந்தப் பணியைச் செய்யத்தான் வந்தனர்.திருக்குர்ஆனில் புறக்கண் குருடர்களைப் பற்றி பொதுவாக சில இடங்களில் வருகிறது.(அவை 25:74, 6:105, 47:24, 41:18 ஆகிய வசனங்கள் ஆகும்)



1) உங்கள் வீடுகளிலோ.... சாப்பிடுவது **நோயாளியின்** மீதும் குற்றமில்லை. **ஊனமுற்றவர்** மீதும் குற்றமில்லை. **குருடர்** மீதும் குற்றமில்லை. நீங்கள் அனைவரும் சேர்ந்தோ, தனித்தனியாகவோ சாப்பிடுவது உங்கள் மீது குற்றமில்லை. (திருக்குர்ஆன் 24:62)

இந்த வசனங்களில் சில வீடுகளைக் குறிப்பிட்டு இவர்களின் வீடுகளில் நோயாளி, குருடர், ஊனமுற்றவர்கள் சாப்பிடுவது குற்றமில்லை என்று கூறப்பட்டுள்ளது.

2) போருக்குச் செல்லாமல் இருப்பது குருடர் மீதும் குற்றமில்லை. நொண்டியின் மீதும் குற்றமில்லை. நோயாளியின் மீதும் குற்றமில்லை. (திருக்குர்ஆன் 48 : 18)

3) தன்னிடம் அந்தக் குருடர் வந்ததற்காக அவர் முகம் சுளித்து புறக்கணித்து விட்டார். (திருக்குர்ஆன் 80:1-2)

இந்த இடங்களில் மட்டுமே புறக்கண் குருடர்களைப் பற்றி வந்துள்ளன. ஏனைய எல்லா இடங்களிலும் அகக்கண் குருடர்களைப் பற்றியே வந்துள்ளன. இத்தகு கருத்துக் குருடர்களை குணப்படுத்தவே ஈஸா நபி வந்தார்கள். ஏன் எல்லா நபிமார்களும் வந்துள்ளனர்? (2:19, 2:172, 10:44, 27:82, 30:54, 43:21, 22:47, 5:72, 6:105, 17:98, 25:74) இவ்வாறே உடல் நோயாளிகளைப் பற்றியும் சில வசனங்களில் (24:62, 48:18, 9:91, 73:21, 26:81, 2:185-186, 2:196, 4:44,107; 5:7 வந்துள்ளன. நான் நோயாளியாக இருக்கின்றேன் 37:39 என இப்ராஹீம் நபி (அலை) அவர்கள் கூறினார்கள். இவை உடல் நோயாளிகளைப் பற்றி வரும் இடங்கள் ஆகும். ஏனைய இடங்களில் ஆத்மீக நோய்களைக் குறித்தே வருகிறது. ஈஸா நபி குணப்படுத்திய நோய் ஆத்மீக நோய் ஆகும். ஏனென்றால் உடல் நோய்களைக் குணப்படுத்த உலகில் பல மருத்துவர்களும், மருந்துகளும் உள்ளன. ஆனால் இறைவனுடன் தொடர்புடைய ஆத்மீக நோய்களைக் குணப்படுத்தவே நபிமார்களை அல்லாஹ் அனுப்புகின்றான்.

(உள்ளத்தின் நோயைப் பற்றி திருக்குர்ஆனில் 2:11, 5:53, 8:50, 9:125, 22:54, 24:51, 33:13, 33:33, 33:61, 47:21, 47:30, 74:32, 24:6) (26:81, 48:18, 2:185-186,196; 4:44,103; 5:7, 9:91, 73:21 போன்ற வசனங்களில் கூறப்பட்டுள்ளன)

2:19,172; 10:44, 27:82, 30:54, 43:41, 17:98, 25:74, 6:105, 5:72, 22:47, 47:24, 41:18 ) போன்ற வசனங்களில் ஆத்மீகக் குருடர்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளன. ஒரு வாதத்திற்காக அவை உடல் நோய்கள் என்று வைத்துக் கொண்டால்,

**முஸ்லிம் ஹதீது எண் 5735:**

ஒரு சாதாரண சிறுவன் குருடர்களைக் குணப்படுத்து -கின்றான். தொழு நோயாளிகளையும் பிற நோய்களையும் குணப்படுத்துகின்றான். தன்னைப் மலையிலிருந்து உருட்டிக் கொல்வதற்கு அனுப்பப்பட்ட அரச வீரர்களை மலையை குலுங்க வைத்து தப்புகிறான். தன்னைப் படகில் ஏற்றி கடலில் எறிந்து கொல்ல வந்த வீரர்களை மரக்கலத்திலிருந்து விழ வைத்து தப்புகிறான் என்று அந்த நபிமொழி கூறுகிறது. எனவே ஒரு சாதாரண சிறுவனும் துஆவினால் அந்த அற்புதங்களைச் செய்துள்ளான். எனவே ஈஸா நபி மட்டும் செய்தார் என்பதற்கும் இடமில்லை.

## ஈஸா நபியின் தந்தையில்லாப் பிறப்பு

**பீ.ஜே கூறுகிறார்:**

*ஈஸா (அலை) என்ற இறைத்தூதரின் பிறப்பு அதிசயமான ஒன்று. இது உலகின் இரண்டு பெரும் சமுதாயத்தினர் ஏற்றுக் கொண்ட உண்மை. தந்தையின்றி இறைவனின் தனிப் பெரும் ஆற்றலால் அவர்கள் படைக்கப்பட்டார்கள். இதைக் திருக்குர்ஆனும் பல இடங்களில் குறிப்பிட்டுக் காட்டுகின்றது. (அல்குர்ஆன் 3:47, 19:20) (நூல் : திருமறையின் தோற்றுவாய், தலைப்பு : ரப்புல் ஆலமீன்)*



*எந்த அல்லாஹ் நடைமுறைக்கு மாற்றமாக ஈஸா நபியை பிறக்கச் செய்தானோ அதே நபியை அவன் எத்தனை காலத்துக்கு வேண்டுமானாலும் வாழச் செய்ய இயலும். (நூல் : திருமறையின் தோற்றுவாய், தலைப்பு : குர்ஆனும் ஹதீஸுமே நேர்வழி)*

**நம் பதில்:**

பீ.ஜே கூற்றுகளிலிருந்து,

1. ஈஸா நபியின் பிறப்பு அதிசயமான ஒன்று
2. தந்தையின்றி இறைவனின் தனிப்பெரும் ஆற்றலால் அவர்கள் படைக்கப்பட்டார்கள்.
3. அவ்வாறு பிறந்தது நடைமுறைக்கு மாற்றமானது.
4. எனவே எத்தனை காலத்துக்கு வேண்டுமானாலும் அல்லாஹ் வாழச் செய்ய இயலும் என்று தெரிய வருகிறது.

1) பீ.ஜே திருக்குர்ஆனிலிருந்தோ, நபிமொழிகளிலிருந்தோ **அதிசயமான பிறப்பு என்ற சொல்லையோ, அல்லாஹ்வின் தனிப் பெரும் ஆற்றல் என்ற சொல்லையோ நடைமுறைக்கு மாற்றம் என்ற சொல்லையோ அதனால் எத்தனை காலம் வேண்டுமானாலும் வாழச் செய்வான் என்பதையோ எடுத்துக் காட்ட முடியுமா?**

இவையாவும் பீ.ஜே யின் சுய விளக்கங்கள். திருக்குர்ஆனோ, நபி (ஸல்) அவர்களோ அவ்வாறு எங்கும் கூறவில்லை. இவ்வாறு அல்லாஹ்வும் ரஸூலும் கூறாதவற்றை இவர் அல்லாஹ், ரசூல் பேரில் இட்டுக்கட்டி கூறியுள்ளார்.

**2) 3:47 வது வசனத்தில் பீ.ஜே யின் தர்ஜுமா,**

*இறைவா எந்த ஆணும் என்னைத் தொடாத நிலையில் எனக்கு எவ்வாறு குழந்தை ஏற்படும்? என்று அவர் கேட்டார். தான் நாடியதை அல்லாஹ் இவ்வாறே படைக்கின்றான். ஏதேனும் ஒரு காரியம் பற்றி அவன் முடிவு செய்து விட்டால் ஆகு என்பான். உடனே அது ஆகிவிடும் என்று இறைவன் கூறினான்.*

*19:20 வது வசனம் பீ.ஜே-யின் தர்ஜுமா, எந்த ஆணும் என்னைத் தீண்டாமலும், நான் நடத்தை கெட்டவளாக இல்லாமலும் இருக்க எனக்கு எப்படிப் புதல்வன் உருவாக முடியும் ? என்று (மர்யம்) கேட்டாள். அப்படித்தான். இது எனக்கு எளிதானது என்று இறைவன் கூறினான்.*

இவ்விரு வசனங்களிலிருந்து நாம் விளங்குவது,

1. அல்லாஹ் ஆண் தொடர்பின்றி இவ்வாறே படைக்கின்றான்.
2. ஆகு என்று கூறி படைக்கின்றான்.
3. இவ்வாறு படைப்பது தனக்கு எளிதாகும் என்று கூறுகிறான்.

இவை பீ.ஜே யின் சுய கருத்துக்களை தவிடுபொடி ஆக்குவதை காண்போம்.

1. ஆண் தொடர்பின்றி குழந்தையை பிறக்கச் செய்வதும் அல்லாஹ்வின் நடைமுறைகளுள் ஒன்றாகும்.
2. இதற்கு தனிப் பெரும் ஆற்றல் ஏதும் தேவையில்லை. ஆகு என்ற ஒரு சொல்லே போதும்.
3. இவ்வாறு ஒரு பெண்ணை சுயமாக பிள்ளை பெற வைப்பது அல்லாஹ்வுக்கு எளிய செயலே.
4. எனவே இதில் அதிசயம் ஒன்றும் இல்லை என்று கூறுகிறான்.

இவற்றை பார்க்கும் போது பீ.ஜே அல்லாஹ்வின் அளப்பரிய, எல்லையில்லா வல்லமையை மிகக் குறைத்தும், தவறாகவும் மதித்துள்ளார் என்பது தெளிவாகிறது.

**ஒரு பெண் சுயமாக கருவுற முடியும் என்பதற்கு ஒரு மருத்துவ அறிக்கை:**

ஒரு பெண்ணின் உள்ளுறுப்புகளில் இயற்கையாகவே ஆணினுடைய விந்தில் காணப்படும் உயிரணுக்கள் இடம் பெற்றிருந்து, அவை எந்த ஆண் மகனின் தொடர்புமில்லாமல் கருப்பையில் நுழைந்து கருக்கொண்டு வளர்ந்து குழந்தையாகிறது.



இதற்கு வாய்ப்பே இல்லை என்று சொல்ல முடியாது என்று மருத்துவத் துறையின் முதிர்ந்த அனுபவம் பெற்ற வல்லுநர்கள் கூறுகின்றனர். இது நகைப்பிற்கிடமாகத் தோன்றலாம். ஆனால் இது உடற்கூறுடன் தொடர்புடைய அறிவியல் ஆய்வின் அடிப்படையில் கூறப்படும் உண்மையாகும். சில சந்தர்ப்பங்களில் சில பெண்களின் உடல் உள்ளுறுப்புகள் மற்ற பெண்களிலிருந்து மாறுபட்டுக் காணப்படுகின்றது. இப்பெண்களை ஆய்வு செய்து பார்த்தால் முன்பு சொன்னபடி ஆண் தொடர்பின்றி தானே குழந்தை பெறக்கூடிய வாய்ப்புள்ளது என்பது தெரிகிறது.

**டாக்டர் திம்மே அவர்கள் கூறுகிறார்கள்:**

சில பெண்களுக்கு அடிவயிற்றில் அல்லது இடுப்பெலும்பும் தொடையும் இணையும் பகுதியில் ஒரு வகைக் கட்டி வளர்ந்துள்ளது. அந்த சதைக் கட்டி உருவாகியுள்ள பெண்களுக்கு, சுயமாகக் குழந்தை பெறும் வாய்ப்புள்ளது என்று கூறுகிறார்.இதற்கு Arrhemoblastoma என்று பெயர். (இது ஒரு கிரேக்கச் சொல். ஆண் என்ற சொல்லும் உயிரணு என்ற சொல்லும் சேர்ந்து உருவான சொல்) இக்கட்டியில் ஆணின் விந்தில் காணப்படும் உயிரணுக்கள் உள்ளன. தற்செயலாக உயிரணுக்கள் உயிரியக்கம் பெற்று அந்த பெண்ணின் சினை முட்டையுடன் (OVUM) ஒட்டிக் கொள்கிறது. பிறகு கருவாகி உருவாகி விடுகிறது. டாக்டர் திம்மே அவர்கள், ஐரோப்பாவில் இருபது பெண்களுக்கு அக்கட்டிகள் இருப்பது ஆதாரப்பூர்வமாக கண்டறியப்பட்டுள்ளதாக தெரிவிக்கிறார். இந்தக் கட்டிகளில் ஆணின் விந்தில் காணப்படும் நுண்ணுயிர்கள் துடிதுடிப்புடன் காணப்பட்டுள்ளன. இவை துள்ளிக் குதித்தும், பாய்ந்தும் செல்லக்கூடிய வீரியமிக்க நுண்ணுயிர்கள் எனக் கண்டறியப்பட்டுள்ளது. இந்த நுண்ணுயிர்கள் கருப்பிண்டமாக, குழந்தையாக, மனிதனாக வளரும் வளர்ச்சிப்படிவங்கள் அனைத்தையும் தாக்குப்பிடிக்கும் திறன்கள் அனைத்தையும் கொண்டவையாகும். சுருக்கமாக, ஆண் பெண் மூலம் எப்படி கரு

உருவாகிறதோ அப்படியே ARRHEHENO BLASTOMA கட்டி காணப்படும். அக்கட்டி உள்ள பெண்ணும் எந்த ஆணின் தொடர்பில்லாமல் அக்கட்டியில் உற்பத்தியாகும் இந்திரியத்தின் மூலம் கருத்தரித்துக் கொள்கிறாள். (ஆதாரம் : அமெரிக்காவின் புகழ் பெற்ற மருத்துவப் பத்திரிக்கையான American Medical Journal)

இப்படி ஆண் உறவின்றி சுயமாகப் பிள்ளை பெற்ற சம்பவங்களைப் பற்றி Anomalies and curiosities of medicine by George m.gould A.M;M.D and walter L.payle A.M;M.D published by w.b sounders & co. London எனும் நூலில் காணப்படுகிறது.

**இவ்வாறு நடக்க சாத்தியமா? என்று ஐயம் எழுந்தால், இந்நிகழ்ச்சியைப் படியுங்கள்.**

பல ஆண்டுகளுக்கு முன் நடந்த இந்த நிகழ்ச்சி Lancet என்னும் சர்வதேசப் புகழ்பெற்ற மெடிக்கல் ஜர்னலில் பதிவாகியிருக்கின்றது. யு.எஸ்.ஸில் மிஸோரி என்ற மாநிலத்தில், ஓர் ஊரில் நடந்து போய்க்கொண்டிருந்த இளைஞர் மீது ஏதோ ஒரு விபத்தில் துப்பாக்கிக் குண்டு பாய்ந்தது. பாய்ந்த குண்டு அவர் உடலிலிருந்து வெளியே வந்து சீறிச் சென்று தொலைவில் வயலில் நின்றுதொண்டிருந்த ஒரு பெண்ணின் வயிற்றில் நுழைய, அவள் கருப்பமானாள் ! அவளுடைய பெற்றோர் திகைத்துப் போனார்கள். அவளோ நான் ஒரு பாவமும் அறியாதவள் என்று அழ, டாக்டர் வந்து செக் பண்ணிவிட்டு, உங்கள் பெண் இன்னும் வெர்ஜியன் தான்! என்றார் வியப்போடு. குழந்தையும் பிறந்தது. அதன் தொடைப் பகுதியில் ஒரு சிறுவீக்கம் ! சர்ஜரி செய்து பார்த்த போது, வெளிப்பட்டது ஒரு குண்டு. எப்படியோ விசயத்தைப் புரிந்து கொண்டு சுற்று வட்டாரத்தில் விசாரிக்க, முதலில் குண்டு பாய்ந்த அந்த இளைஞர் அகப்பட்டார்.விசயம் இதுதான்! குண்டு அந்த இளைஞருடைய விரையைத் துளைத்துக் கொண்டு போயிருக்கிறது. கூடவே, அவருடைய உயிரணுக்களையும் எடுத்துக் கொண்டு ஸ்ட்ரெய்ட்டாக அந்தப் பெண்ணின் கர்ப்பப் பைக்கு அருகே நுழைந்து



பதிந்திருக்கிறது. அந்தச் சமயம் பார்த்து பெண்ணின் முட்டை அவளுடைய ஃபெலோப்பியன் ட்யூபுக்குள் தலைநீட்டியிருக்கிறது. இளைஞரின் உயிரணு முட்டையைத் துளைத்துப் புகுந்துவிட, ஓர் உயிர் உதயமாகி விட்டது. ஒரு வழியாக விசயத்தை விளக்கி அந்த இளைஞரையும் அந்தப் பெண்ணையும் அறிமுகப்படுத்தி வைத்தார்கள். அவளையே முறைப்படி திருமணம் செய்து கொண்டு மேலும் மூன்று குழந்தைகளுக்குத் தந்தையானார் அந்த இளைஞர். இந்த முறை அந்த பழைய துப்பாக்கியின் உதவி பெறப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது!

(கன்னி கருவுருதல் மதன் பாகம் : 4 பக்கம் : 34-35)

கன்னி கருவுருதல் பற்றி தமிழில் மதன் எழுதிய கி.பி. கி.மு என்ற நூலில் பக்கம் 14-15, டாக்டர் சாலினி எழுதிய பெண்ணின் மறுபக்கம் எனும் நூலின் பக்கம் 301, பக் 26-ல் காண்க.

பிரிட்டிஷ் கவுன்சிலின் அறிவியல் ஆலோசகரான Dr. Aarathy prasad என்பவர் தம்முடைய Lokea Virgin எனும் நூலில் உடலுறவில்லா இனப்பெருக்கம் - மனித இனத்தில் ஏற்பட முடியும் என்று விஞ்ஞான பூர்வமாக விளக்கியுள்ளார். மேலும் அவர் 1-1-2009 அன்று BBC வானொலியில் The Quest For Virgin Birth என்ற தலைப்பில்.

ஹஸ்ரத் மர்யம் (அலை) அவர்களுக்கு கன்னிப் பிறப்பு பிறந்தது என்ற அறிவியல் விளக்கத்தை தம் உரையில் விளக்கினார்.

**பீ.ஜே. கூறுகிறார்:**

ஒரு கொள்கையை நிலைநாட்டுவதற்காக நல்ல விளைவை ஏற்படுத்துவதற்காகக் கூறப்படும் பொய் குற்றமாகாது என்பதை இதிலிருந்து (இப்ராஹீம் நபி கூறிய பொய்யிலிருந்து) அறியலாம் என்றும்,

சத்தியப் பிரச்சாரத்தின் போது இது போன்ற வழி முறைகளைக் கையாளுவது தடுக்கப்பட்டதல்ல என்றும்,

யூசுஃப் நபி சம்பவத்தைக்கூறி, இது போன்ற சூழ்நிலைகளில் இந்த நெறிமுறைகளைக் கவனத்தில் கொண்டு தந்திரத்தைக் கையாளலாம் என்றும் நம்பும் பீ.ஜே, ஈஸா நபி போன்று உலகில் தந்தையில்லாப் பிறப்புகள் நிகழும் என்று நம்பத்தவறியது ஏனோ?

இப்ராஹீம் நபி, யூசுஃப் நபி நிகழ்ச்சிகளில் இல்லாததை இருப்பதாகவும், ஈஸா நபி பிறப்பு பற்றி நடைமுறையில் உள்ளதை இல்லாததாகவும் கூறுவது ஏனோ?

## தொட்டிலில் பேசினார்

ஜெர்மானிய இலக்கிய மேதை கத்தே பத்தாவது வயதில் ஜெர்மன் மொழி தவிர லத்தீன், கிரேக்கம், பிரெஞ்சு, இத்தாலியன், ஆங்கில மொழிகளையும் கற்றுத் தேர்ந்தார். பன்னிரண்டு வயதில் ஜெர்மன் மொழியில் ஒரு பெரிய நாடகத்தை எழுதினார். ஆங்கில அறிஞர் மெக்காலே நாலு வயதிலேயே ஏராளமான வரலாற்று புத்தகங்களைப் படித்து, தன் ஏழாவது வயதில் உலக சரித்திரத்தை எழுதி வெளியிட்டார். ஏழு வயதிலேயே கிரேக்கப் புராணங்கள் பூராவும் படித்து ஒப்பித்தவர் ஸ்டூவர்ட் மில். இவர்களே தொட்டிலில் பேசியவர்கள். (ஹாய் மதன் பாகம் : 1 பக்கம் : 81)

நபிமொழி புகாரியில் தொட்டிலில் பேசிய மூவர் பற்றிய செய்திகள் 1206, 2482, 3436 ஆகிய ஹதீஸ்களில் கூறப்பட்டுள்ளது. புஹாரி 3436- ஐக் காண்போம் :

1) ஈஸா நபி (அலை) அவர்கள்
2) பிறந்த குழந்தை
3) பால்குடி சிறுவன்

1. ஈஸா நபி தொட்டிலில் என்ன பேசினார் என்று நபிமொழிகளில் காணக் கிடைக்கவில்லை.

2. ஜுரைஜ் என்பவர் தொழுது கொண்டிருந்த போது அவருடைய தாயார் அவரை அழைத்தும் அவர் வராததினால் கோபம்



அடைந்து அவர் தாய் விபச்சாரிகளின் முகத்தில் விழிக்காமல் இவனை மரணிக்கச் செய்து விடாதே என்று துஆ செய்கிறாள்.

ஜுரைஜ் ஆகிய அத்துறவி தன் ஆசிரமத்தில் இருந்த போது ஒரு பெண் இவரைத் தகாத உறவுக்கு அழைக்க இவர் மறுத்து விடுகிறார்.கோபம் கொண்ட அவள் ஒரு இடையனிடம் தகாத உறவு கொண்டு பிள்ளையைப் பெற்று இப்பிள்ளை இத்துறவிக்குப் பிறந்தது என மக்களிடம் கூற மக்கள் அவரது ஆசிரமத்தை இடித்து விடுகிறார்கள். இதைக் கண்ட ஜுரைஜ் தொழுது துஆ செய்து விட்டு அக்குழந்தையிடம் உன் தந்தை யார் எனக் கேட்க அந்த குழந்தை அந்த இடையன் என்று கூறியது.

**மூன்றாவது குழந்தை:**

ஒரு தாய், தன் குழந்தைக்குப் பாலூட்டிக் கொண்டிருந்தாள். அச்சமயம் ஒரு அழகிய வாலிபன் வாகனத்தில் பயணம் செய்து கொண்டு செல்வதைக் கண்ட அந்தத் தாய் இவனைப் போல் என் மகனை ஆக்குவாயாக என இறைவனிடம் துஆ செய்கிறாள். அப்போது குழந்தை பால் குடிப்பதை விட்டு விட்டு அந்த வாலிபனைப் பார்த்து விட்டு, இறைவா இவனைப் போல என்னை ஆக்காதே என்று துஆ செய்ய தாய் காரணம் கேட்க, அக்குழந்தை இவன் கொடுங் கோலர்களில் ஒருவன் என்று கூறுகிறது. மீண்டும் அக்குழந்தை பால் குடிக்கிறது. அச்சமயம் ஓர் அடிமைப் பெண்ணை கொண்டு செல்கிறார்கள். அத்தாய் அவளைப் பார்த்து விட்டு இறைவா என் மகனை இவளைப் போல் ஆக்காதே என்று துஆ செய்கிறாள். அக்குழந்தை அந்த அடிமைப் பெண்ணைப் பார்த்து விட்டு இறைவா என்னை இவளைப் போல் ஆக்குவாயாக என்று துஆ செய்கிறது. தாய் காரணம் கேட்க, மக்கள் இவளைத் திருடி, விபச்சாரி என்று கூறுகிறார்கள். ஆனால் அவள் அப்படி எதுவும் செய்யவில்லை என்று பால்குடி குழந்தை கூறுகிறது.

இந்த நபிமொழியின் ஒளியில் பார்க்கும் போது, தவறிப் பிறந்த ஒரு சாதாரண பச்சைக் குழந்தையும், தாய் மடியில் பால்

குடிக்கும் ஒரு பச்சிளம் குழந்தையும் இறந்த கால நிகழ்ச்சிகளைக் கூறுவதைப் பார்க்கும் போது, ஒரு நபி தொட்டிலில் பேசியது வியப்பன்று. மேலும்,

இவ்வாறு ஒரு நபி, தன் சமுதாயத்திடம் செய்து காட்டிய போது அவர்கள் இது தெளிவான சூனியமேயன்றி வேறில்லை என்று கூறினார்கள் (5:110)

இதிலிருந்து பீ.ஜே நம்புவது போல் ஈஸா நபி இறந்தவர்களை உயிர் பெறச் செய்ததும், பறவைகளைப் படைத்ததும், குருடர்களை, தொழுநோயாளிகளைக் குணப்படுத்தியதும் சொற் பொருளின்படி இல்லை என்றும் உவமை வடிவிலானவை என்றும் விளங்குகிறது. அதனால் தான் அந்த இஸ்ரவேல் சமுதாயம் ஈஸா நபி சூனியம் செய்தார் என்று நம்பியது.

## 29. ஆதம் நபி, முதல் மனிதர் இல்லை!

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 46 இல் கலீஃபா எனும் சொல்லுக்குப் பொருள் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*கலீஃபா எனும் அரபிச் சொல் ஒருவர் இறந்த பின் அல்லது அவர் செயலற்றுப் போனபின் அவரது இடத்தைப் பெறுபவர் என்ற பொருளில் திருக்குர்ஆனில் பயன்படுத்தப்படுகிறது.*

*ஒரு பெண்ணின் கணவர் இறந்த பின் இன்னொருவரை அப்பெண் மணந்தால் இரண்டாம் கணவரை முதல் கணவரின் கலீஃபா எனலாம். முதல் கணவரின் இடத்தை அவர் நிறைவு செய்வதால் இவ்வாறு அழைக்கப்படுகிறார். ஹதீஸ்களிலும் இதற்கு சான்று உண்டு. (நூற்கள் முஸ்லிம் 1525 அஹ்மத் 25417)*

*மனிதன் வழிவழியாகப் பெருகி வருகிறான். இவ்வாறு வழிவழியாகப் பெருகுபவர் என்ற பொருளிலும் கலீஃபா என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது.*



*முதல் மனிதரான ஆதம் (அலை) அவர்களை கலீஃபா எனக் கூறியது இந்தக் கருத்தில்தான்.... எனவே ஆதம் (அலை) அவர்களைப் பற்றி கூறும் இடங்களில் வழிவழியாகப் பல்கிப் பெருகுபவர் (தலைமுறை) என்ற பொருளிலும் மற்றவர்களைக் குறித்து கலீஃபா என்ற சொல் பயன்படுத்தப்படும் போது முந்தையவர்களின் இடத்தை நிரப்பியவர்கள் என்ற பொருளிலும் புரிந்து கொள்ள வேண்டும் என்று எழுதியுள்ளார்.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆனில் அல்லாஹ், மக்காவை, முதல் இல்லம் என்று (2:97) குறிப்பிடுகின்றான். இவ்வாறு ஆதம் நபியை, முதல் மனிதர் என்று எங்காவது குறிப்பிட்டுள்ளானா? நபிமொழிகளிலாவது முதல் மனிதர் என்று ஆதம் நபி கூறப்பட்டுள்ளாரா? இருந்தால் எடுத்துக் காட்டுங்கள்!

திருக்குர்ஆன் 7:81 இல், உலகில் உங்களுக்கு முன் யாரும் செய்திராத வெட்கக் கேடான செயலைச் செய்கிறீர்கள் என்று தமது சமுதாயத்திடம் லூத் நபி கேட்டார். இதிலிருந்து முதன்முதலில் இந்த இழி செயலை இவர்கள் தான் செய்துள்ளனர் என்று தெரிகிறது. இதனால் தானோ, இவர் பிறந்த ஊராகிய சோதோம் என்ற சொல்லிலிருந்து SODAMY எனும் சொல் உருவாயிற்று போலும். இது போல் ஆதம் நபிக்கு முன்னால் எந்த மனிதரும் படைக்கப் -பட்டதில்லை என்றாவது திருக்குர்ஆனிலோ? நபிமொழிகளிலோ கூறப்பட்டுள்ளதா?

ஆதம் நபி அவர்களைப் பற்றிக் கூறிய கருத்து சரியா? என்பதே நம் கேள்வி. **மனிதன் வழிவழியாகப் பல்கிப் பெருகுபவன் என்ற பொருளிலும் கலீஃபா என்ற சொல் பயன்படுத்தப் -பட்டுள்ளது.** முதல் மனிதரான ஆதம் (அலை) அவர்களைக் கலீஃபா எனக் கூறியது **இந்தக் கருத்தில் தான் என்பதற்கு,**

1. திருக்குர்ஆனிலிருந்து ஒரே ஒரு சான்றையாவது பீ.ஜே தர முடியுமா?
2. நபிமொழிகளிலிருந்து சில சான்றுகளை தர முடியுமா ?
3. அரபி இலக்கியங்களிலிருந்து சில சான்றுகளைத் தர முடியுமா? அவ்வாறு தராத வரை அக்கருத்தை ஏற்றுக் கொள்ள முடியாது.
4. ஆதம் நபி கலீஃபா என்றால் அவருக்கு முன்னால் ஒரு மனித இனமே இருக்கிறது என்று பொருளாகும். அம்மக்களின் பிரதிநிதியாக ஆதம் வந்துள்ளார். இதிலிருந்து **ஆதம் நபி முதல் மனிதர் இல்லை** என்று தெளிவாகிறது.

ஆதம் நபிக்கு முன்னால் ஒரு காட்டுமிராண்டித்தனமான, அநாகரிக மனித இனத்திலிருந்து ஆதம், நபியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார். அதாவது அரபுகளிலிருந்து நபி (ஸல்) அவர்கள் நபியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் போலாகும். அப்படித் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆதம் நபியிலிருந்து அவரைப் பின்பற்றி ஒரு புதிய மனித இனம் உருவாகின்றது. அது வழிவழியாகப் பல்கிப் பெருகுகிறது என்ற பொருளில் ஆதம் நபி, கலீஃபா என்றால் அது சரி தான்.

இதனால் தான் வானவர்கள், பூமியில் குழப்பம் விளைவித்து இரத்தம் சிந்தக்கூடியவர்களை ஏற்படுத்தப் போகிறாயா ? என்று கேட்கின்றனர். மனித வடிவில் விலங்குகளைப் போல் வாழ்ந்த அந்த இனத்திற்கு நாகரிகமும் பண்பாடும் ஒழுக்கமும் கற்பிக்க ஆதமாகிய நபி வந்தால் இரத்தம் தானே சிந்த நேரிடும் என்பதையே வானவர்கள் கூறினர். ஆனால் அல்லாஹ் அதன் இன்னொரு பக்கத்தைப் பார்க்கிறான். வானவர்கள் கண்டது இதன் இருட்டுப் பகுதி. அதனால் தான் அல்லாஹ் கூறுகிறான். நீங்கள் அறியாதவற்றை நான் அறிவேன் (2:31) மலக்குகள் இரத்தம் சிந்துதலைக் கண்டனர். அல்லாஹ் நிர்வாணம் இல்லாத, மழையிலும் வெயிலிலும் நாடோடியாக அலைந்து திரியாத, நிலையாக ஓரிடத்தில் வாழ்ந்து வரும் நாகரிகமான ஒரு மனித இனத்தைத் கண்டான். ஆதம் நபி



அம்மனித இனத்துக்கு நீங்கள் ஆடை அற்றவராகவோ, பசித்தவராகவோ, தாகித்தவராகவோ, வெயிலில் காய்பவராகவோ இருக்கக் கூடாது என்ற ஒழுக்கப் போதனையை முதன் முதலில் கற்பிக்கிறார். (திருக்குர்ஆன் 20:119-120)

ஆதம் நபி வாழ்ந்த அந்த நிலப்பகுதியில் காணப்பட்ட அனைத்துப் பெயர்களையும், தான் பெற்ற இறைஞானத்திலிருந்து அம்மக்களுக்கு கற்றுக் கொடுக்கிறார். இதனையே திருக்குர்ஆன் 2:32 வசனம் கூறுகிறது.

இவ்வாறு பூவுலக சொர்க்கத்தில் நபியும் அவரைப் பின்பற்றி வாழும் கூட்டமும் வாழும் போது ஆதம் நபிக்குக் கட்டுப்படாத இப்லீசும், குழப்பம் விளைவிக்கும் சைத்தானும் தோன்றுகின்றனர். அதாவது நபி (ஸல்) அவர்களின் தோழர்களைப் போன்று ஒரு ஜமாஅத்தும், அபூஜஹில் அபூலஹபைப் போன்று ஒரு கூட்டமும் தோன்றினார்கள்.

அல்லாஹ் ஆதம் நபியின் வரலாற்றை நபி (ஸல்) அவர்களுக்கு கூறி இந்த நிலையே உன் வாழ்விலும் ஏற்படும் என்று உணர்த்துகிறான். நீங்கள் (இங்கிருந்து) வெளியேறிவிடுங்கள். உங்களுள் சிலர் சிலருக்குப் பகைவர் ஆகிவிடுவீர்கள் என்று 2:37 இல் அல்லாஹ் கூறுகிறான். இது, அங்கு இருவர் மட்டும் அல்ல, பற்பலர் கொண்ட ஒரு கூட்டமே இருந்திருந்தது என்பதையும் அவர்கள் அனைவரும் வெளியேற்றப்பட்டனர் என்பதையும் படம் பிடித்துக் காட்டுகிறது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் ஹிஜ்ரத் ஏற்படும் என்பதை இதன் மூலம் அல்லாஹ் அறிவுறுத்துகிறான்.

மீண்டும் இதனை, நீங்கள் **எல்லாரும்** இதிலிருந்து வெளியேறுங்கள் என்று 2:39 இல் கூறுகின்றான். இவ்வசனம் ஆதம் நபியுடன் ஒரு மனித சமுதாயம் வாழ்ந்துள்ளது என்று தெரிவிக்கிறது.

சுருக்கமாக, ஆதம் முதல் மனிதர் இல்லை. முதல் நபியாவார். அவர் தனக்கு முன்பு வாழ்ந்த மனித இனத்தின் பிரதிநிதி என்ற பொருளில் கலீஃபாவாக இருக்கிறார். அவர் தனக்குப் பின்னர் ஒரு புதிய மனித இனத்தை உருவாக்கி தன்னைப் பின்பற்றி வழிவழியாக வாழும் ஒரு தலைமுறையை உருவாக்குகிறார். இதனால் அவரை கலீஃபா என்று அல்லாஹ் கூறுகிறான்.

## 30. மஸீஹ் என்றால் மிக நீண்ட பயணி என்றே பொருள்

**திருக்குர்அன் விளக்க அட்டவணை எண் 92 இல் மஸீஹ் என்னும் தலைப்பில் 2 ஆம் பதிப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*ஈஸா நபியின் இன்னொரு பெயர் மஸீஹ் யுக முடிவு நாளின் கடைசியில் வரவிருக்கிற தஜ்ஜாலையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மஸீஹ் எனக் கூறியுள்ளார்கள். ஈஸா நபியைப் போலவே தஜ்ஜாலும் நீண்ட காலமாக உயிருடன் இருந்து வருகிறான்... எனவே மஸீஹ் என்பது இங்கு அரபி மொழிச் சொல்லின் பொருளில் பயன்படுத்தப்படவில்லை. நீண்ட காலம் வாழ்பவரை மெஸாயா என வேதமுடையோர் கூறி வந்தனர். மெஸாயாவைத் தான் திருக்குர்ஆன் மஸீஹ் எனக் கூறுகிறது. (பார்க்க திருக்குர்ஆன் 3:45, 4:157, 9:30-31, 4:171-172, 5;17, 5:72, 5:75) பீ.ஜே யின் தமிழாக்கம் 2 ஆம் பதிப்பு.*

**நம் விளக்கம்:**

1. திருக்குர்ஆன் 3:46 இல் அவர் பெயர் மஸீஹ் ஈஸப்னு மர்யம் என்று இறைவன் கூறுகிறான். திருக்குர்ஆன் 4:173 இல் அவரை மஸீஹ் என்று அழைக்கிறான். 5:18 இல் மர்யமின் மகன் மஸீஹ் என்றும் 5:79 இல் மர்யமின் மகன் ஈஸா என்றும் 3:56 இல் ஈஸா என்றும் அழைக்கப்படுகிறார்.

   எனவே அவரது முழுப் பெயர் மஸீஹ் ஈஸப்னு மர்யம் என்பதாகும். அவர் மஸீஹ், ஈஸா, ஈஸப்னு மர்யம், மஸீஹ்



ஈஸப்னு மர்யம் என்று முழுப் பெயரின் ஒரு பகுதியைக் கொண்டும் அழைக்கப்படுகிறார் என்று சொல்லலாம்.

2. தஜ்ஜாலும் மஸீஹ் என்று நபி (ஸல்) அவர்களால் அழைக்கப் -பட்டுள்ளான். தஜ்ஜாலும், மஸீஹும் மிக **நீண்ட காலம் வாழ்வதால் அவ்வாறு அழைக்கப்படவில்லை.** இது பீ.ஜே யின் தவறான கூற்றாகும். மஸீஹ் எனும் அரபிச் சொல்லுக்கு மிக நீண்ட பயணம் செய்பவர் என்றும் பொருள் உள்ளது. இவ்விருவரும் மிக நீண்ட பயணம் செய்வதால் மஸீஹ் என்று அழைக்கப்பட்டனர். இவ்வாறு மஸீஹ் என்பது இங்கு இருவருக்கும் அரபி மொழிச் சொல்லின் பொருளில் தான் பயன்படுத்தப்பட்டுள்ளது.
3. மிக நீண்ட காலம் வாழ்பவரை வேதமுடையோர் மெஸாயா என்று கூறி வந்தனர் என்பதற்கு பீ.ஜே தக்க ஆதாரம் தர வேண்டும். மொத்தத்தில் மஸீஹ் என்பதற்கு பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 92 இல் தந்த விளக்கம் சரியன்று.
4. மஸீஹ் என்றால் மிக நீண்ட பயணம் செய்பவர் என்ற பொருளை திருக்குர்ஆன் 3:45 வது வசனத்தின் விளக்கத்தில், 1. தஃப்ஸீர் இப்னு கஸீர் 2. தஃப்ஸீருல் ஹமீத் 3. தஃப்ஸீர் ஜவாஹிருல் குர்ஆன் 4. அன்வாருல் குர்ஆன் 5. மவ்லவி முஹம்மது அலி எழுதிய அடிக்குறிப்பு ஆகிய நூற்களிலும் காணலாம்.
5. திருக்குர்ஆன் 23:51 வசனம், நாம் மர்யமுடைய மகனையும், அவருடைய தாயையும் ஒரு அடையாளமாக ஆக்கினோம். அவ்விருவருக்கும் தங்குவதற்கு ஏற்றதும், நீரூற்றுகளைக் கொண்ட ஓர் உயர்ந்த இடத்தில் தஞ்சமளித்தோம் என்று கூறுகிறது. இதில் வரும் தஞ்சம், அடைக்கலம் எனும் சொல் உயிரையும் உயிரினும் மேலான ஈமானையும் காக்க ஹிஜ்ரத் செய்து வேறொரு இடத்திற்குச் செல்லுதல் எனும் பொருளில் வருகிறது. (பார்க்க 18:17; 8:27)

எனவே, ஹஸ்ரத் ஈஸா மஸீஹ் சிலுவையிலிருந்து காப்பாற்றப்பட்டு ஹிஜ்ரத் செய்து காஷ்மீரில் அடைக்கலம் புகுந்தார் என்று தெளிவாகிறது. இவ்வாறு மஸீஹ் பாலஸ்தீனத்திலிருந்து காஷ்மீர் வரை நீண்ட பயணம் செய்ததினால் அல்லாஹ் அவரை மஸீஹ் என்று அழைத்துள்ளான். இவ்வாறே தஜ்ஜாலும் முழு உலகையும் சுற்றி வருவதால் – நீண்ட பயணம் செய்வதால் அவனும் மஸீஹ் என்று அழைக்கப்படுகிறான். இவ்வாறே அல்லாஹ் மஸீஹ் எனும் சொல்லை அரபி மொழி கூறும் பொருளில் தான் பயன்படுத்தியுள்ளான்.

6. ஒரு சொல் ஒரு மொழியில் இருக்கும் போது அந்த மொழி தரும் பொருளில் தான் அதன் இலக்கியங்களில் எடுத்தாளப்படும். அச்சொல்லுக்கு பிற மொழி தரும் வேறொரு பொருளில் பயன்படுத்த வேண்டிய தேவை என்ன? ஒரு வாதத்திற்காக நீண்ட நாள் வாழ்பவர் எனும் பொருள் அதற்கு இருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்த பொருளைத் தரும் ஒரு சொல் அரபி மொழியில் இல்லையா? அந்த அளவுக்கு அரபு மொழி சொல் வளம் குன்றிய மொழியா?
7. பீ.ஜே, மஸீஹ் மிக நீண்ட பயணம் செய்தவர் என்னும் உண்மை கருத்தை மூடி மறைக்க, நீண்ட நாள் வாழ்பவர் எனும் தவறான கருத்தை வலிந்து புகுத்த முயன்றுள்ளார்.

## 31. ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்கு இழைக்கப்படும் அவமரியாதை

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 218 இல் நபிகள் நாயகத்துக்கே சந்தேகமா? என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டு அதை வேதமுடைய சமுதாயத்தினர் தீர்த்து வைப்பார்கள் என்று திருக்குர்ஆன் 10:94 வசனத்தைப் புரிந்து கொள்ளக் கூடாது.*



*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஆரம்பத்தில் இறைத் தூதராக நியமிக்கப்பட்ட போது தமக்கு இறைவனிடமிருந்து தான் வஹி வந்துள்ளதா? அல்லது தமக்கு வேறு ஏதும் ஏற்பட்டு விட்டதா? என்று சந்தேகம் கெண்டார்கள்.*

*இறைவன் புறமிருந்து மனிதர்களுக்கு வேதம் அருளப்படுமா? என்ற அடிப்படையான விசயத்தில் சந்தேகம் கொண்டால் வேதமுடைய சமுதாயத்தினரிடம் கேட்குமாறு அல்லாஹ் கட்டளையிடுகிறான்.*

*அவ்வாறு கேட்டால் இறைவனிடமிருந்து மனிதர்களுக்கு வேதம் வழங்கப்படும் என்ற அடிப்படையை அவர்கள் உறுதிப்படுத்துவார்கள் என்பது தான் இதன் கருத்து.*

*குர்ஆனில் கூறப்படும் செய்திகளுக்கு அவர்களிடம் விளக்கம் கேட்க வேண்டும் என்று இதைப் புரிந்து கொள்ளக் கூடாது.*

**நம் விளக்கம்:**

ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களைப் பற்றி இதை விட மோசமாக ஒருவர் எடை போட முடியாது ! 10:94-95 வசனங்களுக்கு அவர் தந்த மொழியாக்கத்தைப் பார்த்தாலே தவறு புரியும்.

10:94 இல், (முஹம்மதே) நாம் உமக்கு அருளியதில் நீர் சந்தேகத்தில் இருந்தால் உமக்கு முந்தைய வேதத்தை ஓதுவோரிடம் கேட்பீராக. உமது இறைவனிடமிருந்தே இவ்வுண்மை உம்மிடம் வந்துள்ளது. சந்தேகிப் போரில் நீர் ஆகிவிடாதீர்.

இந்த வசனத்துக்குத்தான் பீ.ஜே விளக்கம் தந்துள்ளார். அவருடைய விளக்கம் தவறு என்பதை அடுத்த வசனமே கூறுகிறது:

10:95 இல், அல்லாஹ்வின் வசனங்களைப் பொய் எனக் கருதுவோரில் நீர் ஆகிவிடாதீர். அவ்வாறு செய்தால் நஷ்டம் அடைந்தவராவீர்.

10:94 இல் வரும் நீர் எனும் சொல் முஹம்மது நபி (ஸல்) அவர்களைக் குறித்து கூறப்பட்டுள்ளது என்று எண்ணியதே பீ.ஜே செய்த தவறான விளக்கத்திற்குக் காரணமாகும். அப்படி என்றால் 10:95 வசனத்தில் வரும் நீர் என்பதும் நபி (ஸல்) அவர்களைத் தானே குறிக்கும். நபி (ஸல்) அவர்கள் தமக்கு இறங்கிய அல்லாஹ்வின் வசனங்களைப் பொய்யெனக் கருதினார் என்று பீ.ஜே நம்பத்தயாரா? 10:95 வசனத்தில் வரும் நீர் எனும் சொல், நபி (ஸல்) அவர்களைக் குறிக்காது என்றால் 10:94 வசனத்தில் வரும் நீர் என்ற சொல் எப்படி நபி (ஸல்) அவர்களைக் குறிக்கும்?

எனவே, 10:94 வசனத்தில் வரும் நீர் – உமக்கு எனும் சொற்கள் நபி (ஸல்) அவர்களைக் குறிக்கவில்லை என்று அறிந்து கொள்கிறோம். எனவே அவரது அந்த விளக்கம் ஒரு அபத்தம் என்று அறிந்து கொள்ளுங்கள். அப்படி என்றால் அந்த நீர் என்பது திருக்குர்ஆனை வாசிக்கும் என்னையும் உங்களையும் குறித்துச் சொல்லப்பட்டவை என்று அறிந்து கொள்ளுங்கள்.

2) நபி (ஸல்) அவர்களுக்கு தனக்கு அருளப்பட்டது வேத வசனமா? என்ற சந்தேகம் வந்துவிட்டதாகவும் அந்த சந்தேகத்தை வேதக்காரர்களாகிய யூத கிறித்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் அவர்கள் வேத செய்திகள் இறைவனிடமிருந்து வரும் என்ற அடிப்படையை நபி (ஸல்) அவர்களுக்கு உறுதிப்படுத்துவார்கள் என்றும் எழுதியுள்ளார்! இவ்வாறு எழுதுவதற்கு இவரால் எப்படி முடிந்தது என்று என்னால் விளங்கிக் கொள்ள முடியவில்லை. நபி (ஸல்) அவர்கள் தன் 40 வயதில் தனக்கு வேத வஹி வந்த போது, தனக்கு வந்தது வேத வஹியா? என்பதைக் கேட்டுத் தெரிய வேண்டிய தேவை என்ன? கிறித்தவர்கள் தனக்கு வந்த வேத நூற்களைப் படிப்பதைப் பார்த்துத் தெரிந்திருப்பார்களே? முதல் வஹி வந்த போதே அன்னை கதீஜா (ரலி) அவர்கள் இன்ஜீலை மொழியாக்கம் செய்து கொண்டிருந்த வரக்கா பின் நவ்ஃபல் அவர்களிடம் அழைத்துச் சென்றார்கள். ஜிப்ரீல் (அலை)



அவர்களிடமிருந்து தனக்கு வந்தது வேத வஹியே என்று அறிந்து, தெரிந்து, முழுக்க உணர்ந்து தெளிந்த பின்னர் பல ஆண்டுகளுக்குப் பிறகு மதினாவில் உள்ள வேதக்காரர்களிடம் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியது எப்படி வரும்?

3) நபி (ஸல்) அவர்களைப் பற்றி இவ்வாறு எழுதும் இவர் ஈஸா நபி அவர்களைப் பற்றி எழுதியுள்ளதைப் பாருங்கள்.

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 276 இல் பீ.ஜே,**

*வேதம் வழங்கப்படுவதும் ஒருவர் நபியாக ஆக்கப்படுவதும் 40 வயதில் தான் என்று சில பேர் கூறி நாற்பதில் ஒரு தனி முக்கியத்துவம் இருப்பது போல் சித்தரிக்கின்றனர்.*

*யஹ்யா நபியவர்கள் பிறக்கும் போதே நபியாகப் பிறக்கிறார்கள். சிறுவராக இருக்கும் போதே அவருக்கு வேதத்தைக் கொடுத்து விட்டான் என இவ்வசனம் (திருக்குர்ஆன் 19:12) கூறுகிறது.*

*மேலும் 19:30 வசனத்தில் ஈஸா நபியவர்கள் பிறந்தவுடனே தம்மை இறைவன் தூதராக நியமித்து வேதத்தை வழங்கியதாக கூறினார்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. நபியாக நியமிக்கப் படுவதற்கும் வயதுக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை என்பதற்கு இவ்வசனங்கள் சான்றாகும்.*

இந்த விளக்கத்தையும் நபி (ஸல்) அவர்களுக்கு கூறிய விளக்கத்தையும் ஒப்பிட்டுப் பாருங்கள். ஒரு பக்கம் பிறந்த மேனியுடன் தாயின் மார்பில் பாலருந்தி தாயின் மடியில் சிறுநீரும் மலமும் கழிக்கும் சிறு குழந்தைகளுக்கு கையில் வேதம் கொடுக்கப்படுகிறதாகவும் அவர்கள் தங்களை நபி என்றும் தனக்கு இந்த வேதம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்றும் பேசும் பாலருந்தும் பச்சிளம் குழுந்தைகள்!

மறுபக்கம், ஒரு நபிக்கு மணமுடித்துப் பிள்ளைகளுக்குத் தந்தையாகிய பின் நபியாகி வேதம் வழங்கப்பட்ட பின்னர்

பல்லாண்டுகள் கழித்து தனக்கு வழங்கப்பட்டது வேதமா? என்று சந்தேகம் வருகிறதாம். அதனை வேதக்காரர்களிடம் கேட்டுத் தெரிய வேண்டுமாம். யா அல்லாஹ்! நீ எங்களை இந்த மூட முல்லாக்களின் வழிகேடுகளிலிருந்து காப்பாற்றியதற்குரிய நன்றிக்கடனை நாங்கள் எப்படி செலுத்தப் போகிறோம்? அதற்கு எங்கள் வாழ்நாள் எல்லாம் போதாதே!

4) தங்களை நபி (ஸல்) அவர்களின் வாரிசுகள் என்றும் வேதத்துக்குச் சொந்தக்காரர்கள் என்றும் வாய்கிழிய பேசும் இவர்கள் இன்னும் எத்தனை ஆண்டுகளுக்கு இந்த அநியாயத்தை ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்கு இழைக்கப் போகிறார்கள்?

5) ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ் முதல் வஹியின் போது **ஓதுவீராக! உமது இறைவனின் பெயரால் ஓதுவீராக!** என்று கூறிய பின்னரும் வேதச் செய்திகள் இறைவனிடமிருந்து மனிதனுக்கு வருமா? என்ற சந்தேகம் நபி (ஸல்) அவர்களுக்கு வந்தது என்று பீ.ஜே எழுதுகிறார். எனவே இவர் ஒரு நபியின் உண்மை இலக்கணத்தை உண்மையிலேயே அறியாததின் காரணமாகத்தான் பாலருந்தும் பாலகர்கள் பிறக்கும் போதே நபியாகப் பிறந்து சுமக்க முடியாத வேதத்தைக் கையில் பிடித்துக் கொண்டு இது வேதம் என்று கூறினார்கள் என்று எழுதுகிறார்.

நல்ல வேளை நபியாகப் பிறக்கும் போதே அவர் கையில் வேதத்துடன் பிறந்தார் என்று எழுதவில்லை! (நவூதுபில்லாஹ்)

6) அல்லாஹ் திருக்குர்ஆனில் நபிமார்களைத் தேர்ந்தெடுக்கிறான் (22:76) என்ற சொற்றொடரைக் கையாளுகிறான். நபிமார்களைப் பிறக்கச் செய்கிறான் என்று எங்கும் கூறவில்லை. நபியாக ஆக்கினான் என்று தான் திருக்குர்ஆன் கூறுகிறது. நபியாகப் பிறக்கச் செய்தான் என்று கூறவில்லை.



ரஸூமார்கள் அனுப்பப்பட்டுள்ளார்களே தவிர ரஸூலாகப் பிறப்பார்கள் என்று அல்லாஹ் கூறவில்லை.

தன் தூதை வழங்கினான் என்று தான் திருக்குர்ஆன் கூறுகிறதே தவிர தூதராகவே பிறந்தார் என்று கூறவில்லை (6:125)

7) யஹ்யா நபியும், ஈஸா நபியும் வயிற்றிலிருந்து வெளிவரும் போதே நபியாக ரஸூலாக வந்தார்கள். அவர்களுக்கு வேதம் கொடுக்கப்பட்டது என்றால்,

அவ்விருவரும் இறைவனிடமிருந்து செய்திகள் பெற்றிருக்க வேண்டும். அதை அவ்வப் போது மக்களுக்கு தெரிவித்திருக்க வேண்டும். அதாவது அவர்களுக்கு இறைவனிடமிருந்து வேத வசனங்கள் இறங்கின அவர்கள் மக்களை அழைத்து அவர்களிடம் அவற்றை அறிவித்தார்கள் என்பதற்கு தக்க ஆதாரங்கள் வேண்டும். அப்படி அவ்விருவரும் செய்திருப்பதாகத் தெரியவில்லை. எனவே அவர்கள் பிறக்கும் போதே நபியாக ரசூலாக பிறந்தார்கள் என்பது தவறாகும்.

19:13 இல், யஹ்யாவே! நீர் வேதத்தை உறுதியாகப் பற்றிக் கொள்க என்று கூறினோம் என்று அல்லாஹ் கூறுகிறான். இதிலிருந்து நாம் தெரிவது என்ன? யஹ்யா நபியின் காலத்தில் அவரது சமுதாய மக்கள் வேதத்தை விட்டுவிட்டு, வேதமல்லாத ஹதீஸ் போன்றவற்றுக்கு முன்னுரிமை வழங்கி வந்துள்ளனர் என்றும், எனவே யஹ்யா நபி அம்மக்களுக்கு இறைக்கட்டளைக்கு ஏற்ப தவ்ராத் வேதத்தை மக்கள் உறுதியாகப் பற்றிப் பிடிக்க ஏவினார். வேதத்தின் வழியில் வாழ வலியுறுத்தினார் என்றும் தெரிகிறது.

8) நபி என்போர் அச்சமூட்டி எச்சரிப்போர் என திருக்குர்ஆன் (33:46) கூறுகிறது. இறைவனின் கட்டளைகளை எடுத்துச் சொல்வது தான் இறைத்தூதர்களின் பணியாகும் என (5:100) திருக்குர்ஆன் கூறுகிறது. யஹ்யா நபியும், ஈஸா நபியும் பச்சிளம் குழந்தைப் பருவத்தில் அப்பணிகளை எப்படி நிறைவேற்றினார்கள்?

9) யூனுஸ் நபி ஒரு சமுதாயத்துக்கு அனுப்பப்பட்டு, அவர் அப்பணியைச் மக்களுக்குச் செய்யாமல் விட்டுச் செல்ல நினைத்ததை இறைவன் விட்டு வைத்தானா? இல்லை என்றால், பச்சிளம் பாலகர்களிடம் தன் தூதுப் பணியை வீணாக விட்டு வைத்திருந்தான் என்று எண்ணுவது எவ்வளவு அறிவீனம்! அப்படி அப்பச்சிளம் குழந்தைகளை நபியாக்க வேண்டிய தேவை என்ன?

10) அன்னை கதீஜா (ரலி) அவர்களும் வரக்கா பின் நவ்ஃபல் அவர்களும் முதல் வஹியிலிருந்து நபி (ஸல்) அவர்களை நபி என்றும் அவர்களுக்கு வந்தது வேத வசனம் என்றும் அதை ஜிப்ரீல் கொண்டு வந்தார் என்றும் தெரிந்து கொண்டார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள் தனக்கு வந்தது வேத வஹி என்பதில் ஐயம் கொண்டவராக இருந்தார்கள் என்று இந்த ஆலிம்கள் எண்ணுவது எவ்வளவு கொடுமை! அந்த கிறிஸ்தவருக்கு இருந்த அறிவு கூட இந்த முஸ்லிம் ஆலிம்களுக்கு இல்லையே!

11) ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களைப் பற்றி இப்படி எடை போடும் இந்த பெயர் தாங்கிய ஆலிம்கள் இக்காலத்தில் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களைப் பின்பற்றி வந்துள்ள உம்மத்தி நபியும், மெய்ப்பிக்கும் தூதரும் ஆகிய இக்காலத்தின் இமாமை எப்படி நம்புவார்கள்? முஸ்லிமாக பிறந்து வளர்ந்து ஆலிம் பட்டம் பெற்றவர்களின் கதியே இது என்றால் யூத, கிறித்துவ மக்களின் நிலை என்ன? எனவே முஸ்லிம்களே! இவர்களை இனம் கண்டு கொள்ளுங்கள்.

## 32. யூசுஃப் நபி பற்றிய தவறான விளக்கம்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 236 இல் யூசுஃபுக்கு தந்திரத்தைக் கொடுத்தோம் காரியம் சாதிக்க தந்திரம் செய்யலாமா? என்னும் தலைப்பில் பீ.ஜே 9 வது பதிப்பில் இவ்வாறு எழுதுகிறார்:**

*யூசுஃப் நபியவர்கள் தமது சகோதரரை தம்முடனே வைத்துக் கொள்வதற்காக அவர் மீது திருட்டுப் பட்டம் சுமத்தி,*



*அதையே காரணம் காட்டி, பிடித்து வைத்துக் கொண்டதாக இவ்வசனம் (12:76) கூறுகிறது.*

*இதை யூசுஃப் நபி, தன்னிச்சையாகச் செய்தார் என்று கருத முடியாது. ஏனெனில், இந்தத் தந்திரத்தை நாமே அவருக்குக் கற்றுக் கொடுத்தோம் என்று இதே வசனத்தின் தொடச்சியாக அல்லாஹ் கூறுகிறான்.*

*இறைவனே இந்தத் தந்திரத்தைக் கற்றுக் கொடுத்திருப்பதால் இந்த நிகழ்ச்சியில் எந்தக் கருத்து அடங்கியுள்ளதோ அது போன்ற நிலையில் நாமும் தந்திரத்தைக் கையாளலாம்.*

*இச்சம்பவத்தில், திருடாத ஒருவர் மீது திருட்டுப் பழி சுமத்தப்பட்டாலும், பழி சுமத்தி அவரை இழிவுபடுத்துவது இதன் நோக்கமல்ல! பழி சுமத்தப்பட்டவருக்கு சிறந்த ஏற்பாட்டைச் செய்து கொடுப்பதே இதன் நோக்கம்.*

*யூசுஃப் நபியின் தந்தை வழிச் சகோதரர்கள் பஞ்சத்தில் அடிபட்டு, உணவு கேட்டு வருகிறார்கள். அவர்களுடன் வந்திருந்த தமது இளைய சகோதரர் அங்கிருந்து கஷ்டப்படுவதை விடத் தம்முடன் இருப்பது தான் நல்லது என்று கருதி இந்தத் தந்திரத்தைக் கையாண்டார்கள்.*

*இதை விட முக்கியமாக இங்கு கவனிக்க வேண்டிய அம்சம், தம் சகோதரர் மீது திருட்டுப் பழி சுமத்துவதற்கு முன்னால் அவரைத் தனியாக அழைத்து, இந்தத் தந்திரத்தை கையாளப் போகிறேன் என்று உண்மை நிலவரத்தை எடுத்துக் கூறி, அந்தச் சகோதரரும் ஒத்துக் கொண்ட நிலையில் தான் யூசுஃப் நபி இதைச் செய்தார்கள்.*

*இது போன்ற சூழ்நிலைகளில், இந்த நெறிமுறைகளைக் கவனத்தில் கொண்டு தந்திரத்தைக் கையாளலாம்.*

**நம் விளக்கம்: மேலே கூறியுள்ளவற்றில், முதலாவதாக,**

1) அல்லாஹ்தான் இந்த தந்திரத்தைக் கற்றுக் கொடுத்தான் என்று அல்லாஹ்வின் மீது பழியும்,

2) யூசுப் நபியும் அவரது சகோதரரும் திட்டமிட்டு நாடகமாடினர் என்ற பழியும்,

3) இவ்வாறு ஒரு நாட்டின் சட்டத்தைத் தன்னலத்திற்காகப் பயன்படுத்திக் கொண்டனர் என்ற பழிச் சொல்லும்,

4) நாமும் இது போன்ற செயல்களைச் செய்யலாம் என்று இஸ்லாத்தின் பெயரால் இஸ்லாத்தில் இல்லாத ஒரு இலவச அனுமதியும் பீ.ஜே நமக்குத் தந்துள்ளார்.

5) இதன் மூலம் பீ.ஜே யின் வெளி உலகுக்குத் தெரியாத ஒரு முகம், படம் பிடித்துக் காட்டப்பட்டுள்ளது. இவர்களிடமிருந்து அல்லாஹ் தான் நம் எல்லாரையும் காப்பாற்ற வேண்டும்.

யூசுப் நபியின் சகோதரர்கள், பாத்திரம் பிடிபட்ட சகோதரனுக்குப் பதிலாக தங்களுள் ஒருவரைப் பிடித்து வைத்துக் கொள்ளும் படி வேண்டினர். யூசுப் நபியை நன்மை செய்பவராகக் காண்கின்றனர். ஆனால் அவரோ யார் பிடிபட்டாரோ அவரைத் தவிர மற்றவரைப் பிடித்து வைத்துக் கொள்வதை விட்டும் அல்லாஹ்விடமும் பாதுகாப்பு தேடுவதாகவும், அவ்வாறு செய்தால் அநீதி இழைத்தவர்கள் ஆவோம் என்று மறுத்து விடுகிறார் (திருக்குர்ஆன் 12:79-80)

**யூசுப் நபியின் இந்தப் பதில்,**

1) அல்லாஹ் இது போன்ற செயல்களை விரும்ப மாட்டான் என்றும்

2) தானும் இது போன்ற செயலைச் செய்யத் தயாராக இல்லை என்றும்

3) இத்தகு செயல் அநீதியாகும் என்றும் தெரிவிக்கிறது. இதிலிருந்து யூசுப் நபிக்கும் அச்செயலுக்கும் சம்பந்தமில்லை என்று தெளிவாகிறது.

**இரண்டாவதாக, அல்லாஹ் திருக்குர்ஆன் 12:77 இல்,**

1) யூசுப் நபியை மறதியாகவோ, கவனக் குறைவாகவோ அந்த பாத்திரத்தைத் தம்பியின் தானிய மூட்டையில் வைக்க வைத்ததும்



2) அதனால் அவரது தம்பி பிடிபட்டு யூசுப் நபியுடன் தங்க நேர்ந்ததும் இறைவன் யூசுப் நபிக்காகச் செய்த திட்டம் ஆகும். யூசுப் நபி தானே செய்த செயல் அன்று.

**மூன்றாவதாக,** யூசுப் நபி திருட்டுப் பழியை தன் தம்பியின் மீது போடும் தந்திரத்தைத் தம்பியிடம் சொல்லி அவர் ஒத்துக் கொண்ட பின்னர் தான் செய்ததாக ஒரு அபாண்டத்தை பீ.ஜே அவ்விருவர் மீதும் போடுகிறார். நபிமார்கள் மோசடி செய்ய மாட்டார்கள் என (3:147) கூறுகிறது. எனவே, யூசுஃப் நபி இத்தகு செயலைச் செய்யவில்லை.

திருக்குர்ஆனிலிருந்தோ, நபிமொழியிலிருந்தோ இதற்கு ஆதாரம் உண்டா? அல்லது பீ.ஜே க்கு வஹி ஏதும் வந்ததா?

**திருக்குர்ஆன் 12:69 வது வசனத்திற்கு பீ.ஜே யின் தமிழாக்கத்தைப் பாருங்கள்:**

*அவர்கள் யூசுபிடம் சென்ற போது, அவர் தமது சகோதரரை (தனியாக) அரவணைத்து நான் தான் உனது சகோதரன். அவர்கள் செய்தவற்றைப் பற்றிக் கவலைப்படாதே! எனக் கூறினார் என்று வருகிறது.*

சகோதரர்கள் இருவரும் சந்தித்துப் பேசியது இது தான் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. அல்லாஹ் கூறாதவற்றை சுயமாகக் கற்பனை செய்து கொண்டு அல்லாஹ்வின் பேரில் பீ.ஜே இட்டுக்கட்டிக் கூறுகிறார்.

**நான்காவதாக,** திருக்குர்ஆன் 12:67-68 வசனத்தில், யாக்கூப் நபி தம் பிள்ளைகளை ஒரே வாசல் வழியாக ஊரில் நுழையாதீர்கள் என்பதற்கு, பொருள்கள் விநியோகிக்கப்படும் இடங்களில் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த பலர் ஒன்று திரண்டு பெற முயற்சிக்கும் பொழுது மற்றவர்கள் அதை வெறுப்புடன் பார்க்கும் நிலைமை ஏற்படும். இது போன்ற நிலைமையைத் தவிர்ப்பதற்காகவே யாகூப் நபி அவர்கள், ஒரு வாசல் வழியாக செல்ல வேண்டாம்.

பிரிந்து பிரிந்து செல்லுங்கள் எனக் கூறியிருக்க வேண்டும் என்று எழுதியுள்ளார். (திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 235)

இது தவறாகும். யூசுப் நபி தம் சகோதரரை வரவழைக்க எடுத்த முயற்சிகளின் காரணமாக அவருடைய சகோதரர்கள் தம் தந்தையிடம் யூசுப் நபியின் சகோதரரை தம்முடன் அழைத்துச் செல்ல வேண்டினர். இந்த நடவடிக்கைகள் காரணமாக யாக்கூப் நபியின் உள்ளுணர்வில், யூசுப் நபி அங்கிருக்கக்கூடும் என்ற எண்ணம் எழுந்தது. அங்கிருந்தால் யூசுப் நபி தன் சகோதரனைத் தனித்துச் சந்திக்க வேண்டும் என்று தான் ஒரே வாசல் வழியாக எல்லாரும் செல்லாதீர்கள் என்று கூறியுள்ளார்.

**ஐந்தாவதாக,** யார் பிடிபட்டாரோ, அவருக்குப் பதிலாக அவருடைய சகோதரர்களுள் ஒருவர் தன்னை வைத்துக் கொண்டு, அவரை விட்டு விடும்படிக் கேட்டதற்கு யூசுப் நபி மறுத்து விடுகிறார். மேலும் அவ்வாறு செய்வதிலிருந்தும் அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடுகிறார். அச்செயல் அநீதி என்றும் அவர் கூறுகிறார். அப்படி என்றால், அல்லாஹ் ஈஸா நபியை தன்னளவில் உயர்த்திக் கொண்டு அவருக்குப்பதில் வேறொருவரைச் சிலுவையில் அறையச் செய்தான் என்று பீ.ஜே போன்றோர்கள் நம்புகின்றனர். அதனை வாய்கிழிய பேசித் திரிகின்றனரே, இவர்கள் இச்செயலை அநீதி என்று உணர்ந்து அல்லாஹ்விடம் பாதுகாப்பு தேடும் நாள் எந்நாளோ?

**ஆறாவதாக,** திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 265 இல் பீ.ஜே, மற்றவர்கள் செய்த பாவங்களுக்காக அந்தப் பாவத்தில் சம்பந்தமில்லாத ஒருவரைப் பலி கொடுப்பது என்பது இஸ்லாமிய அடிப்படைக்கு எதிரானது என்று எழுதியுள்ளார்.

ஈஸா நபிக்குப் பதிலாக ஆள் மாறாட்டம் செய்யப்பட்டு, வேறொருவர் சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டார் என்று பீ.ஜே போன்றோர் நம்புகின்றனர். இதனை இஸ்லாமிய அடிப்படைக்கு எதிரானது என்று உணர்ந்து திருந்தும் நாள் எந்நாளோ?



**ஏழாவதாக,** இது போன்ற சூழ்நிலையில் இந்த நெறிமுறைகளைக் கவனத்தில் கொண்டு தந்திரத்தைக் கையாளலாம் என்று அநீதிக்கும், பாவத்திற்கும் பீ.ஜே மார்க்கத்தீர்ப்பு ஒன்றை வழங்குகிறார். இவரது சொல்லுக்குத் தலையையும், விரல்களையும் ஆட்டும் கூட்டத்தினரை வழிகெடுத்து நரகிற்கு அழைத்துச் செல்ல விரும்புகிறார் போலும். (அல்லாஹ் காப்பானாக)

இல்லாத ஒன்றை இருப்பதாக நம்பிக் கொண்டு தவறான மார்க்கத் தீர்ப்பு வழங்கி, சமுதாயத்தை வழிகெடுக்கும் இவர்களிடமிருந்து அல்லாஹ் நம்மைக் காப்பானாக. ஆமீன்.

## 33. சுலைமான் நபியின் மீது கட்டுக்கதை

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 327 இல் ஜின்களுக்கு மறைவானவை தெரியாது என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*ஸுலைமான் நபிக்கு பயந்து கொண்டு பைத்துல் முகத்தஸை கட்டும் பணியில் ஜின்கள் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். (குர்ஆன் 34:14)*

*ஸுலைமான் நபி நின்ற நிலையிலேயே இறந்து விட்டார். ஆனாலும் கைத்தடியை ஊன்றிக் கொண்டிருந்ததால் அவர் கீழே விழாமல் அப்படியே நின்றார். பிறகு கைத்தடியை கரையான்கள் அரித்த போது, அவரது உடல் கீழே விழுந்தது. அவர் விழுந்த பிறகு தான் ஸுலைமான் ஏற்கனவே இறந்து விட்டார் என்ற செய்தி ஜின்களுக்குத் தெரிகிறது.*

*தங்களுக்கு அருகில் நின்று கொண்டிருக்கிற ஸுலைமான் நபி உயிருடன் இருக்கிறாரா? மரணித்து விட்டாரா? என்பதைக் கூட ஜின்களால் கண்டு பிடிக்க இயலவில்லை.*

**நம் விளக்கம்:**

சுலைமான் நபி (அலை) அவர்கள் பைத்துல் முகத்தஸை ஜின்களைக் கொண்டு கட்டும்பணி – அச்சமயம் நின்ற நிலையில்

மரணித்தல் – கீழே விழாமல் அப்படியே நிற்றல் – கைத்தடியை கரையான்கள் அரித்தல் – அவர் கீழே விழுதல் ஆகியவை திருக்குர்ஆனிலும், நபிமொழியிலும் இல்லாத கட்டுக் கதைகள் இப்படிப்பட்ட கற்பனை வளம் செறிந்த கட்டுக் கதையை பீ.ஜே எங்கிருந்து பெற்றார்? ஆதாரம் தர முடியுமா?

பீ.ஜே தன் திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 327 இல், ஜின்களுக்கு கண்மூடித் திறப்பதற்குள்ளும், இருந்த இடத்திலிருந்து எழுவதற்குள்ளும் ஒரு நாட்டிற்குள் இருக்கும் சிம்மாசனத்தை மற்றொரு நாட்டில் கொண்டு வந்து வைக்கக் கூடிய ஆற்றல் இருந்தது என்றும் எழுதுகிறார். அப்படி என்றால்,

1) ஒரு மனிதர் உயிருடன் இருக்கும் போது அவருடைய உடல் நிலையும், தூங்கும் போதோ, மரணித்த பின்னோ காணப்படும் உடல் நிலையும் பார்த்தாலே தெரியுமே! தூங்கும் போது தலை சாய்ந்தோ, கழுத்து தொங்கியோ காணப்படும். இந்த அற்ப அறிவு கூடவா ஜின்களுக்கு இல்லாமல் போய்விட்டது?

2) பைத்துல் முகத்தஸை ஜின்கள் ஓரிரு நாள்களில் கட்டி முடிக்க வேண்டியதுதானே! ஏன் கட்டி முடிக்கவில்லை? எத்தனை மாதங்கள், வருடங்கள் ஆயின என்பதற்கு பீ.ஜே நபிமொழி ஆதாரம் காட்டுவாரா?

3) சுலைமான் நபி நின்ற நிலையிலேயே இறந்து விட்டார். ஆனாலும் கைத்தடியை ஊன்றிக் கொண்டிருந்ததால் அவர் கீழே விழாமல் அப்படியே நின்றார் என்றால்,

ஒரு மன்னரும் நபியுமாகிய அவருக்கு ஆன்மீக, அரசியல், இல்லறம், சுய வேலைகள் இவை எதுவும் இல்லையா? அதையெல்லாம் கவனிக்காமல் பல நாட்களாக, பல வாரங்களாக, இந்தக் கட்டிடப் பணியைத் தான் மேற்பார்வை பார்த்துக் கொண்டிருந்தாரா? இதற்கு வேறு பணியாளர்கள் யாரும் இல்லையா? மந்திரிகளும், மனைவி மக்களும், பிறரும் அவரைத் தேடி வரவில்லையா?



4) இறந்து பன்னாட்களாகியும் மன்னர் வரவில்லையே என்பதை யாரும் கவனிக்கவில்லையா? மன்னரும் மற்ற பணிகள் எதையும் கவனிக்கவில்லை. மன்னரையும் யாரும் கவனிக்கவில்லை என்று பீ.ஜே நம்புகிறாரா?

5) ஒரு மனிதரின் ரூஹ் பிரியும் போது, அவர் எத்துணை பலசாலியாக இருந்தாலும் கீழே விழாமல் கைத்தடியை ஊன்றிக் கொண்டு நிற்க முடியும் என்று அறிவும் அனுபவமும் கொண்ட ஒரு மனிதன் நம்ப முடியுமா? முடியும் என்றால், அதனை ஆதாரபூர்வமாக நிரூபித்து காட்ட முடியுமா?

6) ஹஸ்ரத் ரசூலுல்லாஹ் (ஸல்) அவர்களுக்கே 63 வயதில் மரண வேளையில் இரு கால்களையும் தரையில் ஊன்றி நடக்க முடியவில்லை என்றால் இத்தனைக்கும் அவர்கள் இரு மனிதர்களின் தோள்களில் தம் இரு கைகளையும் ஊன்றிக் கொண்டிருந்தார்கள் என்றால், சுலைமான் நபி எப்படி உயிர் பிரியும் போது கைத்தடியால் ஊன்றிக் கொண்டு நிற்க முடியும்?

7) சில அல்லது பல நாட்களாக ஒரு மனித நபி, இறை வழிபாட்டுக்காக, இயற்கை தேவைகளுக்காக, இல்லறப் பணிகளுக்காக, அரசியல் பணிகளுக்காகச் செல்லாமல் இருப்பதை ஜின்களுக்கு கண்கள் இருந்தும் கவனிக்கவில்லையா?அவை கருத்துக் குருடாக இருந்தனவா? அல்லது அவை அனைத்தும் குருட்டு ஜின்களா?

8) தங்களுக்கு அருகில் நின்று கொண்டிருக்கிற சுலைமான் நபி உயிருடன் இருக்கிறாரா? மரணித்து விட்டாரா என்பதைக் கூட ஜின்களால் கண்டுபிடிக்க இயலவில்லை என்றால்,

அந்த ஜின்கள் வானம் சென்று, அதைத் தீண்டியிருக்க முடியும். ஒட்டுக் கேட்பதற்காக அங்கே பல இடங்களில் அமர்ந்திருக்க முடியும் என்பது சரியா? (ஆதாரம்: 72:8-9 பீ.ஜே தமிழாக்கம்). கூரை ஏறி கோழி பிடிக்க முடியாதவர், வானம் ஏறி வைகுண்டம் போக முடியுமா?

9) சுலைமான் நபிக்கு பயந்து கொண்டு பைத்துல் முகத்தஸைக் கட்டும் பணியில் ஜின்கள் ஈடுபட்டுக் கொண்டிருந்தன என்று பீ.ஜே எழுதியுள்ளார். அப்படி என்றால், சுலைமான் நபி ஒரு கொடிய சர்வாதிகாரியா? அவர் ஜின்களை ஈவு இரக்கமின்றி ஜின்களின் விருப்பத்திற்கு மாறாக அவர்களை கொத்தடிமைகளாக நடத்திக் கொண்டிருந்தாரா? இஸ்ரவேல் மக்களை ஃபிர்அவ்ன் கொத்தடிமைகளாக நடத்தியது போல் சுலைமான் நபி நடத்தினாரா? பீ.ஜே யின் கற்பனைக் கதை, ஒரு நபியை, நீதியான ஆட்சி நடத்திய இரக்க குணம் கொண்ட ஒரு அரசரை கொடுங்கோலனாக படம் பிடித்துக் காட்டுகிறது.

10) **கைத்தடியை** ஊன்றிக் கொண்டிருந்தார். கைத்தடியைக் குறிக்க அரபி மொழியில் பல சொற்கள் இருக்கலாம். அதை நான் மறுக்கவில்லை. ஆனால், கைத்தடி என்றாலே குர்ஆன், நபிமொழி, வரலாறு தெரிந்த மக்களும் பாமர மக்களும் கூட **அஸா** என்று கூறுவர். மூஸா நபியின் **அஸா** அவர்களின் நினைவுக்கு வரும். சுலைமான் நபியின் கைத்தடியைக் குறிக்க **அஸா** என்று வராமல் **மின்சஅத்** என்ற சொல் வந்துள்ளதே ஏன்?

ஆடு, மாடு மேய்ப்பவர்களின் கையில் கைத்தடி இருக்கும். சுலைமான் நபியின் கையில் கைத்தடி எதற்கு? கைத்தடியை ஊன்றி நடக்கும் அளவுக்கு அவர் வலிமையின்றி இருந்தாரா? அப்படி எனில் கட்டிடப் பணியை அவர் ஏன் கவனிக்க வந்தார்? வேறு ஆட்களை அப்பணிக்கு நியமிக்கவில்லையா?

கரையான்கள் கைத்தடியை அரித்து தின்று விட்டது என்பதில் திருக்குர்ஆனில் மூல பாடத்தில் **தாபத்துல் அர்ழ்** – பூமியிலுள்ள ஒரு பூச்சி என்று தான் வருகிறது. மனிதன் உட்பட பூமியில் ஊர்ந்து செல்லும் அனைத்து உயிர்களையும் அது குறிக்கும். கரையான்களைக் குறிக்க அரபி மொழியில் வேறு சொல்லே இல்லையா? போகட்டும். சுலைமான் நபியின் கைத்தடியை, அரண்மனையில் அரித்துத் தின்ற கரையான்கள், ஒருவரின்



உடலையும் உணவையும் எப்படித் தின்னாமல் விட்டு வைத்திருக்கும்? (திருக்குர்ஆன் 2:260)

கைத்தடி என்பது இந்த இடத்தில் செங்கோலைக் குறிக்கும் என்பதனை கீழ்க்கண்ட ஹதீஸிலிருந்து நாம் விளங்குகிறோம்.

**ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

கஹ்தான் குலத்திலிருந்து ஒரு மனிதர் மக்களைத் தம் கைத்தடியால் ஓட்டிச் செல்பவராகத் தோன்றாதவரை உலக முடிவு நாள் வராது. (ஆதாரம் : புகாரி 3517)

அதாவது இதில் கைத்தடி செங்கோலையும் ஓட்டிச் செல்லுதல் ஆட்சி செய்தலையும் குறிக்கும். எனவே சுலைமான் நபியின் ஆட்சியை சீரழிக்கக்கூடிய ஒருவன் ஆட்சிப் பொறுப்புக்கு வரவிருக்கிறான் என்பதை இது சுட்டிக் காட்டுகிறது.

இதிலிருந்து பீ.ஜே திருக்குர்ஆனிலும் ஹதீஸிலும் கூறப்படாத கட்டுக்கதையைக் கூறி திருக்குர்ஆன் வசனத்திற்கு தவறான விளக்கம் தருகிறார் என்பதும் அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் தருகின்ற பொருளே சரியானது என்பதும் தெரிய வருகிறது.

## 34. ஹஸ்ரத் இப்றாஹீம் நபிக்கு, பீ.ஜே செய்த அவமரியாதை

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 336 இல் நான் நோயாளி எனக் கூறினார் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இப்ராஹீம் நபி அவர்கள் ஊர் மக்களெல்லாம் திருவிழாவைக் கொண்டாட வெளியேறிய பின் சிலைகளைத் தகர்ப்பதற்காக தாம் நோயாளி என்று கூறி திருவிழாவுக்குச் செல்வதை தவிர்த்துக் கொண்டார்கள். (37:89)*

*இதுபோல் ஒரு கொள்கையை நிலைநாட்டுவதற்காக நல்ல விளைவை ஏற்படுத்துவதற்காக கூறப்படும் பொய் குற்றமாகாது என்பதை இதிலிருந்து அறியலாம் என்று எழுதியுள்ளார்.*

*மேலும் சத்தியப் பிரச்சாரத்தின் போது இது போன்ற வழிமுறைகளை கையாளுவது தடுக்கப்பட்டதல்ல என்றும் கூறியுள்ளார். (திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 432)*

**நம் கேள்விகள்:**

1) இந்த வசனத்தில் 37:90 இப்ராஹீம் நபி பொய் கூறினார் என்பதை திருக்குர்ஆன் அல்லது நம்பத்தகுந்த நபிமொழியில் இருந்து பீ.ஜே நிரூபிக்க முடியுமா?
2) அல்லாஹ்வும் ரஸுலும் கூறாத ஒன்றை பீ.ஜே இட்டுக்கட்டி கூறியுள்ளார் என்பதை அவரால் மறுக்க முடியுமா?
3) நான் நோயாளி என்று ஒரு நபி கூறிகின்ற போது, அவர் நோயாளி இல்லை என்று கூறுகின்ற அதிகாரம் பீ.ஜே க்கு எப்படி வந்தது?
4) இப்ராஹீம் நபி ஒரு உண்மையான நபியாக இருந்தார் என்று அல்லாஹ் கூறுகிறான். (19:42) ஆனால் பீ.ஜே இப்ராஹீம் நபி பொய் கூறினார் என்று கூறுகின்றார். அல்லாஹ்வின் வார்த்தையை மறுக்கின்ற பீ.ஜே தவ்ஹீதுவாதியா?
5) ஒரு நபி பொய் சொல்லமாட்டார்; பொய் சொல்லக் கூடியவர் நபியாக இருக்கமாட்டார் என்ற ஒரு நபியைப் பற்றிய அடிப்படை அறிவு கூட இல்லாதவர்களை எவ்வாறு அழைப்பது ?
6) இப்ராஹீம் நபியின் இந்த சம்பவத்திலிருந்து **ஒரு கொள்கையை நிலைநாட்ட பொய் கூறலாம் என்று பீ.ஜே கூறுகின்றார்.** இதிலிருந்து தவ்ஹீது ஜமாஅத்தின் கொள்கைகள் பொய்யினால் நிலைநாட்டப்பட்டுள்ளன என்பது நிரூபணமாகவில்லையா?
7) நல்ல விளைவை ஏற்படுத்துவதற்கு பொய் சொல்லலாம் என்று கூறுகிறார். ஆனால் திருக்குர்ஆனோ பொய்யர்களின் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாவதாக (3:62) என்றும், ஒவ்வொரு பொய்யரின் மீதும் சய்த்தான்கள் இறங்குகின்றனர் (26:223)



என்றும் கூறுகிறது. இப்படிப்பட்ட நல்ல விளைவை (!) ஏற்படுத்தும் எத்தனை பொய்களை பிறரை ஏமாற்ற பீ.ஜே கூறினாரோ! அல்லாஹ்வே நன்கறிவான்.

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 432 இல், இப்ராஹீம் நபி பொய் சொன்னது ஏன்? எனும் தலைப்பில் இவ்வாறு எழுதியுள்ளார்:**

*திருக்குர்ஆன் 21:63 இல், இப்ராஹீமே, நீர் தாம் எங்கள் கடவுள்களை இவ்வாறு செய்தீரா ? என்று கேட்டனர். இல்லை; அவற்றில் பெரிய சிலை தான் செய்தது என்று தமிழாக்கம் செய்துவிட்டு விளக்க அட்டவணையில் பெரிய சிலைதான் உடைத்தது என்று கூறினார்கள்... ஆனால், அவர் கூறியது உண்மையல்ல.*

**நம் விளக்கம்:**

பீ.ஜே க்கு ஒரு நபியின் இலக்கணமும் தெரியவில்லை; பொய்யின் இலக்கணமும் தெரியவில்லை. ஒரு கூற்று பொய் என்பதற்கு நிபந்தனை, அது பிறரை ஏமாற்ற வேண்டும் என்ற எண்ணத்தில் **இல்லாதது சொல்லப்பட்டிருக்க வேண்டும்.** சிலை உடைப்பு விசயத்தில் ஹஸ்ரத் இப்றாஹீம் (அலை) அவர்கள் தம்மை ஏமாற்றுவதாக அவர்களது சமுதாயத்தினர் துளியும் கருதவில்லை. காரணம் **இச்செயல்களை செய்தவர் ஒருவர் உண்டு. யார் என்று பெரிய சிலையிடம் கேளுங்கள் என்று கூறினார்.** எனவே அவர்கள் வெட்கத்தால் தலைகுனிந்தவர்களாக, திரும்பிச் சென்றதாக அடுத்து வரும் வசனங்கள் (21:65,66) கூறுகின்றன. எனவே, ஹஸ்ரத் இப்றாஹீம் (அலை) கூறியது பொய் அல்ல. ஆனால் சிலை வணங்கிகளாக இருந்த அந்த சமுதாயத்தினர் சுமத்தாத குற்றச் சாட்டை பீ.ஜே ஹஸ்ரத் இப்றாஹீம் (அலை) மீது சுமத்துகின்றார். இல்லை என்று பொய் கூறியதுடன் பெரிய சிலை மீது அக்குற்றத்தைப் போட்டதாக எழுதியுள்ளார்.

இதனை நியாயப்படுத்த திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 432 –இல் அவர் கூறுவதாவது, சொல்பவருக்கும் பொய் சொல்கிறோம் என்று தெரிகிறது. கேட்பவருக்கும் வேறு ஒரு

அர்த்தத்தில் சொல்லப்படுகின்ற பொய் என்று தெரிகிறது. இப்படியிருந்தால் இது பொய் வடிவில் அமைந்த மெய் என்று தான் கூற வேண்டும் என்று பீ.ஜே. எழுதுகிறார்.

அதாவது, இப்ராஹீம் நபிக்கும், அந்த மக்களுக்கும் அது பொய் என்று தெரிகிறதாம். இப்படியிருந்தால் அது பொய் வடிவில் அமைந்த மெய் தான் என்கிறார் பீ.ஜே.

நான் கேட்கிறேன்: இன்று ஏதோ சில அமைப்புகள் செய்கின்ற தீவிரவாத செயல்களுக்கு, ஊடகங்கள் இஸ்லாமிய தீவிரவாதம் என்றும் முஸ்லிம் தீவிரவாதி என்றும் கூறுகின்றன. இதனை பீ.ஜே. மேலே சொன்ன அளவுகோலின் அடிப்படையில், முஸ்லிம் தீவிரவாதி, இஸ்லாமிய தீவிரவாதம் என்பதை பொய் வடிவில் அமைந்த மெய்தான் என்று ஏற்றுக் கொள்வார் போலும்.

உண்மையை வேறு வடிவில் கூற வேண்டுமே ஒழிய, பொய்யை எந்த வடிவில் யார் கூறினாலும் அது பொய் தான். மெய்யாகாது. எனவே பீ.ஜே. எதிர்காலத்தில், பொய்க்கு வரிந்து கட்டிக் கொண்டு வக்காலத்து வாங்குவதை விட்டு விட வேண்டும் என்பதுதான் நம் வேண்டுகோள்.

## 35. தாவூத் நபி தவறு செய்தாரா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 337 இல் தாவூத் நபி செய்த தவறு என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*தாவூத் நபியவர்கள் மன்னராக இருந்ததால், அரண்மனையை விரிவுபடுத்துவதற்காக சாதாரண மக்களின் நிலத்தைக் கையகப்படுத்தியது போன்ற ஒரு தவறை செய்திருக்கக் கூடும். இது போன்ற ஒரு நிகழ்ச்சியை நடத்திக் காட்டி இறைவன் அவரை திருத்தியிருக்கக் கூடும்.*



**நம் விளக்கம்:**

நபிமொழி புகாரி 3417 இல், தாவூத் நபி தன் கையினால் உழைத்து பெற்ற சம்பாத்தியத்திலிருந்து தான் உண்டார் என்று கூறப்பட்டிருக்கிறது.

இதிலிருந்து அரண்மனையை விரிவுபடுத்த சாதாரண மக்களின் நிலத்தை கையகப்படுத்தியது போன்ற ஒரு தவறை செய்திருக்கக் கூடும் என்று பீ.ஜே எழுதியிருப்பது தவறு என்று தெரிகிறது. அதாவது, அரண்மனையில் கருவூலத்திலிருந்து ஒரு காசு கூட எடுத்து உண்ணாதவர் சாதாரண மக்களின் நிலத்தை கையகப்படுத்தியிருப்பாரா?

ஒரு உண்மையான, நேர்மையான நபியைப் பற்றிய அடிப்படை ஞானம் கூட இவர்க்கு இல்லை என்று தெரிகிறது.

## 36. சுலைமான் நபியைப் பற்றிய தவறான கருத்து

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 338 இல் அவரை ஒரு சடலமாக போட்டோம். பின்னர் அவர் திருந்தினார் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இவ்வசனத்திற்கு (38:34) பெரும்பாலான மொழி பெயர்ப்பாளர்கள் தவறாகவே மொழிபெயர்த்துள்ளனர். ஸுலைமானின் சிம்மாசனத்தின் மீது முண்டத்தைப் போட்டோம்; சடலத்தைப் போட்டோம் என்று தங்கள் மொழி பெயர்ப்பில் குறிப்பிட்டுள்ளனர். இதற்கேற்ப கட்டுக்கதைகளையும் விளக்கவுரை என்று குறிப்பிட்டுள்ளனர். இவ்வசனத்தில் சுலைமானை ஒரு சடலமாகப் போட்டோம் என்று கூறப்படுகிறது. இது, நோயுற்று பலவீனப்பட்டு படுக்கையில் விழுந்து கிடக்கும் நிலையைக் குறிக்கும் சொல்லாகும்.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆன் 38:35 வசனத்தின் தமிழாக்கம், நிச்சயமாக சுலைமானை நாம் சோதித்தோம். அவரது அரியணையில் ஒரு உடலைப் போட்டோம். பிறகு அவர் திரும்பினார் என்பதாகும். தமிழ், ஆங்கிலத்தில் உள்ள திருக்குர்ஆனில் காணப்படும் மொழியாக்கம் இதுவே. அதாவது,

1) அவரது அரியணையில் ஒரு **சடலத்தைப் போட்டோம்** என்று தான் காணப்படுகிறது. பீ.ஜே எழுதியிருப்பது போல், அவரது சிம்மாசனத்தில் அவரை ஒரு **சடலமாகப் போட்டோம்** என்று வரவில்லை.

2) அவரை சடலமாகப் போட்டோம் என்றால் சுலைமான் நபிக்கு நோயை ஏற்படுத்தினோம் என்று பொருள் என பீ.ஜே எழுதுகிறார்.

அப்படி என்றால், சுலைமான் நபிக்கு நோயை ஏற்படுத்தினோம் என்று அல்லாஹ் கூறியிருக்கலாமே. அப்படி அல்லாஹ் கூறவில்லையே! இதற்கு நபிமொழி ஆதாரம் இருக்கிறதா என்றால் அதுவும் இல்லையே! எனவே **சுலைமான் நபி நோயுற்றார் என்பது தவறாகும்.**

இதில் வேடிக்கை என்னவென்றால், சுலைமான் நபிக்கு இல்லாத நோயை இருப்பதாகக் கூறுகிறார். இப்ராஹீம் நபி, நான் நோயாளி எனக் கூறியிருக்கும் போது, அவர் நோயாளி என்று பொய் சொல்கிறார் என்று பீ.ஜே கூறுகிறார். இல்லாததை இருப்பதாகவும், இருப்பதை இல்லாதது என்றும் பீ.ஜே ஏன் கூறுகிறார்? அல்லாஹ் நன்கறிவான்!

3) ஒரு வாதத்துக்காக, சுலைமான் நபி நோயுற்றார் என்று வைத்துக் கொள்வோம். நோயில் விழுந்தவர் பாயில் தானே படுப்பார். அரியணையிலா போடப்படுவார்? **அரியணையில்** ஒரு சடலத்தைப் போட்டோம் என்று ஏன் அல்லாஹ் சொல்ல வேண்டும்? அரியணை என்பது ஆட்சி அதிகாரத்தையும், சடலம் என்பது ஆட்சி திறனற்ற தன்மையையும் குறிக்கும். அரியணை என்ற சொல்லை அல்லாஹ் வீணாக பயன்படுத்தவில்லை.



4) எனவே, சுலைமான் நபி ஏதோ தவறு செய்தார் என்பதற்கோ, அதற்காக நோய் அவருக்கு வந்தது என்பதற்கோ எந்த ஆதாரமும் இல்லை. இது அவருக்குப் பிறகு அவரது அரியணையில் ஆட்சி அதிகார திறனற்றவன் அமரப் போகிறான் என்பதை, இறைவன் எடுத்துக் கூறுகிறான். சுலைமான் நபிக்குப் பிறகு அவரது அரியணைக்கு ஆட்சி திறனற்ற அவரது மகன் வந்தான் என்று வரலாறு சான்று கூறுகிறது.

இவனைக் குறித்தே திருக்குர்ஆன் 34:14 வசனத்தில் சுலைமான் நபியின் கைத்தடியை (செங்கோலை) அரித்துத் தின்றது தாப்பத்துல் அர்ழ் என்று கூறப்பட்டுள்ளது.

## 37. நபி (ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டதா? இல்லையா?

**பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 357 இல் சூனியம் என்னும் தலைப்பில் கடைசி 5 வரிகளில் இவ்வாறு எழுதுகிறார் :**

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்து அவர்களை யாரும் முடக்கவில்லை என்பது தான் சரியான கருத்தாகும் என்றும் ஆனால் அவரே திருக்குர்ஆன் விளக்கம் எனும் நூலில் பக்கம் 88-90 இல், நபி (ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது என்றும் எழுதியுள்ளார்.*

**நம் கேள்வி:**

1) இத்தகு சுய முரண்பாடு ஏன் ? சாதாரண மனிதர்களுக்கு சுய மரண்பாடுகள் ஏற்படலாம். ஆனால் பல்லாண்டுகள் மவ்லவி பட்டம் படித்து முடித்து பற்பல ஆண்டுகள் தமிழ் முஸ்லிம் உலகில் பத்திரிக்கைகள் பல நடத்தியும், பற்பல நூல்களை எழுதி வெளியிட்டும் பற்பல கூட்டங்களில் மேடைகளில் முழுங்கியும், பற்பல முஸ்லிம்

அமைப்புகளுக்கு தலைமைப் பதவி வகித்தும், பற்பல அமைப்புகளுடன் விவாத அரங்கில் பங்கேற்றும் திருக்குர்ஆனையும் நபிமொழியையும் அப்படியே பின்பற்றி தூய இஸ்லாத்தை மக்கள் மத்தியில் பரப்புவதாக பேசும் பீ.ஜே க்கு இது போன்ற சுய முரண்பாடு ஏற்படுவது ஏற்புடையதா?

ஆண்டுக்கு ஆண்டு நூலுக்கு நூல் இப்படி சுய முரண்பாடுகளைக் கூறி வந்தால், அவரை அப்படியே தக்லீது செய்யும் – விரலை ஆட்டினால் விரலை ஆட்டியும்,தொப்பியைக் கழற்றினால் தொப்பியைக் கழற்றியும் அப்படியே அடிக்கு அடி முழத்துக்கு முழம் பின்பற்றும் அவரது சீடர்கள் கதி என்னாவது?

சாதாரண விசயம் முதல் ஈமான் சம்பந்தப்பட்ட முக்கியமான நம்பிக்கை வரை பீ.ஜே யின் தவறான கருத்தை நம்பியும், பேசியும் செயல்பட்டும் வாழ்ந்து மரணித்தவர்களின் மறுமை வாழ்வு என்னாவது? பீ.ஜே வை கண்மூடித்தனமாகப் பின்பற்றுபவர்கள், மாற்றுக் கருத்துக்களை அதாவது நபி (ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது என்ற கருத்தை நம்பிக் கொண்டு நாம் சூனியம் செய்யப்படவில்லை என்ற உண்மையான கருத்தை கூறும் போது செவி கொடுத்து கேட்பதில்லை. சிந்தித்து பார்க்க முன்வருவதும் இல்லை. திருக்குர்ஆன் ஹதீஸ் ஆதாரங்களைக் கூறினாலும் ஏற்பதில்லை. பீ.ஜே நபி (ஸல்) அவர்களுக்கு சூனியம் செய்யப்பட்டது என்று கூறிவிட்டார். அதற்கு மாற்றமாக யார் என்ன கூறினாலும் ஏற்பதில்லை என்று பிடிவாதமாக பேசுகின்றனர். அவர்களின் கதி என்ன?

இது ஒரு புறம் இருக்க, மாற்றுக் கருத்தை யார் கூறினாலும் சென்று கேளுங்கள். சிந்தியுங்கள். அதன் வழியில் செயல்படுங்கள் என்று கூறும் தெம்பும் தம் கொள்கையில் நம்பிக்கையும் கொஞ்சமும் இல்லை. அவர்களிடம் போகாதே! அவர்களிடம் பேசாதே! அவர்களின் கருத்துக்களை படிக்காதே! அதைப் பற்றி என்னிடம் கேட்காதே! என்று தான் தன்னைத் தக்லீது செய்பவர்களிடம் அவர்கள் கூறுகிறார்கள். போகட்டும்,



**பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 357 இல்,**

*2) தங்களைப் போலவே உள்ள ஒரு மனிதரை இறைவனின் தூதர் என்று மக்கள் ஏற்க மறுப்பது இயல்பானது தான் என்பதால் தான் எல்லாத் தூதர்களும் தம்மைத் தூதர்கள் என்று மெய்ப்பிக்க அற்புதங்கள் வழங்கப்பட்டு அனுப்பப்பட்டனர். எந்தத் தூதரும் அற்புதம் வழங்கப்படாமல் அனுப்பப்படவில்லை.*

*(திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 357)*

பீ.ஜே கூறுவது உண்மை என்றால், நபி (ஸல்) அவர்களிடம் மக்கத்து மக்கள் அற்புதங்களைக் கேட்ட போது அவர்கள், என் ரப்பு தூயவன். நான் ஒரு மனிதத் தூதரேயன்றி வேறில்லை (17:94) என்று கூறி அவர்கள் கேட்ட எந்த அற்புதத்தையும் காட்டவில்லையே !

தஜ்ஜாலும் அற்புதம் செய்வான் என்று பீ.ஜே நம்புகிறாரே! இது சரியா?

அற்புதங்கள் மூலம் தான் இறைத்தூதர்கள் தமது தூதுத்துவத்தை நிரூபிக்க முடியும் என்றிருக்கும் போது இறைத் தூதராக இல்லாதவரும், இறைவனின் எதிரிகளாக இருப்போரும் இறைத்தூதர்கள் செய்வதைப் போன்று அற்புதங்கள் நிகழ்த்தினால் இறைத்தூதர்களின் அற்புதத்தை மக்கள் நம்ப மாட்டார்கள் என்று பீ.ஜே கூறுகிறார்.

பீ.ஜே யின் இக்கருத்து சரி என்றால், சாமிரி செய்தது அற்புதம் அல்ல. அவன் தங்கக் கன்றுக் குட்டியை இரத்தமும் சதையும் கொண்ட கன்றாக மாற்றினான் என்று பீ.ஜே நம்புவது உளறலின் உச்சகட்டமா?

உண்மையான அற்புதம் எப்படி சூனியம் ஆக முடியும்? சூனியம் எப்படி உண்மையான அற்புதமாக முடியும்? எடுத்துக்காட்டாக, ஈஸா நபி (அலை) அவர்கள் இறந்தவர்களை உயிர் பெறச் செய்தார் என்றால், உயிர் பெற்றவர்கள் உயிருடன் ஊரில் அங்குமிங்கும் நடமாடுவதையும், உண்பதையும், குடிப்பதையும், நான் செத்துப்

பிழைத்தவன் என்று பேசி மகிழ்வதையும், செத்த பின் மீண்டும் உயிர் பெறுவதற்குள் தான் அனுபவித்த உணர்வுகளை, கண்ட காட்சிகளை கதை கதையாக பேசுவதையும், இஸ்ரவேலர்கள் தங்கள் கண்களால் கண்டும், காதால் கேட்டும், அறிவால் அறிந்த பின்பும் அதை எப்படி சூனியம் என்று மறுக்க முடியும்?

இஸ்ரவேலர்கள் சூனியம் என்று மறுத்தார்கள் என்றால் (5:111) உண்மையில் அவர்கள் இறக்கவில்லை என்றும், இறை மறுப்பு எனும் இறப்பில் இருந்தவர்களை ஈமான் எனும் உயிர் கொடுத்து எழுப்பினார் என்பதால் அதை சூனியம் என்று அவர்கள் கூறினர் என்று தெளிவாக வில்லையா? இவ்வாறு ஆன்மீக மரண மடைந்தவர்களைத் தான் ஈஸா உயிர் கொடுத்து எழுப்பினார் என்பதை அறியாதவர்களை என்னவென்பது?

சூனியம் என்ற ஒன்று இருப்பதாகவும், ஆனால் அதனை நபிமார்களுக்குச் செய்ய முடியாது என பீ.ஜே நம்புவதாகத் தெரிகிறது. அவர், இதர நம்பிக்கைகள் – எனும் தலைப்பில் சூனியம் பற்றிக் கூறும் போது சூனியத்தால் எதுவும் செய்ய முடியாது (2:102) என்றும், அதிகபட்சமாக உறவினரிடையே பிளவு ஏற்படுத்தலாம் (2:102) என்றும், நபிமார்களுக்கு – சூனியம் செய்ய முடியாது என்றும் கூறுகிறார். அப்படியானால் மனிதர்களுக்குச் செய்ய முடியும் என்றும் அதிகபட்சமாக **உறவினரிடையே பிளவு ஏற்படுத்தலாம் என்றும் (2:102) பீ.ஜே நம்புவதாகத் தெரிகிறது!**

சூனியம் என்ற ஒன்றுக்கு பீ.ஜே சொல்கின்ற கருத்திற்கு திருக்குர்ஆன், நபிமொழி ஆதாரம் தர முடியுமா? சூனியத்தை நல்ல தமிழில் செய்வினை என்று கூறுவர். உண்மையில் செய்வினை (Active Voice) என்றும் செயப்பாட்டுவினை (Passive Voice) என்பவை மொழிகளின் இலக்கணத்தில் தான் உள்ளது. உண்மையில் பொது மக்கள் நினைப்பது போன்றோ அல்லது பீ.ஜே கூறுகின்ற கருத்திலோ அப்படி ஒன்றும் இல்லை. அவை முழுக்க முழுக்க மூட நம்பிக்கை



ஆகும். பீ.ஜே இனிமேலாவது குர்ஆன் நபிவழியில் தூய இஸ்லாத்தை நாங்கள் போதிக்கிறோம் என்று வாய்கிழிய பேசுவதை நிறுத்துவாரா?

# IX. இறைநியதியைப் பற்றிய தவறான விளக்கம்

## 38. மரணித்த ஒருவர் 100 ஆண்டுகளுக்குப் பிறகு பூமியில் உயிர் பெற முடியுமா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 79 இல் இறந்தவர்களுக்கு ஆற்றல் உள்ளதா? என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*திருக்குர்ஆனின் 2:259 வசனத்தில் மிகச் சிறந்த நல்லடியார் ஒருவரை அல்லாஹ் நூறு ஆண்டுகள் மரணிக்கச் செய்கிறான். அடக்கம் செய்யப்படாமல் பூமியின் மேற்பரப்பிலேயே அவரது உடல் கிடந்தது.*

**நம் கேள்வி:**

1) திருக்குர்ஆன் 2:260 வது வசனத்திலோ, நபிமொழியிலோ அவர் மிகச் சிறந்த நல்லடியார் என்றோ, அவர் அடக்கம் செய்யப்படாமல் பூமியின் மேற்பரப்பில் அவரது உடல் கிடந்தது என்றோ கூறப்படவில்லை. ஆனால் பீ.ஜே திருக்குர்ஆனும், ஹதீஸும் கூறாத கருத்தைக் இட்டுக்கட்டிக் கூறியுள்ளார்.
2) திருக்குர்ஆன் 34:15 வசனத்தில், அது (கரையான்) அவரது (சுலைமான் நபியின்) கைத்தடியை சாப்பிட்டது என்று பீ.ஜே மொழியாக்கம் செய்துள்ளார். ஒரு நபியின் கைத்தடிக்கு **அரண்மனையில்** சில நாள்களிலேயே இக்கதி என்றால் பூமியின் மேற்பரப்பில் கிடக்கும் உடலை 100 ஆண்டுகளாக புழு, பூச்சி, நாய், நரி, காகம், கழுகு, போன்றவை தின்னாமல் எப்படி இருந்தது?

3) திருக்குர்ஆன் 12:41 வசனத்தில் மற்றவர் சிலுவையில் அறையப் -படுவார். அவரது தலையைப் பறவைகள் சாப்பிடும் என்று பீ.ஜே மொழியாக்கம் செய்துள்ளார்.

சிலுவையில் அறையப்பட்ட உயிருள்ளவனின் உடலையே பறவைகள் கொத்தித் தின்கின்றன என்றால் இறந்த உடலை பறவைகளும் விலங்குகளும் விட்டு வைக்குமா?

4) திருக்குர்ஆன் 22:31 வசனத்தில் வானத்திலிருந்து விழுந்தவனை பறவைகள் தூக்கிச் சென்றதைப் போல்... என்று பீ.ஜே மொழியாக்கம் செய்துள்ளார். இருக்கட்டும். இறந்தவனின் உடலைப் பறவைகள் பிடுங்கித் தின்கின்றன என்று பொருள். வானில் வட்டமிடும் பறவைகள் பிணத்தைக் கொத்தித் தின்னாமல் நூறு ஆண்டுகளாக வானில் வட்டமடித்து அழகு பார்த்தனவா?

5) அவர் மட்டும் இறந்து பூமியின் மேல் கிடக்கவில்லையாம். அவர் பயணம் செய்து வந்த கழுதையும் செத்துக் கிடந்ததாம். அது எப்படி? அவரைத்தான் ஆண்டவன் நூறு ஆண்டுகள் மரணிக்கச் செய்தான் என்று வைத்துக் கொள்வோம். கழுதையை இறைவன் மரணிக்கச் செய்யவில்லையே? அப்படி இருக்க கழுதை எப்படி செத்தது? அதன் எலும்புகள் மட்டும் மிஞ்சியது என்று கதை விடுகிறார். கழுதையின் எலும்புகளை மட்டும் விட்டுவிட்டு மற்றவற்றை தின்ற காக்கை, கழுகு, நாய், நரி போன்றவை அந்த மனிதனின் செத்த உடலை எப்படி விட்டு வைத்தது? கழுதையின் எலும்புகள் மட்டும் எப்படி தப்பியது? விலங்குகள் அதைத் கடித்துச் சாப்பிடவில்லையா? கழுதைப்புலியும் செந்நாய்க் கூட்டமும் எலும்பையும் விட்டு வைக்காதாம்!

6) அவர் கொண்டு வந்த உணவும் நீரும் மட்டும் கெடாமல் அப்படியே இருந்ததாம். இது உண்மை என்றால் அவரும் சாகவில்லை, கழுதையும் சாகவில்லை என்று தெரிகிறதே! சில



மணி நேரங்களில் கெட்டுவிடும் உணவும் நீரும் கெட்டுப் போயிருந்தால் மனிதனும் கழுதையும் செத்திருக்கலாம் என்று நம்புவதற்கு வாய்ப்புள்ளது. இதை ஒரு வாதத்திற்கு ஏற்கலாம். உணவும் நீரும் நூறு ஆண்டுகளாக கெட வில்லை என்றால், அவரும் கழுதையும் சாகவில்லை என்பது உறுதி அன்றோ !

7) அந்த வழியே நூறு ஆண்டுகளாக ஒரு மனிதர் கூட செல்லவில்லையா? கழுதையில் பயணம் செய்தவர் மனிதர்கள் நடமாடும் பாதை வழியே தானே சென்றிருப்பார்! இறந்தவரின் உடலை எவரும் அடக்கவோ, எரிக்கவோ செய்ய வில்லையா? பீ.ஜே கூறும் கட்டுக்கதை பெரிய ஆச்சரியமாகத் தான் உள்ளது!

8) அவர் நூறாண்டுகளுக்குப் பிறகு எழுந்து ஊருக்குள் செல்வதாக கற்பனை செய்து கொள்வோம். நூறு ஆண்டுகளுக்குள் அவரது தலை மயிரும், மீசை மயிரும், கை, கால்களில் உள்ள நகங்களும் வளர்ந்து அச்சம் தரக்குடிய தோற்றத்தை உருவாக்கி, நாய்கள் ஊளையிட்டு ஓடும். சிறுபிள்ளைகள் அலறியடித்துக் கொண்டு ஓடுவார்கள். ஆண்களும் பெண்களும் அச்சத்துடன் பார்த்து திகைத்து நிற்பர். அக்கம் பக்கத்து ஊர்களில் இச்செய்தி பரவி மக்கள் கூட்டம் கூட்டமாக பார்க்க வந்திருப்பார்கள். அப்படி எதுவும் நடந்ததாகத் தெரியவில்லை. வரலாற்றுச் சான்று இருந்தால் பீ.ஜே தெரிவிக்கலாம்.

9) நூறு ஆண்டுகளாக அவரின் மனைவி மக்களோ, நண்பார்களோ தேடி வரவில்லையா? அவர் யாருமில்லாத அனாதையா? யாஃகூப் நபி, யூசுஃப் நபியை தேடி தவித்தது போல் இவரைத் தேடி யாரும் வரவில்லையா? நபி (ஸல்) அவர்களின் வளர்ப்பு மகனார் சைத் (ரலி) அவர்களைத் தேடி வந்தது போல் யாரும் தேடி வரவில்லையா?

10) அவரை மரணிக்கச் செய்து நூறு ஆண்டுகள் வரை பூமியின் மேற்பரப்பில் ஏன் வைக்க வேண்டும்? நூறு ஆண்டுகள்

என்பதில் என்ன ரகசியம் மறைந்து கிடக்கிறது. அதற்கு குறைவாகவோ, கூடுதலாகவோ ஆண்டுகள் ஏன் சொல்லப்பட வில்லை?

11) திருக்குர்ஆன் 10:92 வது வசனத்தில் ஃபிர்அவ்னை **ஓர் அடையாளம்** என்றும் அவனது உடலை பாதுகாப்போம் என்றும் அல்லாஹ் கூறுகிறான். 2:260 வசனத்தில் கூறப்பட்டபடி இவரை மக்களுக்கு ஓர் அடையாளமாக்குவதற்காக இவ்வாறு செய்தான் என்றால் எந்த மனிதனும் அவரைப் பார்த்ததாக தெரியவில்லையே! மனிதர்கள் கூட்டம் கூட்டமாக வந்து பார்த்துச் செல்கிறார்கள் என்றால் அதை ஒரு அடையாளம் என்று கருதலாம்! அப்படியும் இல்லையே, ஏன்? அடையாளம் என்பதை யாரும் அறியாமலே அது நடந்து முடிந்து விட்டதா?

12) அந்த ஊர் அடியோடு வீழ்ந்து கிடந்தது. இவ்வூர் அழிந்த பிறகு அல்லாஹ் எவ்வாறு இதை உயிர்ப்பிப்பான் என்று அவர் கேட்டார் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. இவ்வாறு கூறுவதற்கும் அவரது மரணத்திற்கும் என்ன சம்பந்தம்?

13) அவர் அணிந்திருந்த ஆடைகள் நூறு ஆண்டுகளாகியும் மழையில் நனைந்தும், வெயிலில் காய்ந்தும், காற்றில் தூசி படிந்தும் கெடவில்லையா? உலகில் 30 லட்சம் பூச்சி இனங்கள் உள்ளனவாம். அந்த பகுதியில் இருந்த பூச்சிகள் அவற்றை எதுவும் செய்யவில்லையா? அவர் ஓர் அடையாளம் என்பதனால் அவரது உடலும், உடையும் தப்பின என்றால் உணவும், நீரும் அடையாளம் என்று கூறப்பட வில்லையே, அவை ஏன் கெடாமல் இருந்தன? எனவே உணவும், நீரும் கெடாததினால் அவரும், கழுதையும் மரணிக்கவில்லை என்று தெரிகிறது.

பாழடைந்து கிடக்கும் அந்த ஊர், மக்கள் குடியேறி மீண்டும் ஊராக எப்போது மாறும் என்பது தான் அவரது கேள்வி. அதற்கு



இறைவன் அவரை தூங்கச் செய்து (மரணம்) நூறு ஆண்டுகள் உறங்கியதாகக் கூறி தூக்கத்திலிருந்து எழுப்பினான். இதில் தூக்கம் என்பது தான் மரணம் என்று கூறப்பட்டுள்ளது.

அதாவது அந்த பாழடைந்த ஊர், மீண்டும் மக்கள் குடியேறி ஊராக மாறுவதற்கு நூறு ஆண்டுகள் ஆகும் என்று இறைவன் பதில் கூறுகிறான்.

திருக்குர்ஆனில் 39:42 வசனத்தில் **அல்லாஹ் உயிர்களை மரணத்தின் போதும், மரணிக்காத உயிர்களை தூக்கத்தின் போதும் கைப்பற்றுகிறான். எந்த உயிரின் மீது அவன் மரணத்தை விதித்து விட்டானோ அந்த உயிரை தன்னிடமே நிறுத்தி வைத்துக் கொள்கிறான்.** ஏனையவற்றை (தூக்கத்தின் போது கைப்பற்றப்பட்ட உயிர்களை) கொஞ்ச காலம் வாழ்வதற்கு திருப்பி அனுப்பி விடுகிறான் என்று கூறப்பட்டுள்ளது.

அவருடைய உயிரும் தூக்கத்தில் கைப்பற்றிய உயிராகும். எனவே தான் அவரை மரணிக்கச் செய்து என்று இறைவன் கூறுகிறான். அதனால் தான் அவர் ஒரு நாள் அல்லது ஒரு நாளின் சிறிதளவு என்று பதில் கூறுகிறார். அவர் தூங்கி விழிக்கிறார். அவருடைய ரூஹ் மரணத்தின் போது கைப்பற்றப்பட்டிருந்தால் அந்த உயிரை இறைவன் தன்னிடமே நிறுத்தி வைத்திருப்பான். ஆனால் அவருடைய ரூஹோ தூக்கத்தின் போது கைப்பற்றப்பட்டிருந்ததால் அந்த ரூஹ் மீண்டும் அவரிடம் திரும்பி விடுகிறது. இதனைத் தான் தூக்கத்தில் நூறு ஆண்டுகள் கழிந்ததாக இறைவன் கூறுகின்றான். எனவே தான் உணவும் நீரும் கெடவில்லை. அவ்வாறே கழுதையும் (சாகவில்லை என்பதை) கவனிப்பீராக. மக்களுக்கு உம்மை எடுத்துக்காட்டாக ஆக்குவதற்காக (இவ்வாறு செய்தோம்) என்று இறைவன் கூறுகிறான். இறந்தவர் மீண்டும் இப்பூமிக்கு வருவதில்லை என்பதே இறை நியதியாகும்.

# X. மறுமையைப் பற்றிய தவறான விளக்கம்

## 39. ஆதம் நபியை நெருங்க வேண்டாம் என்று இறைவன் தடுத்த மரம் பாலுணர்வை உருவாக்கும் மரமா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 174 இல் பாலுணர்வை ஏற்படுத்தும் மரம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இம்மரத்தை சாப்பிடுவதற்கு முன் ஆண் பெண் என்ற இனக்கவர்ச்சி அவர்களுக்கு இருக்கவில்லை. இம்மரத்தைச் சாப்பிட்ட பின் அவர்களுக்குப் பாலுணர்வு ஏற்பட்டது என்று கருதுவதே சரியாகும்.*

*இதைச் சாப்பிட்டவுடன் சொர்க்கத்தின் இலைகளால் இருவரும் தம்மை மறைத்துக் கொண்டார்கள் என்று அடுத்தடுத்த வசனங்களில் கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து இம்மரம் பாலுணர்வை ஏற்படுத்தும் மரம் என்பது தெரிய வரும்.*

**நம் விளக்கம்:**
**பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 13 ல்,**

*இந்த மரத்தை நெருங்காதீர்கள் என்று திருக்குர்ஆன் 2:35, 7:19, 7:20, 7:22, 20:120 ஆகிய வசனங்கள் கூறுகின்றன. ஆனால் திருக்குர்ஆனிலும் நபிமொழியிலும் இது எந்த மரம் எனக் கூறப்படவில்லை. மரம் எது என்பதில் முக்கியத்துவம் ஏதுமில்லை.... திருக்குர்ஆனிலும் நபிமொழியிலும் கூறப்படாததைக் கூறுவோர், இறைவன் பெயரில் இட்டுக்கட்டிய குற்றத்தைச் சுமப்பவர்களாவர் என்றும் எழுதியுள்ளார்.*

பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 174 – ல் அந்த மரம் பாலுணர்வை ஏற்படுத்தும் மரம் என்று எழுதியுள்ளார். அப்படி என்றால்,



1) திருக்குர்ஆனிலும் நபிமொழியிலும் பாலுணர்வை ஏற்படுத்தும் மரம் என்று எழுதப்படவில்லையே! அவ்விரண்டிலும் கூறப்படாததை அல்லாஹ்வின் பெயரில் இட்டுக் கட்டிய குற்றத்தை பீ.ஜே செய்துள்ளார். மரம் எது என்பதில் முக்கியத்துவம் இல்லை என்று ஒரு புறம் கூறிவிட்டு மறுபுறம் அது பாலுணர்வை ஏற்படுத்தும் மரம் என்று கூறியிருப்பது முக்கியத்துவம் இல்லாததை கூறிய குற்றம் ஆகாதா?
2) சொர்க்கத்தில் பாலுணர்வு இருக்காது என்றால் அங்கு ஏன் பாலுணர்வை ஏற்படுத்தும் மரத்தை ஆண்டவன் ஏற்படுத்தினான்?
3) அங்கு பாலுணர்வு இருக்கும் என்றால், அந்த மரத்தைச் சாப்பிடக் கூடாது என்று இறைவன் ஏன் தடுத்தான்?
4) பிறந்த குழந்தை தன் தாயின் மார்பைத் தேடி வாயில் வைத்து பால் குடிக்கத் தொடங்குகிறது என்றால், மூஸா நபி குழந்தைப் பருவத்தில் தன் தாயின் மார்பைத் தவிர பிற தாய்மார்களின் மார்பில் பாலைக் குடிக்க மறுக்கிறார் என்றால் ஆதமும் ஹவ்வாவும் பாலுறுப்புகளைப் பார்த்தும் பாலுணர்வு ஏற்படவில்லை என்று நம்ப முடியுமா? அம்மரத்தைச் சாப்பிட்ட பின் தான் அவ்வுணர்வு ஏற்பட்டது என்று பீ.ஜே நம்புகிறாரா?
5) ஆதம் முதல் நபி என்றால் ஒரு சாதாரண மனிதனுக்கு இருக்க வேண்டிய உணர்வுகள் அத்தனையும் அவர்க்கும் இருக்க வேண்டும். அப்படி ஒரு உணர்வு இல்லை என்றால் அது குறையே ஆகும். அப்படி என்றால் அல்லாஹ் தன் முதல் நபியை குறைபாடு உடையவராக படைத்தான் என பீ.ஜே கருதுகிறாரா?
6) குறைமதி உடைய ஒரு ஆண், ஒரு பெண்ணைப் பார்க்கும் போது பால் வேறுபாடுகளைக் கண்டு கொள்கிறான் என்றால் ஒரு முழுமையான மனிதனாகிய ஆதம் நபி ஹவ்வாவைப் பார்த்ததும் பால் வேறுபாடுகளைக் கண்டு கொள்ளவில்லை என்றால் அந்த முதல் நபி முழுமையான உணர்வு இல்லாதவர் என்று பீ.ஜே கருதுகிறாரா?

7) இதைச் சாப்பிட்டவுடன் சொர்க்கத்தில் இலைகளால் தம்மை மறைத்துக் கொண்டனர் என்றால் அவ்விருவரும் நிர்வாணமாக இருந்தனர் என்று பீ.ஜே கருதுவது மூலம் அல்லாஹ்வுக்கும் ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கும் தெரியாதது தனக்குத் தெரிந்து விட்டது என்ற நினைப்பா? அல்லது,

திருக்குர்ஆன் 20:119 வசனத்தில் நீங்கள் நிர்வாணமாக இருக்கக் கூடாது என்று முன்பே ஆண்டவன் அவர்களுக்குக் கூறியிருக்க அவர்கள் எப்படி ஆடையின்றி இருந்திருப்பார்கள்!

மறுமைக்குப்பின் கிடைக்கும் சொர்க்கத்தில் தான் ஆதம் நபி வாழ்ந்தார் என்று பீ.ஜே கருதுவதால், அங்குதான் பலவகை ஆடைகள் உள்ளனவே. அதை ஏன் அவர்கள் அணியவில்லை?

8) அல்லாஹ் அதனை ஒரு மரம் என்று கூறியிருக்க, நபி (ஸல்) அவர்களும் அம்மரத்தை என்ன மரம் என்று கூறாதிருக்க, அது பாலுணர்வு மரம் என்று கூறுவது சரியா?

9) அல்லாஹ் இதனை வஹியின் மூலம் பீ.ஜே –க்கு அறிவித்தானா?

10) திருக்குர்ஆனின் வசனங்களுக்கு வலிந்து பொருள் கூறி இது இந்த அறிவியல் உண்மையை அன்றே கூறிவிட்டது என்று விளக்கம் தருகிறார். அப்படியிருக்க இந்த வசனம், ஆண்மை வீரியத்தையும், பாலுணர்வையையும் செயற்கையாக உண்டாக்கலாம் என இன்றைய உலகம் அறிந்துள்ளது. இதனை 1400 ஆண்டுகளுக்கு முன்னே திருக்குர்ஆன் கூறிவிட்டதால் அது இறைவேதம் என்று பீ.ஜே கூறாமல் விட்டது ஏன் என்று தெரியவில்லை? மறந்திருந்தால், இனிமேல் வரும் பதிப்புகளில் வெளியிடவும்!

11) இச்சம்பவம் ஆதமுடைய மக்களுள் ஆண்களோ, பெண்களோ சிலர் பாலுணர்வும் இனக்கவர்ச்சியும் இல்லாமல் பிறப்பார்கள் என்பதை இது காட்டுகிறது என்று பீ.ஜே கூறத் தவறியது ஏனோ?

12) சொர்க்கத்தில் நீராறு, பாலாறு, மதுஆறு, தேனாறு ஓடும் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. அதில் மது ஆற்றினைப் பற்றி



போதையை ஏற்படுத்தாத மது என்று அல்லாஹ் கூறுகிறான். உலகில் உள்ள மது போதையை உண்டாக்கும் சொர்க்கத்தில் உள்ள மதுவுக்கு போதை இருக்காது என்றால் சொர்க்கத்தில் உள்ள இந்த மரத்திற்குப் பாலுணர்வு போதையை அமைத்தது ஏன்?

13) திருக்குர்ஆனில் சில மரங்களின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. பேரீத்த மரம், ஒலிவ மரம் (80:30), இலந்தை மரம் (56:29), வாழை மரம் (56:30), இவை போல் அல்லாஹ் பாலுணர்வை ஊட்டும் மரம் என்று இதனை ஏன் கூறவில்லை? மரம் என்றும் அதனை நெருங்க வேண்டாம் என்றும் ஏன் கூற வேண்டும்?

14) அல்லாஹ் திருக்குர்ஆனில் சபிக்கப்பட்ட மரம் என்று 17:61 ஒரு மரத்தினை அழைக்கிறான். ஒரு மரத்தை நெருங்க வேண்டாம் எனத் தடுத்தானே தவிர, அதனை தடுக்கப்பட்ட மரம் என்று அழைக்கவில்லை. அவ்வாறு அழைக்காதிருக்கும் போது, பீ.ஜே அம்மரத்தை பாலுணர்வை ஏற்படுத்தும் மரம் என்று அதற்கு பெயர் சூட்டியிருப்பது சரியா? அது மரம் என்று மட்டும் கூறப்பட்டதிலிருந்தும் அல்லாஹ் அதன் மூலம் ஏதோ ஒரு கருத்தைப் புலப்படுத்தியுள்ளான் என்பது விளங்கவில்லையா?

இதிலிருந்து ஆன்மீகமாகவோ, உடல் ரீதியாகவோ தீங்கு விளைவிக்காத எல்லாவற்றையும் உண்ண சரீஅத், அனுமதித்துள்ளது எனத் தெரிகிறது.

நெருங்கக் கூடாதெனத் தடுக்கப்பட்ட மரம் என்பது, செய்யக் கூடாதெனத் தடுக்கும் கட்டளைகளாகும். குறிப்பாக இப்லீஸ் மற்றும் அவனுடைய சந்ததிகளுடன் தொடர்பு வைத்துக் கொள்ளக் கூடாது எனக் கட்டளையிடப்பட்டிருந்தது. அவர்களுடன் தொடர்பு கொண்டால், அநீதியிழைக்க நேரலாம் என்பதே அதற்குக் காரணம்.

திருக்குர்ஆன் தூய மரத்தை, நல்ல காரியங்களுடன் ஒப்பிட்டுக் கூறியுள்ளது (14:25). தீய காரியங்கள் தீய மரத்திற்கு ஒப்பாகவும் கூறப்பட்டுள்ளது (14:27). இதைச் சிந்தித்து தெளிவு பெற வேண்டும்.

## 40. கெண்டைக்கால் திறத்தல் என்பதன் விளக்கம்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 249 இல் கெண்டைக்கால் திறக்கப்பட்டு என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இவ்வசனத்தில் (திருக்குர்ஆன் 68:42) கெண்டைக் கால் திறக்கப்பட்டு என்ற சொற்றொடர் இடம் பெற்றுள்ளது.*

*இறைவன் இவ்வுலகில் உள்ள மனிதர்கள் யாருடைய கண்களுக்கும் தென்பட்டதில்லை என்பதை இஸ்லாம் கூறுகிறது. ஆனால் அதற்காக இறைவன் ஒன்றுமில்லாத சூனியம் என்று கூறவில்லை.*

*மாறாக, மனிதன் திரும்ப உயிர்ப்பிக்கப்பட்ட பின் மறுமை நாளில் இறைவனைக் காண முடியும் என்றும் கூறுகிறது.*

*மறுமையில் விசாரணை நடத்துவதற்காக வானவர்கள் புடை சூழ இறைவன் வருவான் என்றும் கூறப்படுகிறது. (திருக்குர்ஆன் 89:22)*

*அவ்வாறு வரும் போது தன் காலில் விழுந்து பணியுமாறு மக்களுக்கு உத்தரவு விடுவான். அது தான் இங்கே கூறப்பட்டுள்ளது.*

*கெண்டைக் கால் திறக்கப்படும் நாளில் என்றால், இறைவன் தனது கெண்டைக் காலில் விழுந்து மக்களை பணியச் செய்வான் என்று பொருள்.*

*இவ்வுலகில் இறைவனுக்கு பணிவதை யார் வழக்கமாகக் கொண்டிருந்தார்களோ அவர்கள் பணிவார்கள்; மற்றவர்கள் இறைவன் காலில் விழ முடியாது. இது நபிகள் நாயகம் அளித்த விளக்கம். (புகாரியில் 4919 வது ஹதீஸில் இதைக் காணலாம்)*

**நம் விளக்கம்:**

இறைவன் இவ்வுலகில் உள்ள மனிதர்கள் யாருடைய கண்களுக்கும் தென்படவில்லை என்பதை இஸ்லாம் கூறுகிறது என்பது தவறாகும். இவ்வுலகில் இறைவனைப் புறக்கண்ணால் காண



முடியாது. ஆனால் அகக் கண்ணால் காண முடியும் என்பது தான் இஸ்லாத்தின் கொள்கையாகும்.

கெண்டைக்கால் திறக்கப்படும் நாளில் என்றால், இறைவன் தனது கெண்டைக்காலில் விழுந்து மக்களைப் பணியச் செய்வான் என்று பொருள் என்று பீ.ஜே எழுதியுள்ளார். **கெண்டைக்கால் திறக்கப்படும் நாள் என்றால் உண்மை வெளிப்படும் நாள் என்று தான் பொருள்படும்.**

உண்மை வெளிப்படுத்தப்படும் நாளில் சிரம்பணிந்து வணங்குவதற்காக அவர்கள் அழைக்கப்படுவார்கள். ஆனால் அவர்கள் (அதற்கான) ஆற்றல் பெற்றிருக்க மாட்டார்கள் என்று தான் பொருள். (திருக்குர்ஆன் 68:43)

2) காலில் விழுந்து வணங்குதல் என்பது தான் சொல் வழக்காகும். கெண்டைக்காலில் விழுந்து வணங்குதல் என்பது சொல் வழக்கன்று.

3) சிரம்பணிந்து வணங்குவதற்கு கெண்டைகால் திறந்திருக்க வேண்டிய அவசியமும் இல்லை. கெண்டைக்கால் திறக்காவிட்டாலும் காலில் விழுந்து வணங்கலாம்.

4) 68:42 வசனத்திற்கு, M. அப்துல் வஹ்ஹாப் தன் திருக்குர்ஆன் தர்ஜுமாவின் அடிக்குறிப்பு எண் 385 இல் கெண்டைக்கால் வெளியாக்கப்படுவது என்பது அரபு இலக்கிய வழக்காற்றில் **எந்தவித திரை மறைவின்றி ஒன்றின் கடுமையான தன்மை வெளியாக்கப்படும் போது என்று பொருள்படும்.** இது சர்வசாதாரணமாக அரபி மொழியில் வருகிறது. கஷ்ஃபில் அம்ரு அன்ஸாகிஹி கெண்டைக்கால் முற்றிலும் தெரிந்தது – அதாவது ஒன்றின் நிலை சந்தேகத்துக்கு இடமின்றி முழுவதாகத் தெரிந்தது – என்று இமாம் குர்துபீ ஓர் உதாரணம் கொடுக்கிறார்கள்.

கியாம நாளைச் சந்திக்கும் வரை மனிதர்கள் அதைப் பற்றிய அறிவை செவி வழிச் செய்தியாகவோ, எழுத்தின் வாயிலாகவோ

ஓரளவுதான் தெரிந்திருப்பார்கள். ஆனால் அதை நேரெதிரே பார்க்கும் போதுதான் அதன் பயங்கரத் தன்மையை உணர்வார்கள் என்று எழுதுகிறார்.

5) தமிழ் தர்ஜுமாக்களில், மவ்தூதி, தப்ஸீருல் ஹமீது ஆகியோரும், ஆங்கில மொழியாக்கங்களில் யூசுப் அலி, இப்னு கஸீர், M.H ஸாகிர், வஹீதுத்தீன் கான், மவ்லவி முகம்மதலி ஆகியோரும் கொண்டைக்கால் என்பதற்கு அல்லாஹ்வின் கொண்டைக்கால் என்று எழுதவில்லை. மறுமையின் கடுமையான நிகழ்வுகள் வெளிப்படுதல், மறுமையில் உண்மைகள் வெளிப்படுதல் என்று தான் விளக்கம் தந்துள்ளனர். பாகவியோ திரை அகற்றப்பட்டு விடும் நாள் என்று எழுதியுள்ளார். மவ்லவி முகம்மதலி தன் கருத்துக்கு பைழாவி, ஜம்ஹஷ்ரி ஆகிய திருக்குர்ஆன் விரிவுரைகளை மேற்கோள் காட்டுகிறார்.

திருக்குர்ஆன் 89:23 வசனத்தில், வானவர்கள் அணியணியாக நிற்கும் நிலையில் உமது இறைவன் வருகை தருவான் என்று வருகிறது. விசாரணைக்காக வருவான் என்று பீ.ஜே கூறியிருப்பது தவறாகும். அல்லாஹ்வும் அவனுடைய வானவர்களும் நிராகரிப்பவர்களிடம் வருகின்றனர் என்றால், அவர்கள் தண்டனையைக் கொண்டு வருகின்றனர் என்று பொருள் என திருக்குர்ஆன் விளக்குகிறது. (இது குறித்து 59:3; 2:211 – ஆகியவற்றில் காண்க) அதுவே இப்போதும் ஏற்படும். இறைவனுடைய வருகையும், வானவர்களின் வருகையும் நிராகரிப்பவர்களுக்கு அழிவு ஏற்படப் போகிறது என்பதைக் தெரிவிக்கிறது. வரலாறுகளில் காண்பது போன்று, பத்ருப் போரின் போது, நிராகரிப்பவர்கள் வானவர்களைக் கண்டனர்; வானவர்கள் அவர்களை எதிர்த்துப் போர் செய்து கல்மாரி பொழிந்தனர். அந்த வானவர்களைக் கண்டதால் ஏற்பட்ட உறுதிப்பாட்டினால், பின்னர் அவர்கள் முஸ்லிம்களைச் சந்தித்த போது, பத்ருப் போரில் உங்கள் அருகில் இவ்வகையான போர்க் கருவிகள் அணிந்த குதிரைப்படை



வீரர் போர் செய்து கொண்டிருந்தனர் என்றார்கள். இதற்கு நபித்தோழரும், ஆம்; நானும் கண்டேன் எனக்கூறி அதனை உண்மைப்படுத்தினார். பத்ருப் போரின்போது, நிராகரித்தவர்களும் நம்பிக்கை கொண்டவர்களும் வானவர்களைக் காணும் அளவிற்கு அந்த ஆன்மீகக் காட்சி பொதுவாகவும், தெளிவாகவும் நிகழ்ந்தது என்று இதிலிருந்து புலனாகிறது. (அடிக்குறிப்பு எண் 5, அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் திருக்குர்ஆன் தமிழ் மொழியாக்கம், பக்கம் 1358)

**பீ.ஜே யின் தவறான விளக்கம்** : 89:23 வசனத்துக்கு புகாரி 4919 நபிமொழியை பீ.ஜே தவறாக எடுத்துக் காட்டியுள்ளார். ஆனால் புகாரி இமாம் அவர்கள் இந்த **நபிமொழிக்கு 68:42 வசனத்தைத் தான் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.** இதற்கு ஒன்றின் நிலை சந்தேகத்திற்கிடமின்றி முழுவதுமாக தெரிகிறது என்ற இமாம் குர்துபி தரும் விளக்கமே சரியாகும்.

ஹதீஸ் எண் 4919 ன் படி, இறைவனுக்கு மூமின்கள் சஜ்தா செய்வார்கள் என்றும், மற்றவர்களால் சஜ்தா செய்ய முடியாது என்று தான் கூறப்பட்டுள்ளது.

## 41. பூமியிலிருந்து வெளிப்படும் உயிரினம் பேசாது; கடிக்கும்!

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 308 இல் வெளிப்படுத்தப் -படும் உயிரினம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இது உலகம் அழிக்கப்படும் நாளுக்கு சற்று முன் இறைவன் பூமியிலிருந்து வெளிப்படுத்தும் உயிரினமாகும். (திருக்குர்ஆன் 27:82)*

*இதற்குப் பலரும் பலவிதமான விளக்கங்களைக் கூறினாலும், மூலத்தில் இடம்பெற்றிருக்கின்ற தாப்பத் என்ற சொல் உயிரினத்தைத் தான் குறிக்கும்.*

*மேலும் நபி (ஸல்) அவர்கள் கியாமத் நாளின் பத்து அடையாளங்களைக் குறிக்கும் போது தாப்பத் உயிரினத்தையும் சேர்த்து குறிப்பிட்டுள்ளனர்.*

*எனவே பூமியிலிருந்து ஒரு உயிர்ப் பிராணியை வெளிப்படுத்துவோம் என்பது இன்றைய நவீன உலகில் கண்டு பிடிக்கப்பட்டிருக்கின்ற அறிவியல் சாதனங்களைக் குறிக்கின்றது என்ற சிலரது வாதங்களை ஏற்க முடியாது.*

**நம் விளக்கம்:**

27:82 வசனத்திற்கு, அவர்களுக்கு எதிரான (நமது) கட்டளை நிகழும் போது பூமியிலிருந்து ஓர் உயிரினத்தை வெளிப்படுத்துவோம். நமது வசனங்களை மனிதர்கள் உறுதி கொள்ளாமல் இருந்தது பற்றி அவர்களிடம் அது பேசும் என்று பீ.ஜே மொழியாக்கம் செய்துள்ளார்.

தினத்தந்தி 04.11.2012 – தினம் ஒரு தகவலில் பேசா விலங்குகள் எனும் தலைப்பில், தென் கொரியாவில் யானைக் குட்டி ஒன்று சில வார்த்தைகளை திரும்பத் திரும்ப பேசுவது பரபரப்பாக பேசப்பட்டது என்ற செய்தி வெளியாகி உள்ளது. விலங்குகள் பேசுவது என்பது இயலாத காரியம். ஏன் அவற்றால் மனிதனைப் போல் பேச முடிவதில்லை?

சிறுவர்களுக்கான கதைகளில் தான் மிருகங்கள் மனிதர்களைப் போல் பேசுவதாக காட்டுவார்கள். உண்மையில் மிருகங்கள் பேசுவதில்லை. அவை சைகைகள் மூலமாகவும் குரல் எழுப்பியும் மகிழ்ச்சி, வருத்தம், பயம் ஆகிய உணர்ச்சிகளை வெளியிடுகின்றன.

பூனை யொன்று பறவை கூட்டத்துக்கு அருகில் சென்றால் எல்லாப் பறவைகளும் விசித்திரமான முறையில் உரக்கக்கத்தி பய உணர்ச்சியை வெளிப்படுத்துகின்றன. இதே போல் நாய் தனது நன்றியை வாலாட்டுவதன் மூலமும் தெரிவிக்கின்றது. குரங்குகளும் விசித்திரமான ஒலிகள் எழுப்பி கோபத்தை வெளிப்படுத்துகின்றன.



விலங்குகள் பேசாததற்கு அவற்றின் மூளை மனித மூளைகளைப் போல் வளர்ச்சியடைய வில்லை என்பதும் காரணம். மிருகங்களுக்கும் உணர்ச்சி உண்டு. ஆனால் இவற்றை வெளிப்படுத்த சொற்களோ, மொழிகளோ கிடையாது. ஆகவே இவை ஒலிகளையும் சைகைகளையும் பயன்படுத்தி அன்பு, பாசம், கோபம், வெறுப்பு ஆகிய உணர்ச்சிகளையும் பசி, தாகம், தற்காப்பு ஆகிய நிலைகளையும் வெளிப்படுத்துகின்றன. எந்த ஒலியையும் எழுப்பாத நேரத்தில் கூட அவற்றுக்கிடையே இடைவிடாது கருத்துப் பரிமாற்றம் நிகழ்கிறது.

நாம் கூட எல்லாக் கருத்துக்களையும் கூற மொழிகளைப் பயன்படுத்துவதில்லை. ஆம் இல்லை என்பனவற்றுக்குப் பதிலாக பல நேரங்களில் தலையசைத்து அல்லது வேறு விதமான சைகை மூலமாகவோ நமது ஒப்புதலையோ அல்லது மறுப்பையோ தெரிவிக்கிறோம். சுருக்கமாகச் சொன்னால், மிருகங்களின் மூளை வளர்ச்சி குறைந்துள்ளதால் உணர்ச்சியை வெளியிட சொற்களையும் மொழியையும் உருவாக்கும் ஆற்றல் அவற்றிக்கு கிடையாது. ஆகவே மிருகங்கள் பேசுவதில்லை என்று அந்தத்தகவல் தெரிவிக்கிறது.

கிளி பேசுவதில்லையா என்று கேட்டால் சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை என்பது போல், அது நாம் சொன்னதைத் திருப்பிச் சொல்லுமே தவிர பொருளறிந்து பேசுவதில்லை. பேசும் உறுப்புகளும் அவற்றுக்கு இல்லை. ஒரு பூனை அதனைக் கவ்வ வந்தால் நாம் சொல்லிக் கொடுத்த சொற்களைச் சொல்வதில்லை. கீ கீ கீ என்று கூச்சலிடும். மொத்தத்தில் உலகத்தில் மனிதனைத் தவிர வேறு எந்த உயிரினமும் பேசியதில்லை. பேசப் போவதுமில்லை. எந்தக் காலத்தில் அவை பேசின? அதனால் தான் அந்த உயிரினத்தை வாயில்லா ஜீவன் என்று அழைக்கிறோம்.

திருக்குர்ஆனின் நிழலில் பக்கம் 635,636 இல் ஆசிரியர் செய்யிது குதுப் சஹீத் அவர்கள் இவ்வாறு எழுதுகிறார்.

திருக்குர்ஆனின் முப்பதாவது பாகத்திற்கான தமது விரிவுரை நூலில், இந்த அத்தியாயத்திற்கான விரிவுரையில் பேராசிரியர் அஷ்மைகு முகம்மது அப்துஹூ அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகிறார்கள்:

1) இரண்டாம் நாள் இராணுவத்திலிருந்த படைவீரர்களுக்கு அம்மையும் வைசூரியும் ஏற்பட்டது. அதுபற்றி இக்ரிமா (ரலி) அவர்கள் குறிப்பிடும் போது, அரபு நாடுகளில் முதன் முதலில் தோன்றிய அம்மை நோய் அதுதான்! என்கிறார்கள். யாக்கூபு பின் உத்பா என்பார் அப்போது நிகழ்வுற்ற அந்தக் கொள்ளை நோயைப் பற்றிக் குறிப்பிடும் போது, அரபு நாடுகளில் வைசூரியும், தட்டம்மையும் முதன் முதலில் காணப்பட்டது அந்த ஆண்டில் தான் என்றும், அது போன்ற கொள்ளை நோய் ஏற்படுவது மிகமிக அரிது என்று சொல்லப்படும் அளவுக்கு கொடிய கொள்ளை நோய் அவர்களின் உடலைப் பாதித்தது என்றும், அந்த நோயினால் அவர்களின் உடலிலிருந்து சதைகள் துண்டு துண்டாக உதிர்ந்து விழுந்தன என்றும், இதைக் கண்டு நடுக்கத்திற்கு ஆளான அந்த இராணுவமும் அதன் தளபதியும் பயந்து ஓடிவிட்டார்கள் என்றும், தளபதியான அப்ரஹாவை அவர்கள் தூக்கிக் கொண்டு தமது நாட்டிற்குச் செல்லும் வழியில் அவனது உடலிலிருந்து சதைகளும், விரல்களும் கழன்று கீழே உதிர்ந்து விழுந்து கொண்டே இருந்தன என்றும், ஸன்ஆ போய்ச் சேர்ந்ததும் அவன் நெஞ்சு வெடித்துச் செத்துவிட்டான் என்றும், கூறுகிறார்...

எனவே இன்று எவற்றை நுண்ணுயிரிகள் (Micorbe) என்றும் கிருமிகள் (Bacteria) என்றும் கருதப்படுகின்றனவோ அவற்றையும் அந்த இறைவனின் படைகளைச் சேர்ந்ததாகக் கருதலாம். அந்த நுண்ணுயிரிகளிலும், கிருமிகளிலும், அவற்றைப் படைத்தவனுக்கே தவிர அவற்றின் எண்ணிக்கையை வேறு எவராலும் அறிந்து கொள்ள முடியாது என்னும் அளவுக்கு எத்தனையோ வகைகளும் கூட்டங்களுமிருக்கின்றன. அதாவது



மக்காவை அழிக்க வந்த யானைப் படை வைசூரி நோயால் அழிந்தது. பறவைகள் அவற்றைத் தின்று தீர்த்தன.

2) IFT வெளியிட்ட திருக்குர்ஆன் மொழியாக்கத்தில் 105 வது சூராவினுடைய விளக்கத்தில், முஹம்மது பின் இஸ்ஹாக் அவர்களும், இக்ரிமாவும் இது வைசூரி நோய் என்று அறிவிக்கின்றார்கள்.

3) தப்ஸீருல் ஹமீத் எனும் நூலில் 105 வது சூராவின் விளக்கம் பக்கம் 459 இல்,

மஹ்மூது என்ற அந்த யானையின் பாகனையும் அவற்றின் தளபதியையும் குருடனாகவும் சப்பாணியாகவும் இருக்க நான் கண்டேன். அவ்விருவரும் மனிதர்களிடம் உணவு கேட்டு வாங்கி உண்பது வழக்கம் என்று உம்முல் மூமினீன் ஹளரத் ஆயிசா ஸித்தீக்கா ரலியல்லாஹுத்தஆலா அன்ஹா அவர்கள் கூறியிருக்கிறார்கள். இவ்விருவரும் அப்றஹாவின் படையினரில் தப்பித்துக் கொண்டவர்களைச் சேர்ந்தவர்கள் என்றும், இவர்கள் திருமக்காவிலேயே தங்கி விட்டார்கள் என்றும் இந்த ரிவாயத்திலிருந்து தெரிய வருகிறது. இவர்கள் அம்மை நோயினால் பாதிக்கப்பட்டவர்கள் என்பது நமக்கு விளங்குகிறது.

4) அப்துல் வஹ்ஹாப்பின் குர்ஆன் தர்ஜுமா அடிக்குறிப்பு எண் 431 இல்,

ரோமானியப் பேரரசை கொசு அழித்தது என்று ஐரோப்பிய வரலாறு கூறும். மண்ணாசை பிடித்த ரோமானிய அரசு, பக்கத்து நாடுகளின் மீது படையெடுத்து, அவற்றைக் கைப்பற்றி அந்நாட்டின் செல்வங்களை -யெல்லாம் தன் நாட்டுக்கு கொண்டு வந்து, விரிவடைந்து ரோமானியப் பேரரசாக பரிணமித்தது. மக்கள் செல்வத்தில் திளைத்தனர். எல்லோரும் பல்லக்கு ஏறினால் பல்லக்குத் தூக்குவது யார்? ஊரார் முழுவதுமே செல்வர்கள் ஆய்விட்டனர். ஊரைத் துப்புரவு செய்ய ஆளில்லை. கழிவு நீர் தேங்கிற்று. கொசு

பெருகிற்று. அதன் விளைவாகப் பல நோய்கள் தோன்றின. பிணியால் நலிந்து விட்ட மக்களுக்குத் தம் நாட்டைப் பகைவர்களில் இருந்து காத்துக் கொள்ள முடியவில்லை. இப்படியாக ஒரு பேரரசை கொசு அழித்தது.

மேலே கூறப்பட்ட எடுத்துக்காட்டுகளிலிருந்து வெளிப்படுத்தப்படும் உயிரினம் கடிக்கும் என்றும் பேசுவதில்லை என்றும் விளங்கிக் கொள்கிறோம்.

27:83 வது வசனத்தின் பொருள், அவர்களுக்கு எதிராகத் தீர்ப்பு வழங்கப்படும் போது நாம் அவர்களுக்காகப் பூமியிலிருந்து கடிக்கும் கிருமியை வெளிப்படுத்துவோம். மக்கள் நம் அடையாளங்களில் நம்பிக்கை கொள்ளாததே அதற்குக் காரணம் என்று வருகிறது.

அல்லாஹ் ஒரு தூதரை அனுப்பி அவர் அவர்களிடம் இறை இருப்பையும் மறுமையையும் பற்றி பல்லாண்டுகள் பேசியும் அவர்கள் அதனை ஏற்றுக் கொள்ளாமல் இருக்கும் போது அல்லாஹ் தன் தீர்ப்பை இறக்குகிறான். இது தண்டனையின் வடிவில் வரும். அப்படி வரக்கூடியது தான் பூமியிலிருந்து வெளிப்படும் ஓர் உயிரினம் ஆகும். அது பேசுவதாக வைத்துக் கொண்டாலும் அதனால் பயன் ஏற்படுமா? நபி பேசாத பேச்சையா அது பேசி விடும் ! நூஹ் நபி 950 ஆண்டுகள் அச்சமூட்டி எச்சரித்ததாக பீ.ஜே கருதுகிறார். இவ்வாறு ஒரு நபி பேசி அசையாத அம்மக்கள் வாயில்லா உயிரினம் பேசியா திருந்தப் போகிறார்கள்? அல்லாஹ்வின் அடையாளங்கள் கியாமத் நாளில் இறங்கும் போது அவர்கள் ஈமான் கொண்டாலும் பயனுண்டா? கியாமத் நாளின் அடையாளங்களாக வருபவை மக்களுக்கு எதிராகவும் தண்டனையாகவும் வரக்கூடியவை ஆகும். பூகம்பம், பெரும் நெருப்பு, தஜ்ஜால், யஃஜுஜ் மஃஜுஜ் ஆகியவை மக்களுக்கு எதிராக தண்டனையாக வரும். இவ்வாறே, 27:83 வசனத்தில் **மக்களுக்கு எதிராக (தண்டனையாக) வரும்** என்ற சொல் வந்துள்ளது.



மக்களுக்கு எதிராக கட்டளை வரும் போது வெளிப்படும். அந்த உயிர்கள் கடிக்கும் என்று பொருள் கொள்வதே சரியானதாகும். திருக்குர்ஆனில், அவ்வூருக்கு எதிராக (நமது) வார்த்தை உறுதியாகி விடுகிறது. உடனே அதை அடியோடு அழிப்போம் என்று 17:16 வசனம் கூறுகிறது.

யாருக்கு எதிராக நம் கட்டளை முந்திவிட்டதோ.... அவர்கள் மூழ்கடிக்கப்படுவார்கள் என்று 23:27 வசனம் கூறுகிறது. (பீ.ஜே யின் திருக்குர்ஆன் தமிழாக்கம்). எனவே அது பேசுவதில்லை. அந்த உயிரினம் அதாவது கிருமி கடிக்கும். **துகல்லிமுஹும்** என்பதற்கு கடிக்கும், பேசும் என்ற பொருள்கள் உண்டு. இதில் கடிக்கும் என்பதே சரியானதும் பொருத்தமானதும் ஆகும். அந்த உயிரினம் பேசுவதாக கற்பனை செய்து கொள்வோம்.

1) உலகில் சுமார் 5808 மொழிகளை மக்கள் பேசுகின்றனர். இந்தியாவில் சுமார் 1652 மொழிகளில் மக்கள் பேசுகின்றனர். அப்படி என்றால் அவற்றுள் எந்த மொழியில் அது பேசும்? மனித இனம் முழுமைக்கும் அது பேச வேண்டும் என்றால் அத்தனை மொழிகளிலும் அது பேசுமா?

2) ஏதாவது ஒரு மொழியில் அது பேசுவதாக வைத்துக் கொண்டால் மற்ற மொழி மக்களுக்கு கியாமத் நாளின் அடையாளமாக அது எப்படி அமையும்?

3) வெளிப்படுத்தப்படும் அந்த உயிரினம் முன்பே உலகில் உள்ளது தான் என்றால், படைக்கப்பட்ட நாளிலிருந்து அது பேசியதில்லையே இன்று அது எப்படி பேசுகிறது எனவே இது தெளிவான சூனியம் என்று மறுத்து விடுவர்.

4) அந்த உயிரினம் உலகில் இல்லாத புதியது என்றால் அதாவது கிளியின் அலகும், காக்கையின் நிறமும், ஆந்தையின் கண்களும், கொக்கின் கால்களும், கோழியின் சிறகுகளும், மயிலின் தோகையும் கொண்ட கலவையான ஒரு தோற்றம் என்று கற்பனை

செய்து கொள்வோம். இது உலகில் இல்லாத ஒரு புதிய மொழியில் பேசுவதாக வைத்துக் கொள்வோம். மக்கள் அதிலிருந்து என்ன புரிந்து கொள்வார்கள்?

மூஸா நபி (அலை) அவர்களுக்கு, பிர்அவுனுக்கு எதிராக அல்லாஹ் 9 அடையாளங்களை வெளிப்படுத்தினான். அதில் சில உயிரினங்களும் உண்டு. அவை, வெட்டுக்கிளி, பேன், தவளை, ஆகியவையாகும். இந்த உயிரினங்கள் பிர்அவுனிடம் சென்று,

பிர்அவுனே! பிர்அவுனே! நீ ஏன் இறைவனையும், மூஸாவையும் நிராகரிக்கின்றாய்? மறுமையைப் பற்றி உனக்கு அச்சமில்லையா? மரியாதையாக இஸ்ரவேல் மக்களை விடுவித்து விடு என்று எகிப்திய மொழியில் அது ஏன் பேசவில்லை? பேன்கள் பல்கிப் பெருகி மனிதர்களையும் பிற உயிர்களையும் கடித்தன. வெட்டுக்கிளிகள் படையெடுத்து பயிர்களை கடித்து பாழாக்கின. இவ்விடம் அறிய தகவல் ஒன்று தருகிறோம்.

### வெட்டுக்கிளி படையெடுப்பு

1957-ல் ஆப்பிரிக்கப் பாலைவனப் பகுதியில் இருந்து புறப்பட்ட வெட்டுக்கிளிக் கூட்டம் 1,67,000 டன்கள் தானியத்தைத் தரக்கூடிய பயிர்களைச் சாப்பிட்டுவிட்டதாக மதிப்பிட்டுள்ளனர். இந்தத் தானியத்தைக் கொண்டு பத்து லட்சம் பேருக்கு ஆண்டு முழுவதும் உணவளிக்க முடியும்.

வெட்டுக்கிளிகளின் ஒரு பெருங்கூட்டத்தில் சுமார் ஆயிரம் கோடி வெட்டுக்கிளிகள் இருக்கலாம். இவற்றின் மொத்த எடை 15,000 டன்கள் இருந்தால், அவை ஒரு நாளில் 5 லட்சம் பேர் சாப்பிடக்கூடிய உணவை சாப்பிட்டுவிடும். (நூல்: அருள்மறை குர்ஆனும் அறிவியல் கண்டுபிடிப்புகளும். ஆசிரியர் முஹம்மது கான் பாகவி பக்கம் 210)

இவ்வாறே தவளையும் பல்கிப் பெருகி மக்களையும் வீட்டையும் நாட்டையும் பாழ்படுத்தின. பாடாய்படுத்தின.



மேலும் சாலிஹ் நபியின் உண்மைக்கு, அல்லாஹ் ஒரு பெண் ஒட்டகத்தை அடையாளமாக அனுப்பினான். அடையாளமாக அனுப்பப்பட்ட அல்லாஹ்வின் பெண் ஒட்டகமானது அம்மக்களிடம் பேசியதா? சமூது சமுதாயமே! நான் சாலிஹ் நபி உண்மையாளர் என்பதற்கு அடையாளமாக வந்த அல்லாஹ்வின் பெண் ஒட்டகமாவேன் என்று பேசியிருந்தால், கியாமத் நாளுக்கு சற்று முன்பு வரவிருக்கிற அந்த உயிரினமும் பேசும் என நம்பலாம். அந்த பெண் ஒட்டகம் பாறையை பிளந்து கொண்டு வந்து, வந்த உடனே குட்டிப் போட்டது. அது மிகமிகப் பெரிய ஒட்டகம் என்று பீ.ஜே கதை அளக்கிறார். இந்த அதிசய ஒட்டகமாவது பேசியதா? இல்லையே! ஏன்? எந்தக் காலத்தில் இந்த வாயில்லா ஜீவன்கள் பேசியது, இனிமேல் பேசுவதற்கு. சுலைமான் நபியின் எறும்பும் ஹூத் ஹூத்தும் மிகப் பெரும் மனிதரும் பேசாத பேச்சுக்களைப் பேசின என்று திருக்குர்ஆன் கூறுகிறது. அல்லாஹ் துகல்லிமுஹூம் பேசியது என்ற சொல்லை ஏன் அவ்விடங்களில் கூறவில்லை. எறும்பும், ஹூத் ஹூத் அப்பெயர்களைக் கொண்ட பேசும் மனிதர்கள் என்பதற்கு அவற்றின் பேச்சே சான்றாகும்.

**முந்நூற்றுக்கும் மேற்பட்ட மொழிகள் பேச்சு வழக்கில் உள்ள ஒரே உலக நகரம் லண்டன்.** (தகவல் களஞ்சியம். தினத்தந்தி 15.03.2013. சிறுவர் தங்கமலர் பக்கம் 11)

முழு உலகிலும் அந்த பேசும் கிருமி பேசுவது இருக்கட்டும், லண்டனில் வாழும் சில கோடி மக்களிடம் 300 க்கும் மேற்பட்ட மொழிகளில் பேசுவதற்கு எத்தனை பேசும் கிருமிகள் வேண்டும். கொஞ்சம் சிந்தித்துப் பார்த்தாலே இது அகில உலக அபத்தம் என்பது தெளிவாகும்.

மேற்கூறியவற்றை தொகுத்து பார்த்தால் கியாமத் நாளில் வெளிப்படும் அந்த உயிரினம் பேசுவது இல்லை என்றும், கடிக்கும் என்பதே பொருத்தமானதும், சரியானதும் ஆகும்.

# XI. தவறான அறிவியல் விளக்கம்

## 42. பூமியைப் போன்ற பிற கோள்களிலும் உயிரினம் வாழ முடியுமா? முடியாதா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 175 இல் இதில் தான் வாழ்வீர்கள் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இதில் தான் வாழ்வீர்கள் என்பது பூமியைத் தவிர வேறு எங்கும் மனிதர்கள் இயற்கையாக வாழ முடியாது என்று அடித்துக் கூறுகிறது... எல்லாக் கோள்களையும் படைத்த இறைவனால் மட்டுமே அன்றைய நிலையில் இதனைக் கூற முடியும். எனவே இதுவும் இறை வேதம் என்பதை நிரூபிக்கும் சான்றாக உள்ளது. (பார்க்க திருக்குர்ஆன் : 2:36, 7:10, 7:24-25, 30:25)*

**நம் விளக்கம்:**

1) இவ்வசனங்களில் எம்மனிதனும் இப்பூமியை விட்டு வெளியே சென்று வாழ முடியாது என்று கூறப்பட்டுள்ளது. எனவே ஈஸா நபி (அலை) அவர்கள் வானத்திற்கு சென்று அங்கு வாழ்ந்து வருகின்றார் என்ற தவறான கருத்தை ஏற்பதாயின் இந்த வசனம் தவறு என்று கூற வேண்டும். அல்லது ஈஸா நபி அவர்கள் இன்றும் வானத்தில் வாழ்ந்து வருவதாகக் கருதினால் அவர் ஒரு மனிதர் இல்லை என்று கூற வேண்டும். ஏனென்றால் மனிதர்களைக் குறித்தே தான் இங்கேயே வாழ்ந்து, இங்கேயே மரணித்து, இங்கிருந்து தான் எழுப்பப்படுவீர்கள் என்று கூறப்பட்டுள்ளது. இவ்விரண்டில் எது சரி?

திருக்குர்ஆன் 7:26 இல், இதே பூமியில் நீங்கள் வாழ்வீர்கள். அதிலேயே மரணமடைவீர்கள். இதிலிருந்தே நீங்கள் வெளியாக்கவும் படுவீர்கள் என்று கூறுகிறது. அப்படி என்றால், வானங்கள் பூமியின் எல்லைகளைத் தாண்டி செல்ல முடியும் என்றால் செல்லுங்கள். ஆனால் அதற்கென ஆதாரம் இன்றிச் செல்ல முடியாது - என்று 55:34 வசனம் கூறுகிறது. இது மனிதன்



பூமியையும் தாண்டிச் செல்ல முடியும் என்பதைக் காட்டவில்லையா? 6:126 இல் வானத்தில் ஏறிச்செல்கின்றவனின் உள்ளத்தைப் போல் என்று வருகிறது. இது பூமியைத் தாண்டி மனிதன் செல்ல முடியும் என்பதைக் காட்டவில்லையா?

2) பூமியின் மொத்த கனபரிமாணத்தை ஒரு குண்டூசியின் தலையுடன் ஒப்பிடும் போது எவ்வளவு வேறுபாடோ அவ்வளவு வேறுபாடுதான் அண்ட சராசரங்களில் உள்ள அனைத்து கோள்களுடன் பூமியை ஒப்பிட்டால் உண்டாகும். அதாவது அண்ட சராசரங்கள் பூமியளவு என்றால் பூமி ஒரு குண்டூசியின் தலையளவு தான் இருக்கும்.

இந்த ஒப்பீட்டை உள்ளத்தில் பதிய வையுங்கள். அப்படி என்றால் பூமியைத் தவிர ஏனைய அண்ட சராசரங்களில் உள்ள அத்தனை கோள்களும் உயிரினங்கள் வாழ தகுதியற்றதும் வீணாக படைக்கப்பட்டதும் ஆகிவிடும். மேலே பீ.ஜே காட்டிய 30:25 வசனத்துக்கு அடுத்த வசனம், மேலும் வானங்களிலும், பூமியிலுமுள்ளவர்கள் அவனுக்கே உரியவர்கள் ஆவர். மேலும் அவனுக்கே கட்டுப்பட்டவராவார்கள் என்று கூறுகிறது. இந்த வசனம் மனிதர்களைப் போல் வானங்களிலும் உள்ளவர்களைப் பற்றிப் பேசுகிறது. அவர்கள் இறைவனுக்கு கட்டுப்படுவதாகவும் கூறுகிறது. இது போன்ற வசனங்கள் திருக்குர்ஆனில் பல உள்ளன. (10:67; 13:16; 17:45; 16:50; 39:69; 30:27; 42:30)

3) மனிதன் மட்டும் தான் பூமியில் வாழ்கிறான். பிற கோள்களில் மனிதன் அல்லாத பிறர் யாரும் வாழவில்லை என்றால் அல்லாஹ் பூமி அல்லாத அண்ட சராசரங்கள் அனைத்தையும் வீணாகப் படைத்துள்ளானா?

4) ஹஸ்ரத் மிர்ஸா தாஹிர் அஹ்மது (ரஹி) நான்காவது கலீஃபத்துல் மஸீஹ் அவர்களிடம் ஒருவர் வானங்கள் பூமி ஆகியவற்றின் படைப்பும், அவற்றில் உயிரினங்களின் வகையினை அவன் பரப்பியிருப்பதும் அவனுடைய அடையாளங்களைச்

சேர்ந்தவையாகும். அவன் விரும்பும் போது அவர்கள் எல்லாரையும் ஒன்று திரட்டுவதற்கு ஆற்றல் பெற்றவனாவான் என்ற (42:30) வசனத்தில் வருகின்ற வானத்தில் உள்ள உயிரினங்கள் எப்படிப்பட்டவை என்று கேட்டதற்கு அவர்கள் இந்த வசனத்தில் இறைவன் வானங்களிலும், பூமியிலும் தாப்பாவைப் பரப்பி வைத்திருப்பதாகக் கூறுகிறான். தாப்பா என்ற அரபிச் சொல், இடம் விட்டு இடம் பெயரக் கூடிய உயிரினங்களையே குறிக்கும். இந்த அடிப்படையில், மலக்குகளையோ, ஆன்மாக்களையோ, தாப்பா என்ற சொல்லினால் அழைக்க முடியாது. மாறாக, தாப்பா என்ற சொல்லின் கீழ் பூச்சி வகைகளும், பறவையினங்களும், நீரில் வாழும் மீன் இனங்களும், கால் நடைகளும், மனிதர்களும் அடங்குவர். எனவே, பூமியைப் போன்றே இடம் விட்டு இடம் நகரக் கூடிய உயிரனங்களைக் கொண்ட பல கோளங்கள் இந்தப் பிரபஞ்சத்தில் இருப்பதை இந்த வசனம் சுட்டிக்காட்டுகிறது.

அறிவியலால் இன்னும் உறுதி செய்யப்படாத (ஆனால் பின்னர் உறுதி செய்யப்படவிருக்கிற) இந்தக் கருத்தை 1400 ஆண்டுகளுக்கு முன்பே திருக்குர்ஆன் குறிப்பிட்டுள்ளது வியக்கத்தக்க விசயமாகும்.

மேலும் இந்த வசனத்தில் ஒரு மகத்தான முன்னறிவிப்பும் இருக்கிறது. இந்த வசனத்தில் இறைவன், நாம் விரும்பும் போது அவற்றை ஒன்று சேர்ப்போம் என்று கூறியுள்ளான். நாம் விரும்பினால் அவற்றை ஒன்று சேர்ப்போம் என்று கூறவில்லை. விரும்பும் போது என்று கூறியதிலிருந்து வேற்று கிரக மனிதர்களுடன் நமக்கு தொடர்பு ஏற்படக் கூடிய காலகட்டம் நிச்சயம் வரவிருக்கிறது என்பதை நாம் அறியலாம். இந்தத் தொடர்பு வானொலி, தொலைக்காட்சி போன்ற தொலைத் தொடர்பு சாதனங்கள் மூலம் நிகழலாம். இந்தத் தொடர்பின் மூலம் கோளங்களுக்கிடையே தொடர்பின் ஆலோசனைகள் பரிமாறப்படும். இந்தக் குறிப்பிட்ட வசனம் திருக்குர்ஆனின் அஷ்ஷூரா (ஆலோசனை) என்ற பெயரைக்



கொண்ட அதிகாரத்தில் இடம்பெற்றிருப்பதும் கவனிக்கத் தக்கதாகும் என்று பதில் கூறினார்கள். (ஆதாரம்:நபிவழி, செப்டம்பர் 2012.கேள்வி-பதில், பக்கம்24)

5) பிற கோள்களில் மனிதனை விட மேலான, மனிதனைப் போன்றவர்கள் வாழ முடியும் என்பதற்கு தேவர்கள் பூமிக்கு வந்த உண்மை ஆதாரங்கள் எனும் நூலில், **இரவில் ஆகாயத்தைப் பார்த்தால் அந்த இருண்ட வெளியில் நாம் காண்பது என்ன?** கண்சிமிட்டி மின்னும் நட்சத்திரக் கூட்டங்களையும், சந்திரனையும் தானே. ஒரு தெளிவான ஆகாயத்தில் ஆரோக்கியமான கண்கள் மூலம் தொலை நோக்கி இல்லாமல் 4,500 நட்சத்திரங்களை நாம் காணமுடியும் என்கிறார்கள். ஆனால் உண்மையில் பல லட்சம் நட்சத்திரங்கள் இவ்வுலகைச் சுற்றியுள்ள அண்ட வெளியில் இருக்கின்றன. அவைகளைப் பல தொகுதிகளாகப் பிரித்துள்ளனர் வானியல் அறிஞர்கள்.

## அண்டங் கடந்த அண்டம்

1923 – ஆம் ஆண்டில் டாக்டர் எட்வின் ஹப்பில் (Dr. Edwin Hubble) என்ற வானியல் அறிஞர் நாற்பது அங்குலத் தொலை நோக்கின் மூலம் அண்ட்ரோ மெடா (Andromeda) என்ற நட்சத்திரத் தொகுதியை ஆராய்ந்து கொண்டிருந்தார். அப்போது அவைகளுக்கும் அப்பால் வெகு தூரத்தில் இருண்ட ஆகாய வெளியில் மேகம் போன்ற ஒன்றைக் கண்டு அதைச் சக்தி வாய்ந்த காமிரா மூலம் புகைப்படம் எடுத்தார்.

அந்தப் படத்தை பெரியதாக்கிக் கவனமாக ஆராய்ந்த போது, அது எண்ணற்ற நட்சத்திரங்கள் அடங்கிய ஒரு மாபெரும் அண்டம் என்பது தெரிந்தது. அது குறைந்தபட்சம் 7,50,000 ஒளியாண்டு தூரத்தில் இருப்பதாக டாக்டர் ஹப்பில் மதிப்பிட்டார். (ஆனால் அது உண்மையில் அதனை விட இரண்டு பங்கு தொலைவில் இருப்பதாகப் பிற்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டது)

ஓர் ஒளியாண்டு என்பது எவ்வளவு தூரம் தெரியுமா? ஒரு வினாடிக்கு ஒளி செல்லும் வேகம் 1,86,000 மைல்கள். இதே வேகத்தில் அது தொடர்ந்து சென்றால் ஒரு ஆண்டில் 5,878 பில்லியன் மைல் தூரம் செல்லும். இதைத்தான் ஓர் ஒளியாண்டு தூரம் என்பார்கள்.

டாக்டர் ஹப்பில் தமது இராட்சதத் தொலை நோக்கியைக் கொண்டு வானத்தின் பிற பகுதிகளை ஆராய்ந்து இதே போன்ற ஆயிரக்கணக்கான அண்டங்களைக் கண்டுபிடித்தார்.

நமது அண்டம் எப்படிச் சூரியனை மையமாகக் கொண்டு கிரகங்கள் சுற்றிலும் அமைந்து வட்ட வடிவமாகச் சுற்றி வருகின்றதோ அதைப் போன்ற அமைப்பு அந்தந்த அண்டங்களிலும் காணப்படுகின்றன.

## அமெரிக்க விஞ்ஞானியின் கருத்து

இவைகளைப் பற்றி ஆராய்ந்து வரும் விஞ்ஞானிகளில் முக்கியமானவர் டாக்டர் வில்லி-லே (Dr.Willilay) என்ற அமெரிக்கர். இவரது கருத்து என்ன தெரியுமா?

நம்முடைய விண்வெளியில் இதுவரை 1,800 கோடி கிரகங்கள் நம்மால் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவைகளில் நம்மைப் போலவே உயிரினங்கள் தோன்றுவதற்கு வாய்ப்பு உண்டா?

ஒரு வேளை உயிரினங்கள் தோன்றுவதற்கான சாதகமான சூழ்நிலைகளும் அவற்றில் இருக்கக்கூடும். உயிரினம் வாழ்வதற்குத் தேவையானது சூரிய ஒளி. இந்த ஒளியானது நமக்கு அளவு மீறியும் கிடைக்கக் கூடாது. அளவுக்குக் குறையவும் கூடாது. அதற்கு ஏற்ற அளவான தூரத்தில் நமது சூரியனும், பூமியும் அமைந்துள்ளன. ஆனால் இதே போன்ற அமைப்பு எல்லாக் கிரகங்களிலும் காணப்படுமா என்ற கேள்வி எழுகிறதல்லவா?

நூற்றில் ஒன்று,



1,800 கோடிகளில் நூற்றில் ஒரு கிரகத்தில் இத்தகைய சூரிய ஒளி பரவும் வாய்ப்பு இருக்கிறது என்று வைத்துக் கொண்டலும் 18 கோடி கிரகங்கள் தேறுகின்றன.

இவற்றில் நூற்றில் ஒரு கிரகம்தான் உயிர் வாழ்வதற்குத் தகுதியுடையது என்று வைத்துக் கொண்டாலும் 18 இலட்சம் கிரகங்கள் தேறுகின்றன.

இவற்றில் நூற்றில் ஒன்று தான் நமது பூமியில் உள்ளதைப் போன்ற உயிரினங்கள் தோன்றுவதற்கு வாய்ப்புள்ளவை என்றாலும்,18 ஆயிரம் கிரகங்கள் இருக்கின்றன.

இவற்றிலும் நூற்றுக்கு ஒன்றில்தான் மனிதனைப் போன்ற அறிவுள்ள உயிரினங்கள் தோன்ற முடியும் என்று வைத்துக் கொண்டாலும், **180 கிரகங்கள் இருக்கின்றன. இவைகளில் நிச்சயம் உயிரினங்கள் வாழ வாய்ப்புகள் உண்டு என்கிறார் விஞ்ஞானி டாக்டர் வில்லி-லே.**

இன்னும் நிறைய பூமிகள்: அண்டவெளியில் நிமிடத்துக்கு நிமிடம் விரிந்து கொண்டிருக்கும் பிரபஞ்சத்தில் ஒரு அங்கம்தான் பால்வீதி மண்டலம். இந்தப் பால்வீதி மண்டலத்தில் நமது பூமி அடங்கிய சூரியக் குடும்பம் ஒரு கடுகு. நமது பூமி போல இந்த மண்டலத்தில் எத்தனை கோள்கள் இருக்கின்றன என்பதை ஆராயவே, அமெரிக்காவின் விண்வெளி ஆராய்ச்சி அமைப்பான நாசா, கெப்ளர் என்ற விண்கலத்தை அனுப்பியுள்ளது. இந்த விண்கலம் இதுவரை அனுப்பியுள்ள தகவல்களை வைத்து, சில கோள்களின் மாதிரி வரைபடங்கள் சமீபத்தில் வெளியிடப்பட்டுள்ளன. நமது பூமியைப் போன்ற அளவில் சுமார் 1700 கோடி கோள்கள் இருப்பதாக இப்போது மதிப்பிடப்பட்டுள்ளது. (ஆதாரம்: முத்தாரம், 28.1.2013 பக்கம் 1)

இவை எதை எடுத்துக்காட்டுகிறது என்றால், மனிதர் அல்லாத மனிதனைக் காட்டிலும் முன்னேறிய, மனிதனைப் போன்ற

ஒரு இனம் வேறு கிரகங்களில் வாழ்கிறது என்பது தான். எனவே இதில் தான் வாழ்வீர்கள் என்றால் மனிதன் வானத்தின் எல்லையைக் கடந்து பிற கோள்களுக்குச் செல்ல முடியும் என்று பொருள்படாதா? திருக்குர்ஆன் 55:34 இல்,

ஜின்கள், மனிதர் கூட்டத்தினரே! வானங்கள் பூமி ஆகியவற்றின் எல்லைகளை விட்டும் வெளியேறிச் செல்ல உங்களுக்கு வலிமை இருந்தால் செல்லுங்கள். ஆனால் சான்று வலிமையினாலன்றி உங்களால் செல்ல முடியாது என்று கூறுகிறது. சான்று வலிமையிருந்தால் செல்ல முடியும் என்றால் பூமியின் சூழ்நிலையை உள்ளடக்கிய ஆடைகளை அணிந்து கொண்டு அதற்குரிய ராக்கெட் போன்ற விண்கலங்களில் செல்ல முடியும். அப்போது அவன் பூமியின் சூழலில் தான் வாழ்கிறான். மரணித்தாலும் பூமியின் சூழலில்தான் மரணிக்கிறான். அதாவது மிகச் சிறிய ஒரு குட்டி பூமியை தன்னுடன் கொண்டு செல்கிறான். இதன் படி மனிதன் பூமியில் தான் வாழ்கிறான். பூமியின் சூழ்நிலையை உள்ளடக்கிய ஒன்றில் மரணிக்கிறான் என்று திருக்குர்ஆன் வசனம் கூறுவது சரிதான். எனவே பீ.ஜே யின் கருத்து தவறாகிறது.

## 43. ஓரங்களில் குறையும் பூமி என்பது கடல் அரிப்பில்லை

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 243 -இல் ஓரங்களில் குறையும் பூமி என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார் :**

*நிலப்பரப்பு சிறிது சிறிதாக கடலால் விழுங்கப்பட்டு குறைந்து வருவதை சமீப காலத்தில் விஞ்ஞானிகள் கண்டு பிடித்துள்ளனர்.*

*14 நூற்றாண்டுகளுக்கு முன்பு நிலப்பரப்பு, கடலால் அரிக்கப்பட்டு அதன் ஓரங்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து வருவதை யாரும் அறிந்திருக்க முடியாது.*



*எனவே நிலப்பரப்பு ஓரங்களில் சிறிது சிறிதாகக் குறைக்கப்பட்டு வருகிறது என்ற இந்த அறிவியல் கண்டுபிடிப்பு 14 நூற்றாண்டுகளுக்கு முன்பு திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. திருக்குர்ஆன் இறைவனின் வார்த்தை என்பதற்கு இவ்வசனங்கள் (13:41,21:44) தெளிவான சான்றாக அமைந்திருக்கின்றன.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆனின் வசனங்களுக்கு நாம் பொருள் கூறி விளக்கும் போது முன் பின் வசனங்களைக் கவனத்தில் கொள்ள வேண்டும். அவ்வாறு முன்பின் வசனங்களை கருத்தில் கொள்ளா விட்டால் அல்லாஹ் எக்கருத்தை வலியுறுத்த நினைக்கின்றானோ அக்கருத்து திசை திருப்பப்பட்டோ, மாற்றப்பட்டோ போய் விடும் என்பதற்கு இவ்விரு வசனங்களும் சான்றாகும். நிலப்பரப்பு சிறிது சிறிதாக கடலால் விழுங்கப்பட்டு குறைந்து வந்துள்ளது என்பது உண்மை. என்றாலும் இவ்விரு வசனங்களும் அதனைக் குறித்துக் கூறவில்லை என்பதை அவ்விரு வசனங்களுக்கு முன்னர் உள்ள வசனங்களை கருத்தூன்றிப் படிப்போர் அறியலாம்.

13:41 வசனத்தில், தூதுச் செய்தியை தெரிவிப்பது மட்டுமே உம்மீது (பொறுப்பாக) உள்ளது. (அவர்களிடம்) கேள்விக் கணக்குக் கேட்பது எம்முடைய பொறுப்பேயாகும் என்றும்,

13:42 இல், நாம் (அவர்களின்) நிலத்தை அதன் எல்லைகளிலிருந்தும் சுருக்கிக் கொண்டே வருவதை அவர்கள் கண்டதில்லையா? மேலும் அல்லாஹ்வே தீர்ப்பு வழங்குகிறான். அவனுடைய தீர்ப்பை மாற்றுபவர் எவரும் இல்லை. மேலும் அவன் விரைவில் கணக்கெடுப்பவன் ஆவான் என்றும்,

13:43 இல், இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் திட்டங்கள் தீட்டினர், ஆனால் (நிறைவேறும்) திட்டங்கள் அனைத்தும் அல்லாஹ்விற்கே உரியன. ஒவ்வொரு மனிதனும் செய்வதனை அவன் அறிகின்றான். வரவிருக்கின்ற அந்த வீட்டின் (நல்ல) முடிவு

எவருக்கு உரியதாகும் என்பதை அந்த நிராகரிப்போர் விரைவில் அறிவர் என்றும் வருகிறது.

அதாவது, அல்லாஹ்வின் தூதர் தன் சமுதாய மக்களிடம் தன் தூதுச் செய்தியைக் கூறி அம்மக்களை இறைவழியில் அழைக்கிறார். அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாக அவரை ஏற்றுக் கொள்கின்றனர். இவ்வாறு **நிராகரிக்கும் அம்மக்களின் நாடு சுருங்கிக் கொண்டே வருகிறது. இதுவே கடந்த கால வரலாறு. நிராகரிப்போர் இதனை நன்கு அறிவார்கள் என்ற கருத்து கூறுப்படுகிறது.**

21:45 நாம் அவர்களுக்கும் அவர்களின் மூதாதையர் -களுக்கும் ஒரு நீண்ட காலம் வரை மிகுதியான வசதிகளை வழங்கியிருந்தோம். நாம் அவர்களின் நாட்டை அதன் எல்லா எல்லைகளிலிருந்தும் சிறிதாக்கிக் கொண்டே வருவதை அவர்கள் காணவில்லையா?

21:46 நீர் அவர்களிடம்... கேட்க முடியாது.

21:47 உம்முடைய இறைவனது தண்டனையின் வெப்பக் காற்று அவர்களைத் தீண்டினால், அவர்கள் எங்களுக்கு அழிவுதான். நாங்கள் அநீதியே இழைத்துக் கொண்டிருந்தோம் எனக் கட்டாயம் கூறுவர்.

இவ்வாறு **திருக்குர்ஆன் நெடுகிலும் முழு உலகுக்கும் பலவேறு காலகட்டங்களில் இறைத்தூதர்கள் அனுப்பப்பட்டு, ஓரிறைக் கொள்கை மூலம் மக்கள் ஈர்க்கப்பட்டு அவர்கள் ஏற்றுக் கொண்டதையும் இவ்வாறு நிராகரிப்பவர்களின் நிலப்பகுதி சுருங்கியதையும் எடுத்துக் கூறப்படுகிறது.** இதனையே நீங்கள் பூமியில் பயணம் செய்து (நபிமார்களை) பொய்ப்படுத்தியவர்களின் முடிவினைப் பாருங்கள் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. (திருக்குர்ஆன் 16:37, 3:138, 6:12, 12:110, 22:47, 35:45, 47:11)



நாம் வாழ்கின்ற இந்த நூற்றாண்டிலும் ஏகத்துவக் கோட்பாட்டை அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் முழு உலகிலும் பரப்பி வருவதையும், ஏறக்குறைய 200 நாடுகளில் 20 கோடி மக்கள் அதனைத் தழுவி உண்மையான முஸ்லிம்களாகி நிராகரிப்பவர் -களின் எல்லைகள் சுருங்குவதையும் அறிவுக்கண்ணுடையவர் காணலாம். மேலும் ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களை பொய்ப்படத்தியவர்களுக்கு ஏற்பட்ட தீய முடிவையும் காணலாம். உண்மையான நபிமார்களை பொய்ப்படுத்தியவர்களை அல்லாஹ் வெள்ளப் பெருக்கு, கொள்ளை நோய், பூமி அதிர்ச்சி, புயல் காற்று போன்றவற்றை அனுப்பி அழித்துள்ளான். அப்பேரழிவுகள் இன்று நாளும் நடப்பது மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) ஒரு உண்மையான தூதர் என்பதற்கு அடையாளங்களாகும்.

## 44. பறவைகளை வானில் தடுத்து வைத்தல் என்பது இறைத்தண்டனையை நிறுத்தி வைப்பதையே குறிக்கும்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 260 இல் பறவையை என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*பறவைகளைப் பற்றி குறிப்பிடும் போது அவை ஆகாயத்தில் வசப்படுத்தப்படுள்ளன. உமது இறைவன் தான் அதை வசப்படுத்தி இருக்கின்றான் என்று இறைவன் கூறுகிறான்.*

*(திருக்குர்ஆன் 16:79, 67:19, 24:41)*

*இதில் மிகப்பெரிய அறிவியல் உண்மை உள்ளடங்கி இருக்கிறது. பூமி தன்னைத் தானே சுற்றுவதை நாம் அறிவோம். தன்னைத் தானே சுற்றுவதுடன் சூரியனையும் இந்த பூமி ஒரு வருடத்தில் வட்டமடித்து முடிக்கிறது.சூரியனைச் சுற்றுவதற்காக அது செல்கிற வேகம் வினாடிக்கு 250 கிலோ மீட்டர் தூரம்.*

*வினாடிக்கு 250 கிலோ மீட்டர் வேகத்தில் பூமி வேகமாக நகரும் போது, பூமி நகர்கிற திசையில் இருக்கிற அந்தப் பறவைகள் மீது மோத வேண்டும்.*

*பூமியின் ஈர்ப்பு சக்தி ஒரு குறிப்பிட்ட தொலைவு வரை இருப்பதால் அந்தப் பறவையை சேர்த்து இழுத்துக் கொண்டே போகிறது. முன் பக்கம் இருக்கும் பறவையை தள்ளிக் கொண்டும் பின்பக்கம் இருக்கும் பறவையை இழுத்துக் கொண்டும் பூமி நகர்கிறது. முன்பக்கம் பறக்கிற பறவையை தள்ளாமல் இந்த பூமி வேகமாகச் சென்றால் எந்தப் பறவையும் பறக்க முடியாது. பூமியில் மோதி செத்து விடும்.*

*இந்தப் பேருண்மையைத் திருக்குர்ஆன் அற்புதமான சொற்களால் குறிப்பிடுகிறது. இதுவும் திருக்குர்ஆன் இறை வேதம் என்பதற்கு மறுக்க முடியாத சான்றாகும் என்று எழுதுகிறார்.*

**நம் விளக்கம்:**

1) திருக்குர்ஆனின் 67:20 வசனம், இது தவறான விளக்கம் என்பதை எடுத்துக் காட்டுகிறது. இதற்கு மேலே 67:17-19 வரையுள்ள வசனங்கள் இறைத்தண்டனையைப் பற்றி பேசுகின்றன.

67:17 வசனத்தில், வானத்தில் இருப்பவனைப் பற்றி உங்களை அவன் அழிந்து விடுமாறு செய்ய மாட்டான் என்று அச்சமற்று இருக்கின்றீர்களா? இதோ அது (பூமி) சுற்றிக் கொண்டிருப்பதைப் பார்.

67:18 வசனத்தில், வானத்தில் இருப்பவனைப் பற்றி அவன் உங்கள் மீது கல்மாரியைப் பொழிய மாட்டான் என்று நீங்கள் அச்சமற்று இருக்கின்றீர்களா? பின்னர் நீங்கள் எனது எச்சரிக்கை எவ்வாறு (கொடியதாக) இருந்ததென்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.

67:19 வசனத்தில், நிச்சயமாக **இவர்களுக்கு முன்னிருந்தவர்களும் (எம் தூதர்களைப்) பொய்ப்படுத்தினர். பின்னர் எனது தண்டனை எவ்வாறு (கடினமானதாக) இருந்தது (என்று அவர்கள் காணவில்லையா?**

67:20 வசனத்தில், அவர்கள் தங்களுக்கு மேல் பறவைகளை அவை தம் இறக்கைகளை அசைக்காமல் விரித்துக்



கொண்டிப்பதையும் பின்னர் (இரையின் மீது விரைவாக இறங்குவதற்காக அவற்றைச்) சுருக்கிக் கொண்டிருப்பதையும் பார்க்கவில்லையா? அளவற்ற அருளாளனாகிய (இறை)வனே அவற்றை **நிறுத்தி வைக்கிறான்.** நிச்சயமாக அவன் எல்லாவற்றையும் நன்கு பார்க்கிறான் என்று வருகிறது. அதாவது அல்லாஹ்வின் தண்டனை இறங்கி அழிவு ஏற்பட்டு செத்த பிணங்களைத் தின்பதற்காக கழுகு போன்ற பறவைகள் கீழே இறங்குகின்றன. இவ்வாறு எதுவும் நிகழாமல் இறைவனே உங்களைக் காக்கிறான் என்பதனையே பறவையின் சம்பவம் குறிக்கிறது.

பிணங்களைப் பறவைகள் கொத்தித் தின்பதைப் பற்றி திருக்குர்ஆன் 12:42, 22:32 ஆகிய வசனங்கள் கூறுவதைக் காண்க. எனவே பறவைகளை **நிறுத்தி வைத்தல்** என்றால், இறைத்தண்டனை ஏற்படாமல் **அதனை நிறுத்தி வைத்தல்** எனும் பொருளில் அதனைக் கூறுகின்றான்.

2) பறவையைத் தீய சகுனமாக அரபிகள் கண்டுள்ளனர். அதனால் தங்கள் தூதர்களைப் பார்த்து உங்களை தீய சகுனமாகவே நாங்கள் கருதுகின்றோம் என்று கூறினர். தீய சகுனம் எனும் பொருளில் பறவை எனும் சொல்லின் ஒரு வடிவம் வந்தள்ளது. (திருக்குர்ஆன் 27:48; 36:19; 7:132 ஆகிய வசனங்கள்) இது பற்றி, அப்துல் வஹ்ஹாப் தன் தர்ஜுமா அடிக்குறிப்பு 277 இல், 36:18 அரபியர்கள் பட்சிகளை வைத்துக் குறிபார்ப்பது வழக்கம். அரபியில் தைறு, தாயிறு என்ற சொல்லுக்கு, பறவை என்பது பொருள். எனவே பறவைகளை வைத்து ஆரூடம் சொல்வதை “ததைய்யுர்” என்று சொல்லப்படும். இப்படிச் சோதிடம் பார்ப்பது ஒவ்வொரு நாட்டிலும் ஏதோ ஒரு வடிவில் இருக்கிறது - நம் நாட்டில் “கிளி ஜோசியம்” இருப்பது போல.

**இதற்கு இமாம் சாபியீ (ரஹ்) அவர்கள் ஓர் விளக்கம் கொடுத்திருக்கிறார்கள்:**

அம்கினுத் தைற...... என்ற ஹதீதுக்கு அவர்களிடம் விளக்கம் கேட்கப்பட்டது. "நாயகம் (ஸல்) காலத்துக்கு முன் அரபுகளிடையே எங்கு சென்றாலும் சகுனம் பார்த்துச் செல்லும் வழக்கம் இருந்தது. இதன்படி..... அருணோதயத்துக்கு முன்னர் எழுந்து மரக்கிளைகளில் கூடு கட்டியிருக்கும் பறவைகளை விரட்டி விடுவார்கள். இவ்வாறு எழுப்பப்பட்ட பறவைகள் வலப்புறம் பறந்து சென்றால் நற்சகுனமென்றும், இடப்புறம் பறந்து சென்றால் கெட்ட சகுனம் என்றும் கருதுவார்கள். துர்ச்சகுனம் பார்ப்பதின் தீமைகளையும், பறவைகளுக்கு ஏற்படும் தொல்லைகளையும் விளக்க பெருமானார் (ஸல்): **இரவின் இருள்களில் பறவைகளை அவற்றின் கூடுகளிலேயே விட்டு வையுங்கள்** (அதாவது, துர்ச்சகுனம் பார்ப்பதற்காக அப்பறவைகளின் கூடுகளையும், அவற்றின் தூக்கத்தையும் கலைக்காதீர்கள்" என்று போதித்துள்ளார்கள். [அப்துல் வஹ்ஹாப் : நன்மணிகள் நால்வர் – சட்டமேதை இமாம் சாபியீ (ரஹ்)]

தங்களைச் சீர்த்திருத்த வந்த நபிகள் இருவரையும் அந்த ஊர்வாசிகள், உங்கள் மூலம் துர்க்குறியைக் காண்கிறோம். (இன்னா ததய்யர்னா பிகும்) என்று கூறுகிறார்கள். (பக்கம் 127,128)

சுருக்கமாக பறவைகள் அறிவியல் உண்மையை உணர்த்தவில்லை. நபிமார்களைப் பொய்யர் என்று மறுத்து எல்லை மீறிச் சென்றால் அழிவு ஏற்படும் என்று அழிவின் உண்மையை எடுத்துக் காட்டுகிறது.



## 45. ராட்சத பறவை என்பது பீ.ஜே யின் கற்பனைக் கதையாகும்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 416 இல் ராட்சதப் பறவை என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதியுள்ளார்:**

*இவ்வசனத்தில் (22:31) இணை கற்பிப்பவனுக்கு உதாரணம் கூறும் போது, பறவைகளால் தூக்கிச் செல்லப்பட்டு வீசி எறியப்பட்டவனைப் போல் என்று கூறப்படுகிறது.*

*நபிகள் நாயகம் (ஸல்) காலம் முதல் இன்று வரை எந்தப் பறவையும் மனிதனைத் தூக்கிக் கொண்டு சென்று வேறு இடத்தில் போடுமளவுக்குப் பெரிதாக இருக்கவில்லை.*

*மனிதனை விட பன்மடங்கு பெரிதாகவும், வலிமை மிக்கதாகவும் ஒரு பறவை இருந்தால் தான் இது சாத்தியமாகும்.*

*இது போன்ற பறவைகளை நாம் காணாவிட்டாலும் இத்தகைய பறவைகள் இருந்துள்ளன என்பதைப் படிமங்களை ஆய்வு செய்யும் விஞ்ஞானிகள் கண்டறிந்துள்ளனர்.*

*யானையை விடப் பெரிய அளவிலான பறவையின் எலும்புகள் புதையுண்டு கிடந்ததைக் கண்டு பிடித்துள்ளனர்.*

*இப்பறவைகளின் மரபணுக்கள் கிடைத்து விட்டால் அதைக் கொண்டு மீண்டும் அப்பறவைகளை உண்டாக்கவும் முடியும்.*

*கடந்த காலத்தில் இத்தகைய பறவை இருந்தது என்பதாலும், மரபணு கிடைத்து விட்டால் எதிர்காலத்தில் அவை மறு உற்பத்தி செய்யப்பட வாய்ப்புள்ளது என்பதாலும் தான், பறவைகளால் தூக்கிச் செல்லப்பட்ட மனிதன் போல் என்று இறைவன் உதாரணம் காட்டியுள்ளான்.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆன் 22:32 வசனம் வானத்திலிருந்து விழுந்தவனைப் போல ஆவான். அவனைப் பறவைகள் பறித்துச்

செல்கின்றன என்று கூறுகிறது. ஆனால் பீ.ஜே, பறவைகளால் தூக்கிச் செல்லப்பட்டு வீசி எறியப்பட்டவனைப் போல் என்று தலைகீழாக விளங்கிக் கொண்டு அதன் அடிப்படையில் ஒரு கற்பனை விளக்கத்தைக் கூறி படிப்பவர்களை தவறான கருத்தின் பக்கம் இழுத்துச் செல்கிறார்.

இறந்து கிடக்கின்றவற்றின் உடலைப் பறவைகள் கொத்தித் தின்பதை நீங்கள் டிஸ்கவரி சேனலில் தெளிவாகக் காணலாம். அது தான் திருக்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது.

வானத்திலிருந்து விழுந்தவனைப் பறவைகள் பறித்துச் செல்கின்றன என்று **பறவைகள்** என்பது பன்மையில் வந்திருப்பதால் மனிதனை தூக்கிச் செல்லக்கூடிய ஒரு ராட்சதப் பறவை என்பது தவறு என்று தெரிகிறது. தூக்கிச் செல்லும் அப்பறவை அவனை ஏன் வீசி எறிய வேண்டும்? நடமாடித்திரியும் மனிதர்களை தூக்கிச் சென்று வானத்திலிருந்து வீசி எறிந்து விளையாடும் செயலைத் தான் அப்பறவைகள் செய்யுமா? பூமியில் கிடக்கும் உணவையும், எலி, முயல் போன்றவைகளையும் பறவைகள் தூக்கிச் சென்று தின்று தீர்க்கின்றன. இதுவே பறவைகள் இயல்பாகும். பீ.ஜே யின் கற்பனை ராட்சதப் பறவை வீசி எறிந்து விளையாடும் போலும்.

திருக்குர்ஆன் 1400 ஆண்டுகளுக்கு முன், எல்லாம் அறிந்த இறைவனால் அருளப்பட்ட வேதம். அதில் கூறப்படும் கருத்து அன்றும் இன்றும் என்றும் பொருந்தும் வண்ணம் அமைந்திருக்கும் என்பதை அறிவுடையோர் அறிவர். ஒரு மனிதனை ஒரு ராட்சதப் பறவை வானில் தூக்கிச் சென்றது என்று அன்று கூறப்பட்டிருந்தால் அவ்வசனம் ஏளனத்திற்கு ஆளாகியிருக்கும். அவ்வாறு ஆகவில்லை என்பதிலிருந்து அது அப்படி ஒரு பொருளைத் தராது என்று அறிதல் வேண்டும். இரண்டாவதாக எதிர்காலத்திற்கும் ஏற்புடையதாக – பொருந்துவதாக இருக்க வேண்டும். மனிதர்களை தூக்கிச் செல்லும் ராட்சதப் பறவைகளை மனிதனே உருவாக்குவான் என்பது எவரும்



ஏற்றுக் கொள்ள முடியாததாகும். ஒரு வாதத்திற்காக இந்தக் கற்பனையை நாம் ஏற்பதாக இருந்தால் அவ்வாறு உருவாக்கப்படும் ராட்சதப் பறவையினால் ஏற்படும் விளைவுகளை அவர்கள் சிந்தித்தப் பின்னர் தான் அதனைச் செயல்படுத்துவார்கள். அப்பறவையால் மனித குலத்துக்கும் பிறவற்றுக்கும் தீங்கு விளையும் என்றால் அதனைச் செய்ய மாட்டார்கள் என்பதையாவது புரிந்து கொள்ள வேண்டும்.

## 46. சந்திரன் பிளந்தது பற்றிய விளக்கம்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 422 இல் சந்திரன் பிளந்தது என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இவ்வசனத்தில் (54:1) சந்திரன் பிளந்து விட்டது என்று கூறப்பட்டுள்ளது. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம்மை இறைவனின் தூதர் என்று கூறிய போது அதற்குரிய அத்தாட்சியை அன்றைய மக்கள் கேட்டார்கள்.*

*அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வானத்தில் சந்திரனை இரண்டாகப் பிளந்து காட்டினார்கள். அனைவரும் பார்த்துக் கொள்ளுங்கள் என்றும் மக்களிடம் கூறினார்கள். (பார்க்க புகாரி 3636, 4864, 4865)*

*இந்நிகழ்ச்சியைத் தான் இவ்வசனம் சுட்டிக் காட்டுகிறது. பூமியின் துணைக் கோளாக அமைந்துள்ள சந்திரனைப் பற்றி அறிந்து வைத்திருப்பவர்கள், சந்திரன் இரண்டாகப் பிளப்பதும், பிறகு ஒன்று சேர்வதும் சாத்தியமற்றது என்று கருதலாம்.*

*ஆனால் திருக்குர்ஆனில் இறைவன் தனது தனிப் பெரும் ஆற்றலால் நிகழ்த்திய அற்புதங்களைக் கூறும் போது, அதற்கான சான்றுகளையும் உலகில் விட்டு வைக்கிறான்.*

*நிலவில் முதலில் காலடியெடுத்து வைத்த நீல் ஆம்ஸ்ட்ராங், அங்கு இறங்கிய போது அவர் பயணித்த விண்கலம் நிலவைப் பல*

*கோணங்களில் ஏராளமான புகைப்படங்களை எடுத்து பூமிக்கு அனுப்பியது.*

*அவற்றுள் ஒரு கோணத்தில் எடுக்கப்பட்ட புகைப்படங்களில் ஓர் ஆப்பிளை இரண்டாக அறுத்து மீண்டும் இணைத்தது போன்ற கோடு இருந்தது.*

*இதற்கான காரணத்தை விஞ்ஞானிகளால் கண்டுபிடிக்க முடியவில்லை. இதற்கு அரபியன் பிளவு என்று பெயரிட்டனர். காரணம், சந்திரன் பிளந்தது என்ற நம்பிக்கை அரபியரிடம் (முஸ்லிம்களிடம்) இருந்தது தான்.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆன் 54:2 வசனத்தின் பொருள்: (அரேபியாவின் அழிவுக்குரிய) அந்த நேரம் வந்து விட்டது. சந்திரன் பிளந்து விட்டது – என்பதாகும். அதாவது,

அரபு மக்களின் கருத்திற்கேற்ப சந்திரன் அவர்களது அரசுக்குரிய அடையாளமாகும். யூதர்களும் அவ்வாறே நம்பி வந்தனர். யூதத்தலைவர் ஒருவரின் மகளாகவும் பின்னர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் தூய துணைவிமார்களுள் ஒருவராகவும், விளங்கிய ஹஸ்ரத் ஸஃபியா (ரலி) அவர்கள் ஒருமுறை சந்திரன் தங்கள் மடியில் விழுந்துவிட்டதாகக் கனவு கண்டார்கள். இக்கனவிற்கு அரபு மன்னரை மணந்து கொள்வாய் என்று விளக்கம் கூறப்பட்டது. எனவே அரேபியாவுக்கு அழிவு ஏற்படுதல், சந்திரனில் பிளவு ஏற்படுதல் என்பது அவர்களின் அழிவுக் காலம் வந்துவிட்டது என்றும் அவர்களது அரசு தூள்தூளாக நொறுங்க இருக்கிறது என்றும் பொருள்படும்.

54:3 வசனம், அவர்கள் ஓர் அடையாளத்தைக் கண்டால் புறக்கணித்து விட்டு, இது தொடர்ந்து நடந்து வரும் ஒரு மாயவித்தையே ஆகும் என்பர் என்று வருகிறது. நபி (ஸல்) அவர்களின் எதிரிகள் அக்காட்சியைப்பற்றி சூனியம் என்று கூறி மறுத்து விட்டனர்.



அதாவது நபி (ஸல்) அவர்களின் தோற்றத்தினால் பண்டைய அரபுலகம் அழியும். அவர்களின் சமுதாய சின்னமாகிய சந்திரன் பிளந்துவிடும் என்ற கருத்து இதில் கூறப்பட்டுள்ளது.

## சந்திரன் பிளத்தல்

கிட்டத்தட்ட 400 கோடி ஆண்டுகளுக்கு முன்பு தியா என்றொரு பெரிய கிரகம் பூமியில் வந்து மோதியது. அதன் மோதல் கோணம் சரியாக இருந்ததால், நமக்கு நிலவு என்றொரு அற்புதம் கிடைத்தது. இந்தக் கோணம் சற்று மாறியிருந்தால், பூமியின் மீது மோதாமலே சென்றிருக்கும் அல்லது பூமியைத் தகர்த்திருக்கும். நிலவின் தொலைவு சற்று மாறியிருந்தால் கூட சூரிய கிரகணம் ஏற்பட வாய்ப்பின்றி போயிருக்கும். பல அறிவியல் ஆய்வுகள் தரும் தகவல் இது. மேலும் பூமியில் மனிதன் வாழ்கின்றான் என்றால், அதற்கு முக்கிய காரணம் நிலவு தான் என்கிறது அந்த ஆய்வு. (ஆதாரம்: தினத்தந்தி, தினம் ஒரு தகவல் 16.07.2013)

வான்வெளியில் கோள்கள், வால் நட்சத்திரங்கள், மிகப் பெரும் விண் கற்கள், மனிதனால் அனுப்பப்பட்ட செயல் இழந்த ராக்கெட் போன்றவைகள் ஈர்ப்பு விசையின் காரணமாக சுற்றிவருகின்றன. சில வேளைகளில் அந்த ஈர்ப்பு விசையிலிருந்து விலகிவிடும் போது அவை, பூமி, சந்திரன் போன்ற ஏதோ ஒன்றின் மீது மோதி மிகப்பெரும் விளைவை ஏற்படுத்திவிடும். இவ்வாறு மிகப்பெரும் விண்கல் ஒன்று சந்திரன் மீது மோதி சந்திரனில் பிளவு ஏற்பட்டுள்ளது. விண்கல் என்றால் மலை போன்ற கல்லாகும்.

## விண்கல் நிலவில் மோதல்

1) இத்தாலிய அறிஞர் கலீலியோ, 1609 – ம் ஆண்டில் டெலஸ்கோப்பைக் கண்டுபிடித்தார். அவர் முதன் முதலில் டெலஸ்கோப் வழியாகப் பார்த்தது நிலவைத்தான் ! நிலவில் பள்ளங்கள் இருப்பதை அவர் கண்டுபிடித்தார். இதற்கு காரணம் என்ன என்பது அவருக்கு புரியவில்லை. ஆனாலும், நிலவு நாம்

நினைப்பது போல வட்ட வடிவமான மிருதுவான அழகான தட்டு இல்லை. அதில் பள்ளங்கள் நிறைய இருக்கின்றன என்றார் அவர். இதைச் சொன்னதற்கே, கலீலியோ மத நம்பிக்கைகளுக்கு விரோதமாக பேசுகிறார் என்று சொல்லி அவரை வீட்டுச் சிறையில் அடைத்து விட்டார்கள். அதனால் அவர் மேற்கொண்டு இதுபற்றி ஆராய்ச்சி செய்யவில்லை.

மூன்று நூற்றாண்டுகளுக்கு பிறகு இந்தப் பள்ளங் -களுக்கான காரணத்தை விஞ்ஞானிகள் கண்டுபிடித்தார்கள். இவை விண்கற்கள் மோதியதால் உண்டான பள்ளங்கள் !

நிலவில் மட்டுமல்ல.... செவ்வாய் கிரகத்திலும் இப்படி பள்ளங்கள் இருக்கின்றன. வெள்ளி கிரகத்தில் கலோரிஸ் பேசின் என்று அழைக்கப்படும் ஒரு பெரிய பள்ளம் இப்படி விண்கல் மோதியதால் தான் ஏற்பட்டது. இந்தப் பள்ளத்தின் அகலம் மட்டுமே 1300 கிலோமீட்டர். (ஆதாரம் : அச்சரேகை தீர்வு ரேகை ! பக்கம் 143)

2) பக்கம் 144-145 இல், நோபல் பரிசு பெற்ற இயற்பியல் அறிஞரான லூயிஸ் ஆல்வாரிஸ் சுமார் ஆறறை கோடி ஆண்டுகளுக்கு முன்பு பூமியில் மிகப்பெரும் விண்கல் மோதியதை முதன் முதலில் தெளிவுபடுத்திச் சொன்னார்.

சிக்கலப் பள்ளம் எனப்படும் இது, உலகில் நிகழ்ந்த ஐந்தாம் பேரழிவுக்கு ஒரு சான்றாக இருக்கிறது. இதை வைத்து ஆராய்ந்தபோது ஆறரை கோடி ஆண்டுகளுக்கு முன்பு டினோஸர்கள் அழிந்தபோது என்ன நடந்தது என்பது புரிந்தது. சுமார் **பத்து கிலோமீட்டர் அகலமுள்ள ஒரு பெரிய விண்கல் பூமியில் வந்து மோதியது.** இதன் விளைவாக ரிக்டர் அளவில் 13.0 (சுனாமியை உருவாக்கி தமிழகத்தை உலுக்கிய சுமத்ரா பூகம்பம் 9 ரிக்டர்தான்) என்று குறிக்கத்தக்க அளவுக்கு பெரிய பூகம்பம் ஏற்பட்டது. இதனால் பூமியே அதிர்ந்தது. மெக்ஸிகோ வளைகுடாவில் மிகப்பெரிய சுனாமி ஏற்பட்டு 2000 அடி உயர அலைகள் எழுந்தன. இதனால் அந்த கடலே காலியானது. விண்கல்



உரசியதால் பெரும் தீ ஜுவாலை எழுந்து காடுகளை எரித்தது. கரியும், தூசியும் பெருமளவு எழுந்து உலகைச் சூழ்ந்தது. அதோடு இந்த மோதலால் மிகப்பெரிய புழுதிப்படலம் எழுந்து பூமியைச் சுற்றிப் படர்ந்தது. இவற்றால் சூரிய வெளிச்சமே பூமிக்கு வராமல் போனது. இதனால் உலகமே கடுங்குளிரில் நடுங்கியது. தாவரங்கள் மடிந்தன. அதைச் சாப்பிட்டு வாழ்ந்த விலங்குகளும் மடிந்தன. (Dr. எம்.பி. இராமன் எழுதிய அச்ச ரேகை...... தீர்வு ரேகை)

இவ்வாறு ஒரு மலை போன்ற விண்கல் சந்திரனில் மோதியதால் சந்திரனில் ஒரு பிளவு ஏற்பட்டுள்ளது. அதனால் சந்திரனில் பெரும் தூசிப்படலம் எழுந்தது. பூமியிலிருந்து பார்க்கும் போது சந்திரனின் தோற்றத்தை இரண்டாகப் பிளந்தது போல அதன் மத்தியில் தூசிப்படலம் காட்சியளித்து மறைந்தது. தூசிப்படலம் மறைந்ததும் பிளந்த சந்திரன் ஒன்று சேர்ந்தது போல் தோன்றியது. இது அல்லாஹ்வின் வல்லமையால் விண்ணில் நடந்ததாகும்.

ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சந்திரனை சுட்டிக் காட்டிய போது, தூசிப்படலம் சந்திரனைப் பிளந்து காட்டிய தோற்றமாகும். அது மறைந்தது சந்திரன் பொருந்தியது போன்ற தோற்றமாகும்.

அம்மாபெரும் விண்கல் சந்திரனில் மோதியதால் சந்திரனில் ஒரு பிளவு ஏற்பட்டுள்ளது. இக்காட்சியை கண்டவர்கள் சந்திரன் பிளந்து சேர்ந்தது என்று நம்பினர். எதிரிகளோ சூனியம் என்று மறுத்து விட்டனர்.

சந்திரன் இரு துண்டுகளாக பிளந்து ஒன்று சேருமா? சாத்தியமே இல்லை... எப்படி? சுஜாதா கூறுகிறார் : பூமி சுற்றுவது நின்று போவதாக வைத்துக் கொள்வோம். அப்படி நின்று போனால் சிறிது நேரத்தில் நாம் காற்று மண்டலத்தை இழப்போம். சூரியனின் ஈர்ப்பு சக்தியால் கவரப்பட்டு மொத்தமாக அவசர அவசரமாக சூரியனை நோக்கி விரைவோம். பூமியே வெடித்துச் சிதறித் துண்டு

துண்டானாலும் ஆச்சரியமில்லை. (ஆதாரம் : சுஜாதா எழுதிய ஏன் எதற்கு எப்படி பாகம் II பக்கம் 206)

2. இதே கதிதான் சந்திரன் பிளந்தாலும் ஏற்படும். அல்லாஹ்வுக்கு வல்லமை உண்டு என்பதை யாரும் மறுக்க முடியாது. ஆனால் அவன் வகுத்த இயற்கை சட்டத்திற்கு உட்பட்டே எதனையும் செய்வான் என்பதை மறக்கக் கூடாது.

## 47. மர்யம் (அலை) அவர்கள் நீருக்குள் ஈஸா நபியைப் பெற்றெடுத்தார்கள் என்பது பீ.ஜே யின் கற்பனைக் கதையே!

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 436 இல் நீருக்குள் பிரசவம் என்னும் தலைப்பில் 9 வது பதிப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார் :**

*19:23-24 வசனத்தில் நீருக்குள் நடக்கும் பிரசவத்தால் வலி இருக்காது என்ற கருத்து கூறப்படுகிறது. இன்றைய அறிவியல் உலகம் இப்போது இதை கண்டுபிடித்துள்ளது.*

*பிரசவம் நடைபெறும் லேபர் வார்டில் கணவனை அனுமதிப்பது தற்போது இந்தியாவிலும் நடைமுறைக்கு வந்துள்ளது. பிரசவமாகும் பெண்ணுக்கு இது மனதளவில் தைரியத்தை தரும் என நம்பப்படுகிறது. ரஷ்யாவில் பிரசவத்தை நீருக்குள் வைத்துக் கொள்ளும் முறை நடைமுறையில் உள்ளது. நீருக்குள் பிரசவம் நடைபெறுவது தாய்க்கு பிரசவத்தை எளிதாக்குகிறது என்பது ஆராய்ச்சியில் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.*

*குழந்தை வயிற்றில் கருப்பையில் நீருக்குள் மிதந்த படி தான் உள்ளது. எனவே நீருக்குள் பிரசவம் நடைபெறும் போது குழந்தை தனக்கு பழக்கப்பட்ட நிலையிலேயே வெளியே வருகிறது. எனவே குழந்தைக்கும் இது இயல்பானதாக உள்ளது. குளிர் நீரில் பிறப்பதால் குழந்தைக்கு நோய் எதிர்ப்புத்திறன் கூடுகிறது.*

*ரஷ்யாவில் பிரசவ மருத்துவ மனைகளில் பிரசவத்துக்கென சிறப்பு நீச்சல் குளங்கள் நீருடன் தயார் நிலையில் உள்ளன.*



**நம் விளக்கம்:**
**திருக்குர்ஆன் 19:24-27 இல்,**

பின்னர் (அவர் அங்குச் சென்ற போது அவருக்கு ஏற்பட்ட) பிரசவ வலி அவரை பேரீச்ச மரத்தடியில் கொண்டு போய்ச் சேர்த்தது. (அப்போது) அந்தோ! நான் இதற்கு முன்னரே மரணமடைந்து மறக்கப்பட்ட ஒன்றாக ஆகியிருக்க வேண்டுமே என்று அவர் கூறினார்.

அப்போது (வானவராகிய) அவர் கீழ்ப் புறத்திலிருந்து அழைத்து கூறினார். கவலைப்படாதீர். உம்முடைய இறைவன் உமக்குக் கீழ்ப்புறத்தில் ஒரு நீரூற்றை ஓடச் செய்துள்ளான். (அங்குச் சென்று உம்மையும் உம்முடைய குழந்தையையும் தூய்மைப் படுத்திக் கொள்வீராக).

(உமக்குப் பக்கத்திலுள்ள) பேரீச்ச மரத்தின் கிளையைப் பிடித்து உமது பக்கமாக குலுக்குவீராக. அது உம்மீது புத்தம் புதிய பழங்களை உதிர்க்கும்.

எனவே நீர் (அவற்றை) உண்டு, (நீரூற்றிலிருந்து நீரைப்) பருகி உம்முடைய கண்களைக் குளிர்ச்சியாக்கிக் கொள்வீராக.... என்று வருகிறது.

இதில் எதிலும் மர்யம் (அலை) அவர்கள் நீருக்குள் இறங்கினார்கள் என்று கூட கூறப்படவில்லை. **நீரைப்பருகி** கண்களைக் குளிர்ச்சியாக்கிக் கொள்வீராக என்று தான் வருகிறது. எனவே, நீருக்குள் பிரசவம் என்பது தவறு. இதில் அல்லாஹ் கூறுகின்ற கருத்தை விட்டு விட்டு இல்லாதவற்றை வலிந்து புகுத்தியுள்ளார்.

1) மர்யம் (அலை) அவர்களுக்கு நீருக்குள் பிரசவம் ஏற்பட்டு இருக்குமேயானால் அந்த நடை முறை இஸ்ரவேல் பெண்களிடம் தொடர்ச்சியாக காணப்பட்டிருக்க வேண்டும். ஆனால் இன்று வரை இவ்வாறான ஒரு நடைமுறை அவர்களிடம் காணப்படவில்லை.

2) திருக்குர்ஆன் 13:18 வசனம், வானத்திலிருந்து அவன் தண்ணீரை இறக்குகிறான். அது பள்ளத்தாக்குகளில் அதன் கொள்ளவுக்கு ஏற்ப **ஓடுகிறது** என்று கூறுகிறது.

நீர் ஊற்றெடுத்து ஓடையாக செல்கின்ற போது அந்த ஓடுகின்ற நீரில் பிரசவம் நிகழ்வதற்கு வாய்ப்பில்லை. பிரசவம் நிகழ வேண்டுமென்றால் நீர் ஓடாமல் தேங்கி நிற்க வேண்டும். ஆனால் அது ஓடிக் கொண்டிருந்த நீர் என்றே திருக்குர்ஆன் கூறுகிறது.

திருக்குர்ஆன் கூறுகின்ற கருத்தை விட்டு விட்டு இல்லாத கருத்தாகிய நீருக்குள் பிரசவம் என்பதை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. மேலும் நீருக்குள் பிரசவம் பற்றி ஹாய் மதன் பாகம் 1 பக்கம் 33 இல்,

''உயிரினங்களிலே பிரசவத்தின் போது மற்றவர் உதவியை, எதிர்பார்க்கும் அளவுக்குச் சற்று வீக் கானவன் மனிதன் தான் என்பது ஓரளவுக்கு உண்மையே! நண்பர் ஒருவர் சொன்ன ஆச்சரியமான விசயம் நினைவுக்கு வருகிறது. சில வருடங்களுக்கு முன் காரில் வெளியூர் பயணம் போயிருக்கிறார். அப்போது சற்று நேரம் காரை நிறுத்திவிட்டுக் காற்றாட நின்ற போது அவர் பார்த்த காட்சி! தன்னந் தனியாக ஒரு ஏழை நாடோடி கர்ப்பிணிப்பெண் நடந்துவந்து, ஏதோ நம்பர் ஒன்னுக்கு உட்காருவது போல ஒரு புதர் பின்னால் உட்கார்ந்து, சில நிமிடங்களில் எழுந்த போது அவள் கையில் அந்த நிமிடம் பிரசவித்த குழந்தை! தன் வாயால் கடித்துத் தொப்பிள் கொடியை அறுத்து முடிச்சுப் போட்டுவிட்டு, அருகிலிருந்த அழுக்குக் குட்டைத் தண்ணீரில் குழந்தையை க்ளீன் பண்ணிவிட்டு, சாவதானமாக நடந்து தன் வழியே சென்றாள் அந்தப் பெண். எதேச்சையாக அந்தப் பிரசவத்தைப் பார்த்த என் நண்பர், திகைப்பிலிருந்து இன்னமும் மீளவில்லை''.

**மேலும் சுஜாதாவின் ஏன் எதற்கு எப்படி பாகம் 2 பக்கம் 108 மற்றும் 200 பக்கங்களில்,**

''மேல் நாட்டில் பெண்கள் தண்ணீருக்குள் பிரசவிப்பதாகவும் அது பெண்களுக்கு இலகுவான பிரசவத்தை ஏற்படுத்துவதாகவும் படித்தேன். இது சாத்தியம்தானா?



தண்ணீருக்குள் பிரசவம் எல்லாம் ஏதோ ஒரு பரிசோதனைக்காக எப்போதாவது செய்வதுதான். மேல்நாட்டில் பிரசவத்தின்போது கணவன்மார்களை – தம்பதியிடையே பிணைப்பை அதிகரிக்கும் என்பதால் உடன் அழைத்துக் காட்டுகிறார்கள். அங்கெல்லாம் முணுக்கென்றால் ரிஸ்கே எடுக்க மாட்டார்கள் – சிஸேரியன் பண்ணி விடுவார்கள். இளம் தாய் ஆரோக்கியமாக இருந்தால் பிரசவம் என்பது இயற்கையான விசயம் என்கிறார்கள். ஒரு முறை பிரசவ வார்டு பக்கம் எட்டிப் பாருங்கள்'' என்று எழுதியுள்ளார்.

**மேலும் பக்கம் 200 இல்,**

''ஆறறிவு படைத்த மனித இனத்துக்கு (பெண்களுக்கு) பிரசவ காலத்தில் மனித உதவி தேவைப்படுகிறது. (சமயத்தில் ஆபரேசன் செய்து குழந்தையை எடுக்கவும் டாக்டரின் உதவி தேவைப்படுகிறது.) ஆனால் காட்டில் அனாதரவாய் திரியும் விலங்குகளுக்கு மட்டும் சுகப்பிரசவம் நடப்பது எப்படி?

மனிதர்களும் அப்படித்தான் பிள்ளை பெற்றுக்கொண்டு இருந்தார்கள். நாகரிக வளர்ச்சியில் வாழ்வெனும் சிக்கலால் பலவித குழப்பங்கள் ஏற்பட்டு, பிரசவ வலியைப் பற்றிய அதீத பயத்தை ஏற்படுத்தியது. மருத்துவ முன்னேற்றத்தால் சுலப முறைகளைக் கண்டுபிடித்து இந்த மாற்றங்களை ஏற்படுத்திவிட்டார்கள்.

இப்போது கூட சீனாவில் வயலில் வேலை செய்யும் பெண்களை நிழலில் ஒதுக்கிக்கொண்டு போய் பிள்ளை பெற்றுவிட்டு மீண்டும் கதிரறுக்க வைத்து விடுவார்களாம்'' என்று எழுதியுள்ளார்.

எனவே மர்யம் (அலை) அவர்களின் பிரசவமும் இது போன்றதே.

# XII. வேதங்களைப் பற்றிய தவறான விளக்கம்

## 48. ஸாபியீன்கள் யார்?

*திருக்குர்ஆன் விளக்க அட்டவணை 443 -ல்* ***ஸாபியீன்கள் யார்?*** *எனும் தலைப்பில் பீ.ஜே., (11-வது பதிப்பு)*

*இவ்வசனங்களில் (2:62; 5:69; 22:17) ஸாபியீன்கள் என்ற பிரிவினர் பற்றி கூறப்பட்டுள்ளது.*

*ஹதீஸ்களை ஆராயும் போது ஸாபியீன்கள் என்போர் இறைத் தூதர்கள் அனுப்பப்படாத போதும் தங்களின் சிந்தனையைப் பயன்படுத்தி ஒரே கடவுள் கொள்கையை விளங்கிக் கொண்டவர்கள் என்பது தெரிய வருகிறது. ஏக இறைவனை விளங்கி அவனுக்கு இணை கற்பிக்காத சமுதாயமே ஸாபியீன்கள் என்று கருதுவதற்கு ஹதீஸ்களில் ஆதாரம் உள்ளது என்று எழுதியுள்ளார்.*

**நம் விளக்கம்:**

பீ.ஜே எடுத்துக் காட்டிய திருக்குர்ஆன் வசனங்களில் (2:63; 5:70; 22:18)

1) நம்பிக்கை கொண்டோர்
2) யூதர்கள்
3) கிறித்தவர்கள்
4) ஸாபியீன்கள் என்ற நான்கு கூட்டத்தினர் கூறப்பட்டுள்ளனர்.

இவர்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பி நல்லறம் செய்து நற்கூலி பெறுபவர்கள் அவர்களுக்கு எந்தப் பயமும் இல்லை; கவலைப்படவும் மாட்டார்கள் என்று கூறப்பட்டுள்ளது. அதாவது முதல் கூட்டத்தினர்,

திருக்குர்ஆனையும் நபி (ஸல்) அவர்களையும் நம்பிய முஸ்லிம் கூட்டத்தினர்.



தவ்ராத்தையும் மூஸா நபி முதல் ஈஸா நபி வரை அதனைப் பின்பற்றி வாழ்ந்த யூத கிறித்தவர்கள்.

எனவே ஸாபியீன்களும் ஏதோ ஒரு வேதத்தையும் அதைக் கொண்டு வந்த நபியையும் பின்பற்றி வந்த ஒரு சமூகம் என்பது விளங்குகிறது.

இக்கூட்டத்தினரின் பொதுப்பண்பு தான் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்பி நல்லறம் செய்வதும் நற்கூலி பெறுவதும் கவலையும் அச்சமும் இன்றி வாழ்வது ஆகும்.

பீ.ஜே எடுத்துக் காட்டியுள்ள ஹதீஸ்களை ஆய்வோம். புகாரி 344; நபி (ஸல்) அவர்கள் ஸாபியீ என்று அழைக்கப்பட்டுள்ளனர். புகாரி 3522 இல், நபித்தோழர் அபூதர் (ரலி) அவர்கள் ஸாபியீ என்று அழைக்கப்பட்டுள்ளார். புகாரி 4339, 7189 ஹதீஸ்களில், இஸ்லாத்தின் எதிரிகளுடன் நடந்தபோரில் அவர்கள் சரணடைந்து நாங்கள் ஸாபியீ ஆகி விட்டோம் என்று கூறுகின்றனர்.

மேலே கூறப்பட்டுள்ளவற்றைத் தொகுத்துப் பார்த்தால், ஒரு வேதம் கொண்டு வந்த நபி ஸாபியீ என்று அழைக்கப்படுகிறார்.

ஒரு வேதம் கொண்டு வந்த நபியை ஏற்றுக் கொண்ட ஒரு நபித்தோழர் ஸாபியீ என்று அழைக்கப்படுகிறார்.

அந்த வேதத்தையும் அந்த நபியையும் நம்பாத மக்கள் போரில் சரணடையும் போது நாங்கள் ஸாபியீ ஆகி விட்டோம். அதாவது உங்களின் புதிய மதத்தையும் அதன் கொள்கைகளையும் ஏற்றுக் கொள்கிறோம் என்று கூறுகின்றனர். எனவே ஒரு நபியையும் அவர் கொண்டு வந்த வேதத்தையும் நம்பியவர்கள் ஸாபியீன்கள் என்று தெரிகிறது.

நபிகள் நாயகம் (ஸல்)அவர்கள் அனுப்பப்படும் முன் கற்சிலைகளை வணங்க மறுத்து ஏக இறைவனை மட்டும் நம்பிய சமுதாயத்தினர் இருந்தனர். வணக்க வழிபாட்டு முறைகளைத்தான்

இவர்களால் அறிந்து கொள்ள முடியாது. அதை இறை தூதர்கள் வழியாகத்தான் அறிய இயலும். இதைத் தவிர மற்ற விசயங்களில் ஒழுங்காக நடந்த சமுதாயமே ஸாபியீன்கள் என்று பீ.ஜே. கூறுகிறார்.

நான் கேட்கிறேன்: இந்த மக்களைப் பற்றி அக்கால மக்கள் அவர்களை ஸாபியீன்கள் என்று அழைத்ததாக சான்று உண்டா? இருந்தால் பீ.ஜே. எடுத்துக்காட்ட வேண்டும்.

மேலும் ஸாபியீன்களின் அடையாளமாகத் திருக்குர்ஆன் கூறுவது,

அவர்கள் அல்லாஹ்வையும் இறுதி நாளையும் நம்புவதும், அதற்கேற்ப நல்ல செயல்கள் செய்வதும் ஆகும். இந்த நற்செயல்கள் ஒரு நபியின் மூலமே வேதத்தின் வழியாகக் கிடைக்கிறது. எனவே அத்தகு நற்செயல்களும் நற்கூலியும் கிடைக்காத மக்களை ஸாபியீன்கள் என்று அழைப்பது தவறாகும்.

பீ.ஜே. கூறுகிறார்: ''இன்றைக்கும் இறைத் தூதர்களின் போதனைகள் சென்றடையாத சமுதாயம் இருக்கலாம். அவர்கள் ஸாபியீன்களாக வாழ்வதற்கு இறைவன் வழங்கிய அறிவே போதுமானதாகும்'' பீ.ஜே –யின் இக்கருத்தும் சரியன்று.

இன்றைய முஸ்லிம் உலகில், ஓர் இறை மறையும், ஓர் இறை தூதரின் நடைமுறையும் இருந்தும், வழிகெட்டு தவ்ஹீதுக்கு மாற்றமாக நடக்கும் மக்களுடன் மதிப்பிட்டால், அவர்களின் அறிவு மட்டும் போதும் என்று ஏற்க முடியுமா? எனவே பகுத்தறிவு மூலம் ஓரிறையை நம்புபவர்களை ஸாபியீன்கள் என்று கூற முடியாது.

மொத்தத்தில், ஸாபியீன்கள் என்போர் திருக்குர்ஆனில் கூறப்படாத உலகில் வந்த ஏதோ ஒரு வேதத்தையும் அதனைக் கொண்டு வந்த நபியையும் பின்பற்றி, அல்லாஹ்வையும் இறுதி நாளையும் ஈமான் கொண்டு, அதற்கேற்ப நற்செயல்கள் செய்து நற்கூலியாக சொர்க்கத்தை அடையும் பிற சமூகங்கள் அனைத்தையும் குறிக்கும்.



## 49. ஜின்கள் யார் ?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 154 இல், மனிதராக மாற்றித்தான் அனுப்புவான் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*தங்களைப் போலவே உண்டு பருகி குடும்பம் நடத்தும் ஒருவரை இறைவனின் தூதர் என்று நம்புவது மனிதர்களுக்குக் கஷ்டமாக இருந்தது. எனவே, வானவர்களைத் தூதராக அனுப்ப வேண்டியது தானே ? எனக் கேட்டனர்.*

*வேதத்தைக் கொண்டு வந்து மக்களிடம் ஒப்படைத்துச் செல்வதாக இருந்தால் வானவரை அனுப்பலாம். வேதத்திற்கு விளக்கம் கூறி நடைமுறைப்படுத்திக் காட்டத்தான் தூதர்கள் அனுப்பப்பட்டனர்.*

*எனவே, மனிதர்களுக்கு மனிதர்களைத் தான் தூதராக அனுப்ப முடியும். வானவரை அனுப்புவதாக வைத்துக் கொண்டாலும் அவரையும் மனிதராக மாற்றித்தான் அனுப்புவேன் என்ற இறைவாக்கிலிருந்து (திருக்குர்ஆன் 6:9, 17:95) இதை அறியலாம்.*

**நம் விளக்கம்:**

1) வானவர்கள் வேறு; மனிதர்கள் வேறு. வானவர்கள் ஒளியாலும், மனிதர்கள் மண்ணினாலும் படைக்கப்பட்டவர்கள். எனவே வேதத்துக்கு விளக்கம் கூறி நடைமுறைப்படுத்திக்காட்ட வேண்டும் என்றால் மனிதனுக்கு மனிதன் தான் தூதராக வர வேண்டும். வானவர் வர முடியாது. அப்படியே வானவர் வருவதாக இருந்தாலும் அவ்வானவரையும் மனிதராக மாற்றித் தான் இறைவன் அனுப்புவான். இதை நன்கு நெஞ்சில் நிறுத்துங்கள்.

அப்படி என்றால் ஜின் என்பது நெருப்பினால் படைக்கப்பட்டது. மனிதனோ மண்ணால் படைக்கப்பட்டவன். ஜின்னுக்கு வேதத்தின் விளக்கம் கூறி நடைமுறைப்படுத்த மனிதன் வர முடியாது. அப்படியே மனிதன் ஜின் இனத்துக்குத் தூதராக

அனுப்பப்பட்டாலும் அவனை ஜின்னாக மாற்றித் தான் அல்லாஹ் அனுப்புவான் என்பது உறுதியாகிறது. இதிலிருந்து ஜின்னுக்கு அவர் தூதராக அனுப்பப்பட்டார். இவர் நபியாக அனுப்பப்பட்டார் என்று மனித நபிமார்களைப் பற்றி நம்புவது தவறு என்று விளங்க வில்லையா? அப்படியே மனிதர்கள் தூதராக ஜின்னுக்கு அனுப்புவதாக இருந்தாலும் அந்தத் தூதர்கள் மனிதராக அனுப்பப்பட மாட்டார்கள் என்பதும், அவர்கள் ஜின்களாக மாற்றித்தான் அனுப்பப்படுவார்கள் என்பதும் தெளிவாகிறது. அவ்வாறு எனின், ஜின்னுக்குத் தூதராக அனுப்பப்பட்ட ஜின்தூதர் யார்? அவ்வாறு யாரும் இல்லை என்றால், திருக்குர்ஆனைக் கேட்பதற்கு வந்த ஜின்கள், மனிதர்கள் என்பதும், அந்த மனிதர்கள் ஜின் எனும் பெயரால் அழைக்கப்பட்டனர் என்பதும் தெளிவாகிறது.

அதாவது, புறக்கண்ணுக்கு சாதாரணமாகத் தெரியாதவற்றை ஜின் என திருக்குர்ஆனும் நபிமொழியும் அழைக்கிறது. பாம்புகள் மறைந்து வாழ்வதால் (27:11) திருக்குர்ஆன் **பாம்புகளை** ஜான்னுன் எனக் கூறுகிறது. மரங்களின் நெருக்கத்தால் கண்ணால் பார்க்க முடியாதபடி மறைக்கப்பட்டிருப்பதால் **சொர்க்கம், தோட்டம்** ஆகியவை ஜன்னத் என்று அழைக்கப்படுகிறது. (2:26; 61;13) அறிவு மறைக்கப்பட்டவன் அதாவது **பைத்தியம்** ஜின் என அழைக்கப்படுகிறான். அவர்களின் தோழருக்கு எந்தப் பைத்தியமும் இல்லை. ஜன்னதுன் (7:185) என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

திருக்குர்ஆன் 63:3 இல், போர் ஆயுதங்களால் தாக்கப்படுவதைத் தடுக்கும் போர்க் கருவியாகிய **கேடயம்** ஜின் என்று அழைக்கப்படுகிறது. இருள் மூடி பார்க்க முடியாதவற்றை **ஜன்ன** எனத் திருக்குர்ஆன் கூறுகிறது. (6:77)

வயிற்றில் உள்ள **கரு அஜின்னதுன்** என்றும் திருக்குர்ஆன் கூறுகிறது (53:33) எலும்புகளும், விலங்குகளின் விட்டைகளும் **கண்ணுக்குத் தெரியாத நுண்ணிய கிருமிகளால்** தின்னப்படுவதால் அவற்றை ஜின்களின் உணவு என நபிமொழி கூறுகிறது.



பிறருடைய கண்களில் படாமல் மறைவாக வந்து சிலர் திருக்குர்ஆனைக் கேட்டுச் சென்றனர் என்று அறிகிறோம். அவர்கள் யூதர்கள் என்பதால்தான், மூஸாவுக்குப் பின்னர் வந்த ஒரு வேதத்தை (திருக்குர்ஆனைக்) காது கொடுத்து மறைந்திருந்து கேட்டதாகத் திருக்குர்ஆன் கூறுகிறது.(46:30, 72:2)

**திருக்குர்ஆன் மனிதர்களுக்கு மட்டுமே அனுப்பப் –பட்டிருக்கிறது** என்று திருக்குர்ஆன் கூறுகிறது. அதனை மனிதத் தூதர் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களே வழிகாட்டுவதற்குக் கொண்டு வந்தார்கள். எனவே அதனைக் கேட்டு தம் இனத்திடம் கொண்டு செல்லும் ஜின்களும் மனிதர்களே என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

ஹஸ்ரத் சுலைமான் நபியின் அவையில் வேதத்தைப் பற்றிய ஞானம் பெற்ற ஒரு ஜின் இருந்திருக்கிறது (27:41) ஜின்களுக்கு வந்த வேதம் எது ? ஜின்களுக்கு வந்த தூதர் யார் ? அவர்கள் மனிதர்களே ஆவர். மனித இனத்தில் ஜின்கள் ஆற்றல் பெற்றவர்களாக இருந்துள்ளனர். அந்த ஆற்றல் மிக்கவர்களைக் கொண்டு (27:39-40) சுலைமான் நபி தன் பணிகளை விரைவாகச் செய்தார். கண்மூடித் திறப்பதற்குள் இருந்த இடத்திலிருந்து எழுவதற்குள் என்று கூறும் அளவில் மிக விரைவாக தன் பணிகளைச் செய்யும் ஆற்றல் பெற்றவர்கள். அதாவது சுலைமான் நபி ஓரிடத்தில் பாசறை அமைத்திருந்ததால் அங்கு படைகள் தங்கி ஓய்வு எடுத்தது. **அதிலிருந்து புறப்பட்டுச் செல்வதற்கு முன்** சபா ராணியின் சிம்மாசனத்தைப் போல் ஒன்றைச் செய்து கொண்டு வருவேன் என்றும், கண் மூடித்திறப்பதற்குள் என்றால், சுலைமான் நபி தூங்கி ஓய்வு எடுத்து புறப்பட்டுச் செல்வதற்குள் சபா ராணியின் சிம்மாசனத்தைப் போல் ஒன்றைச் செய்து கொண்டு வருவேன் என்றும் கூறின. ஒரு நபியாகிய பேரரசர் அடுத்த நாட்டு ராணியின் சிம்மாசனத்தைத் தூக்கிக் கொண்டு வரச்சொல்வார் என்று நம்புவது எவ்வளவு அறிவீனம்? ஒரு நபியைப் பற்றி தரக் குறைவாக எண்ணுவதிலிருந்து அல்லாஹ் நம்மைக் காப்பானாக.

சாதாரணமாக வெளி உலகுக்குத் தெரியாத, மக்கள் கண் முன் காணப்படாத மாபெரும் அறிஞர்கள், விஞ்ஞானிகள் ஜின்கள் எனப்பட்டனர். அவர்கள் விண்ணில் சென்று வானில் தம் ஆராய்ச்சியைச் செய்யக் கூடியவர்கள். வான் மண்டலத்தின் பாதுகாப்பு, கோள்களின் தன்மை ஆகியவை பற்றிக் கூறக்கூடியவர்கள். அவர்களை ஜின்கள் என்று திருக்குர்அன் (72:9-10) வசனங்கள் கூறுகின்றன.

இறைத்தூதர்களுக்கு தீய மனிதர்களே எதிரிகளாக இருந்தனர் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. அவர்களுக்கு தீய ஜின்கள் இன்னார் இன்னார் பகைவர்களாக இருந்தனர். இந்த ஜின்கள் இப்படிப்பட்ட தீய செயல்களை நபிமார்களுக்கு எதிராகச் செய்தனர் என்று திருக்குர்ஆனும் நபிமொழியும் கூறவில்லை. மனிதர்களிலும் ஜின்களிலும் உள்ள சைத்தான்களை ஒவ்வொரு நபிக்கும் பகைவர்களாக ஆக்கினோம் என்று (6:113) வசனம் கூறுகிறது. எனவே இந்த ஜின் சைத்தான்கள் என்போர் மனிதர்களில் மறைந்திருந்து, பிற சாதாரண மனிதர்களைத் தூண்டி, நபிமார்களுக்கு எதிராக தீயவை செய்பவர்கள் ஆவர். அவர்கள் ஆற்றலும் அறிவும் மிக்கவர்கள் என்பதால் அவ்வாறு பிரித்துக் கூறப்படுகின்றனர். உதாரணமாக இன்று ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்கு எதிராக ஒரு தீயவன் குறும் படம் எடுக்கிறான். ஒரு தீய சல்மான் ருஷ்டி தீய நூல் எழுதுகிறான் என்றால் இவர்களுக்குக் பின்னால் இருந்து கொண்டு இவர்களைத் தூண்டி இந்த இழி செயலைச் செய்யும் மறைவானவன் ஜின், சைத்தான் ஆவான். இவ்வாறு மனிதர்களும், ஜின்களும் என்று திருக்குர்ஆனில் வருமிடங்களில் மனிதர்கள் என்போர் சாதாரண மனிதர்கள் என்றும் ஜின்கள் என்போர் அசாதாரண மனிதர்கள் என்றும் அறிகிறோம். அதாவது தொழிலாளி முதலாளி, அஞ்ஞானி விஞ்ஞானி, ஆளப்படுபவன் ஆள்பவன் காட்சிக்கு எளியன் (எளிதாகக் கண்ணால் காணக் கூடியவன்) காட்சிக்கு அரியன் (சாதாரணமாக காண முடியாதவன்) ஆகியோர் ஆவர்.



இரண்டாவதாக, வேதத்துக்கு விளக்கம் கூறி நடைமுறைப்படுத்திக் காட்டத்தான் தூதர்கள் அனுப்பப்பட்டனர் என்பதாகும். ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் திருக்குர்ஆன் முழுவதற்கும் விளக்கம் கூறிச் செல்லவில்லை. அன்னாரின் இறுதிப் பேருரையில் நான் கூறுபவற்றை எடுத்துச் சென்று பிறரிடம் கூறுங்கள். அவர்கள் உங்களை விட அதனை நன்கு அறிவார்கள் என்று கூறினார்கள். அதாவது அன்னார் கூறிய வேத வசனங்களுக்கும் நபிமொழிகளுக்கும் பிற்காலத்தில் உள்ளவர்கள் சிறந்த விளக்கத்தைக் கூறுவார்கள் என்பதாகும். ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் காலத்தில் ஒட்டகம், குதிரை, கோவேறு கழுதை போன்றவைகளே வாகனங்கள் ஆகும். பிற்காலத்தில் நாம் வாழும் காலத்தில் நபித்தோழர்கள் எண்ணிப் பார்த்திராத வாகனங்களாகிய இரயில், விமானம், பேருந்து போன்றவை வந்துள்ளன. இதனைத்தான் திருக்குர்ஆன் நீங்கள் அறியாத வாகனங்கள் என்று கூறுகிறது. (16:9) இந்த வசனம் நமக்குப் பொருந்தும். எதிர் காலத்தில் நாம் அறியாத வாகனங்கள் வரும். எனவே திருக்குர்ஆனுக்கும் நபிமொழிக்கும் விளக்கம் கூறி அதனை விளக்க அவர்களுக்குப் பின்னரும் தூதர் வருவார் என்பது இதிலிருந்து விளங்குகிறது.

ஜின்கள் தனி படைப்பு என்றால், அவர்களுக்கும் மனிதனைப் போல எல்லா உறுப்புகளும் இருக்கின்றன என்றால், அவர்கள் எங்கு வாழ்கின்றனர்? எவற்றை உண்ணுகின்றனர்? எவற்றை உடுக்கின்றனர்? இல்லற வாழ்க்கையை எவ்வாறு நடத்துகின்றனர்? அவர்கள் எந்த வேதத்தை படிக்கின்றனர்? அது என்ன மொழியில் உள்ளது? அதைக் கற்றுக் கொடுத்து, விளக்கி தூய்மைப்படுத்தி, நல்வழிப்படுத்த வந்த ஜின் நபிமார்கள் யார் யார்? அவர்கள் எப்படி மரணிக்கிறார்கள்? மரணிக்கின்றவர்களை எரிக்கின்றார்களா? புதைக்கின்றார்களா? அப்படியே ஒரு குறிப்பிட்ட இடத்தில் விட்டு விடுகின்றார்களா? அவர்கள் மனித இனத்துடன் எப்படி வணிகம் போன்ற உறவுகளைக் கொண்டுள்ளனர்? இவ்வாறு எழும் எல்லாக் கேள்விகளுக்கும் ஆதார பூர்வமான பதில் உண்டா?

எனவே, புறக்கண்ணுக்குத் தெரியாத உயிர்களை ஜின்கள் என்று திருக்குர்ஆனும் நபிமொழியும் கூறுகின்றன. திருக்குர்ஆன் மனிதர்களும் ஜின்களும் என்று கூறுமிடங்களில் வரும் ஜின்கள், மனித இனத்தின் ஒரு பிரிவாகும். மக்களின் கண்ணுக்கு தெரியாமல் மறைந்து வாழ்ந்த மனிதர்களும் ஜின்கள் என்று அழைக்கப் -படுகின்றனர்.

## 50. பூமி அசையாதிருக்க நிறுவப்பட்டது மலைகளா? முளைகளா?

**I. திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 248 இல் முளைகளை நாட்டினோம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார் :**

*பூமியில் அமைக்கப்பட்டுள்ள மலைகளைப் பற்றி அல்லாஹ் கூறும் போது அதை முளைகளாக நாட்டியிருக்கிறோம் என்று கூறுகிறான். (திருக்குர்ஆன் 15:19, 16:15, 21:31, 27:61, 31:10, 41:10, 50:7, 77:27, 78:7, 79:32)*

**நம் விளக்கம்:**

மலை எனும் பொருளைத் தரும் ரவாஸிய எனும் சொல் வருமிடங்களாகிய 15:20, 16:16, 21:32, 27:62, 31:11, 41:11, 50:8, 77:28 ஆகிய வசனங்களில் முளைகள் என்று பீ.ஜே மொழியாக்கம் செய்துள்ளார். இது தவறாகும். மேலும் இவ்விடங்களில் முளை எனும் பொருள் தரும் **அவ்தாத்** என்னும் சொல் வரவில்லை. இச்சொல் முளை எனும் பொருளில் 38:13, 89:11, 78:8 ஆகிய வசனங்களில் வருகிறது.

மலைகள் பூமியில் முளைகள் போன்று அமைந்து பூமியைப் பாதுகாத்து அசையாத படி உறுதியாக நிலை நிறுத்தி வருகிறது. ஆனால் ரவாசிய என்ற இச்சொல்லுக்கு மலைகள் என்றே பொருளாகும்.

ரவாசி எனும் சொல்லுக்கு Firm, anchored, fixed, towering, mountaion என்று முஹம்மது மொஹர் அலி தன் தர்ஜுமாவில் பொருள் கூறியுள்ளார்.



மலை எனும் பொருள்படும் ஜபல் எனும் சொல் 78:8 இல் வருகிறது. இங்கு தான் நாம் மலைகளை முளைகளாக அமைத்திருக்கிறோம் என்று அல்லாஹ் கூறுகிறான். ரவாசி எனும் சொல் வருமிடத்தில் முளை என்று வரவில்லை.

79:33 இலும் ஜபல் என்ற சொல் தான் மலையைக் குறிக்க வருகிறது. எனவே மலை என்று கூறவேண்டிய 8 இடங்களில் முளை என்று மொழியாக்கம் செய்திருப்பது தவறாகும்.

**II. திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 22 - ல் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*திருக்குர்ஆனில் 2:63, 2:93, 4:154 ஆகிய வசனங்களில் தூர் மலையை அல்லாஹ் உயர்த்தி உடன்படிக்கை எடுத்ததாகக் கூறப்படுகிறது.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆனின் இந்த 3 வசனங்களிலும் (அதாவது 2:64, 2:94 4:155)தூரை உயர்த்தி என்று தான் வருகிறதே தவிர தூர் மலையை உயர்த்தி என்று வரவில்லை. மேலும் பீ.ஜே எடுத்துக் காட்டும் 7:171 – ல் தூர் என்று வராமல் ஜபல் என்று வந்து மலையை உயர்த்தி எனும் பொருளில் வந்துள்ளது. எனவே தூர் என்றால் மலை என்று நாம் விளங்கிக் கொள்கிறோம். மேலும் அதிகாரம் 52 – ன் பெயர் தூர் என்பதாகும். 52:2 வசனம் தூர் மீது சத்தியமாக என்று வந்து மலை மீது சத்தியமாக என்று பொருள் தருகிறது. எனவே தூர் என்றால் மலை என்று பொருள்படுவதால் தூர் மலை என்று கூறுவது சரியா என்ற கேள்வி எழுகிறது.

தூர் என்பது ஒரு மலையின் பெயர். எனவே தூர் மலை என்று எழுதுவது சரிதான் என்று கூறினால் இதுவும் தவறு தான். ஏனென்றால் 95:3–4 ஸீனாய் மலை என்று வந்து அந்த தூரின் (மலை) பெயர் ஸீனாய் ஆகும் என்று தெரிகிறது. இந்த வசனத்தில் தூரின் பெயர் ஸீனாய் என்பதால், தூர் என்பது ஒரு மலையின் பெயர்

என்பது தவறு என்று தெளிவாகிறது. 23:21 வசனத்திலும் ஸீனாய் மலை என்று வந்துள்ளது காண்க.

**III. பீ.ஜே மேலும் கூறுகிறார்:**

*தூர் மலையை உயர்த்தியதாகக் கூறப்படுவதை அதன் நேரடிப் பொருளில்தான் புரிந்து கொள்ள வேண்டும். தூர் மலையை பிடுங்கினோம் என்றும் மேலே மேகம் போல் அது நின்றது என்றும் தங்கள் மீது அது விழுந்து விடுமோ என்று அவர்கள் அஞ்சினார்கள் என்றும் திருக்குர்ஆன் 7:171 வசனத்தில் கூறப்படுவதால் இதற்கு வேறு விதமான விளக்கம் கொடுப்பது தவறாகும்.மலையை உயர்த்துவது அல்லாஹ்வுக்கு மிகவும் எளிதானதே!*

**நம் விளக்கம்:**

7:171 – ல் தூர் மலையை பிடுங்கினோம் என்று விளக்கத்தில் எழுதியுள்ளார். ஆனால் 7:171 வசனத்துக்கு அவர் எழுதியுள்ள பொருளைப் பார்த்தால், மலையை அவர்களுக்கு மேலே மேகத்தைப் போல் நாம் உயர்த்தி... என்று தான் எழுதியுள்ளார். **பிடுங்கினோம்** என்று அந்த வசனத்தில் வரவில்லை. முன்பு கூறிய மூன்று வசனங்களிலும் வரவில்லை. பீ.ஜே பிடுங்கினோம் என்று கூறியது தவறு என்று தெரிகிறது. ஒருவேளை மலையை உயர்த்தி என்பதனை பிடுங்கிய பின்னர் தான் உயர்த்த முடியும் என்பதால் பிடுங்கினோம் என்று எழுதியுள்ளார் போலும். ரஃபஅ உயர்த்துதல் என்பது உயிரற்ற பொருள்களுடன் வருமிடத்தில் பீ.ஜே கூறியுள்ள பொருளில் வருவதாகத் தெரியவில்லை. உதாரணமாக,

திருக்குர்ஆனின் 2:128 வசனத்தில் அந்த ஆலயத்தின் அடித்தளத்தை இப்ராஹீமும் இஸ்மாயீலும் உயர்த்திய போது என்று வருகிறது.அதாவது கஃபா ஆலயத்திற்கு அடித்தளம் போட்டு பூமியினுள்ளிருந்து பூமிக்கு மேலே பல அடிகள் படிப்படியாக வளர்த்துக் கட்டுகிறார்கள். இதனை உயர்த்திய போது என்று திருக்குர்ஆன் கூறுகிறது. இதனை பீ.ஜே அடித்தளத்தை பூமியிலிருந்து பிடுங்கி,



பூமிக்கு மேலே அந்திரத்தில் உயர்த்தினார்கள் என்று எழுதுவாரா ? இதனைப் போன்று தான் மலையை அவர்களுக்கு மேலே உயர்த்திய போது என்ற இடத்திலும் அவர்களின் தலைக்கு மேல் மிக மிக உயர்ந்து காணப்படுகிற அந்த மலையின் அடிவாரத்தில் அவர்களை நிறுத்திய போது என்று பொருள் கொள்ள வேண்டும். அந்த மலை அவர்களின் தலைக்கு மேல் மிக உயர்ந்து நின்றது என்று பொருள். 41:11 – ல், அவன் அதன் (பூமியின்) மேலே உறுதிமிக்க மலைகளை அமைத்தோம் என்று வருமிடத்தில் பூமிக்கு மேலே என்று வருவதால் பூமியில் படாமல் அந்தரத்தில் நிற்குமாறு பூமிக்கு மேலே மலைகளை அமைத்துள்ளான் என்று பீ.ஜே கருதுவாரா?

14:27 வசனத்தில் பிடுங்கப்பட்ட மரம்; பூமியின் மேல் எறியப்பட்ட மரம் என்று பொருள் தரும் படி, பிடுங்குதல் என்ற சொல்லும், பூமியின் மேல் என்ற சொல்லும் வருகிறது. இதற்கு ஒரு மரம் வேரோடு பிடுங்கப்பட்டு பூமியின் மேல் எறியப்பட்டுள்ளது என்று பொருள் கொள்ள வேண்டும். எனவே 7:171 வசனத்திற்கு நேரடிப் பொருள் கொள்வது தவறு. பிடுங்கினோம் என்றும் வரவில்லை.

மேலும் அந்த 7:171 வசனத்தில், **தூர் மலையைப் பிடுங்கினோம். அது மேலே மேகம் போல் நின்றது. தங்கள் மீது அது விழுந்து விடுமோ என்று அவர்கள் அஞ்சினார்கள் என்றும் மலையை உயர்த்துவது அல்லாஹ்வுக்கு மிகவும் எளிதானதே** என்றும் பீ.ஜே எழுதியுள்ளார். அந்த மலையும், மலைக்கு மேல் மிதந்து செல்லும் மேகங்களும் காணப்பட்டதால், மேகத்தின் அசைவு மலை அசைவது போலும் விழுந்து விடுவது போலும் காட்சி அளிக்கும். அல்லது குறைந்த ரிக்டர் அளவில் பூமியதிர்ச்சி ஏற்பட்டு அந்த மலை அசைந்து தம் மேல் விழுவதைப் போல் தோன்றியிருக்கலாம். எனவே மலை பிடுங்கப்பட்டு மக்களின் தலைக்கு மேல் நின்றது என்பதற்கு இடமில்லை. அல்லாஹ் அம்மலையை தூக்குவது மிக எளிது என்றாலும், செய்யாத ஒன்றை அல்லாஹ் செய்தான் என்று கற்பனை செய்யக் கூடாது.

ஏனென்றால் தொடர்ந்து அந்த வசனம், உங்களுக்கு நாம் வழங்கியதைப் பலமாகப் பிடியுங்கள். அதில் உள்ளதை எண்ணிப் பாருங்கள் என்று அல்லாஹ் கூறுகிறான். அதாவது, ஒரு திருடன் கத்தி முனையில் காரியம் சாதிப்பதைப் போல், அல்லாஹ்வும் மலையைக் காட்டி மக்களை மிரட்டி தவ்ராத்தைப் பின்பற்றி நடக்கச் செய்தான் என்று எண்ணுவது போலாகும். அல்லாஹ் அப்படி ஒரு செயலைச் செய்வதிலிருந்து தூயவன். நம் அனைவரையும் அப்படி எண்ணுவதிலிருந்தும் அல்லாஹ் காப்பானாக.

மேலும் மலையைப் பிடுங்குவதினால் ஏற்படும் விளைவு எத்தகையது என்று பீ.ஜே எண்ணிப் பார்க்க தவறி விட்டார். மலையைப் பற்றி **பீ.ஜே எழுதியுள்ள கருத்துக்களை அவர்க்கு நினைவூட்டுகிறோம். அவர் திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 248 – ல் முளைகளை நாட்டினோம் எனும் தலைப்பில் பூமியில் அமைக்கப்பட்டுள்ள மலைகளைப் பற்றி அல்லாஹ் கூறும் போது அதை முளைகளாக நாட்டியிருக்கிறோம் என்று கூறுகிறான். (திருக்குர்ஆன் : 15:19, 16:15, 21:31, 27:61, 31:10, 41:30, 50:7, 77:27, 78:7, 79:32)**

**ஒரு பொருள் இன்னொரு பொருளை விட்டும் பிரிந்து விடாதிருப்பதற்காக அறையப்படுவதே முளைகளாகும். இந்தப் பூமி பல்வேறு அடுக்குகளால் அமைக்கப்பட்டுள்ளது. மேல் அடுக்குகள் எடை குறைந்ததாகவும் உள் அடுக்குகள் கனத்த எடை உள்ளவையாகவும் உள்ளன.**

**வேகமாக பூமி சுழலும் போது உள்ளடுக்கில் உள்ள கனமான பொருட்களும் மேல் அடுக்குகளில் உள்ள எடை குறைவான பொருட்களும் ஒரே வேகத்தில் சுற்ற இயலாது.**

**இந்த நிலை ஏற்பட்டால் மேல் அடுக்கில் உள்ள மனிதர்கள் தூக்கி எறியப்படுவார்கள். கட்டடங்கள் எல்லாம் நொறுங்கி விடும். இதைத் தடுக்க வேண்டுமானால் கனமான அடுக்குகளையும் கனம் குறைந்த அடுக்குகளையும்**



**இணைக்கும் விதமாக முளைகள் நாட்டப்பட வேண்டும். அதைத் தான் மலைகள் செய்கின்றன என்று பீ.ஜே எழுதியுள்ளார். நன்றி.** மேலும் மலைகள் பூமியில் எவ்வாறு நடப்பட்டுள்ளன என்ற செய்தியைப் பார்ப்போம்.

## மலைகளில் மறைந்திருக்கும் மர்மம்

1956 ஆம் ஆண்டில் மலைகள் குறித்த மர்மம் ஒன்றை அறிவியல் உலகம் கண்டுபிடித்தது. மலைகளின் கெட்டியான வேர்கள் (Roots) பூமிக்கடியில் உள்ள திரவ மண்டலம் வழியாக, அதற்கும் கீழே உள்ள திட மண்டலத்தை அடைகிறது. இந்த வேர்களின் நீளம் பூமிக்கடியில் பல பத்து கீ.மீ. அளவுக்கு உள்ளது. இந்த வேர்கள்தாம், பூமியின் மேல் தட்டை வலுவுடன் தாங்கி நிற்கிறது; திரவ மண்டலத்தில் அது மூழ்கிவிடாமல் தடுத்தும் நிறுத்துகிறது. மிக ஆழமான வேர்களைக் கொண்ட மலைகள் பூமிக்குள் அமிழ்ந்து போவதில்லை. பூமிக்கடியில் திரவ மண்டலத்திற்குக் கீழே உள்ள திடமண்டலம்வரை நங்கூரம் பாய்ச்சி அது நிற்கிறது. இவை 1956 ஆம் ஆண்டில் அறிவியல் கண்டுபிடித்த சில உண்மைகள். (ஆதாரம்:அருள்மறை திருக்குர்ஆனும், அறிவியல் கண்டு பிடிப்புகளும், ஆசிரியர்: முகம்மது கான்பாகவி)

நம் கேள்வியாவது, மலைகள் பூமியில் பல மைல்கள் ஆழத்தில், பூமியின் அடுக்குகளை இணைத்து பிடித்துள்ளது. அது பிடுங்கும் போது பூமியின் மேற்பரப்பில் மலையின் பரப்பை விட பல மடங்கு பரப்பளவுக்கு மலையைச் சுற்றி பல மைல்கள் ஆழத்திற்கு ஒரு மிகப்பெரும் அதல பாதாள பள்ளம் ஏற்படும். மலை அடிவாரத்தில் உள்ள மக்கள் அதல பாதாளத்தின் அடித்தளத்திற்குச் சென்று சேர்ந்து விடுவார்கள். எங்கே உறுதிமொழி வாங்குவது? இது ஒரு புறம் இருக்கட்டும். இப்படி ஒரு நிகழ்ச்சி நடந்திருந்தால் வரலாற்றில் நிச்சயமாக இடம் பெற்றிருக்கும். இதனைப் பற்றி யூத வரலாற்றிலும் ஏனைய வரலாற்றிலும் காணப்படவில்லையே! மலை பிடுங்கப் பட்டால் பூமியிலுள்ள நெருப்புக் குழம்பு போன்ற பல

பொருட்கள் அந்தப் பகுதி எங்கும் சிதறி பரவியிருக்கும். அவை என்னென்ன என்று அன்றே புவியியல் ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்து பல கருத்துக்களை வெளியிட்டிருப்பார்கள். அப்படி ஏதும் உண்டா?

இது ஒருபுறம் இருக்கட்டும். இச்செயல் அல்லாஹ்வின் நடைமுறைக்கு மாற்றம் இல்லையா? கட்டாயப்படுத்தி அல்லாஹ் உடன்படிக்கை எடுப்பானா? அப்படி என்றால் அல்லாஹ் அந்த இஸ்ரவேல் சமுதாயத்தில் பல நபிமார்களை அனுப்பி, அவர்களை அம்மக்கள் ஆட்டிப் படைக்கும் செயலை ஏன் செய்ய வேண்டும்? இந்த வேண்டாத வேலையை இறைவன் ஏன் செய்தான்?

உலகில் ஆங்காங்கே உள்ள மலைகளை பிடுங்கி, வேதத்தைப் பின்பற்றி மரியாதையாக நடங்கள் என்று உறுதி மொழி வாங்கி விட வேண்டியது தானே? இது அல்லாஹ்வின் நடைமுறை இல்லை. அதாவது வேதத்தை மக்கள் பின்பற்றி நடக்கச் செய்ய அல்லாஹ் இந்த சுன்னத்தைக் கையாண்டதில்லை.

எனவே, மலையை தலைக்கு மேலே உயர்த்தி என்பது மலையை பிடுங்கி அவர்களது தலைக்கு மேலே உயர்த்தி என்று பொருள் தராது.

## 51. சனிக்கிழமை மீன் பிடித்தவர்கள் குரங்குகளாகவும், பன்றிகளாகவும் உருமாறினார்களா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவனை எண் 23 இல் சனிக்கிழமை என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார் :**

*சனிக்கிழமை முழுவதும் மீன் பிடிக்கும் தொழில் செய்யக்கூடாது என்று கட்டளை பிறப்பிக்கப்பட்டது. அதை அவர்கள் மீறியதால் தான் குரங்குகளாகவும், பன்றிகளாகவும் மாற்றப்பட்டனர்.*



**நம் விளக்கம்:**

**ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

1) எனது உம்மத்தில் சிதறுண்ட அமைதியிழந்த ஒரு காலம் வரும். அப்போது அவர்கள் தமது ஆலிம்களிடம் நேர்வழிக்கான நம்பிக்கையுடன் செல்வார்கள். அப்போது அவர்கள் அந்த ஆலிம்களை குரங்குகளாகவும் பன்றிகளாகவும் காண்பார்கள். (கன்ஸுல் உம்மால், பாகம் 7, பக்கம் 190)

இந்த ஹதீஸின் படி இக்காலத்திலுள்ள ஆலிம்கள் பன்றி, குரங்குளாக உருவத்தால் காணப்படுகின்றார்களா? அல்லது பன்றியின் குணமும், குரங்கின் குணமும் கொண்டவர்களாக இருக்கின்றார்களா? பீ.ஜே எதை நம்புகிறார்?

2) ஒரு மனித இனத்தின் ஒரு பகுதி, குரங்குகளாகவும் பன்றிகளாகவும் மாற்றப்படுவதற்கு **உருமாற்றம்** என்று பெயர். அல்லாஹ் அந்த உருமாற்றம் என்ற சொல்லை ஏன் எடுத்தாளவில்லை?

ஓர் ஊரைச் சேர்ந்தவர்கள் அல்லது ஒரு பகுதி மக்கள் குரங்குகளாகவும், பன்றிகளாகவும் மாறிவிட்டதாக வைத்துக் கொள்வோம். இது பற்றிய செய்தி ஊரெங்கும் பரவி, வரலாற்றில் இடம் பெற்றிருக்கும். அப்படி ஏதாவது வரலாற்றுச் சான்று உள்ளதா?

3) எல்லா மொழிகளிலும் இவை போன்ற சொல் வழக்குகள் உள்ளன. தமிழில் குரங்கு, பன்றி, மாடு, நாய், சிறுத்தை, சிங்கம், புலி, எருமை என்றெல்லாம் மனிதர்கள் அழைக்கப்படுகின்றனர். அவர்கள் எல்லாம் அந்தந்த விலங்குகளாக பறவைகளாக உருவத்தால் மாறிவிட்டனர் என்பதற்காக அழைக்கப்படுவதில்லை. மாறாக, ஏதோ ஒரு ஒற்றுமை அந்த மனிதனுக்கும் அவன் அழைக்கப்படும் பெயர்க்கும் பொருத்தமாக இருக்கும். அல்லது, ஒரு பெயர்க்காகவும் அந்தப் பெயரை வைத்திருக்கலாம். இது போன்று தான் அல்லாஹ் அந்த இஸ்ரவேலர்களை பன்றி குரங்கு என்று

குணப் பொருத்தம் காரணமாக வைத்திருக்கிறான். இல்லை என்றால் **உருமாற்றம்** என்ற சொல்லை அல்லாஹ் எடுத்தாண்டிருப்பான்.

திருக்குர் ஆன் 2:66 வது வசனத்திற்கு முஜாஹித் (ரஹ்) அவர்கள் கூறியதாவது, அவர்களின் உள்ளங்கள் தாம் குரங்குகளாக மாற்றப்பட்டனவே ஒழிய அவர்களின் உருவம் அவ்வாறு மாற்றப்படவில்லை. இது அல்லாஹ் கூறியுள்ள ஒரு குறியீடு தான். இதற்கு எடுத்துக்காட்டாக, ஏடுகளை சுமக்கின்ற கழுதையைப் போன்று (62:6) என்ற வசனத்தைக் குறிப்பிடலாம். (ஆதாரம் : தஃப்ஸீர் இப்னு கஸீர் 2:65 வது வசனத்தின் விளக்கவுரை)

4) திருக்குர்ஆன் மனிதர்களை **சைய்த்தான்** என்றும், 17:28 வது வசனத்தில் வீண் விரயம் செய்பவனை **சைய்த்தானின் சகோதரன்** என்றும், புறக்கண் உள்ளவர்களை **குருடர்கள்** என்றும் காது கேட்கக் கூடியவர்களை **செவிடர்கள்** என்றும், வாய் பேசுபவர்களை **ஊமைகள்** என்றும் அழைக்கிறது. அவர்கள் சைய்த்தான் குணம் கொண்ட மனிதர்களாகவும் கருத்துக் குருடர்களாகவும் உள்ளனர் என்பதை பீ.ஜே ஏற்றுக் கொண்டுள்ளார். (காண்க திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 390,5). இவர் மனிதனே இல்லை. இவர் கண்ணியமான வானவர் தவிர வேறு இல்லை என்றனர். (ஆதாரம் திரக்குர்ஆன் 12:32). இவ்வாறு யூசுப் நபி **மலக்கு** என்று அழைக்கப்படுகிறார். எனவே, இவர்களும் பன்றிக் குணம், குரங்குக் குணம் கொண்டவர்கள் என்பதால் அவர்களை பன்றி குரங்கு என்று அல்லாஹ் அழைத்துள்ளான். சொத்துப் பாகப்பிரிவினை சம்பந்தமாக உமர் (ரலி) அவர்களது காலத்தில் தாய் மற்றும் தந்தை வழி உடன்பிறப்புகள் உமர் (ரலி) அவர்களிடம், இறை நம்பிக்கையாளரின் தலைவரே ! **எங்கள் தந்தை ஒரு கழுதை** (விவரமில்லாதவர்) நாங்கள் ஒரே தாய் மக்கள் இல்லையா ? எங்களையும் கவனியுங்கள் என்று கூறினார்கள். (பைஹகீ ஹாக்கிம். தப்ஸீர் இப்னு கஸீர் 4:12 வசனத்தின் விளக்கம்)



ஹஸ்ரத் உமர் (ரலி) அவர்கள் இமாமாக நின்று தொழும் சமயம் அபூ லுஃலுஆ ஃபைரோஸ் என்பவன் பிச்சுவாக் கத்தியால் குத்தி விடுகிறான். உமர் (ரலி) அவர்கள் ! என்னை, நாய் குத்தி தின்று விட்டது என்று கத்தியால் குத்தியவனை **நாய்** என்று கூறினார்கள். (புஹாரி எண் 3700)

5) மனிதனை அல்லாஹ் உயர்ந்த தோற்றத்தில்/ குணத்தில் படைத்தான். அவன் தன் செயலால் தன்னை இழிந்தவனாக மாற்றிக் கொள்கிறான். அப்போது அவனின் செயல் குணத்திற்கு ஏற்ப அவனை நாய் என்று அழைக்கிறான். திருக்குர்ஆன் 7:176 வசனம் இதனைக் கூறுகிறது. பீ.ஜே அவன் நாயாக உருமாறி விட்டான் என்று கருதுவாரா ? அவனுக்குரிய உதாரணம் நாய் என்று அல்லாஹ் உதாரணம் என்ற சொல்லைக் கூறியிருப்பதால் அவன் நாயாக மாறவில்லை என்று பீ.ஜே கூறுவது என்றால் பன்றி குரங்கு என்று உருமாற்றம் செய்யப்பட்டனர் என்றும் அல்லாஹ் கூறவில்லை என்பதை பீ.ஜே உணர வேண்டும்.

6) ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் உஹது மலையைப் பற்றி “இது நம்மை நேசிக்கிறது. அதனை நாம் நேசிக்கிறோம். இது சுவனத்தின் வாயில்களில் ஒரு வாயில் மீது அமைந்துள்ளது” என்று கூறியுள்ளார்கள். இது பற்றி கத்தாபி கூறுகின்றார்கள், இதன் கருத்து மதீனா வாசிகள் நம்மை நேசிக்கிறார்கள். நாம் அவர்களை நேசிக்கிறோம் என்பதாகும். இதற்கு சான்று ஊரைக் கேளுங்கள்” (திருக்குர்ஆன் 12:82) என்று அல்லாஹ் திருக்குர்ஆனில் கூறுகிறான். அதன் கருத்து ஊர் வாசிகளை கேளுங்கள் என்பதாகும். (ஆதாரம் இப்னு ஹஜர் அல் அஸ்கலானீ தொகுத்த, முக்தஸர் அத்தர்ஙபு – நபிமொழிக் களஞ்சியம் பாகம் 1, பக்கம் 379)

மேலே காட்டிய எடுத்துக்காட்டுகளில் உஹது மலை என்பது மதீனா வாசிகளையும் ஊர் என்பது ஊர் வாசிகளையும் குறிக்க வருகிறது.

7) எட்டேகால் லட்சணமே, எமன் ஏறும் பரியே, மட்டில் பெரியம்மை வாகனமே, – முட்டமேல் கூரையில்லா வீடே, குலராமன் தூதுவனே, ஆரையடா சொன்னாய் அது?

அவலட்கணமே, **எருமையே, கழுதையே,** குட்டிச் சுவரே, **குரங்கே** என்று ஒரு மனிதன் விலங்குகளின் பெயர்களால் அழைக்கப்படுவதை கூறுகிறது. (தனிப்பாடல் திரட்டு – எனும் நூலில் 17 வது பாடல்)

8) தோஹா (அரபு) சம்மிட் மாநாட்டில் குவைத் பிரதிநிதி சபா–அல்–சலாமைப் பார்த்து ஈராக் பிரதிநிதி இஸ்ஸாத் இபுறாஹீம் அடாவடியாக குரங்கே, வாயை மூடு. உன் மீசை அழிந்து போகட்டும் என்று சபித்தாராம். (ஹாய் மதன்; பாகம் 8 பக்கம் 59)

9 ) வெள்ளையம்மாள் – குந்தவை என்று அழைப்பதாக வைத்துக் கொள்வோம். இவை தஞ்சை பெரிய கோவில் யானைகளின் பெயர்களாகும். விலங்குகளுக்கு மனிதப் பெயரும் உண்டு.

10) லாலா லஜபதிராய்க்கு பஞ்சாப் சிங்கம் என்பது சிறப்புப் பெயர் ஆகும். நைட்டிங்கேல் என்பது ஒரு இன்னிசைப் பறவையின் பெயர். கவிக்குயில் சரோஜினி நாயுடுவுக்கு இந்தியாவின் நைட்டிங்கேல் என்ற பட்டப் பெயர் உண்டு.

11) போக்குவரத்தை ஒழுங்குபடுத்தும் வரிக்குதிரைப் படை சாலைகளில் வாகன போக்குவரத்தை ஒழுங்குபடுத்தும் பணியில் சீருடை அணிந்த போலீசார் ஈடுபடுவதை பார்த்திருக்கிறோம். ஆனால் சொலிவியா நாட்டு தலைநகர் லோபாஸ் நகரில் இந்த பணியில் வரிக்குதிரை படை ஈடுபடுகிறது. அது உண்மையான வரிக்குதிரைகள் அல்ல. பள்ளி – கல்லூரி மாணவர்கள் வரிக்குதிரை போல உடை மேக்கப் போட்டுக் கொண்டு செயல்படுகிறார்கள். (தினத்தந்தி 22.07.2013 வெளிநாட்டு விநோதங்கள் பக்கம்: 18)

12) இது எங்கள் பாட்டி, இது எங்கள் தாத்தா என்று உயிரற்ற வெற்றிலைப் பெட்டி, சாய்வு நாற்காலியைச் சுட்டிக் காட்டுவதுண்டு.



அவை அவரவர்களால் நெடுங்காலமாக பயன்படுத்தப்பட்ட நினைவுச் சின்னங்கள். அப்பொருள்கள் மூலம் தாத்தா பாட்டிகளை நினைவு கூருகிறார்கள்.

எனவே குரங்கு பன்றி என்பதால் குரங்காகவும் பன்றியாகவும் மனிதன் மாறுவதில்லை.

**பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*சனிக்கிழமை மீன் பிடிக்கக் கூடாது என்பது அவர்களுக்குத் தண்டனையாக வழங்கப்பட்ட கட்டளையாகும். சாதாரண நேரத்தில் பிறப்பிக்கப்பட்ட கட்டளையன்று.*

*அல்லாஹ்வின் வல்லமைகள் பலவற்றைக் கண்ணால் கண்ட பிறகும் தாமாக உருவாக்கிக் கொண்ட காளைமாட்டின் சிற்பத்தை வணங்கினார்கள்.*

*இதற்குத் தண்டனையாக சனிக்கிழமை முழுவதும் மீன் பிடிக்கும் தொழில் செய்யக்கூடாது என்று கட்டளை பிறப்பிக்கப்பட்டது. அதை அவர்கள் மீறியதால் தான் குரங்குகளாகவும் பன்றிகளாகவும் மாற்றப்பட்டனர்.*

**நம் விளக்கம்:**

தெளிவான சான்றுகள் அவர்களிடம் வந்த பின்பு காளைக் கன்றை (கடவுளாக) கற்பனை செய்தார்கள். அதை மன்னித்தோம் என்று 4:153 வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான். எனவே அல்லாஹ் மன்னித்த பிறகு மன்னித்த ஒன்றுக்கு தண்டனையாகத்தான் சனிக்கிழமை மீன் பிடிக்கக் கூடாது என்ற சட்டம் எப்படி வரும்? பீ.ஜே கூறும் கருத்து தவறாகும். மேலும் சாமிரி தங்கத்தால் ஒரு காளை மாட்டைச் செய்து அதை இரத்தமும், சதையும் கொண்ட காளையாக ஆக்கி அதை சப்தமிடவும் செய்தான் என்று பீ.ஜே எழுதியுள்ளார். (ஆதாரம் தர்கா வழிபாடு பக்கம் 37, 4 ஆம் பதிப்பு) அதாவது தங்கச் சிலை உயிருள்ள காளைக் கன்றாக மாறியதைக் கண்ட இஸ்ரவேலர்கள் அதனை வழிபட்டதில் என்ன ஆச்சரியம் இருக்க முடியும்?

அடுத்து **இழிந்த** குரங்கு, பன்றி என்பதில் **இழிந்த** எனும் அடைமொழி மனிதனைக் குறிக்கும் சொல்லாக வந்துள்ளது. விலங்கைக் குறிக்கும் சொல்லாக வரவில்லை. நபி (ஸல்) அவர்கள் தன் நபிமொழிகளில், இஸ்ரவேலர்கள் சப்த் நாளில் மீன் பிடித்ததால் அவர்கள் பன்றிகளாகவும் குரங்குகளாகவும் உருமாற்றம் செய்யப்பட்டு உண்மையான குரங்கு மற்றும் பன்றிகளாக மாறி விட்டனர் என்று எங்கும் கூறவில்லை.

ஹூத் ஹூத் எனும் பறவையை பற்றி 27:21-29 வசனத்தில் வருகிறது. அப்பறவை,

1) மன்னர் சுலைமான் நபி அறியாத செய்திகளை அறிந்ததாகவும்
2) ஸபா நாட்டிலிருந்து உறுதியான ஒரு செய்தியைக் கொண்டு வந்திருப்பதாகவும்
3) ஸபா நாட்டை ஒரு பெண் ஆட்சி செய்கிறாள். அவளுக்கு தேவையானவை எல்லாம் வழங்கப்பட்டுள்ளது. அவளுக்கு ஒரு மகத்தான அரியணையும் உள்ளது என்றும்
4) அந்த அரசியும் அந்த நாட்டு மக்களும் அல்லாஹ்வை வணங்காமல் சூரியனை வணங்குகின்றனர். சய்த்தான் அதனை அழகுவாய்ந்ததாகக் காட்டி அவர்களை நேர்வழியிலிருந்து தடுத்து விட்டான் என்றும் கூறுகிறது.

ஒரு பறவைக்கு எவ்வளவு **அரசியல் அறிவும் ஆத்மீக அறிவும் இருக்கிறது என்று பாருங்கள்.** இன்றைய உலகில் பல கோடி மனிதர்கள் அவர்களுள் அறிஞர்களும் கவிஞர்களும், பட்டம் பல பெற்ற மா மேதைகளும் உள்ளனர். அவர்கள் சூரிய வழிபாட்டில் உள்ளனர். இவர்களுக்கெல்லாம் தெரியாத ஓரிறை வழிபாடு பற்றி ஒரு சாதாரண பறவைக்குத் தெரிந்திருக்கிறது (ஜமாஅத்தே இஸ்லாமியின் தோற்றுநர் மவ்தூதி சாகிப் ஹூத் ஹூத் என்பது மரங்கொத்தி பறவை என்று எழுதுகிறார்) இத்தகைய அதிசய பறவை உலகில் உள்ளதா?



என் கருத்தின்படி, **பறவை என்பது சுலைமான் நபியின் படைப்பிரிவில் ஒரு பிரிவு.** ஹூத் ஹூத் என்பது அப்படையில் உள்ள ஒருவனின் பெயர். அவர் ஒற்றறிந்து கொண்டு அந்த செய்திகளை மன்னரிடம் தெரிவிக்கிறார். இவ்வாறு **ஒரு மனிதர் பறவையாகப் பேசப்படுகிறார்.** தமிழ் நாட்டில் பறவைகள் விலங்குகளின் பெயர்களைக் கொண்டுள்ள மனிதர்களும் ஊர்களும் ஆயிரக் கணக்கில் உள்ளன. எடுத்துக்காட்டு: “சிங்கம்புலி என்பது ஒரு திரைப்பட நடிகர் பெயராகும். பட்சிராஜன் எனும் பெயர் மனிதர்களுள் பிரபல்யமாகும்”.

**கோவில்பட்டி தாலுகாவிலுள்ள சில ஊர்கள்,**

1) கிழவிப்பட்டி 2) குமரிக்குளம் 3) காக்கா தோப்பு 4) கழுகுமலை 5) குருவிகுளம் 6) மீன்துள்ளி 7) கொக்குகுளம் 8) கரடிக்குளம்

1970-துகளில் தனியார் பேருந்துகளில் பேருந்து நடத்துனர் 4 கிளவி, 3 குமரி, 5 காக்கா, 7 கழுகு, 6 குருவி, 8 மீன், 10 கொக்கு, 3 கரடி என்று பேருந்து ஓட்டுனரிடம் கூறி டிக்கட் போடுவார். இதில் காக்கா, கொக்கு, கழுகு, குருவி, கரடி என்பது அந்தந்த ஊர்களில் ஏறிய பயணிகளாகும். இவர்களை விலங்குகள் அல்லது பறவைகள் என்று யாரும் நினைக்க மாட்டார்கள்.

இவ்வாறு திருக்குர்ஆனிலிருந்தும், நபிமொழியிலிருந்தும், இலக்கியங்களிலிருந்தும், மக்களின் பேச்சு வழக்குகளிலிருந்தும் ஏராளமான சான்றுகளைத் தரலாம். மேலே கூறியவற்றைத் தொகுத்துப் பார்த்தால், குரங்கு பன்றி என்று கூறப்பட்டவர்கள் குரங்கு பன்றி ஆகியவற்றின் குணங்களைக் கொண்ட மனிதர்கள் என்று விளங்கிக் கொள்கிறோம்.

மொத்தத்தில், 1) குரங்கு, பன்றி என்பது குரங்கு மற்றும் பன்றிகளைப் போன்ற குணங்களைக் கொண்டவர்களாக இருந்தனர் என்றே பொருள்படும்.

2) சனிக்கிழமை மீன் பிடிக்கக் கூடாது என்ற சட்டம் எந்த தண்டனைக்காகவும் இஸ்ரவேலர்களின் மீது விதிக்கப்படவில்லை. சனிக்கிழமையை புனித நாளாக கருதி அதில் உலகத்தை விட மார்க்கத்திற்கு யூதர்கள் முன்னுரிமை வழங்கவே அந்த சட்டம் வந்தது.

## 52. கொலையாளியைக் கண்டுபிடிக்க இறந்தவனின் உடலின் மீது மாட்டின் உறுப்பால் அடிக்க வேண்டுமா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 24 இல் கொலையாளியைக் கண்டு பிடித்தல் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*கொலையாளியைக் கண்டு பிடித்துத் தருமாறு மூஸா நபியிடம் அவரது சமுதாயத்தினர் கேட்டனர். ஒரு மாட்டை அறுத்து கொல்லப்பட்டவனின் மீது அடித்தால் இறந்தவன் உயிர்பெற்று தன்னைக் கொன்றவனை அடையாளம் காட்டுவான் என்று இறைவன் சொன்னான். (திருக்குர்ஆன் 2:72)*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆன் 2:72 வசனத்தில் நீங்கள் ஒருவரைக் கொன்று விட்டு அது குறித்த விவாதித்துக் கொண்டிருந்ததையும் எண்ணிப் பாருங்கள். நீங்கள் மறைத்துக் கொண்டிருந்ததை அல்லாஹ் வெளிப்படுத்துவான்.

அதன் ஒரு பகுதியால் அவரை (கொல்லப்பட்டவரை) அடியுங்கள் என்று கூறினோம். அல்லாஹ் இவ்வாறே இறந்தோரை உயிர்ப்பிக்கிறான். நீங்கள் விளங்குவதற்காக தனது சான்றுகளை உங்களுக்கு காட்டுகிறான். (பீ.ஜே யின் திருக்குர்ஆன் மொழியாக்கம் வசனம் 2:73)

1) மூஸா நபியிடம் கொலையாளியைக் கண்டு பிடித்துத் தருமாறு அவரது சமுதாயத்தினர் கேட்டதாக 2:72 வசனத்தில்



வரவில்லையே? இல்லாத ஒன்றை பீ.ஜே இந்த வசனத்தில் புகுத்துகிறார்.

2) **நீங்கள் ஒருவரைக் கொன்று விட்டு** என்று பன்மையில் வருகிறது. கத்தல்தும் என்று பண்மையில் வருகின்றது. கொலையாளி ஒருவனில்லை பலர் என்றோ, அல்லது அந்த சமுதாயம் முழுதும் என்றோ திருக்குர்ஆன் கூறுகிறது. ஆனால் பீ.ஜே இறந்தவன் உயிர் பெற்று தன்னை கொன்றவனை அடையாளம் காட்டுவான் என்று ஒருமையில் எழுதுகிறார். அதாவது **அல்லாஹ் கொலையாளிகள் பலர் என்று கூறுகிறான். பீ.ஜே கொலையாளி ஒருவன் என்று கூறுகிறார்.**

3) **நீங்கள்** அது குறித்து விவாதித்துக் கொண்டிருந்தீர்கள் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. கொலை செய்யப்பட்டவன் உயிர் பெற்று தன்னைக் கொன்றவனை அடையாளம் காட்டுவான் என்று பீ.ஜே எழுதுகிறார். இவ்வாறு திருக்குர்ஆன் எதுவும் கூறவில்லையே!

4) அதன் ஒரு பகுதியால் அவரை அடியுங்கள் என்று தான் திருக்குர்ஆன் கூறுகிறது. அதன் ஒரு பகுதி என்பதற்கு மாட்டின் ஒரு பகுதி என்று பீ.ஜே எப்படி பொருள் கொண்டார் ? ஒரு வாதத்திற்காக அது என்பதற்கு மாடு என்று வைத்துக் கொண்டாலும் அதன் ஒரு பகுதி என்பதற்கு மாட்டின் எந்தப் பகுதி என்று எடுத்துக் கொள்வது?

5) அல்லாஹ் **இவ்வாறே** இறந்தவர்களை உயிர்ப்பிக்கிறான் என்று திருக்குர்ஆன் கூறுகிறது. பீ.ஜே யின் கற்பனைக் கதையின்படி, இறந்தவர்களை அல்லாஹ் ஒரு நபியைக் கொண்டு ஒரு மாட்டை அறுக்கச் செய்து அதன் ஒரு பகுதியைக் கொண்டு அடித்து எழுப்புகிறான் என்று பொருள் கொள்வதா? இறந்தவனின் உடலில் எந்தப் பகுதியில் அடிப்பது என்றும் தெரியவில்லையே? மறுமையில் அல்லாஹ் இவ்வாறு தான் இறந்தவர்களை உயிர்ப்பிப்பானா?

6) **மூஸா நபி அவர்களும் ஹாரூன் நபி அவர்களும் ஒரு மலை உச்சிக்கு சென்ற போது ஹாரூன் நபி மரணித்து விட்டார்.**

**இதை மூஸா நபி வந்து கூறிய போது மூஸா நபி மீதே அவர்களின் சமுதாயத்தினர் கொலை பழி சுமத்தினார்கள். இந்தப் பழியை ஜிப்ரீல் (அலை) அவர்களை அனுப்பி அல்லாஹ் நீக்கி வைத்தான் என்று ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதாக ஹாக்கிமில் இடம் பெற்றுள்ளது என்று பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 394 ல் எழுதுகிறார்.**

திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 394 இல் பீ.ஜே மூஸா நபியின் மீது பழி எனும் தலைப்பில் ஹாரூன் நபியை மூஸா நபி கொன்று விட்டார் எனும் பழியை அவர் மீது அந்த சமுதாய மக்கள் சுமத்திய போது மூஸா நபி ஒரு மாட்டை அறுத்து ஹாரூன் மீது அடித்து தான் குற்றமற்றவன் என்பதை ஏன் நிரூபிக்கவில்லை? அல்லாஹ் ஜிப்ரீல் (அலை) அவர்களை அனுப்பி ஏன் நீக்கி வைக்க வேண்டும்? எனவே, திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 24 இல் கூறப்பட்டது பீ.ஜே யின் கற்பனையாகும்.

7) திருக்குர்ஆனின் நடைமுறையின் அடிப்படையில் இச்சம்பவம் தவறாகும். முதலில் கொலை சம்பவம் கூறப்பட வேண்டும். இதுவே திருக்குர்ஆனின் நடைமுறையாகும்.

உதாரணமாக, திருக்குர்ஆன் 5:28-32 இல், ஆதமின் இரு புதல்வர்களின் சண்டையையும், ஒரு மகன் மற்றொரு மகனைக் கொலை செய்வதையும், பிறகு பிணத்தை எவ்வாறு மறைப்பது என்ற பிரச்சனை எழுவதையும் திருக்குர்ஆன் கூறுகிறது.

திருக்குர்ஆன் 5:32 வசனத்தில் பிணத்தை எப்படி மறைப்பது என்பதற்கு வழிகாட்ட, அல்லாஹ் ஒரு காகத்தை அனுப்பினான். அது பூமியைத் தோண்டியது என்றும் கூறப்பட்டுள்ளது.

இதில் கொலை சம்பவம் முதலிலும், அதற்குரிய தீர்வு இரண்டாவதும் கூறப்பட்டுள்ளது. ஆனால் பீ.ஜே எடுத்துக் காட்டும் விசயத்தில், பிரச்சனைக்குரிய தீர்வு முதலில் கூறப்படுகிறது. கொலை சம்பவம் பின்னர் கூறப்படுகிறது. அதாவது, தலைகீழாக



கூறப்படுகிறது. திருக்குர்ஆன் 2:68-72ல் மாட்டை அறுத்த சம்பவமும், 2:73,74-ல் கொலை சம்பவமும் முன் பின்னாகக் கூறப்பட்டுள்ளது.

8) திருக்குர்ஆன் 2:68-72 மாட்டை அறுத்த சம்பவம், கொலை சம்பவத்துடன் தொடர்புடையது இல்லை என்பதைக் காட்டுகிறது. இஸ்ரவேலர்கள் எகிப்தில் அடிமைகளாக வாழ்ந்த காரணத்தால், எகிப்திய மக்களின் மாடு வழிபாடு, அவர்களிடமும் தொற்றி விட்டது. அவர்களிடமிருந்து மாடு வழிபாட்டை நீக்கவே அல்லாஹ் அந்த மாட்டை அறுக்கும்படிக் கூறுகிறான். அவர்கள் மனமில்லாமல் மாட்டை அறுப்பதற்கு சம்மதிக்கின்றனர். ஒரு மாட்டை அறுத்து அதன் ஒரு பாகத்தைக் கொண்டு அடியுங்கள் என்று ஒரு வரியில் சொல்லாமல் விரிவாக அச்சம்பவம் பேசப்படுவதன் காரணம் அது கொலையுடன் சம்பந்தமில்லாத தனி சம்பவம் என்பதனாலே ஆகும்.

9) இறந்தவர்கள் இவ்வுலகில் மீண்டும் உயிர் பெற்று வருதல் என்பது அல்லாஹ்வின் அடிப்படை சட்டத்திற்கு மாற்றமாகும்.

திருக்குர்ஆனில் 39:43 வசனத்தைப் பாருங்கள்; அல்லாஹ் உயிர்களை அவை மரணிக்கும் போதும் மரணிக்காதவற்றை அவற்றின் நித்திரையிலும் கைப்பற்றி, பின்பு எதன் மீது மரணத்தை விதித்து விட்டானோ அதை தன்னிடமே நிறுத்திக் கொள்கிறான். மீதியுள்ளவற்றை ஒரு குறிப்பிட்ட தவணை வரை (வாழ்வதற்காக) அனுப்பி விடுகிறான். சிந்திக்கும் மக்களுக்கு இதில் அத்தாட்சிகள் இருக்கின்றன.

இறந்தவர்களின் உயிர்களை அல்லாஹ் தன்னிடம் நிறுத்தி வைத்துக் கொள்கிறான் என்றால் அது எப்படி பூமிக்கு மீண்டும் வரும்? இக்கருத்தைக் கொண்ட 16 வசனங்கள் திருக்குர்ஆனில் உள்ளன. எனவே இறந்தவர்களின் உடலில் முழு மாட்டைக் கொண்டு அடித்தாலும் அவன் உயிர்பெற மாட்டான்.

## 53. ஈசா நபி இஸ்ரவேல் அல்லாத பிற மக்களுக்கு நபியாக வர முடியுமா?

**வேதம் கொடுக்கப்பட்டோர், வேதம் கொடுக்கப்பட்டோர் பெண்ணை மணப்பது, வேதம் கொடுக்கப்பட்டோரின் உணவு ஆகிய விசயங்கள் குறித்து திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 27,137,138 இல் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார் :**

*வேதம் கொடுக்கப்பட்டோர் என்று சொல் யாரைக் குறிக்கும் என்பதில் பல்வேறு கருத்து வேறுபாடுகள் உள்ளன. இதன் நேரடிப் பொருள் வேதங்களை நம்பும் அனைவரையும் குறிக்கும் என்றாலும் திருக்குர்ஆன் யூதர்களையும் கிறித்தவர்களையும் மட்டுமே வேதக்காரர்கள் எனக் கூறுகிறது.*

*அனைத்து யூதர்களும் கிறித்தவர்களும் என்று விளங்கிக் கொள்ளக் கூடாது. இது தவறாகும். ஏனெனில் ஈஸா நபியவர்களும் யூதர்களுக்கு அனுப்பப்பட்ட ஏனைய நபிமார்களும் இஸ்ரவேல் சமுதாயத்திற்கு மட்டுமே அனுப்பப்பட்டார்கள். தவ்ராத், இன்ஜீல் ஆகிய வேதங்கள் இஸ்ரவேலர்களுக்காகவே வழங்கப்பட்டன.*

*இஸ்ரவேலர்களுக்குத் தான் நான் அனுப்பப்பட்டேன் என்று ஈஸா நபி கூறியதாக திருக்குர்ஆன் கூறுகிறது.*

*இஸ்ரவேல் அல்லாதவர்கள் கிறித்தவர்களாக மாறி இருந்தாலும் அவர்கள் வேதம் கொடுக்கப்பட்டவர்களாக முடியாது. ஏனென்றால், இன்ஜீல் அவர்களுக்காக கொடுக்கப்படவில்லை.*

*நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மட்டும் தான் உலக மக்கள் அனைவருக்கும் தூதராக அனுப்பப்பட்டார்கள். மற்ற நபிமார்கள் குறிப்பிட்ட மக்களுக்கும் சமுதாயத்துக்கும் மட்டுமே அனுப்பப்பட்டார்கள் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.*

*இஸ்ரவேலர் அல்லாத கிறித்தவர்களுக்காக அந்த வேதங்கள் அருளப்படாததினால் அவர்கள் அல்லாஹ்வின் பார்வையில் வேதக்காரர்களாக முடியாது.*



*திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 137,*

*இஸ்ரவேலர் அல்லாத யூத கிறித்தவர்கள் அறுத்ததை உண்ண இவ்வசனம் ( 5:5 ) அனுமதிக்கிறது என்பது தவறாகும்.*

*திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 138,*

*இஸ்ரவேலர் அல்லாத யூத கிறித்தவர்கள் வேதம் கொடுக்கப்பட்டோரில் சேர மாட்டார்கள்*

**நம் விளக்கம்:**

1) இஸ்ரவேலர்கள் மட்டுமே வேதக்காரர்கள் . இஸ்ரவேலர் அல்லாத மற்ற யூதர்களும் கிறித்தவர்களும் வேதக்காரர்கள் இல்லை.
2) இஸ்ரவேலர்களின் உணவு மட்டுமே வேதக்காரர்களின் உணவு. இஸ்ரவேலர் அல்லாத பிற கிறித்தவர்களின் உணவு வேதக்காரர்களின் உணவு இல்லை.
3) இஸ்ரவேலர்களின் பெண்கள் மட்டுமே வேதக்கார பெண்கள். இஸ்ரவேல் அல்லாத பிற கிறித்தவப் பெண்கள் வேதக்காரப் பெண்கள் இல்லை.
4) நபி (ஸல்) அவர்கள் மட்டுமே முழு உலகுக்கும் தூதராக வந்துள்ளார்கள்.
5) அல்லாஹ்வின் பார்வையில் இஸ்ரவேலர்கள் மட்டுமே வேதக்காரர்களாக முடியும். பிறகிறித்தவர்கள் அல்லாஹ்வின் பார்வையில் வேதக்காரர்களாக மாற முடியாது.

மேற்கூறப்பட்டவற்றை ஏற்றுக் கொள்ளும் பி.ஜே, **இஸ்ரவேலர்களுக்கு மட்டும் தூதராக வந்த ஈஸா நபி இஸ்ரவேலர் அல்லாத பிற மக்களுக்கு அல்லாஹ்வின் பார்வையில் நபியாக வர முடியாது என்பதை ஏற்றுக் கொள்ளும் நாள் எந்நாளோ?** ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன்னர் வந்த எல்லா நபியும் ஒரு குறிப்பிட்ட சமுதாயத்துக்கு, ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு மட்டும் வந்தவர்களே. அவர்கள் முழு

உலகுக்கும் எக்காலத்துக்கும் நபியாக வர முடியாது. எனவே ஈஸா நபி முஸ்லிம் உலகுக்கு வர மாட்டார்கள் என்பதை முஸ்லிம் உலகம் உணரும் நாள் எந்நாளோ ?

திருக்குர்ஆன் 61:7 வது வசனத்தில், இஸ்ராயீலின் மக்களே ! நான் உங்களுக்கு அனுப்பப்பட்ட அல்லாஹ்வின் தூதராவேன். நிச்சயமாக நான் எனக்கு முன்னர் தவ்ராத்தில் கூறப்பட்டதை நிறைவேற்றக் கூடியவனாகவும், எனக்குப் பின்னர் வரப்போகின்ற அஹ்மத் எனும் பெயரைக் கொண்ட ஒரு தூதரைப் பற்றி நற்செய்தி வழங்குபவனாவேன் என்று மர்யமின் மகன் ஈஸா தன் சமுதாயத்திடம் கூறிய நேரத்தை (நினைவு கூருங்கள்).

1. இவ்வசனம், ஈஸா நபி இஸ்ரவேலர்களுக்கு மட்டும் வந்த ஒரு தூதர்.
2. அவர் தவ்ராத்தை மட்டுமே மெய்ப்பிக்க வந்தவர்.
3. எனக்குப் பின்னர் என்று அவர் கூறி, தன் மரணத்திற்குப் பிறகு அஹ்மத் எனும் பெயர் கொண்ட ஒரு தூதர் வருவதைப் பற்றி நற்செய்தி கூறியுள்ளார். எனவே ஈஸா நபி இறந்து விட்டதால், அவர் மீண்டும் வரப் போவதில்லை என்று விளங்குகிறது.

ஈஸா நபி (அலை) அவர்கள் இறந்து விட்டார்கள் என்பதற்கும், இவர் இனிமேல் நபி (ஸல்) அவர்களுக்குப் பிறகு வரப்போவதில்லை என்பதற்கும் (முஸ்லிம் : 4592) நபிமொழி காண்க.

என் நிலையும் (எனக்கு முன்பிருந்த) இதர இறைத் தூதர்களின் நிலையும் ஒரு மனிதரின் நிலையை ஒத்திருக்கிறது. அவர் ஒரு கட்டிடத்தை நேர்த்தியாகவும் அழகாகவும் கட்டினார். மக்கள் அதைச் சுற்றிப் பார்த்து விட்டு இதை விட அழகான கட்டிடத்தை நாங்கள் கண்டதேயில்லை. இதே இந்த (மூலையில் வைக்கப்பட்டிருக்கும்) செங்கலைத் தவிர என்று கூறினர். நான் தான் அந்தச் செங்கலாக இருக்கிறேன்.



அக்கட்டடத்தில் ஒரே ஒரு செங்கல் மட்டும் தான் விடுபட்டுள்ளது. ஈஸா நபியைப் பற்றி முஸ்லிம் சமுதாயத்தின் தவறான கருத்து உண்மை என்றால், இரண்டு செங்கல்கள் விடுபட்டிருக்க வேண்டும். ஒரு செங்கல் இனிமேல் வரும் ஈஸா நபி ஆவார். மற்றொரு செங்கல் நான் ஆவேன் என்று ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியிருப்பார்கள். அவ்வாறு கூறவில்லை.

மேலும் இந்த நபிமொழிக்கு விளக்கவுரையில் இறுதி நபி என்றால் சரீஅத்துடைய இறுதி நபி என்பதைக் குறிக்கும் என்று எழுதியுள்ளார்கள்.

## 54. அவரவர் தம் மார்க்கத்தை சுதந்திரமாக பின்பற்றும் நிலை ஏற்படும் வரை போரிடுங்கள்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 54 இல் கலகம் இல்லாதொழிந்து என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*திருக்குர்ஆனின் 2:193, 8:39 ஆகிய இரு வசனங்களில் கலகம் இல்லாதொழிந்து தீன் அல்லாஹ்வுக்கு ஆகும் வரை போரிடுங்கள் என்று கூறப்படுகிறது. இவ்விரு இடங்களிலும் தீன் என்ற சொல்லுக்கு மார்க்கம் என்று பலரும் விளக்கம் கொடுத்துள்ளனர்.*

*இந்த விளக்கத்தின்படி மற்றவர்களைக் கட்டாயப்படுத்தி மதமாற்றம் செய்ய வேண்டும் என்ற கருத்து ஏற்படுகின்றது. ஆனால் திருக்குர்ஆனில் பல இடங்களில் மார்க்கத்தில் நிர்பந்தம் இல்லை என்று மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. (திருக்குர்ஆன் : 2:256, 10:99, 9:6, 109:6)*

*அவ்வாறிருக்க மதமாற்றம் செய்யும் வரை போரிடுங்கள் என்று பொருள் கொள்ளவே முடியாது. மேலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் ஆட்சியில் முஸ்லிமல்லாதவர்கள் குறிப்பாக யூத கிறித்தவர்கள் யூத கிறித்தவர்களாகவே வாழ்ந்து வந்தனர். இதன் காரணமாகவும் இவ்வாறு பொருள் கொள்ள முடியாது. இவ்விரு வசனங்களிலும் அதிகாரம் என்று மொழி பெயர்ப்பது தான்*

*சரியானது. போர் என்று வந்து விட்டால் அதிகாரம் கைக்கு வரும் வரை போரிட வேண்டும் என்பதுதான் இதன் கருத்தாகும்.*

**நம் விளக்கம்:**

போர் என்று வந்துவிட்டால் அதிகாரம் கைக்கு வரும் வரை போரிட வேண்டும் என்று பீ.ஜே எழுதியுள்ளார்! இது சரியா? சரி இல்லை. திருக்குர்ஆன் இக்கருத்தை மறுக்கிறது. திருக்குர்ஆன் 22:40-41 வசனங்களைப் பார்ப்போம்.

எவர்கள் மீது போர் தொடுக்கப்பட்டுள்ளதோ அவர்களுக்குப் (போரிட) அனுமதி வழங்கப்பட்டுள்ளது. ஏனெனில் அவர்கள் மீது அநீதி இழைக்கப்பட்டிருக்கிறது. நிச்சயமாக அல்லாஹ் அவர்களுக்கு உதவ ஆற்றல் உள்ளவனாவான். எங்களின் இறைவன் அல்லாஹ் என்று சொன்னதற்காக மட்டும் அநியாயமாக அவர்களின் வீடுகளிலிருந்து விரட்டப்பட்டவர்களுக்கும் (போரிட அனுமதி உண்டு). இந்த வசனத்தின் அடிப்படையில் முஸ்லிம்கள் மக்கத்து மாக்களால்,

1. தங்கள் இறைவன் அல்லாஹ் என்று சொன்னதற்காக மட்டும் முஸ்லிம்கள் அநியாயத்திற்கு ஆளாக்கப்பட்டனர்.
2. அவர்களின் வீடுகளிலிருந்து வெளியேற்றப்பட்டனர்.
3. மக்காவிலிருந்து வெளியேறி மதீனாவில் அடைக்கலம் புகுந்தும் அவர்களை விடாமல் அவர்கள் மீது போர் திணிக்கப்பட்டது.
4. எனவே தான், எவர்கள் மீது போர் திணிக்கப்பட்டதோ அவர்களுக்குப் (போரிட) அனுமதி வழங்கப்படுகிறது என்று அல்லாஹ் இந்த வசனத்தில் கூறுகிறான்.

இவ்வாறு **முஸ்லிம்கள் தங்களுக்கு இழைக்கப்பட்ட மாபெரும் அநியாயங்கள் எல்லாம் இல்லாது ஒழிந்து உண்மையான மத சுதந்திரம் கிடைத்து அல்லாஹ்வின் மார்க்கத்தை அப்படியே பின்பற்றி வாழும் நிலை ஏற்படும் வரை அவர்களுடன் தற்காப்பு யுத்தம் செய்யுங்கள் என்று அல்லாஹ் கட்டளையிடுகிறான்.**



**எனவே, முஸ்லிம்களை கட்டாயப்படுத்தி அவர்களின் மத வழிபாட்டைச் செய்ய விடாமல் தடுக்கின்ற அநியாயத்தையே இது சுட்டிக்காட்டுகிறது.**

**2) திருக்குர்ஆன் 22:41 வசனத்தின் தொடர்ச்சியைக் காண்போம்.**

மேலும் ''அல்லாஹ் சில மனிதர்களுக்கு மற்றவர்களைக் கொண்டு பதிலடி கொடுக்க வைக்கவில்லையாயின் கோயில்களும், ஆலயங்களும், மடங்களும், அல்லாஹ்வின் பெயர் அதிகமாக நினைவு கூரப்படும் பள்ளிவாசல்களும் தரைமட்டமாக்கப்பட்டிருக்கும். மேலும் அல்லாஹ் அவனு(டைய மார்க்கத்து)க்கு உதவுபவர்களுக்கு நிச்சயமாக உதவுவான்.''

1. முஸ்லிம்கள், பிற மத மக்கள் அவரவர்களின் மத வழிபாட்டை சுதந்தரமாக செய்ய உதவ வேண்டும் என்றும் கட்டளையிடுகின்றான்.

2. இந்து சமய கோயில்களும், கிறித்தவ ஆலயங்களும், யூத மடங்களும், முஸ்லிம் பள்ளிவாசல்களும் பாதுகாக்கப்பட முஸ்லிம்கள் பாடுபட வேண்டும் என்றும் கட்டளையிடுகிறான். இதனையே அல்லாஹ்வுக்கு உதவுவதாக அவன் கூறுகின்றான்.

3. இவ்வாறு உலகில் மத சுதந்திரத்துக்கு யார் பாடுபடுகிறார்களோ அவர்களுக்கு அல்லாஹ் உதவுவதாகவும் கூறுகிறான்.

4. இதற்கு மாற்றமாக செயல்படுபவர்களுக்கு மற்றவர்களைக் கொண்டு பதிலடி கொடுப்பதாகவும் அல்லாஹ் கூறுகிறான்.

ஆனால் பீ.ஜே போன்றோர், ஈஸா நபி கியாமத் நாளில் வருவார் என்றும் அவர் சிலுவையை முறிப்பார் என்றும் பன்றிகளைக் கொல்வார் என்றும் நம்புகிறார்கள். கிறித்தவ ஆலயங்களில் உள்ள சிலுவைகளும், கிறித்தவ ஆடவர் பெண்கள் சிறுவர் சிறுமியர் கழுத்தில் அணிந்திருக்கும் சிலுவைகளையும் பறித்து அதனை முறிக்க வேண்டும் என்றும் நம்புகிறார்கள். இந்த இழிசெயல் பிற மத

வழிபாட்டில், பிற மத மக்களின் சுதந்திரத்தில் தலையிட்டு, தன் கருத்துகளை அவர்கள் மீது திணிக்கும் செயல் அல்லவா ? சிலுவை என்றால் அது மரத்தினாலும், உலோகத்தாலும் செய்யப்பட்ட சிலுவை என்று எண்ணுகின்றனர். **அது சிலுவைக் கொள்கை என்றும் அக்கொள்கையை தவறு என்று நிரூபிப்பதன் மூலம் அக்கொள்கையை முறித்தலையே சிலுவையை முறித்தல் என்பதை உணரத் தவறி விட்டனர்.**

இவ்வாறே பன்றி என்றால் அல்லாஹ்வின் படைப்பாகிய பன்றி என்னும் உயிரினம் என்றும் அதனைக் கொல்லவே ஈஸா நபி வருகிறார் என்றும் நம்புகின்றனர். அப்படி எனில் அல்லாஹ் எதற்குப் பன்றியைப் படைத்தான்? பன்றி படைக்கப்பட்ட நாள் முதல் பல்லாயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாக அது கொல்லப் படவில்லையே? இப்போது மட்டும் ஏன் கொல்ல வேண்டும்? ஈஸா நபி அதனைக் கொல்வார் என்றால் ஒரு உயிரினத்தைக் கொன்றதாக ஆகாதா? தனி மனிதர்க்கும், நாட்டுக்கும் உடைமையாக வளர்க்கப்படும் அப்பன்றிக் கூட்டத்தை கொன்று குவித்தால் அச்செயல் அவர்களின் சுதந்திரத்தில் தலையிடுவதாகவும், தன் மதக்கருத்துகளை அவர்களின் மீது வலிந்து திணிப்பதாகவும் ஆகாதா? இஸ்லாம் இனிய மார்க்கம் என்பது இதுதானா? மேலும் உயிரினச் சங்கிலியில் ஒரு உயிரினம் முழு உலகிலும் கொல்லப்படுவதன் மூலம் பிற உயிரினத்திற்கு ஏற்படும் அழிவுக்கு ஈஸா நபியும் முஸ்லிம்களும் பொறுப்பாக மாட்டார்களா? பன்றியைக் கொல்வதற்கு ஒரு நபி வர வேண்டுமா? ஒரு நபி பன்றியைக் கொல்வதற்காக துப்பாக்கியும் கையுமாக அவற்றைத் துரத்தித் திரிவாரா? இது மனிதனுக்கு ஏற்ற மார்க்கமா? காட்டு மிராண்டி மார்க்கமா? பீ.ஜே யின் இப்படிப்பட்ட நம்பிக்கை நகைப்பிற்கிடமாக உள்ளது. பன்றி என்றால் ஊரில் சுற்றித் திரியும் பன்றிகள் இல்லை. **பன்றிக் குணம் கொண்ட மனித ஜென்மங்களிடம் காணப்படும் தீய பண்புகளைக் கொல்லவே**



**ஈஸா நபி வருவார் என்று அவர்கள் உணரத் தவறியதே காரணம்.**

இறுதியாக இவ்வாறு ஈஸா (அலை) அவர்கள் வந்து பன்றியை கொல்வார், சிலுவையை முறிப்பார் என்று பீ.ஜே நம்புவது திருக்குர்ஆனுக்கும் ஹதீஸுக்கும் முற்றிலும் மாற்றமானதாகும்.

பன்றிகளை விட்டுவிடுவோம். மனிதர்களுள் அவர்களின் (ஈஸா நபியின்) பெருமூச்சு இறை மறுப்பாளர் மீது பட்டால் அவர் மரணிக்காமல் இருக்க மாட்டார். அவர்களின் பார்வை எட்டும் தொலைவுக்கு அவர்களின் பெருமூச்சு செல்லும் என்று முஸ்லிம் அல்லாதவர்களையும் தன் பெருமூச்சினால் அழிப்பார் என்று நம்புகிறார்.

வன்முறை சிந்தனையை தூண்டும் இது போன்ற தவறான கொள்கையை பீ.ஜே கைவிடுவதே முஸ்லிம் சமுதாயத்திற்கு அவர் செய்யும் மாபெரும் சேவையாக இருக்க முடியும்.

இவ்வாறு சிலுவைகளை முறிக்கின்ற பன்றிகளைக் கொல்கின்ற காபிர்களைக் கொல்கின்ற கொலை வெறியும், இரத்த வெறியும் கொண்ட ஒரு மஸீஹை தலைமுறை தலைமுறையாக இந்த பீ.ஜே-க்கள் கூட்டம் எதிர்பார்த்து வருவதால் தானோ இந்த சமுதாயத்தில் சிலர் தீவிரவாத சிந்தனைக்கு ஆளாகிவிட்டனரோ என்று எண்ணத் தோன்றுகிறது! அல்லாஹ் நன்கறிவான்.

## 55. தாபூத் என்பது அலங்காரப் பெட்டியா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவனை எண் 77 இல் அலங்காரப் பெட்டி என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*மூஸா நபி ஹாரூன் நபி ஆகியோரின் குடும்பத்தார் விட்டுச்சென்றதை அவர்களின் சமுதாயத்து நல்லடியார்கள் பாதுகாத்து வைக்கவில்லை. அதனால் தான் வானத்திலிருந்து வானவர்கள் அதைக் கொண்டு வந்தனர்.*

*தாலூத்தை இறைவன் தான் நியமித்தான் என்பதற்குச் ஆதாரமாகத்தான் வானத்திலிருந்து அலங்காரப் பெட்டி வந்தது. சான்றாக வந்ததால் மன நிறைவுடன் அவரது தலைமையை ஏற்றனர். படை திரண்டு சென்றனர்.*

*இதன் பிறகும் பெரியவர்கள் மகான்கள் பயன்படுத்திய பொருட்களையும் புனிதப் படுத்துவோம் என்று வாதிட்டால், அப்பொருளை வானவர்கள் வானத்திலிருந்து கொண்டு வந்த பின் நம்பட்டும். வானவர்கள் அதைக் கொண்டு வந்து தரவில்லையானால் அவற்றைப் புனிதப் பொருளாகக் கருதக் கூடாது என்பதைத் தான் இவ்வசனம் கூறுகிறது.*

**நம் விளக்கம்:**

1) 2:249 வது வசனத்தில் தாபூத் எனும் சொல்லுக்குப் பேழை, பெட்டி என்று தான் தமிழ் தர்ஜுமாக்கள் எல்லாவற்றிலும் மொழி பெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது. அச்சொல்லுக்கு அலங்காரப் பெட்டி என்று பீ.ஜே மொழியாக்கமும், தலைப்பும் கொடுத்துள்ளார். எனவே, **அலங்காரப் பெட்டி** என்பதற்கு ஆதாரம் தர முடியுமா? ஏனென்றால் அலங்காரம் என்ற சொல் எங்கிருந்து வந்தது? அதில் காணப்பட்ட அலங்காரங்கள் யாவை? பீ.ஜே விளக்கிக் கூற முடியுமா?

2) தாலூத் என்பவரின் அரசாட்சிக்கு அடையாளமாகத் தான் அப்பெட்டி (தாபூத்) வருகிறது. அப்பெட்டியில் அமைதி, சாந்தி இருக்கிறது. அப்பெட்டியில் தான் இறைவன் புறமிருந்து வந்த சாந்தி, அமைதியிருக்கும் என்று அந்த வசனம் கூறுகிறது. ஆனால் பீ.ஜே அப்பெட்டி சான்றாக வந்ததால் அவரது ஆட்சியை மனநிறைவுடன் ஏற்றனர் என்று தவறாக எழுதியுள்ளார்.

3) மூஸாவின் குடும்பத்தினரும் ஹாரூனின் குடும்பத்தினரும் விட்டுச் சென்றதில் எஞ்சியது அப்பெட்டியில் இருக்கும். அதை வானவர்கள் சுமந்து வருவார்கள் என்று அந்த வசனம் கூறுகிறது. ஆனால் பீ.ஜே,



மூஸா ஹாரூன் குடும்பத்தினர் விட்டுச் சென்றதை, அந்த சமூகத்து நல்லடியார்கள் **பாதுகாத்து வைக்காததினால்** மலக்குகள் அதனை **வானத்திலிருந்து** கொண்டு வந்தனர் என்று தவறாக விளக்கம் தருகிறார்.

இதில் **பாதுகாத்து வைக்கவில்லை** என்பதற்கும், வானத்திலிருந்து அதைத் கொண்டு வந்தனர் என்பதில் **வானம்** என்ற சொல்லையும் திருக்குர்ஆனிலிருந்து பீ.ஜே காட்ட முடியுமா?

இவ்வாறு திருக்குர்ஆன் கூறாத கருத்துக்களையும் சொற்களையும் விளக்கம் என்ற பெயரில் பீ.ஜே எழுதியுள்ளார். அல்லாஹ்வும் ரஸூலும் கூறாதவற்றை இவர் இட்டுக் கட்டிக் கூறியுள்ளார்.

நாம் கூறுகின்ற பொருளையே மவ்லவி முஹம்மதலியும், புகழ்மிகு தப்ஸீர்களின் அடிப்படையில் Adam Esabai, M.H. Shakir, Mohammad Mohar Ali ஆகியோரும் கொடுத்துளளனர்.

4) மலக்குகள் ஒரு பெட்டியை வானத்திலிருந்து சுமந்து பூமிக்கு கொண்டு வந்தனர் என்றால், அக்காட்சியை தாலூத் மன்னர் வாழ்ந்த ஊரைச் சுற்றியுள்ள பன்னூறு ஊர் மக்கள் கண்டிருப்பர். இந்த அதிசய காட்சியைப் பற்றி நாடெங்கும் பரபரப்பாகப் பேசப்பட்டிருக்கும். யூத வரலாற்றில் இடம் பெற்றிருக்கும். திருக்குர்ஆனிலும் நபிமொழிகளிலும் யூத வரலாற்றிலும் இருந்து வானத்திலிருந்து இறங்கியது என்பதற்கு பீ.ஜே ஆதாரம் காட்ட முடியுமா?

பீ.ஜே யின் கற்பனையைப் போல் வானத்திலிருந்து மலக்குகள் சுமந்து கொண்டு பூமிக்கு வந்ததைப் பற்றிய செய்தி நாலா புறமும் பரவி இருக்கும். எனவே பக்கத்து நாட்டுக்கு தாலூத் படையெடுத்து சென்று போரிட வேண்டிய தேவையே இருந்திருக்காது. தாலூத் மன்னரின் பேரையும் புகழையும் கேட்ட பிற மன்னர்களுக்கு தாலூத் அழைப்பு விடுத்தாலே போதும். மரியாதையுடன் வந்து கப்பம்

கட்டி அவரது ஆட்சியின் கீழ் சிற்றரசர்களாக வாழ்ந்திருப்பர். அப்படி எதுவும் நடக்காததினால் மலக்குகள் அந்த **அலங்காரப் பெட்டியை** வானத்திலிருந்து கொண்டு வரவில்லை என்பது தெளிவாகிறது.

மேலும் சாந்தி, அமைதி என்பவை பெட்டியில் இருக்கும் அளவுக்கு அவை **திடப்பொருளா?** உள்ளத்தில் இருக்க வேண்டிய சாந்தியும், அமைதியும் எப்படி பெட்டியில் இருக்கும் ? மூஸா, ஹாரூன் குடும்பத்தினர் விட்டுச் சென்றவை தமக்கு திரும்பக் கிடைத்து விட்டன. **இனிமேல் பாதுகாத்து வைப்போம்** என்று அவர்கள் பாதுகாத்து வைத்தனர் என்பதற்கு ஏதும் சான்று இருக்கிறதா? நபிமார்களின் குடும்பத்தினர் விட்டுச் சென்றவை என்பது நபிமார்களிடமிருந்து கிடைக்கும் உயர்ந்த ஒழுக்கப் போதனைகளும், சிறந்த நடத்தைகளும் ஆகும். இவை எப்படி பெட்டியில் இருக்க முடியும்? இவை உள்ளத்திலும், நடத்தையிலும் தான் காணப்படும்.

மொத்தத்தில் தாபூத் என்பது உள்ளம் ஆகும். மலக்குகள் இப்பண்புகளை கொண்டு சென்று மக்களின் உள்ளத்தில் ஏற்படுத்துகின்றனர் என்பதே பொருத்தமானதாகும்.

## 56. நான்கு சாட்சிகள்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 112 இல் நான்கு சாட்சிகள் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார் ;**

*பெண்களின் கற்புக்கும் ஒழுக்கத்துக்கும் எதிரான வதந்திகளை மட்டும் மக்கள் சர்வ சாதாரணமாக நம்பி விடுகின்றனர். பெண்களுடன் ஆண்களைத் தொடர்புபடுத்திக் கூறும் செய்திகளையும் ஆர்வமுடன் செவிமடுத்து அதை நம்பவும் செய்கின்றனர்.*

*...ஆனால் இஸ்லாம் மட்டும் பெண்களின் கற்பொழுக்கம் பற்றி அவதூறு பேசுவதைக் கடுமையான குற்றமாகக் கருதுகிறது. ஒரு பெண் மீது அவதூறு சுமத்துவது என்றால் குறைந்தபட்சம்*



*நான்கு நேரடி சாட்சிகள் இருக்க வேண்டும் என்று இஸ்லாம் வலியுறுத்துகிறது. (பார்க்க : திருக்குர்ஆன்: 4:15)*

*நான்கு சாட்சிகள் இல்லாத நிலையில் பெண்களின் கற்புக்கு எதிராகக் குற்றம் சுமத்தினால் அவர்கள் கூறுவது உண்மையாக இருந்தால் கூட குற்றம் சுமத்தியவர்களுக்கு எண்பது சவுக்கடிகள் தண்டனையாக வழங்கப்பட வேண்டும் என இஸ்லாம் கூறுகிறது. (பார்க்க: திருக்குர்ஆன்: 24:4; 24:33)*

**நம் விளக்கம்:**

1) 4:16 வசனமும் 24:5 வசனமும் வெவ்வேறானவை ஆகும். 4 சாட்சிகள் பற்றி இவ்விரு வசனங்கள் கூறினாலும் 4:15 வசனம் 4 சாட்சிகள் வேண்டும் என்ற அளவில் நிறுத்திக் கொள்கிறது. 100 சவுக்கடி இல்லை. ஆனால் அவதூறு கூறுபவர்கள் 4 சாட்சிகளை கொண்டு வரவில்லை என்றால் அவர்களுக்கு 80 சவுக்கடி தண்டனை என்று கூறுகிறது.

2) இஸ்லாம் மட்டும் பெண்களின் கற்பொழுக்கம் பற்றி அவதூறு பேசுவது கூடவே கூடாது என்பதற்கு திருக்குர்ஆன் 2 பெண்களின் சம்பவங்களை எடுத்துக்காட்டி எச்சரிக்கை செய்கிறது. உலகில் எங்கும் இது போன்ற அவதூறுகள் யார் மீதும் கூறக் கூடாது. அவ்வாறு எவர்கள் கூறினாலும் முஸ்லிம்கள் கூறவே கூறக்கூடாது என்பதற்காக 2 பெண்களின் – அவர்கள் சாதாரண பெண்கள் அல்லர்.ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் மனைவியாகிய ஹஸ்ரத் அன்னை ஆயிசா (ரலி) அவர்களின் சம்பவத்தையும், ஹஸ்ரத் ஈஸா நபி (அலை) அவர்களின் தாயார் ஹஸ்ரத் மர்யம் (அலை) அவர்களின் சம்பவத்தையும் எடுத்துக் காட்டி, உலக முஸ்லிம்களை கடுமையாக எச்சரிக்கை செய்கிறது. ஒரு பெண்ணின் மீது இது போன்ற அவதூறு எழும் போது, ஹஸ்ரத் அன்னை ஆயிசா (ரலி) அவர்களின் சம்பவம் போல் இது இருந்து விட்டால் அவர்கள் அல்லாஹ்வுக்கு பதில் சொல்ல நேரிடும் என்று அஞ்ச வேண்டும்

என்பதற்காகவே அல்லாஹ் ஹஸ்ரத் ஆயிசா (ரலி) அவர்களின் சம்பவத்தை எடுத்துக் கூறினான் போலும். அல்லாஹ் நன்கறிவான்.

அடுத்து ஹஸ்ரத் மர்யம் (அலை) அவர்கள் ஒரு ஆணின் தொடர்பின்றி சுயமாக கருவுற்ற சம்பவத்தை கூறியிருப்பதும் உலகில் பெண்கள் யாரும் இப்படியும் கருவுற முடியும் என்பதை எடுத்துக் காட்டவே அல்லாஹ் அதனை எடுத்துக் கூறியுள்ளான். அவ்வாறு கற்பொழுக்கம் உள்ள ஒரு நல்ல பெண், தான் ஆண் தொடர்பின்றி சுயமாகக் கருவுற்றுள்ளதாகக் கூறினால் உலகில் யார் நம்பினாலும் நம்பாவிட்டாலும் இச்சம்பவம் ஹஸ்ரத் மர்யம் (அலை) அவர்களின் சம்பவம் போல் இருந்து விட்டால் அல்லாஹ்வுக்கு மறுமையில் பதில் சொல்ல நேரும் என்று ஒரு முஸ்லிம் அஞ்ச வேண்டும் என்பதற்காகவே அல்லாஹ் இதனையும் எடுத்துக் கூறினான் போலும். அல்லாஹ் நன்கறிவான்.

இன்றைய நாளில் இவை போலும் சம்பவங்கள் பரவலாகப் பேசப்படுகின்றது. 1000 பெண்கள் உண்மையான குற்றத்திற்கு உரியவர்களாக இருக்கலாம். ஆனால் ஒரு நல்ல பெண் பொய்யான அவதூறுக்கு ஆளாகக் கூடாது என்பதற்காகவும் எதிர்கால நோக்கில் எல்லாம் அறிந்த அல்லாஹ் கூறியிருக்கிறான் போலும்!

ஹஸ்ரத் மர்யம் (அலை) அவர்களின் சம்பவத்தைப் பற்றியும் திருக்குர்ஆன் கூறியிருப்பதிலிருந்து கிறித்தவ உலகமும் இது போன்ற அவதூறுகளை பிறர் மீது கூறக்கூடாது என்று எச்சரிக்கை செய்யப்பட்டுள்ளனர்.

இவை போன்ற அவதூறுகளைச் சுமத்தியவர்கள் எத்துணை பெரிய குற்றவாளிகள், பாவிகள் என்பதை உணர்ந்து உலகில் எவரும் இது போன்ற அவதூறுகளைக் கூறத்துணியக் கூடாது என்று எச்சரிக்கை செய்யப்படுகின்றார்கள். இவர்களைப் போன்ற இழிவானவர்களுக்கு உலக நாடுகள் 80 சவுக்கடிகளை மக்கள் மத்தியில் வைத்து அடித்து உலகம் முழுதும் காணச் செய்ய



வேண்டும் என்பது தான் நம்மைப் படைத்த இறைவனின் கட்டளை மட்டும் அல்ல, நல்லவர்களின் எதிர்பார்ப்பும் ஆகும்.

3) நான்கு சாட்சிகள் என்பதன் பொருள் என்ன?

இவ்வாறு ஒழுக்கக்கேடான ஒரு சம்பவம் நடந்தால் அது சமூகத்தில் 4 பேர்கள் காணக்கூடியவாறு தொடர்ந்தால், அதனால் சமூகம் நாறி நாசமாகிவிடும். அதனை அதற்கென நியமிக்கப்பட்ட அதிகாரிகள் நடவடிக்கை எடுத்து அந்த ஆண், பெண் மீது 100 சவுக்கடிகள் வழங்க வேண்டும். இதனை எல்லாரும் காணும் வகையில் சாட்சிகள் முன்னிலையில் நடத்த வேண்டும். அப்போது தான் சமுதாயம் திருந்தும்.

பொதுவாக யாரோ ஒருவர் பரப்பும் அவதூறு சமுதாயம் முழுவதும் சங்கிலித் தொடர் போல் காட்டுத் தீ என பரவுகிறது. நான்கு சாட்சிகள் வேண்டாம். ஒரு சாட்சி கூட கிடைப்பதில்லை. அவதூறு கூறுபவர் இல்லாத ஒன்றை இருப்பதாகப் பரப்பி விடுகிறார். எனவே தான் கண்ணால் கண்ட 4 நேரடி சாட்சிகள் தேவை என்று திருக்குர்ஆன் கூறுகிறது. யாரோ ஒருவர் கண்ணால் கண்டதாகக் கூறினாலும் கண்ணால் காண்பதும் பொய்யாக இருக்கக் கூடும். இருவர், மூவர், நால்வர் என்று இருக்கும் என்றால் உண்மையாக இருக்க வாய்ப்பு ஏற்படுகிறது.

இதனாலேயே திருக்குர்ஆன் நான்கு சாட்சிகளைக் கொண்டு வருமாறு கூறுகிறது. அவ்வாறு கொண்டு வராத பட்சத்தில் அவதூறாக கூறியவர்க்கு 80 சவுக்கடி தரப்பட வேண்டும் என கூறுகிறது.

## 57. கனவுகள்

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 122 இல் கனவுகள் எனும் தலைப்பிலும், இதர நம்பிக்கைகள் - கனவுகள் எனும் தலைப்பிலும் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இந்த அத்தியாயத்தில் (12 வது அத்தியாயத்தில்) யூஸுஃப் நபியின் கனவு, இரண்டு கைதிகளின் கனவு, மன்னரின் கனவு என பல கனவுகளும் அதற்கான விளக்கங்களும் கூறப்பட்டுள்ளன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு சிலர் கனவுகளுக்கு விளக்கம் சொல்கிறோம் என்ற பெயரில் பல விதமாக உளறி வருகின்றனர்.*

*ஆனால் 12:37 வசனத்தில் யூஸுஃப் நபியவர்கள் கனவுகளுக்கு விளக்கம் கூறும் திறனை அல்லாஹ் தமக்குக் கற்றுக் தந்ததாகக் குறிப்பிடுகின்றார்கள். எனவே இது இறைவன் புறமிருந்து அவர்களுக்கு வழங்கப்பட்ட சிறப்புத் தகுதி என்பது தெரிய வரும் என்று எழுதுகிறார்.*

*இதர நம்பிக்கைகளில் கனவுகள் எனும் தலைப்பில், கனவின் பலன் அதற்கு எதிர்மறையானது அல்ல என்றும் 8:43 நபிமார்களின் கனவுகளும் இறைச் செய்தியே (37:102-105) என்றும், கனவின் விளக்கம் இறைவன் புறத்தில் உள்ளது 12:37 என்றும் எழுதியுள்ளார்.*

**நம் விளக்கம்:**

1) யூசுஃப் நபியவர்கள் கண்ட கனவுகளும், பிற நபிமார்கள் கண்ட கனவுகளும், இரு கைதிகள் கண்ட கனவுகளும், மன்னர் கண்ட கனவும் எதைக் காட்டுகிறது? மனிதர்களுக்கு உண்மையான கனவுகளும் தோன்றும் என்றும் அவை எதிர் காலத்தில் நிகழப்போவதை எடுத்துக் காட்டும் என்றும் அக்கனவுகளின் விளக்கம் தெரிந்தவர்களிடம் கேட்டு விளங்கிக் கொள்ள வேண்டும். விளக்கம் தெரியாதவர்களிடம் கேட்டால் உண்மைக்கு மாற்றமான கருத்தைக் கூறிவிடுவர் என்றும், கைதிகள் போன்ற



குற்றவாளிகளுக்கும் உண்மையான கனவுகள் தோன்றும் என்றும், கனவில் கண்டபடி நிகழலாம் என்றும், விளக்கம் கூறக்கூடிய உட்பொருள் கொண்ட கனவுகளும் தோன்றலாம் என்றும், **எதிர்மறைப் பொருள் தரும் கனவுகளும் வரும் என்றும்** நபிமார்கள் காணும் கனவு இறைக்கட்டளை என்றும் விளங்கிக் கொள்கிறோம்.

ஐம்புலனறிவு, சிந்தனை மூலம் பெறும் ஆறறிவு ஆகியவற்றை அறிவோம். உண்மையான கனவுகள் மூலம் பெறும் அறிவை எட்டா அறிவு எனலாம். ஏனென்றால் ஐம்புலனாலோ, ஆறறிவாலோ எட்டாத செய்திகள் கனவு மூலம் எட்டுவதினாலும், இறைவன் கனவு மூலம் அவற்றை எட்ட வைப்பதினாலும் அந்த கனவறிவை, அகக்கண் அறிவை எட்டா அறிவு எனலாமா?

2) யூசுஃப் நபியவர்கள் பதினொறு நட்சத்திரங்களும், சூரியனும், சந்திரனும், தமக்கு சஜ்தா செய்வதாகக் கனவு கண்டார்கள். இதனை அறிவிலி ஒருவன், யூசுஃப் நபி (அலை) அவர்கள் தன்னை இறைவன் என்று கூறுகிறார்கள் என்று கூறினால் அது எவ்வளவு மடத்தனம் என்று பாருங்கள். அல்லாஹ்வுக்கு மட்டும் செய்ய வேண்டிய சஜ்தாவை, அவை தனக்குச் செய்ததாக யூசுஃப் நபியவர்கள் கனவில் கண்டார்கள் என்பதிலிருந்து கனவில் இவை போலும் காட்சிகளைக் காணலாம் என்றும், அதற்கு சொற்பொருள் கொள்ளக் கூடாது என்ற அடிப்படை ஞானம் கூட இல்லாதவர்களே இவை போலும் குற்றச் சாட்டுகளைக் கூறுவர்.

சமுதாயத்தை வழிகெடுக்கும் சிலர், அவர் கனவில் கண்டார் என்பதைக் கூறாமல் யூசுஃப் நபி சூரியனும், சந்திரனும், பதினொறு நட்சத்திரங்களும் தனக்கு சஜ்தா செய்கின்றன என்று கூறுகிறார் என்று கூறி யூசுஃப் நபி தன்னை இறைவனாக கூறுகிறார் என்று கூறினால் அது மக்களை வழிகெடுப்பதாக ஆகாதா?

3) கைதி ஒருவர் தன் தலை மீது ரொட்டியைச் சுமந்து கொண்டிருப்பதாகவும் பறவைகள் அவற்றிலிருந்து தின்று கொண்டிருக்கின்றன என்றும் கனவு காண்கிறார்.

அதற்கு யூசுஃப் நபி, அவர் சிலுவையில் அறைந்து கொல்லப்படுவார்; அவரது தலையைப் பறவைகள் சாப்பிடும் என்று விளக்கம் கூறுகிறார். இதே சொல் தான் ஈஸா நபிக்கும் அவர் சிலுவையில் அறைந்து கொல்லப்படவில்லை என்று வருகிறது.

சிலுவைத் தண்டனைக்குரிய ஒரு குற்றவாளிக்கும் இறைவனிடமிருந்து உண்மையான கனவு தோன்றும் என்று விளங்குகிறோம். நபிமொழியில் உண்மையான கனவு என்பது வஹியில், நுபுவத்தில் நாற்பதில் ஒரு பங்கு என்று கூறப்பட்டுள்ளது. (ஆதாரம் : புகாரி) ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்கு ஆரம்பத்தில் வந்த வஹி கனவு வழியாகவே வந்தது. (ஆதாரம் : புகாரி)

எனவே, உலகில் உண்மையான கனவை ஒருவன் காணுகின்ற வரை இறைவனுடைய பேச்சு, வஹி தொடரும் என்று அறிகிறோம். திருக்குர்ஆன் 42:52 இல் அல்லாஹ், திரைக்கு பின்னால் இருந்து மனிதருடன் பேசுகின்றான் என்று கூறப்பட்டுள்ளது. இது கனவு, கஷ்ஃப் காட்சியின் மூலம் பேசுவதாகும். இப்ராஹீம் நபிக்கும், நபி (ஸல்) அவர்களுக்கும் காட்டப்பட்ட கனவுகள் இறைச் செய்திகளே ஆகும்.

பறவைகள் கொத்தித்தின்றன என்பதிலிருந்து, செத்த பிணங்களைத்தான் பறவைகள் கொத்தித்தின்னும் என்றும், அவன் அக்கால வழக்கத்தின்படி சிலுவையில் அறையப்பட்டு கொல்லப் -படுவான் என்றும், சிலுவைத் தண்டனைக்கு ஆளானவர்களின் உடலைப் பறவைகள் கொத்தித் தின்னும் என்றும் யூசுஃப் நபி அவர்கள் விளக்கம் கூறுகிறார்கள். இதில் அவர் சிலுவையில் அறையப்படுவார் என்ற சொற்றொடரே வருகிறது. எனவே சிலுவையில் அறையப்படுதல் என்றால் சிலுவையில் அறைந்து கொல்லப்படுதல் என்றே பொருள் என்பதையும் அறிகிறோம்.



சிலுவையில் அறைப்படவில்லை என்றால், சிலுவையில் அறைந்து கொல்லப்படவில்லை என்றே பொருள்.

4) மன்னர் தான் கண்ட கனவின் விளக்கத்தை அரசவை பிரமுகர்களிடம் கேட்கிறார். அவர்கள் இவை வீணான கனவுகள் என்றும், அதன் விளக்கம் தங்களுக்குத் தெரியாது என்றும் கூறினர். (12:45)

இறைவன் காட்டுகின்ற உண்மையான கனவுகள் எதிர்காலத்தில் நாட்டில் ஏற்படும் ஏழு ஆண்டு பஞ்சத்தையும், அப்பஞ்சத்தைப் போக்கும் வழியையும் காட்டுகிறது. **உருவமற்ற பஞ்சம் போன்றவற்றைக் கனவில் காண முடியும் என்றால்** உருவமுடையவர்களையோ, உருவம் உடையவற்றையோ அல்லாஹ் கனவில் காட்டுவதற்கு ஆற்றல் உடையவன் என்பதையும் நம் கண்ணால் கண்டிராத இறந்த கால மக்களையும் எதிர்கால மக்களையும் அவனால் காட்ட முடியும் என்பதும் இதன் மூலம் விளங்குகிறது. ஏனென்றால் உண்மையான கனவு என்பது இறைவன் தன்னடியார்க்கு காட்டுகின்ற காட்சியாகும். இறைவன் தான் நாடுகின்றவர்களுக்கு இறந்தகால, எதிர்கால மக்களையும் காட்ட வல்லவன்.

5) கைதி ஒருவன் திராட்சை ரசம் பிழிவதாக கனவு காண்கிறான். இன்னொரு கைதி தன் தலையிலுள்ள ரொட்டியை பறவைகள் தின்பதாகக் கனவு கண்டுள்ளார். ரொட்டி எகிப்திய மக்களின் அன்றைய உணவாகும். உலகில் முதன் முதலில் ரொட்டி தயாரித்தவர்கள் எகிப்தியர்கள் என்பது வரலாற்று உண்மை.

6) கனவின் பலன் அதற்கு எதிர்மறையானது அல்ல என்று 8:43 வசனத்தை பீ.ஜே காட்டுகிறார். இதுவும் தவறாகும். அந்த வசனம்,

(முஹம்மதே) அல்லாஹ் உமக்கு உம்முடைய கனவில் அவர்களை குறைத்துக் காட்டியதை (நீர் நினைவு கூருக).

(நிராகரிப்பவர்களாகிய) அவர்களை அதிக எண்ணிக்கையினராகக் காட்டியிருந்தால் நிச்சயமாக நீங்கள் தடுமாற்றமடைந்து இது குறித்து உங்களுக்கிடையே விவாதம் செய்திருப்பீர்கள்.

**மிகுதியான எதிரிகளின் எண்ணிக்கை குறைத்துக் காட்டப்பட்டிருக்கிறது. கனவின் பலன் எதிர்மறை என்பதையே 8:43 வசனத்தில் கூறப்பட்ட கனவு விளக்குகிறது.**

7) திருக்குர்ஆன் 48:28 இல் அல்லாஹ் ஒரு கனவின் மூலம் மக்கா வெற்றி பற்றிக் கூறினான். நபிமார்களின் கனவும் இறைச்செய்தி என்றால் இக்கனவும் இறைச் செய்தியே. ஆனால் நபி (ஸல்) அவர்கள் தான் கண்ட கனவின் படி மக்கா செல்ல, மக்கத்துக் காபிர்கள் இவ்வருடம் வரக்கூடாது. திரும்பிச் செல்லுங்கள். அடுத்த வருடம் வாருங்கள் என்று கூறி ஹுதைபிய்யா உடன்படிக்கையும் செய்து விடுகின்றனர். அப்படி என்றால் **நபி (ஸல்) அவர்கள் கண்ட கனவு தவறு என்றோ, நபி (ஸல்) அவர்கள் நபி இல்லை என்றோ பீ.ஜே கருதுவாரா?** இவ்வாறு நிகழ்வதும் ஒரு உண்மை நபிக்கு அடையாளம் என்றும் அறிவுடையோர் விளங்கிக் கொள்வர். **அதாவது மனித நபி ஒருவர் தன் கனவை தவறாகவும் விளங்கிக் கொள்ளலாம் என்றும் தெரிகிறது.**

திருக்குர்ஆன் 17:61 இல், நபி (ஸல்) அவர்களுக்கு ஒரு காட்சி காட்டப்பட்டதாகவும் அது மிஃராஜ் என்றும் பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 267 இல் எழுதியுள்ளார்.

இதில் அல்லாஹ் எடுத்தாளும் சொல் **ருஃயா** என்பதாகும். இதனையே காட்சி என மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. இச்சொல் திருக்குர்ஆனில் 12:44, 12:6, 12:101, 37:106, 48:28 ஆகிய வசனங்களில் வந்து, கனவு எனும் பொருளைத் தான் தருகிறது. அதாவது அகக்கண் காணும் காட்சியாகும்.

ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து பைத்துல் முகத்தஸ் வரை சென்ற இஸ்ரா பயணமும், மக்காவிலிருந்து



விண்ணுக்கு சென்ற மிஃராஜ் பயணமும் அன்னார் கண்ட ஆன்மீகக் காட்சி என்பது இதிலிருந்து விளங்குகிறது.

இவை இரண்டும் இரு வேறு காலத்தில் நடந்த இரு வேறு நிகழ்ச்சிகள் ஆகும். அதனால் தான் 17 வது சூரா இஸ்ரா பற்றியும், 53 வது சூரா மிஃராஜ் பற்றியும் கூறுகிறது. இதில் நபி (ஸல்) அவர்கள் **கடந்த கால நபிமார்களை எல்லாம் கண்டார்கள். எனவே கனவின் மூலம், நாம் நேரில் காணாதவர்களையும் காண முடியும் என்பது விளங்குகிறது.**

இன்னின்ன கனவுகளுக்கு இன்னின்ன பயன்கள் என்றெல்லாம் குர்ஆனிலோ நபிகள் நாயகத்தின் ஹதீஸ்களிலோ எந்தப் பட்டியலும் போடப்படவில்லை. கனவுகளுக்குப் பலன் சொல்பவர்கள் அவர்களாக கற்பனை செய்த பொய்களைத் தான் கூறிவருகின்றனர் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும் என்று பீ.ஜே கூறுகிறார்.

எம் கேள்வி என்னவென்றால், திருக்குர்ஆன் நபிமொழிகளின் மூலம் கிடைக்கின்ற ஞானத்தின் அடிப்படையில் கனவுகளுக்கு உண்மையான பொருள் கூற முடியாது என்றால், திருக்குர்ஆனில் எல்லாம் உள்ளன. அதில் இல்லாதது எதுவும் இல்லை என்று கூறுவதிலோ, நபிமொழி என்பது திருக்குர்ஆனின் ஞானம் என்று கூறுவதிலோ என்ன அர்த்தம் இருக்கிறது?

உண்மையான கனவு என்பது இறைவனிடமிருந்து வெளிப்படுவது. அதாவது அவன் தன் அடியார்களுடன் பேசும் முறைகளில் ஒன்று. நபி (ஸல்) அவர்களுக்கு ஆரம்பத்தில் இறைச் செய்திகள் கனவுகளாகவே வெளிப்பட்டன. அப்படி என்றால், இறைவனின் பேச்சுகளைக் கொண்ட திருக்குர்ஆன் மூலம் கனவுகளுக்கு ஏன் விளக்கம் கூற முடியாது? உங்களுக்கும் எனக்கும் அந்த ஞானம் இல்லாமல் இருக்கலாம். ஆனால் எவர்க்கும் இல்லை என்பது சரியா?

திருக்குர்ஆனில், யூசுஃப் நபியும், யஃகூப் நபியும், இப்ராஹீம் நபியும், இஸ்மாயீல் நபியும், நபி (ஸல்) அவர்களும் கனவுகளுக்கு எப்படி பொருள் கூறினார்கள்? அவ்வளவு ஏன்? விஞ்ஞானிகளுள் சிலர், தான் கண்ட கனவின் அடிப்படையில் புதிய கண்டுபிடிப்புகளையும், விஞ்ஞானப் புதிர்களுக்கும் விடை கண்டுள்ளார்கள் என்பது அறிவியல் வரலாறாகும்.

இப்னு சீரீன் அவர்கள் கனவுகளுக்கு திருக்குர்ஆன் மற்றும் நபிமொழி ஆகியவற்றின் அடிப்படையில் அற்புதமாகப் பொருள் கூறியுள்ளார்கள். திருக்குர்ஆன் ஒளியில் அவர்கள் கூறிய விளக்கத்தை யாரும் மறுக்க முடியுமா?

## 58. அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டதா? அறுக்கப்பட்டதா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 171 இல் அறுக்கப்பட்டதை உண்பது என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார் :**

*இவ்வசனங்களில் (திருக்குர்ஆன் 5:3, 6:118,119,121, 22:36) உயிரினங்களை மனிதன் அறுத்து உண்ணலாம் என்று அனுமதிக்கப்படுகிறது. (2வது பதிப்பு)*

**நம் விளக்கம்:**

அவர் காட்டியுள்ள வசனங்களில் 5:4 இல் **உஹில்ல** எனும் சொல்லையும், 6:119,6:120,6:122, 22:36 ஆகிய வசனங்களில் **துஹிர** எனும் சொல்லையும் அல்லாஹ் கூறுயுள்ளான்.

திருக்குர்ஆன் 5:4வது வசனத்தில் **உஹில்ல** எனும் சொல் வருகிறது. **உஹில்ல** என்பது உரத்த குரலில் ஏதாவது ஒன்றைச் சொல்லுதல் என்று பொருள்படும். அரபி மொழி வழக்கில் ஒரு பிராணியைக் குறித்தோ, ஓர் அருள் கொடையினைக் குறித்தோ **அல்லாஹ்வின் பெயரை** அல்லது ஏதாவது ஒரு **தெய்வத்தின் பெயரை சப்தமிட்டு அழைப்பதற்கு இச்சொல் பயன்படுத்தப்**



**-படுகிறது**. உதாரணமாக ஒரு பொருளைக் குறித்து இது அல்லாஹ்வுக்குரியது என்றோ இது இந்தத் தெய்வத்திற்கு உரியது என்றோ சொல்வதாகும். அல்லது (ஒரு பிராணியை) அறுக்கும் போது அல்லாஹ்வின் பெயரையோ ஒரு தெய்வத்தின் பெயரையோ கூறுவதாகும். அல்லாஹ் அல்லாத வேறு ஒருவரின் பெயரால் வைக்கப்பட்ட நேர்ச்சையோ அறுக்கும் போது அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறப்பட்டதோ, விலக்கப்பட்டதாகும்.

எனவே, 2:174; 5:4; 6:146; 16:116 ஆகிய வசனங்களுக்கு அல்லாஹ் அல்லாதோருக்காக அறுக்கப்பட்டவை என்று பொருள் கொள்வதை விட, அல்லாஹ் அல்லாதோரின் பெயர் கூறப்பட்டதை என்று பொருள் கொள்வதே சிறந்ததாகும். இதனால், அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறப்பட்ட நேர்ச்சையும், அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறி அறுக்கப்பட்ட உணவுகளும் அடங்கும்.

அடுத்து அவர் கூறியுள்ள 6:119; 6:120; 6:122; 22:36 ஆகிய வசனங்களில் **துஹிர** எனும் சொல் காணப்படுகிறது. இதற்கும் அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டதை என்றுதான் பொருள். இதனையும் அறுத்து உண்ணுதல் என்று பீ.ஜே கூறுவதனால், ஹலாலான உயிர்களை அறுக்கும் போது அல்லாஹ்வின் பெயர் கூற வேண்டிய தேவை இல்லை என்று பீ.ஜே கருதுகிறாரா?

அல்லாஹ் தன் திருமறையில் அறுத்தல் எனும் நேரடிப் பொருளைத் தரும் மூன்று சொற்களையும் கூறியுள்ளான். **ஸக்கைத்தும்; ஸுபிஹ** எனும் இரு சொற்களையும் 5:4 வசனத்திலும் 2:50, 2:68, 2:72, 27:22, 28:5, 14:7, 37:103, 37:108 ஆகிய வசனங்களில் **ஸுபிஹ** எனும் சொல்லையும் மூன்றாவது **நகர்** என்ற சொல்லை 108:2 வது வசனத்திலும் எடுத்தாண்டுள்ளான்.

இம்மூன்று சொற்களும் அறுத்தல் என்று நேரடிப் பொருளைத் தருகிறது. அதாவது, **ஸக்கைத்தும்** - என்பது பிராணிகளை முறையாக அறுப்பதற்கும் (5:4) **ஸுபிஹ** என்பது,

1) சிலைகளுக்கு அறுத்தல் (5:4)

2) இஸ்ரவேல் சமுதாயம் மாட்டை அறுப்பதற்கும் (2:68, 2:72)

3) பிர்அவ்ன் இஸ்ரவேல் சமுதாயத்தின் ஆண்மக்களை அறுத்ததையும் (2:50, 14:7, 28:5)

4) சுலைமான் நபி ஹுத் ஹுத்தை அறுப்பதற்கும் 27:103, 37:108 பயன்படுத்தப்பட்டுள்ளது.

எனவே, **உஹில்ல, துஹிர** எனும் சொற்கள் வருமிடங்களில் அல்லாஹ்வின் பெயர் கூறி (அறுத்து) உண்ணுங்கள் என்று கூறாமல், உயிரினங்களை அறுத்து உண்ணலாம் என்று கூறியிருப்பது சரியன்று. இவ்வாறு பொருள் கொள்வதன் மூலம் அவர், நான்கு வகையான உணவுகளைத் தவிர (செத்தது, இரத்தம். பன்றிக்கறி, அல்லாஹ் அல்லாதவர்க்காக அறுத்தல்) வேறு எதுவும் விலக்கப்பட்டவை அல்ல என்ற முடிவுக்கு வந்துள்ளார்.(என்பதனை அவரது திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 42 இல் காண்க)

அறுத்தல் என பொருள் கொண்டால் இன்றைய முஸ்லிம்களும் பிற சமுதாய மக்களும் அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறப்பட்டதை அதாவது ரசூலுல்லாஹ் நேர்ச்சை, முஹைதீன் ஆண்டவர் நேர்ச்சை, சிலைகளுக்குப் படைக்கும் சுண்டலும், சூரியனுக்கு படைக்கும் பொங்கல் உணவுகளும் **விலக்கப்பட்டவை அல்ல என்று பொருள் கொள்ள நேரும்.** அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறி அறுக்கப்பட்டவை மட்டும் ஹராம் என்றால் அல்லாஹ் அல்லாதவரின் பெயர் கூறப்பட்ட நேர்ச்சைப் போன்றவை ஹலால் என்று பீ.ஜே கருதுகிறாரா?

அறுத்தல் எனும் செயலும் அல்லாஹ்வுக்காக அறுத்ததை உண்ணுதல், அல்லாஹ் அல்லாதவர்க்காக அறுத்ததை உண்ணாதிருத்தல் என்று பொருள்படும்.



சுருக்கமாக,

1) **உஹில்ல, துஹிர** என்பதற்கு அறுத்தல் என்று பீ.ஜே பொருள் கொள்வதை விட அல்லாஹ்வின் பெயரைக் கூறுதல் என்பதே சிறந்ததாகும்.

2) அறுத்தல் எனும் பொருள் தரக்கூடிய வேறு சொற்கள் திருக்குர்ஆனில் உள்ளன.

3) அல்லாஹ்வின் பெயர் கூறப்பட்டதை உண்ணுங்கள் என்று பொருள் கொண்டால் தான் அல்லாஹ்வின் பெயர் கூறப்படாத நேர்ச்சை, பொங்கல், படையல் எனும் உணவுகள் ஹராம் என்று விளங்கும்.

## 59. அரபி மொழி உலக மொழிகளின் தாய்மொழி

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 244 இல் அவரவர் மொழியில் வேதங்கள் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*இதன் காரணமாகவே ஒரு சமுதாயத்திற்கு தூதராக அனுப்பப்படுபவர் அச்சமுதாயத்தின் மொழியை அறிந்தவராகவே இருக்கிறார் என்று இந்த வசனம் (திருக்குர்ஆன் 14:4) கூறுகிறது.*

**நம் விளக்கம்:**

அவரவர் மொழியில் வேதங்கள் என்று பீ.ஜே கொடுத்துள்ள தலைப்பு தவறாகும். **சமுதாய மொழியில் தூதர்கள்** என்று தான் மொழியாக்கம் செய்திருக்க வேண்டும். திருக்குர்ஆன் 14:4 வது வசனத்தில் “எந்த தூதரையும் அவர் சமுதாயத்துக்கு விளக்கிக் கூறுவதற்காக **அச்சமுதாயத்தின் மொழியிலேயே அனுப்பினோம்**” என்று தான் வருகிறது.

அப்படி என்றால், முழு உலகுக்கும் தூதராக அனுப்பப்பட்ட நபி (ஸல்) அவர்கள் தன் சமுதாய மொழியாகிய அரபி மொழியை அறிந்துள்ளார் என்று ஏற்க வேண்டும். அல்லது இன்று முழு

உலகமும் ஒரு சமுதாயமாக மாறிவிட்டதனால், அத்தனை சமுதாய மக்களின் மொழிகளுக்கும் தாய் மொழியாக அரபி மொழி இருக்கிறது என்று ஏற்றுக் கொள்ள வேண்டும்.

**அரபி மொழிதான் சிறந்த மொழி என்று இஸ்லாம் கூறுவதாக நினைக்கக் கூடாது என்றும் அரபி மொழி தான் சிறந்த மொழி என்று எந்த இடத்திலும் நேரடியாகவோ, மறைமுகவாகவோ திருக்குர்ஆன் கூறவில்லை** என்றும் பீ.ஜே எழுதியுள்ளார். (திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 227) இது தவறாகும்.

1) ஆனால் அனைத்து வேதங்களுக்கும் தாய் வேதம் உம்முல் கிதாப் – திருக்குர்ஆனே ஆகும். இதனை அல்லாஹ் அனைத்து நகரங்களின் தாய் நகரமான – உம்முல் குரா வாகிய புனித மக்கா நகரில் தன் தூதரைத் தோன்றச் செய்து உலகுக்கு அருளினான். அந்தத் தூதரோ அனைத்து நபிமார்களின் தாய் நபியாக – உம்மி நபியாக காத்தமன் நபியாக இருக்கிறார் என்று திருக்குர்ஆன் கூறுகிறது.

எனவே, ஒரு தாய் நபி, தாய் நகரில், தாய் வேதத்தை, உலகின் தாய் மொழியாகிய அரபி மொழியில் கொண்டு வந்துள்ளார்.

இவ்வாறு வேதத்துக்கு தாய் வேதம் இருப்பது போல், நகர்களுக்கு தாய் நகரம் இருப்பது போல், நபிமார்களுக்கு தாய் நபி இருப்பது போல், உலகில் உள்ள மொழிகளுக்கும் ஒரு தாய் மொழி இருக்க வேண்டும். அது அரபியே.

ஒரு பொருள் மிகச் சிறந்தது என்பதற்கு,

1) அது **சிறந்த மூலப் பொருளால்** செய்யப்பட்டிருக்கு வேண்டும்.
2) குறைபாடு இல்லாமல் **சிறந்த முறையில்** உருவாக்கப்பட்டிருக்க வேண்டும்.
3) **அத்தொழிலில் மிகச் சிறந்தவன்** அதனை செய்திருக்க வேண்டும்.



4) அப்பொருள் **மிகச் சிறந்த முறையில் மக்களுக்கு பயன்பட வேண்டும்.**

இவ்வாறே திருக்குர்ஆனும்,

1) மிகச் சிறந்த மொழியில் அதாவது அரபியில்
2) மிகச் சிறந்த கருத்துக்களை கொண்ட தாய் வேதமாக
3) எல்லாம் வல்ல அல்லாஹ்வால்
4) மனித குலம் முழுவதற்கும் பயன்படுவதற்கு அனுப்பப்பட்டுள்ளது

அரபி என்பதற்கு தெளிவானது என்று பொருள். (திருக்குர்ஆன் 13:38) இந்த வசனத்தில் வரும் அரபி எனும் சொல் தெளிவான என்ற பொருளில் தான் எடுத்து ஆளப்பட்டுள்ளது. இதனால் தான் அரபியர்கள் பிற மொழிகளை அஜமி மொழி – தெளிவற்ற மொழி என்று அழைத்தனர். (திருக்குர்ஆன் 16:104)

இதனைத் தான் பீ.ஜே, அரபு மொழி தான் ஒரேமொழி என்றும், மற்ற மொழி பேசுவோர் அஜமிகள் (கால் நடைகள்) என்றும் கூறும் அளவுக்கு அவர்களிடம் அரபுமொழி வெறிமிகைத்திருந்தது என்று எழுதியுள்ளார். (குர்ஆன் அருளப்பட்ட வரலாறு)

உலக மொழிகளின் தாய்மொழிக்கு என்னென்ன இலக்கணம் உண்டோ அவை அனைத்தும் அரபி மொழிக்கு முழுமையாக உண்டு.

1) அரபி மொழியில் ஒரு சொல்லுக்கு இருக்கும் பொருள்கள் போல், பிற மொழியில் இல்லை.
2) ஒரு பொருளை குறிக்கும் அதிகமான சொற்கள் அரபி மொழியில் இருப்பது போல் பிற மொழியில் இல்லை. எடுத்துக்காட்டாக, அரபி மொழியின் வளத்திற்கு இப்பெயர்கள் எடுத்துக்காட்டாகும். பிராணிகளுடைய வயதின் மாதம், ஆண்டுகளுக்கு ஒப்பவும் தனித்தனி பெயர்கள் உண்டு. ஒட்டகத்துக்கு 1000 பெயர்களும், சிங்கத்துக்கு 630 பெயர்களும், பாம்புக்கு 200 பெயர்களும், தண்ணீருக்கு 170 பெயர்களும், மழைக்கு 64 பெயர்களும் உண்டு. இத்தகு

சொல் வளம் பெற்றிருப்பது அரபி மொழியின் பல்வேறு சிறப்புகளில் ஒன்றாகும். (ஆதாரம் : குர்ஆன் தர்ஜமா மவ்லானா எம். அப்துல் வஹ்ஹாப், அடிக்குறிப்பு எண் 76)

3) ஒரு கருத்தைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் திறன் அரபி மொழியில் இருப்பது போல் பிற மொழிக்கு இல்லை.

இதனால் தான் அனைத்து மொழிகளையும் அறிந்த அல்லாஹ் தன் இறுதி வேதத்தை அரபி மொழியில் இறக்கியுள்ளான். இவ்வாறு ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் சமுதாய மொழியாகிய அரபு மொழி உலக மொழிகளின் தாய் மொழியாகி உலகமே ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களின் சமுதாயம் என்பதையும் எடுத்துக் காட்டுகிறது. ஹஸ்ரத் மிர்ஸா குலாம் அஹ்மது (அலை) அவர்களுக்கு இறைவன் "**அரபி மொழியே உலக மொழிகளில் தாய் மொழி**" என்று இல்ஹாம் அனுப்பியுள்ளான். இதன் அடிப்படையில் அவர்கள் **மினனுர் ரஹ்மான்** என்று ஒரு நூல் எழுதி அக்கருத்தை நிரூபித்துள்ளார்கள். தன் தோழர்களிடம் உலக மொழிகளின் தாய் மொழி அரபி மொழி என்பதை உலக மொழிகளுடன் அரபு மொழியை ஒப்பிட்டு அக்கருத்தை நிரூபித்துக் காட்டுங்கள் என்றும் கூறினார்கள். இதனால் ஏறக்குறைய, உலகின் 50-க்கும் மேற்பட்ட சிறந்த மொழிகளுடன் ஒப்பாய்வு செய்து அரபு மொழியே உலகின் தாய் மொழி என்று நிரூபித்துள்ளார்கள்.

## 60. இஞ்சீலும் சபூரும் வேதங்களா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 4-இல் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*தவ்ராத், ஸபூர், இன்ஜீல், திருக்குர்ஆன் இந்த நான்கு வேதங்களின் பெயர்கள் தான் குர்ஆனில் கூறப்பட்டுள்ளன.*

**நம் கேள்வி:**

ஸபூரும் இன்ஜீலும் வேதங்கள் என திருக்குர்ஆன் கூறுகிறதா? திருக்குர்ஆன் அக்கருத்தை மறுக்கிறது. 73:15; 46:13;



46:30; 45:16-18; 6:92; 28:48-49; 61:7 ஆகிய வசனங்கள் அக்கருத்தை மறுப்பதை கீழே காண்போம்.

1) 46:13 - **இதற்கு முன்னர்** மூஸாவின் வேதம் வழிகாட்டியாகவும் கருணையாகவும் விளங்கியது. (குர்ஆனாகிய) இது அநீதியிழைப்பவர்களை எச்சரிப்பதற்காகவும், நன்மை செய்பவர்களுக்கு நற்செய்தி வழங்குவதற்காகவும், (முந்தைய வேதங்களின் முன்னறிவிப்புகளை) உண்மைப்படுத்தக்கூடிய (வகையில்) அரபி மொழியிலுள்ள வேதமாகும். இதில் திருக்குர்ஆன் ஒரு வேதம் என்றும் கூறப்பட்டுள்ளது. இஞ்சீலைப் பற்றியோ, ஸபூரைப் பற்றியோ திருக்குர்ஆன் கூறவில்லை. இதற்கு முன்னர் என்று தவ்ராத் மட்டுமே கூறப்பட்டுள்ளது.

2) 46:30-31 - குர்ஆனை செவியேற்க விரும்பிய ஜின்களுள் ஒரு குழுவினரை நாம் உம்மை நோக்கித் திருப்பிய நேரத்தை (நினைவு கூர்க) அவர்கள் அங்கு (குர்ஆன் ஓதும் இடத்திற்கு) வந்திருந்த போது, (ஒருவருக்கொருவர்) மவுனமாக இரு(ந்து கேளு)ங்கள் என்று கூறினர். அது முடிவடைந்ததும் அவர்கள் தங்கள் சமுதாயத்தினரிடம் அவர்களை எச்சரித்தவர்களாக திரும்பிச் சென்றனர்.

அவர்கள் கூறினர்: சமுதாயத்தினரே! நாங்கள் **மூஸாவுக்குப் பின்னர் இறக்கப்பட்டுள்ள** ஒரு வேதத்தை செவியேற்றுள்ளோம். **அது தனக்கு முன்னுள்ளதை** உண்மைப்படுத்துகின்றதும் உண்மையின் பக்கமும் நேர்வழியின் பக்கமும் வழிகாட்டுகின்றதும் ஆகும்.

இந்த வசனத்தில் **மூஸாவின் வேதத்துக்குப் பின்னர்** திருக்குர்ஆன் தான் வேதம் என்று கூறப்படுவதும், **திருக்குர்ஆனுக்கு முன்னர் வந்த வேதம் என மூஸாவின் வேதம் மட்டும் கூறப்படுவதையும் காண்கிறோம்.** இதில் இஞ்சீலும் ஸபூரும் வேதங்கள் என்று கூறப்படவில்லை.

3) 28:49-50 எம்மிடமிருந்து அவர்களிடம் உண்மை வந்த போது **மூஸாவுக்குக் கொடுக்கப்பட்ட போதனையை போன்றது** இவருக்கு ஏன் கொடுக்கப்படவில்லை என்று அவர்கள் கேட்டனர். **இதற்கு முன்னர் மூஸாவுக்கு** கொடுக்கப்பட்டதை அவர்கள் மறுக்கவில்லையா?.....

நீங்கள் உண்மையாளர்களாயின் **இவ்விரு வேதங்களை விடச்** சிறந்த நேர்வழியினை காட்டும் வேதமொன்றை நான் பின்பற்றுவதற்காக நீங்கள் அல்லாஹ்விடமிருந்து கொண்டு வாருங்கள் என்று நீர் (முஹம்மது நபியே!) கூறுவீராக.

இந்த வசனங்களில் திருக்குர்ஆனுக்கு முன்னர் வந்த வேதம் என்பது மூஸாவுக்கு கொடுக்கப்பட்ட வேதமே என்றும் திருக்குர்ஆனும் தவ்ராத்தும் இரு போதனைகள் என்றும் கூறப்படுகிறது. இதில் ஸபூர், இஞ்சீல் பற்றி வேதம் என்று கூறப்படவில்லை. அதைப் பற்றிய பேச்சே இல்லை என்பதை கவனிக்கவும்.

4) 61:7 -இல் மர்யமின் மகன் ஈஸா தன் சமூகத்தாரிடம் இஸ்ராயீலின் மக்களே! நிச்சயமாக **நான் எனக்கு முன்னர் தவ்ராத்தில்** கூறப்பட்டதை நிறைவேற்றக்கூடியவன் என்று கூறியுள்ளார். இக்கருத்தை 5:47 ஆவது வசனமும் கூறுகிறது. இவ்விரண்டு வசனங்களிலும் ஹஸ்ரத் ஈஸா நபி (அலை) அவர்கள் தவ்ராத்தை உண்மைப்படுத்தக்கூடிய ஒரு தூதராகவே வந்துள்ளார் என்று கூறப்பட்டுள்ளது. இவ்விரண்டு வசனங்களிலும் ஸபூர் என்பது ஒரு வேதம் என்று கூறப்படவில்லை. ஸபூர் என்பது வேதம் என்றால் ஈஸாவுக்கு முன்னர் வந்தது அதுதான். அதனை உண்மைப்படுத்த வந்துள்ளேன் என்று ஈஸா நபி சொல்லியிருப்பார். அவ்வாறு சொல்லாததினாலும் தவ்ராத்தை உண்மைப்படுத்த வந்திருப்பதாக சொல்வதினால் ஸபூர் ஒரு வேதம் இல்லை என்பது தெளிவாகிறது.

5) 73:16 நாம் ஃபிர்அவ்னிடம் ஒரு தூதரை அனுப்பியது போன்று நிச்சயமாக நாம் உங்களுக்குச் சாட்சியாக இருக்கக்கூடிய



ஒரு தூதரை உங்களிடம் அனுப்பியுள்ளோம். இதில் நபி (ஸல்) அவர்களுடன் தாவூது நபியோ, ஈஸா நபியோ கூறப்படாததினால் இருவரும் வேதமுடைய நபிமார்கள் இல்லை என்று அறிக!

6) 6:93 நாம் இறக்கிய இந்த மறை (திருக்குர்ஆன்) அருள் நிறைந்ததாகும். **இது தனக்கு முன்னுள்ளதை முழுமைப்படுத்தக் கூடியது.** இதில் தவ்ராத் மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஸபூரும் இன்ஜீலும் குறிப்பிடப்படவில்லை.

7) 5:111 வது வசனத்தில், நான் உமக்கு - ஈஸா நபிக்கு - வேதத்தையும் ஞானத்தையும் தவ்ராத்தையும் இஞ்சீலையும் கற்றுக் கொடுத்ததையும் (நினைத்துப்பாரும்). இவ்வசனத்தில் தவ்ராத் வேதம் என்றும் இஞ்சீல் ஞானம் என்றும் விளங்குகிறது. 43:65 -இல் நான் உங்களுக்கு ஞானத்தைக் கொண்டு வந்திருக்கிறேன் என்று தான் கூறுகிறார். இதன் மூலம் தவ்ராத் வேதத்தின் ஞானத்தை அதாவது இஞ்சீலை கொண்டு வந்துள்ளேன் என்று விளங்குகிறது. 57:27 -இல் மர்யமின் குமாரர் ஈஸாவை (அவர்களைத்) தொடரச் செய்து, அவருக்கு இஞ்சீலைக் கொடுத்தோம். 3:4; 3:49 - அவருக்கு (ஈஸாவுக்கு) வேதத்தையும் ஞானத்தையும் தவ்ராத்தையும் இஞ்சீலையும் கற்றுக் கொடுப்பான் என்று வருகிறது. இதில் வேதம் என்பது தவ்ராத்தையும், ஞானம் என்பது இன்ஜீலையும் குறிக்கிறது.

8) 45:17 நிச்சயமாக நாம் இஸ்ராயீலின் மக்களுக்கு வேதத்தையும் ஆட்சியையும் நபித்துவத்தையும் வழங்கினோம். இதற்கு விளக்கமாக 5:45 -இல் நிச்சயமாக நேர்வழியும் ஒளியும் பெற்றிருந்த **தவ்ராத்தை இறக்கினோம்.** (நமக்கு) கட்டுப்பட்டு நடந்த **நபிமார்கள்** அதனைக் கொண்டு யூதர்களுக்கு தீர்ப்பு வழங்கினர்.

எனவே வேதம் என்பது தவ்ராத் என்பதும் இஸ்ரவேலில் வந்த ஈஸா நபியும் உட்பட எல்லா நபிமார்களும் இதனையே பின்பற்றி போதித்தனர் என்பதும் தெளிவாகிறது.

9) வேதம் எனும் பொருளைத் தரும் அரபிச் சொல் கிதாப் என்பதாகும். இச்சொல் ஹஸ்ரத் மூஸா (அலை), ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) ஆகிய நபிமார்களுக்குத்தான் வருகிறது. அதாவது மூஸாவுக்கு ஒரு கிதாபை - வேதத்தைக் கொடுத்தோம் என்றும், முஹம்மதுக்கு ஒரு கிதாபை கொடுத்தோம் என்றும் திருக்குர்ஆன் கூறுகிறது. திருக்குர்ஆனில் எங்கும் தாவூதுக்கு ஒரு கிதாபைக் கொடுத்தோம்; ஈஸாவுக்கு ஒரு கிதாபைக் கொடுத்தோம் என்று கூறப்படாததினால் ஸபூரும் இஞ்சீலும் வேதம் இல்லை என்றும் தெளிவாகிறது.

10) வேதம் எனும் பொருளைத்தரும் இன்னொரு சொல் சுஹ்ஃபு ஆகும். இச்சொல்லும் ஹஸ்ரத் இப்ராஹீம் (அலை) (87:20), ஹஸ்ரத் மூஸா (அலை) (53:37), ஹஸ்ரத் முஹம்மது (ஸல்) (98:3 ; 80:14-15) ஆகிய நபிமார்களுடன் தான் வருகிறது. ஹஸ்ரத் தாவூது (அலை), ஹஸ்ரத் ஈஸா (அலை) ஆகிய நபிமார்களுடன் வரவில்லை. 53:37 இல் மூஸாவின் வேதத்திடம், 87:20-இல் இப்ராஹீம், மூஸா ஆகியோர்களின் வேத நூல்களில் உள்ளது. 98:3 -இல் தூய வேதம் என்று திருக்குர்ஆனும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு ஸபூரும் இஞ்சீலும் சுஹ்பு என்று கூறப்படவில்லை. ஆனால் ஹஸ்ரத் இப்ராஹீம் நபிக்கு சுஹ்பு கொடுக்கப்பட்டதாக 87:20 வது வசனம் கூறுகிறது. எனவே ஸபூரும் இன்ஜீலும் வேதம் இல்லை.

11) 35:26; 3:185 வசனத்தில் சுபுர் எனும் சொல் வேதத்தைக் குறிக்காது என்பது விளங்குகிறது. 3:185 -இல் உமக்கு முன்னர் தெளிவான ஆதாரங்களிலும் ஆகமங்களையும் (சுபுர்) ஒளிமயமான வேதத்தையும் கொண்டு வந்த நபிமார்களும் பொய்யாக்கப்பட்டனர். இதில் கிதாப் - வேதம் என்றும் சுபுர்-ஆகமம் என்றும் வருகிறது. இதே கருத்து 35:26 -இல் சுபுர் என்பதும் கிதாப் என்பதும் வந்து இரண்டும் வெவ்வேறானவை என்று விளக்குகிறது.

4:164; 17:56; 21:106 எனும் வசனங்கள் தாவூது நபிக்கு நாம் ஸபூரை வழங்கினோம் என்று வருகிறது. இந்த ஸபூர் என்னும் சொல் தாவூது நபிக்கு வழங்கப்பட்ட வேத நூல் இல்லை என்றும்,



அவை ஞான நூல்களைக் குறிக்கும் என்றும் 3:185; 35:26 ஆகிய வசனங்களிலிருந்து விளங்கிக் கொள்கிறோம். **இதற்கு முன் வந்த தூதர்கள் ஸபூரையும், ஒளிமயமான வேதத்தையும் கொண்டு வந்தனர்** என்று 35:26 ; 3:185 ஆகிய திருக்குர்ஆன் வசனங்கள் கூறுகின்றன. இதில் **வேதமும் ஸபூரும் தனித்தனியாக கூறப்படுவதால்** ஸபூர் வேதம் இல்லை என்று தெரிகிறது.

12) 21:49 - நாம் மூஸாவுக்கும் ஹாரூனுக்கும் பிரித்தறிவிக்கும் அடையாளத்தையும் ஒளியையும் இறையச்சம் உடையவர்களுக்கு **ஞாபகமூட்டும் போதனைகளையும்** வழங்கினோம். இதில் தவ்ராத் மட்டுமே ஃபுர்கான் என்றும், திக்ர் என்றும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு **ஃபுர்கான், திக்ர் என்று ஸபூரும் இஞ்சீலும் கூறப்படவில்லை.** தவ்ராத்தும் திருக்குர்ஆனுமே கூறப்பட்டுள்ளதால் அவை வேதங்கள் என்று அறிக!

13) திருக்குர்ஆன் 3:51 ; 5:47 ; 61:7 ஆகிய வசனங்களில் ஈஸா நபி பற்றி வரும்போது அவர் தவ்ராத்தை மெய்ப்பிக்க வந்தவர் என்று கூறப்பட்டிருப்பதால், அவர் வேதமுடைய நபி இல்லை என்றும், வேதத்தை மெய்ப்பிக்க வந்த நபி என்றும் தெளிவாகிறது. மேலே கூறப்பட்டவற்றை தொகுத்துப் பார்த்தால், தவ்ராத்தும் திருக்குர்ஆனும் வேதங்கள் என்றும், சபூரும் இஞ்சீலும் வேதங்கள் இல்லை என்றும் உறுதியாகிறது.

## 61. தனி எழுத்துக்களுக்கு பொருள் உண்டா? இல்லையா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 2 இல், பொருள் செய்ய முடியாத எழுத்துக்கள் என்னும் தலைப்பில் பி.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*தனித்தனி எழுத்துக்களுக்கு எந்த மொழியிலும் பொருள் செய்ய முடியாது என்பதை நாம் அறிவோம். உதாரணமாக, SUN (சன்) எனக் கூறினால் இதற்குப் பொருள் கூற முடியும்.*

*(SUN) என தனித்தனியாகக் கூறினால் மூன்று எழுத்துக்களைக் கூறியுள்ளோம் என்பதைத் தவிர இதற்கு எந்த அர்த்தமும் இருக்காது.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆனில் அலிஃப், லாம், மீம், ரா போன்ற தனி எழுத்துகளுக்கு பொருள் இல்லை என்று பி.ஜே கூறுகிறார்.

1) பி.ஜே–ன் தாய் மொழி தமிழ். இதில் ஓரெழுத்து ஒரு மொழி என 42 எழுத்துக்கள் உள்ளன. இவை தனித்தனி எழுத்துக்கள் ஆகும். இந்த தனித்தனி எழுத்துக்களை மொழி எனக் கூறுவதன் மூலம் இலக்கண ஆசிரியர் பவணந்தி அடிகள் அந்த 42 எழுத்துக்களுக்கும் பொருள் உண்டு என்று கூறுகிறார். உதாரணமாக, ஆ = பசு ; ஈ = ஒரு பூச்சி, ஊ = இறைச்சி ; ஏ = அம்பு ; ஐ = தலைவன்.

2) பி.ஜே எடுத்துக்காட்டியுள்ள **ஆங்கிலத்தில்** தனித்தனி எழுத்துக்களுக்கு பொருள் உண்டு என்பதை ஆயிரக்கணக்கான எடுத்துக்காட்டுகள் மூலம் நிரூபிக்கலாம். P.J. என்ற தனித்தனி எழுத்துக்களுக்கு பொருள் இல்லாமலா? அவர் பி.ஜே என்று அழைக்கப்படுகிறார். NEWS என்ற சொல் N.E.W.S என்ற நான்கு தனித்தனி எழுத்துக்கள் என்பதையும் அவை வடக்கு, கிழக்கு, மேற்கு, தெற்கு எனும் நான்கு திசைகளைக் குறிக்கும் சொற்களின் முதல் எழுத்து என்றும் அறிவோம். அதாவது **N**ORTH, **E**AST, **W**EST, **S**OUTH என்ற சொற்கள்.

பி.ஜே - E.S.L.C, S.S.L.C., B.A. என்பதில் ஏதாவது ஒன்றை படித்திருப்பார் என்று நம்புகிறோம். இந்த பட்டங்களில் வரும் தனித்தனி எழுத்துக்களுக்கு பொருள் உண்டு என்பதை கற்றோர் ஒப்புக் கொள்வர். SABENA – இது ஜப்பான் விமான நிறுவனம் ஒன்றின் பெயர். இதற்கு ஏன் இப்பெயர் வந்தது? ஒருமுறை இந்த நிறுவன விமானம் விபத்தில் சிக்கி பைலட் உட்பட அனைவரும் மாண்டனர். இனி இதுபோன்ற அசம்பாவிதம் நடக்கக் கூடாது என்று



குறிக்கும் வகையில், **S**uch **A** **B**loody **E**xperience **N**ever **A**gain என்ற சொற்களில் முதல் எழுத்துக்களைக் கொண்டு பெயரிட்டனர்.

மேலும் பொருள் செய்ய முடியாத எழுத்துக்களைக் கொண்டு ஆரம்பமாகும் அத்தியாயங்கள் 29 உள்ளன என்று கூறி அதில் 68வது அத்தியாயத்தையும் அவர் எழுதியுள்ளார். ஆனால் 68வது அத்தியாயத்தின் ஆரம்ப எழுத்தாகிய நூன் என்பதற்கு பொருள் உண்டு எனத் திருக்குர்ஆன் தப்ஸீர்களில் கூறப்பட்டுள்ளன. மவ்லானா M. அப்துல் வஹ்ஹாபின் திருக்குர்ஆன் தர்ஜுமாவில் அடிக்குறிப்பு 382 –ல் அவர், நூன் என்பது ஹுருபுல் முகத்தஆத் என்று பொதுவாகச் சொல்லப்பட்டாலும் இது மைக்கூட்டைக் குறிக்கிறது என்ற கருத்தும் உண்டு என்று எழுதுகிறார்.

திருக்குர்ஆனை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த யூசுப் அலி அவர்கள் தன் அடிக்குறிப்பில், நூன் என்பது மீனையோ மைக்கூட்டையோ குறிக்கும் என எழுதுகிறார்.

தப்ஸீருல் ஹமீதில், அல்லாமா முஹம்மது அப்துல் காதிர் பாகவி, இந்த எழுத்து, அல்லாஹ்வின் திருப்பெயரைக் குறிக்கலாம் எனவும், மேலும் நூன் என்பதற்கு மீன் என்பது ஒரு பொருள். இதனை இறைவன் கூறி, ஹஸ்ரத் யூனுஸ் அலைஹிஸ்ஸலாம் அவர்களை விழுங்கிய மீனை நினைவூட்டியுள்ளான் என்றும் எழுதுகிறார்.

திருக்குர்ஆன் 68:49 –இல், மீன் மனிதரைப் போன்று நீர் ஆகி விடாதிருப்பீராக என்று இறைவன் கூறுகிறான். அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் தப்ஸீர் மற்றும் தர்ஜுமாக்களில் இந்த தனித்தனி எழுத்துக்கள் அத்தனையும் அல்லாஹ்வின் திருப்பெயர்களின் சுருக்கெழுத்து என்றும், சில நபி (ஸல்) அவர்களின் பெயர்களின் சுருக்கெழுத்து என்றும் கூறப்பட்டுள்ளது. அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் தர்ஜுமாவில் நூன் என்பது மைக்கூட்டைக் குறிக்கும் எழுத்தாகும் என்று எழுதப்பட்டுள்ளது.

அடுத்து பி.ஜே தலைப்பில் கூறியிருப்பது போல், **பொருள் செய்ய முடியாத எழுத்துக்கள்** என்றால், பொருள் செய்ய முடியாத – பொருள் இல்லாத சொற்களை இறைவன் ஏன் கூற வேண்டும்? மனிதனால் உருவாக்கப்பட்ட இலக்கியத்தில் இவை போன்ற பொருள் அற்ற சொற்கள் இடம் பெறலாம். ஆனால் **இறைவனுடைய நூலில் பொருள் செய்ய முடியாத, பொருள் இல்லாத சொற்கள் ஏன் இடம்பெற வேண்டும்? இப்படி வேண்டாத வீணான வேலையை இறைவன் செய்வானா?** ஒரு எழுத்து முதல் 5 எழுத்துக்கள் வரை அந்த 29 அத்தியாயங்களில் வந்துள்ளனவே! அல்லாஹ் வீணான வேலையைச் செய்துள்ளான் என்று பீ.ஜே கருதுகிறாரா?

அல்லாஹ் தன் திருமறையில் 96:5-6 -இல் அவனே எழுதுகோலைக் கொண்டு கற்றுத் தந்தான்; அவன் மனிதனுக்கு அவன் அறியாததைக் கற்றுக் கொடுத்தான் என்றும் கூறுகின்றான். எனவே அல்லாஹ் பொருள் செய்ய முடியாதவற்றை அதாவது மனிதன் அறியாதவற்றை கூறியிருக்கிறான் என்ற வாதம் தவறாகும்.

மொழி என்பது மனிதன் தன் கருத்துக்களை பிறருக்கு எடுத்துக் கூறுவதற்கு பயன்படக் கூடியதாகும். **ஒருவன் பொருள் அற்ற சொற்களைக் கூறினால் அதனை உளறல் என்கிறோம். எல்லாம் அறிந்த இறைவன் இந்த வேலையைச் செய்வானா? அல்லாஹ் உளறியிருக்கிறான் (நவூது) என்று பீ.ஜே கருதுகிறாரா?**

**பி.ஜே எழுதுகிறார்:**

*அன்றைய அரபு பண்டிதர்களிடம் ஒரு வழக்கம் இருந்தது. உயர் தரமான இலக்கியங்களைப் படைக்கும் போது துவக்கத்தில் ஓரிரு எழுத்துக்களைப் பயன்படுத்தி வந்தனர்... என்றும், அன்றைக்கு இது அரபிகளிடம் சர்வ சாதாரணமாக இருந்து வந்த ஒரு வழக்கம் என்ற அளவுக்கு இதைப் புரிந்து கொள்வதே போதுமானதாகும் என்றும் எழுதுகிறார்.*



நாம் கேட்கிறோம். **அன்றைய அரபு பண்டிதர்கள் எல்லாரும் இவர் கூறுவது போல் பொருள் இல்லாதபடி எழுத்துக்களைப் பயன்படுத்தி வந்தனர் என்று நிரூபித்துக் காட்ட முடியுமா?** ஒரு சாதாரண கவிஞன் மனிதன் என்ற முறையில் பொருள் இல்லாத எழுத்துக்களைக் கூறியிருக்கலாம்! ஆனால், இறைவன் பொருளற்ற எழுத்துக்களைக் கூறியுள்ளான் என்று எண்ணுவது எவ்வளவு அறியாமை! இதனால்தான் எல்லா தப்ஸீர்களிலும் இந்த எழுத்துக்களின் பொருளை அல்லாஹ்வே அறிவான் என்று எழுதியுள்ளனர். அதாவது, இந்த எழுத்துக்களுக்கும் பொருள் உண்டு. அது, எங்கள் அறிவுக்கு எட்டவில்லை. அல்லாஹ்வே நன்கறிவான் என்று எழுதியுள்ளனர். இந்தக் கருத்தை ஏற்றுக் கொள்ளலாம். இருந்தாலும் ஒரு மனிதனுக்கும் பொருள் தெரியாத சொற்களை அல்லாஹ் ஏன் மனிதர்களுக்கு அனுப்பிய வேதத்தில் கூறியுள்ளான் என்ற கேள்வி எழும்!

தாவீதின் சங்கீதத்தில் 119வது அதிகாரத்தில் ஹீப்ரு எழுத்துக்கள் தனித்தனி எழுத்துக்களாக 21 இடங்களில் வருகின்றன. இவை இந்த அதிகாரத்தில் 1 முதல் 176 வசனங்களின் இடையிடையே வந்துள்ளன. எடுத்துக்காட்டு : 137வது வசனத்தின் ஆரம்பத்தில் ஸாது என்னும் எழுத்தும், 121வது வசனத்தில் அய்ன் என்னும் எழுத்தும், 73வது வசனத்தில் யா என்னும் ஹீப்ரு எழுத்தும் வந்துள்ளன. இந்த தனித்தனி எழுத்துக்களுக்கு பொருள் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறே திருக்குர்ஆனில் ஸாத் எனும் ஓர் எழுத்து ஒரு சூராவின் ஆரம்பத்திலும் காஃப் எனும் ஓர் எழுத்துக்கள் ஒரு சூராவின் ஆரம்பத்திலும் வருகிறது. யாஸீன், தாஸீன், தாஹா எனும் இரண்டு தனி எழுத்துக்கள் மூன்று தனித்தனி சூராக்களில் வருகிறது. ஹாமீம் என்ற இரு தனி எழுத்துக்கள்**7 சூராக்களில்** வருகிறது. அலிஃப், லாம், மீம் என்ற மூன்று தனி எழுத்துக்கள் **6 இடங்களிலும்,** அலிஃப், லாம், மீம், ரா என்ற நான்கு தனி எழுத்துக்கள்

**5 இடங்களிலும்,** அலிஃப், லாம், மீம், ஸாது என்ற நான்கு எழுத்துக்கள் **4 இடங்களிலும்**, காஃப், ஹா, யா, அய்ன், ஸாது எனும் ஐந்து தனி எழுத்துக்கள் ஒரேயொரு சூராவிலும் வருகிறது. இவ்வாறு **குறிப்பிட்ட சில எழுத்துக்கள் குறிப்பிட்ட சில அதிகாரங்களின் ஆரம்பத்தில் ஒரே சீராக வருவது அதற்கு பொருள் உண்டு என்பதையே காட்டுகிறது. இல்லை எனில் 29 நீங்கலாக ஏனைய சூராக்களில் தனித்தனி எழுத்துகள் ஏன் இடம் பெறவில்லை? 14 எழுத்துகள் நீங்கலாக ஏனைய எழுத்துகள் ஏன் தனித்தனி எழுத்துக்களாக வரவில்லை?**

அல்முக்தஃபி கலீஃபாவாக இருந்த போது அவரின் மகன் அல் முஸ்தன்ஜித் ஒரு கனவு கண்டார். அதில் வானவர் போன்ற ஒரு உருவினர் விண்ணிலிருந்து இறங்கி வந்து அவருடைய சட்டைக் கையில் கே (KHE) என்ற எழுத்தை நான்கு முறை எழுதினார். கனவுக்கு விளக்கம் கேட்க தாங்கள் ஹிஜ்ரி 555 –ல் கலீஃபாவாக ஆவீர்கள் என்று பொருள் கூறப்பட்டது. அவ்விதமே அவரது வாழ்க்கையில் நடந்தது. 4 கேகளின் விளக்கம்: 1) கிலாஃபத் 2) கம்ஸா 3) கம்ஸீன் 4) கம்ஸமியா அதாவது ஐந்து, ஐம்பது, ஐநூறு என்பதாகும். (அப்துர் ரஹீம் எழுதிய இஸ்லாமியக் கலைக்களஞ்சியம்)

பார்வையற்றவர்கள் பிரெய்லி மொழியின் மூலம் படித்துப் பட்டம் பெற்று பாடம் நடத்துகிறார்கள். புள்ளிகளை விரல்களால் தடவி அம்மொழி கற்கப்படுகிறது. மனிதன் கண்டுபிடித்த புள்ளிகளே பேசும் என்றால், அல்லாஹ்வின் எழுத்துக்களை ஊமை என்பதா? டி.வி. நிகழ்ச்சியில் வாசிக்கும் செய்தியை சைகை மூலம் செவிட்டு ஊமையர்களுக்கு காட்டுகிறார்கள். அவர்கள் அச்செய்தியை கைகளின் அசைவுகளிலிருந்தும் உதட்டின் அசைவிலிருந்தும் விளங்கிக் கொள்கிறார்கள். வாகன ஓட்டிகள் இரவிலும் பகலிலும் சாலையின் போக்கையும் நிலையையும் சாலையின் ஓரத்திலுள்ள குறியீடுகளைக் கொண்டு அறிந்து கொள்கிறார்கள். மனிதன் தன் குறியீடுகள் மூலம் செய்திகளைத் தெரிவிக்கும் போது, இறைவன் தன்



எழுத்துக்களை அர்த்தமின்றி பயன்படுத்தியுள்ளான் என்பதை விட அர்த்தமற்ற உளறல் உண்டா?

மேலே கூறப்பட்ட செய்திகளிலிருந்து இறைவன் தனித்தனி எழுத்துக்களை அர்த்தமின்றி அமைக்கவில்லை என்பதை விளங்கிக் கொள்கிறோம். எறும்புகள் பேசுவதில்லை. அவை பொருள்படப் பேசினால் அவை எறும்புகள் இல்லை. பறவைகள் பேசுவதில்லை. சாதாரண மனிதனையும் மிஞ்சி பொருள்பட பேசினால் அவை பறவையும் இல்லை என்றாலும் பி.ஜே எறும்பும் பறவையும் பேசும் என்று நம்புகிறார். ஆனால் அனைத்தையும் அகிலத்திற்கு கற்றுத்தரும் இறைவன் அலிஃப், லாம், மீம் என்ற தனி எழுத்துக்களை அர்த்தமில்லாமல் எழுதியுள்ளான் என்று நம்புவது முரண்பாடாகத் தெரியவில்லையா? அல்லாஹ்வின் எழுத்துக்களுக்கு பொருள் இல்லை என்று கூறும் பி.ஜே, கியாமத் நாளில் வெளிப்படும் தாப்பா மனிதனிடம் பேசும் என்கிறார்.

சொல் என்பதற்கு தமிழ் இலக்கணம் தரும் இலக்கணம் என்னவென்றால், எல்லாச் சொற்களும் பொருள் தருவன என்பதாகும். ஒரு சொல் என்றால் பொருள் இருக்க வேண்டும். பொருள் தரக்கூடியதே சொல் ஆகும். ஒரு எழுத்து பொருள் தந்தால் அதுவும் மொழியாகும். மனித மொழி இப்படியிருக்க, இறை மொழியில் பொருளற்றவை உள்ளன என்பது அறிவீனமாகத் தெரியவில்லையா?

பொருள் அற்ற எழுத்துக்களை அரபிக் கவிஞர்களும் திருக்குர்ஆனும் எடுத்தாண்டுள்ளது என்று கூறும் பீ.ஜே உலகின் பல மொழிகளில் சிறந்த இலக்கியங்களில் இதைப் போன்ற ஒரு உத்தி உள்ளது என்று பீ.ஜே எடுத்துக் காட்ட முடியுமா? அவ்வளவு ஏன், இஸ்லாத்தின் அரபு இலக்கியங்களில் நபிமொழித் தொகுப்புகளில், கவிஞர்களின் படைப்புகளில் திருக்குர்ஆனின் இந்த இலக்கிய உத்தி காணப்படுகிறது என்று பீ.ஜே காட்ட முடியுமா? பீ.ஜே அரபிக் கவிதை எழுதிக் காட்டினால் தான் உண்டு.

**மேலும் திருக்குர்ஆன் 52:35 இல்,**

அவர்கள் உண்மையாளர்களாக இருந்தால் இதைப் போன்ற ஒரு வசனத்தைக் கொண்டு வரட்டும் என்று அல்லாஹ் அறைகூவல் விடுக்கிறான். 29 அதிகாரங்களில் உள்ள பொருள் இல்லாத எழுத்துக்கள் என்றால், இதோ! 29 வசனங்களை கொண்டு வந்திருக்கிறோம் என்று ஏதோ 29 தனி எழுத்துக்களைக் காட்ட முடியாதா? அவை ஒரு எழுத்தைக் கொண்டிருந்தாலும் அதுவும் ஒரு வசனமாகவே எண்ணப்படுகிறது.

ஆனால் பி.ஜே, **அன்றைய அரபு பண்டிதர்களிடம் ஒரு வழக்கம் இருந்தது. உயர் தரமான இலக்கியங்களைப் படைக்கும் போது துவக்கத்தில் ஓரிரு எழுத்துக்களைப் பயன்படுத்தி வந்தனர் என்று எழுதுகிறார்.**

**எனவே அனைத்து அரபு இலக்கியங்களையும் மிஞ்சி நிற்கின்ற திருக்குர்ஆன், தன்னைப் போல் எவராலும் உருவாக்க முடியாது என்று அறைகூவல் விடுக்கின்ற திருக்குர்ஆன் – அதே வழியைக் கையாண்டு அறைகூவல் விடுத்தது** என்று எழுதுகிறார். பொருள் இல்லாத எழுத்துக்களை அத்தியாயத்தின் ஆரம்பத்தில் எழுதுவது அரபு இலக்கிய உத்தி என்றால், இதில் எப்படி திருக்குர்ஆன் ஏனைய அரபு இலக்கியங்களை மிஞ்சி நிற்க முடியும்?

திருக்குர்ஆன், அரபு எழுத்துக்களில் 28-ல் பதினான்கு எழுத்துக்களை அதாவது அலிப், லாம், மீம், ரா, தா, ஹா, ஸீன், யா, ஸாத், காப், நூன், ஹா, அய்ன் போன்ற 14 எழுத்துக்களை, தனி எழுத்தாக எடுத்தாள்கிறது. ஏனைய எழுத்துக்களைப் பயன்படுத்தவில்லை. ஒரு அரபி கவிஞன் 28 எழுத்துக்களையுமே எடுத்தாண்டிருந்தால் அக்கவிதை தானே மிஞ்சி நிற்க முடியும்?

திருக்குர்ஆன் ஹாமீம் எனும் இரு எழுத்துக்களை 40 முதல் 46வது சூராக்கள் வரை அதாவது 7 அத்தியாயங்களில் கையாள்கிறது. பொருள் அற்ற இரு எழுத்துக்களை ஒரு கவிஞன்



அவ்வாறு கூறாமல் 7 இடங்களுக்கு அதிகமாகக் கூறியிருந்தால் எது மிஞ்சி நிற்கும்?

அடுத்து குறிப்பிட்ட 14 எழுத்துக்களை மட்டும் திருக்குர்ஆன் தனி எழுத்துகளாக எடுத்தாள்வதும் ஒரு சில எழுத்துக்களை பல அத்தியாயங்களில் திரும்பத் திரும்ப எடுத்தாள்வதும் அந்த எழுத்துக்களுக்கு பொருள் இருக்கிறது என்பதைக் காட்டவில்லையா? அவ்வாறு பொருள் இல்லையென்றால் அரபி மொழியின் அத்தனை எழுத்துக்களையும் ஏன் கூறவில்லை? ஒரு சில எழுத்துக்கள் பல அத்தியாயங்களில் திரும்பத் திரும்ப கூற வேண்டிய தேவை என்ன?

ஆங்கிலத்திலும் சுருக்கொழுத்துக்கள் பல்லாயிரம் உள்ளன. அவை திருக்குர்ஆனின் தனி எழுத்துக்களுக்கு பொருள் உள்ளது என்பதை நிரூபிக்கின்றன. ஒவ்வொரு தனி எழுத்துக்கும் பொருள் உண்டு. விபரம் அறிய அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத்தின் திருக்குர்ஆன் தமிழாக்கத்தில் காண்க. எனவே திருக்குர்ஆனின் தனி எழுத்துக்களுக்குப் பொருள் உண்டு. இல்லை என்பது சரியில்லை.

# XIII. நாஸிக் மன்சூக்

## 62. திருக்குர்ஆனில் நாஸிக் மன்சூக்

**பீ.ஜே திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 30 இல், இறைவசனம் மாற்றப்படுதல் என்னும் தலைப்பில் இவ்வாறு எழுதுகிறார்:**

*இறைவன் அருளிய வசனத்தை இறைவன் ஏன் மாற்ற வேண்டும்? அவனுக்குத் தான் அனைத்தும் தெரியுமே? மாற்றுவதற்கு அவசியம் ஏற்படாத வகையில் சரியாகக் கூறி விட வேண்டியது தானே? என்று இவ்வசனங்களை வாசிக்கும் சிலர் நினைக்கலாம்.*

*இது இறைவனின் அறியாமையைக் குறிக்காது. அவனது அளவற்ற அறிவையே குறிக்கும் என்பதை அவர்கள் விளங்கிக் கொள்ள வேண்டும்.*

*வரலாறுகளிலும் வாக்குக் கொடுப்பதிலும் தான் முன் சொன்னதை மாற்றிக் கொள்ளக் கூடாது. சட்டதிட்டங்களைப் போடும் போது இருக்கின்ற சூழ்நிலைக்கு ஏற்பத்தான் சட்டம் போட வேண்டும். சூழ்நிலை மாறிய பின் சட்டத்தை மாற்றாவிட்டால் தான் அறியாமை ஆகும்.*

*நெருக்கடியான நேரத்தில் அரசுகள் ஊரடங்கு உத்தரவு பிறப்பிக்கும். நெருக்கடி நீங்கியதும் ஊரடங்கை விலக்கிக் கொள்ளும். ஏற்கனவே ஊரடங்கு பிறப்பிக்கப்பட்டதால் அதையே தொடர்வதும் அறிவுடைமையாகாது அல்லது நெருக்கடியான நேரம் வரும் போதும் ஊரடங்கு உத்தரவு போட மாட்டேன் என்று பிடிவாதம் பிடிப்பதும் விவேகமல்ல.*

*ஒரு தாய் இரண்டு வயதுப் பாலகனுக்குச் சில உணவுகளை மறுப்பாள். சாப்பிடக் கூடாது எனத் தடுப்பாள். அதே குழந்தை 10 வயதை அடையும் போது முன்பு தடுத்த உணவை உண்ணுமாறு கூறுவாள். இவ்வாறு கூறும் நிலை ஏற்படும் என்பது அவளுக்கு ஏற்கனவே தெரியும். இங்கு குழந்தையின் நிலை தான் மாறியதே தவிர தாயின் அறிவில் எந்த மாற்றமும் ஏற்படவில்லை.*

*மக்காவில் உயிர் வாழ்வதே பெரும் பிரச்சனையாக இருக்கும் போது திருடினால் கையை வெட்டுங்கள் எனக் கூற முடியாது. கூறினால் அதற்கு அர்த்தம் இருக்காது. ஆட்சி அதிகாரம் முஸ்லிம்களின் கையில் வந்த பிறகு தான் இந்தச் சட்டத்தை போட முடியும். எனவே, மாறும் சூழ்நிலைக்கு ஏற்ப சட்டங்கள் வழங்குவது தான் அறிவுடைமை.*

*ஒரு நிகழ்ச்சி 2002 - ல் நடந்தது எனக் கூறி விட்டு 1967 - ல் அந்த நிகழ்ச்சி நடந்தது என்று இன்னொரு நாள் கூறக் கூடாது. ஏனெனில் இது வரலாறு. நடந்ததை மாற்ற முடியாது. இத்தகைய மாறுதல் ஏதும் திருக்குர்ஆனில் இல்லை. சில சட்டங்களில் மட்டுமே இத்தகைய நிலை உள்ளது. (பார்க்க திருக்குர்ஆன் 2:106, 13:39, 16:101).*



**நம் விளக்கம்:**

1) திருக்குர்ஆனின் முன்பு வந்த சில சட்டங்களை பின்னர் வந்த சில சட்டங்கள் மாற்றி விட்டது என்று பீ.ஜே கருதுகிறார். இவருடைய கணிப்பில் சில சட்டங்கள் திருக்குர்ஆனில் இருப்பதாக வைத்துக் கொண்டால் இமாம் சூயூத்தி (ரஹ்) நாஸிக் மன்சூக் வசனங்கள் 20 மட்டுமே என்று கருதுகிறார். சுமார் 500 சட்டங்கள் மாற்றப்பட்டிருப்பதாக முன்னோர்கள் கூறியுள்ளனர். ஹஸ்ரத் சாஹ் வலியுல்லாஹ் தஹ்லவி (ரஹ்) ஐந்து வசனங்கள் என்று கூறுகிறார். (ஆதாரம் : ஜவாஹிருல் குர்ஆன் 2:106 வசனத்தின் அடிக்குறிப்பு)

ஆக, 5 முதல் 500 வசனங்களின் சட்டங்கள் மாற்றப்பட்டுள்ளன எனலாம். 500 வசனங்களை ஒவ்வொரு காலகட்டத்திலும் யாரோ சில மார்க்க அறிஞர்கள் இவை நீக்கிய சட்டங்கள், நீக்கப்பட்ட சட்டங்கள் இல்லை என்று குறைத்துக் கொண்டே வந்துள்ளார்கள். கடைசியில் ஐந்து வசனங்களில் வந்து முடிந்தது. இது எதை காட்டுகிறது என்றால் திருக்குர்ஆனின் வசனங்களுக்கு தவறான பொருளை கற்பித்து இந்த வசனம் மாற்றப்பட்ட வசனம், இது மாற்றிய வசனம் என்று யாரோ சிலர் செய்து விட்டார்கள் என்று தெரிகிறது. இந்த வசனங்கள் எல்லாம் அல்லாஹ்விடமிருந்து ஜிப்ரீல் மூலம் நபி (ஸல்) அவர்களுக்கு வந்தவை. அவற்றை நபி (ஸல்) அவர்கள் திருக்குர்ஆன் எழுத்தாளர்களுக்கு அறிவித்தார்கள். எந்தெந்த வசனம் எங்கெங்கு வைக்கப்பட வேண்டும் என்பதையும் நபி (ஸல்) அவர்கள் கூற அதன்படி வைக்கப்பட்டது.

திருக்குர்ஆனை ஒரே நூலாக தொகுக்கும் பணி நடைபெற்ற போது **ஒவ்வொரு வசனமும் திருக்குர்ஆனின் வசனம் தானா என்று அக்காலத்தில் வாழ்ந்த ஒவ்வொரு நபித்தோழரிடமும் நன்கு விசாரிக்கப்பட்டு, சரிபார்க்கப்பட்டு தொகுக்கப்பட்டது.** இறைவன் இதைப் பற்றி இவ்வாறு கூறுகிறான். **நிச்சயமாக**

**இதனைத் தொகுப்பதும் இதனை ஓதிக் காட்டுவதும் எமது பொறுப்பாகும்.** (திருக்குர்ஆன் 75:18)

அப்படி என்றால், இவர்களுக்குத் தெரிகின்ற இந்த நாஸிக் மன்சூக் வசனங்கள் நபி (ஸல்) அவர்களுக்குத் தெரியாதா? **இந்தச் சட்டம் இந்தச் சட்டத்தை நீக்கிவிட்டது என்று அந்த வசனங்கள் வந்த போது நபி (ஸல்) அவர்கள் தெரிவித்ததாக திருக்குர்ஆனின் எழுத்தாளர்களும், அன்றைய நபித்தோழர்கள் எல்லாரும் ஏகமனதாகக் அறிவிக்கும் ஒரே ஒரு சான்றையாவது பீ.ஜே போன்றோர்கள் கொண்டு வர முடியுமா?** நபி (ஸல்) அவர்கள் கூறாத ஒரு கருத்தை இவர்கள் கூறுவதினால் அல்லாஹ்வின் மீதும் ரசூலின் மீதும் இட்டுக்கட்டி கூறிய குற்றத்திற்கு ஆளாக நேரிடும். அல்லாஹ் நம்மை காப்பானாக.

2) **பீ.ஜே எழுதியுள்ள வாதங்கள் எல்லாம் அப்படியே திருக்குர்ஆனுக்கு முந்தைய வேதவசனங்களில் உள்ள சட்டங்கள் திருக்குர்ஆனின் சட்டங்கள் மூலம் மாற்றப்பட்டுள்ளன என்பதற்கு அப்படியே பொருந்துவதைக் காணலாம். திருக்குர்ஆனுக்குள் மாற்றப்பட்ட, மாற்றிய வசனங்கள் உள்ளது என்பதற்குப் பொருந்தாது.**

3) திருக்குர்ஆனுக்கும் முந்தைய வேதங்களுக்கும் இடையில் குறைந்தது ஓரிரு ஆயிரம் ஆண்டுகள் இடைவெளி இருப்பதால் இச்சட்ட மாற்றம் தேவை தான். ஆனால் இருபத்தி மூன்று ஆண்டுகள் என்பது குர்ஆனின் சட்ட மாற்றத்திற்கு தேவையில்லை. பீ.ஜே கூறுவது போல், **திருட்டுக்கு கையை வெட்டுதல்** சட்டத்தை மக்காவில் இறக்காமல் மதினாவில் இறக்கியது நிலையான சட்டம் தான் திருக்குர்ஆனில் உள்ளது என்பதற்கும் மாறும் சட்டங்கள் திருக்குர்ஆனில் இல்லை என்பதற்கும் சிறந்த எடுத்துக்காட்டு ஆகும். இவ்வாறே விபச்சாரத்திற்கு 100 சவுக்கடி தண்டனையும் நிலையான சட்டமே திருக்குர்ஆனில் இருப்பதனைக் காட்டுகிறது. இல்லை என்றால் மக்காவின் சூழ்நிலைக்கு ஏற்ப சட்டத்தை ஏற்படுத்திவிட்டு



மதீனாவில் அதனை ரத்து செய்து விட்டு நிலையான சட்டத்தைக் கொண்டு வந்திருக்கலாமே! தாய், குழந்தை உதாரணம், ஊரடங்கு உத்தரவு போன்ற உதாரணங்கள் திருக்குர்ஆனுக்கு முன்னர் வந்துள்ள வேதங்களின் வளர்ச்சிப் படிகளையும் அதிலுள்ள தற்கால சட்டம் திருக்குர்ஆனின் மூலம் மாற்றப்பட்டதையும் குறிக்கும். வரலாறு, வாக்குறுதி என்பவை **சரீஅத்** சட்டத்திற்கு பொருந்தாது.

4) இதில் என்றென்றும் நிலைத்திருக்கும் கட்டளைகள் உள்ளன (98:4) என்று திருக்குர்ஆன் கூறுவதால் நிலையற்ற மன்சூக் நாசிக் சட்டம் இல்லை என்பது தெரிகிறது.

5) திருக்குர்ஆனில் நீக்கிய நீக்கப்பட்ட வசனங்கள் இருப்பதாக இருந்தால், அப்படி நம்புகிறவர்க்கு திருக்குர்ஆனைப் படிக்கிற போது, இந்த வசனம் நீக்கிய நீக்கப்பட்ட வசனத்தில் இருக்குமோ என்ற சந்தேகம் எழ வாய்ப்புள்ளது. எனவே நாம் நீக்கப்பட்ட வசனத்தை நம்பி செயல்பட்டு மோசம் போய் விடக் கூடாதே என்ற தடுமாற்றத்திற்கு ஆளாகும் நிலை ஏற்படும். இப்படிப்பட்ட ஒரு நிலையை அல்லாஹ் தன் திருமறைக்கு ஏற்படுத்தியுள்ளானா? (நவூதுபில்லாஹ்)

6) திருக்குர்ஆனில் நீக்கிய நீக்கப்பட்ட வசனங்கள் உள்ளன என்று ஒரு வாதத்திற்காக ஏற்றுக் கொண்டால், நீக்கப்பட்ட வசனத்தின் அடிப்படையில் செயல்பட்ட ஒருவன் தன் அறியாமையின் காரணமாக வழிகெட வாய்ப்புள்ளது. திருக்குர்ஆன் அவரை வழிகெடுத்ததாக நம்ப வேண்டும். (நவூதுபில்லாஹ்) அல்லாஹ்வின் வேதம் மக்களை வழிகெடுக்கும் என்று பீ.ஜே நம்புகிறாரா?

7) நீக்கப்பட்டதாக தவறாக நம்பும் வசனங்களை நபி (ஸல்) அவர்கள் உடனுக்குடன் நீக்கியிருப்பார்களே. அப்படி அவர்கள் செய்யாததினால் அந்த வசனங்கள் திருக்குர்ஆனில் இல்லை என்பதை காட்டவில்லையா? நீக்கப்பட்டதாக நம்பும் வசனங்களை நபி (ஸல்) அவர்கள் ஏன் திருக்குர்ஆனில் நீக்காமல் வைத்திருக்க வேண்டும்?

8) நபிமொழிகளில் பொய்யான நபிமொழிகள் உள்ளன. எனவே நாங்கள் நபிமொழிகளை நம்பத் தயாராக இல்லை. திருக்குர்ஆன் மட்டுமே உண்மை. அதில் எந்தத் தவறும் இல்லை என்று வாதிக்கும் அஹ்லே குர்ஆன் காரர்கள், திருக்குர்ஆனிலும் இப்படிப்பட்ட நாசிக் மன்சூக் குழப்பம் உள்ளதா ? என்று தப்பான ஒரு எண்ணத்துக்கு வந்து திருக்குர்ஆனையும் கைவிட்டு விட்டு,அவர்கள் நாத்திகர்களாக மாறுவதற்கு இது வழிவகுக்கும்.

9) திருக்குர்ஆனின் 15:10 வசனம், **திருக்குர்ஆனை நாமே இறக்கினோம்; இதனை நாமே பாதுகாப்போம்** என்பதே உண்மை. எனவே, திருக்குர்ஆன் நாசிக் மன்சூக்கிலிருந்தும் பாதுகாக்கப்பட்டுள்ளது.

10) திருக்குர்ஆனில் ஒரு சட்டம் செய் என்றும் இதனையே இன்னொரு சட்டம் செய்யக்கூடாது என்றும் ஒரு கட்டளை ஓரிடத்தில் ஒரு விதமாகவும் இதையே மற்றொரு இடத்தில் வேறு விதமாகவும் கூறுகிறது என்றால் திருக்குர்ஆனில் முரண்பாடு இருக்கிறது எனலாம். திருக்குர்ஆன் 4:83 வசனம், அவர்கள் குர்ஆனை ஆழ்ந்து சிந்திக்க வேண்டாமா? இது அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து வந்ததாக இருப்பின் நிச்சயமாக அவர்கள் இதில் பல முரண்பாடுகளைக் கண்டிருப்பர் என்று கூறுவதால், இந்த சட்டம் மாற்றங்கள் இல்லை என்பது தெளிவாகிறது. நாசிக் மன்சூக் உண்டு என்போர் திருக்குர்ஆன் அல்லாஹ்வின் வேதம் இல்லை என்று நம்புவதாகும்.

11) திருக்குர்ஆனின் 10:64, 18:27, 6:34,116 ஆகிய வசனங்கள், அல்லாஹ்வின் வசனங்களை மாற்றுபவன் எவனுமில்லை என்று கூறுகிறது. சிலர் சட்ட மாற்றங்கள் உள்ளது என்று கூறலாம். அவர்களின் அக்கருத்துக்களைக் கொண்ட வசனங்கள் எதுவும் திருக்குர்ஆனில் இல்லை என்று திருக்குர்ஆன் கூறுகிறது.



## 63. கிப்லா மாற்றம்

### (மாற்றிய வசனங்கள் 2:142 - 145; மாற்றப்பட்டது புகாரி ஹதீஸ் எண் 399... 7252)

**பீ.ஜே மொழியாக்கம் இரண்டாம் பதிப்பில் திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 39 இல் கிப்லா மாற்றம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார்:**

*திருக்குர்ஆனில் 2:142 முதல் 2:145 வரை உள்ள வசனங்களில் தொழுகையில் முன்னோக்கும் திசை மாற்றப்பட்ட செய்தி கூறப்படுகிறது என்றும்,*

*முதல் கிப்லாவான பைத்துல் முகத்தஸை நோக்கித் தொழுவது குறித்து எந்தக் கட்டளையும் குர்ஆனில் இல்லை... ஆனால் புகாரி (399, 403, 4686, 4644, 4488, 4490, 4491, 4492, 4493, 4494, 7251, 7252 ஆகிய ஹதீஸ்களிலும் காணப்படுகிறது.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆனில் மாற்றிய சட்டங்கள், மாற்றப்பட்ட சட்டங்கள் உள்ளன என்று தவறாக நம்புவோர்க்கு கிப்லா மாற்றம் பற்றிய வசனம் அத்தகு கொள்கை தவறாகும் என்பதை தெளிவாக விளக்குகிறது.

அல்லாஹ்வுக்கு கிப்லாவை 17 மாதங்களுக்குப் பிறகு மாற்றப் போவதும் நன்கு தெரியும். திருக்குர்ஆனில் ரத்து செய்யப்பட்ட சட்டமோ, ரத்து செய்த கட்டளையோ இருக்கக் கூடாது என்று இறைவன் விரும்புகிறான். **நிலையான மாறாத சட்டங்கள் மட்டுமே இருக்க வேண்டும் என்பது அவனது விருப்பமாகும். எனவே, நிலையற்ற 17 மாதங்களுக்கு மட்டும் உரிய தற்காலிகமான சட்டத்தைப் பற்றி திருக்குர்ஆனில் கூறவில்லை. மாறாக, நிலையான சட்டமாகிய மக்காவை நோக்கி தொழுவது பற்றித்தான் திருமறையில் கூறியுள்ளான்.**

இதில் வேடிக்கை என்னவென்றால், கிப்லா மாற்றமும், நாசிக் மன்சூக் எனும் நீக்கிய , நீக்கப்பட்ட வசனங்களில் அடங்கும் என்று பீ.ஜே போன்றோர் நம்புகின்றனர். திருக்குர்ஆனில் இருவகை வசனங்களும் இல்லை என்று தெரிந்தும் திருக்குர்ஆனில் நாசிக் மன்சூக் உள்ளது என்பதற்கு இதையும் ஆதாரமாகக் காட்டுகின்றனர். அதாவது, பைத்துல் முகத்தஸை நோக்கி நபி (ஸல்) அவர்கள் தொழுதது நபிமொழி புகாரியில் காணப்படுகிறது. தொழும் திசையை மக்காவை நோக்கி திருப்புவீராக என்ற கட்டளை திருக்குர்ஆனில் காணப்படுகிறது.

**ஒரு செய்தி நபிமொழியிலும் அது பற்றிய கட்டளை திருக்குர்ஆனிலும் காணப்படும் போது அது எப்படி திருக்குர்ஆனில் மாற்றப்பட்ட சட்டமும் மாற்றிய சட்டமும் உள்ளன என்று கூறமுடியும் ?**

எனவே, இந்த கிப்லா மாற்றம் சம்பவம் திருக்குர்ஆனில் நாசிக் மன்சூக் இல்லை என்பதைத் தெள்ளத் தெளிவாக எடுத்துக்காட்டக் கூடியதாகும்.

**ஹஸ்ரத் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நாஸிக் மன்சூக் வசனம் என்று ஏதாவது ஒரு சட்டத்தைப் பற்றி கூறியதாக ஒரு சான்றை காட்டாத வரை இது மாற்றப்பட்ட சட்டம், இது மாற்றிய சட்டம் என்று கூறும் தகுதியும் உரிமையும் எவருக்கும் இல்லை.**

## 64. வாரிசுரிமைச் சட்டமும் மரண சாசனமும்
### (மாற்றிய வசனங்கள் 4:11,12; 4:176 மாற்றப்பட்ட வசனங்கள் 2:180, 2:240)

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 45 இல் மரண சாசனம் என்ற தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*வாரிசுரிமை சட்டம் அருளப்படுவதற்கு முன்னால் மரண சாசனம் செய்வது கடமையாக்கப்பட்டிருந்தது.*

*(திருக்குர்ஆன் 2:180, 2:240)*



*பின்னர் எந்தெந்த உறவினர்க்கு எவ்வளவு சொத்துக்கள் கிடைக்கும் என்ற சட்டம் (4:11-12, 4:176) அருளப்பட்டபின் மரண சாசனம் எழுதுவது கடமை இல்லை என்று ஆகிவிட்டது.*

*மரண சாசனம் செய்யும் கடமைதான் நீக்கப்பட்டுள்ளது. ஒருவர் விரும்பினால் தமது சொத்துக்களை குறித்து மரண சாசனம் செய்வதற்கு அனுமதி உள்ளது.*

*திருக்குர்ஆன் 4:11-12 வசனங்களில் பாகப் பிரிவினை பிரிப்பதற்கு முன் மரண சாசனத்தை நிறைவேற்ற வேண்டும் என்று குறிப்பிடப்படுவதிலிருந்து இதனை அறியலாம்.*

**நம் விளக்கம்:**

அவர் குறிப்பிட்ட வசனங்கள் பீ.ஜே யின் மொழியாக்கத்தின் படி கீழ்வருமாறு உள்ளது:

*உங்களில் ஒருவர் செல்வத்தை விட்டுச் சென்றால் அவருக்கு மரணம் நெருங்கும் போது பெற்றோருக்காகவும், உறவினருக்காகவும் சிறந்த முறையில் மரண சாசனம் செய்வது கடமையாக்கப்பட்டுள்ளது (இறைவனை) அஞ்சுவோருக்கு இது கடமை. (2:180)*

*உங்களில் எவரேனும் மனைவியரை விட்டு மரணித்தால் ஒருவருடம் வரை அவர்கள் வெளியேற்றப்படாது, வசதிகள் வழங்கப்பட வேண்டும் என மரண சாசனம் செய்ய வேண்டும். தங்கள் விசயத்தில் நல்ல முடிவை மேற்கொண்டு அவர்களாக வெளியேறினால் உங்கள் மீது குற்றமில்லை. அல்லாஹ் மிகைத்தவன்; ஞானமிக்கவன். (2:240)*

*இரண்டு பெண்களின் பாகம்... (இவை யாவும்) அவர் செய்த மரண சாசனத்தையும் நிறைவேற்றிய பின்னரே... இது அல்லாஹ் விதித்த கடமை. (4:11)*

*உங்கள் மனைவியருக்குக் குழந்தை... செய்யப்பட்ட மரண சாசனம் மற்றும் கடனுக்குப் பிறகே பாகம் பிரிக்கப்பட வேண்டும்... இது அல்லாஹ்வின் கட்டளை... (4:12)*

*கலாலா பற்றி (முஹம்மதே!) உம்மிடம் மார்க்கத் தீர்ப்பு... நீங்கள் வழி தவறி விடாமல் இருக்க அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான். அல்லாஹ் எல்லாப் பொருட்களையும் அறிந்தவன். (4:176)*

1) ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள், 4:12-13 வசனம் இறங்கும் போது 2:181 வசனத்தை குறிப்பிட்டு கடமை தான் நீக்கப்பட்டுள்ளது; ஆனால் அனுமதி உள்ளது என்று கூறவில்லை. திருக்குர்ஆனில் ஒரு வசனம் முற்றிலுமாக நீக்கப்பட்டாலோ அல்லது பீ.ஜே சொல்வது போல் மரண சாசனம் செய்யும் கடமை தான் நீக்கப்பட்டுள்ளது, ஒருவர் விரும்பினால் அந்த சொத்துக்களைக் குறித்து மரண சாசனம் செய்வதற்கு அனுமதி உள்ளது என்றிருந்தாலோ அது குறித்து நிச்சயமாக நபி (ஸல்) அவர்கள் கூறியிருப்பார்கள். அவ்வாறு கூறவில்லை. எனவே, பிறர் எவரும் அது பற்றிக் கூறுவதற்கு உரிமையோ, தகுதியோ, அருகதையோ, யோக்கியதையோ இல்லை. ஒரு சில நபித்தோழர்கள் நபி (ஸல்) அவர்கள் அவ்வாறு கூறியிருக்கிறார்கள் என்று எடுத்துக் காட்டினாலும் ஏற்றுக் கொள்ளக் கூடாது. ஏன் என்றால் திருக்குர்ஆனின் ஒவ்வொரு வசனமும் இது திருக்குர்ஆனின் வசனம் தானா என்று நன்கு விசாரிக்கப்பட்டு, அதற்குரிய ஆதாரங்கள் சரிபார்க்கப்பட்ட பின்னரே தொகுக்கப்பட்டது. எனவே **திருக்குர்ஆனின் ஒரு வசனம் கூறுகின்ற ஒரு சட்டம் பற்றி அனைத்து நபித்தோழர்களின் ஏக மனதான கருத்து இருந்தால் மட்டுமே நீக்கப்பட்ட வசனம் என்று ஏற்றுக் கொள்ள வேண்டும்.**

2) ஒருவருக்கு மரணம் நெருங்கும் போது - என்றால் இந்த வசனத்துக்கு முன்பின் வசனங்களில் வந்துள்ளது போல போரின் போது என்று பொருள்படும். அல்லது ஒரு விபத்தின் போது என்றோ, எதிர்பாராத நோயினாலோ எதிர்பாராத இடத்தில் வந்து மரணம் நெருங்கும் போது அவர் கூறும் இறுதி விருப்பம் என்று பொருள் கொண்டால் அப்போது வஸிய்யத் செய்வது கடமையாகி விடுமே தவிர அது நீக்கப்பட்டதாகாது. எப்படி என்றால் அவர் தான் வாங்கிய



கடன், தன்னிடம் கடன் வாங்கியவர்கள், தான் செய்யும் தானதருமம் பற்றியும் அந்த வஸிய்யத்தில் கூறுவது கட்டாயக் கடமையாகும்.

3) 2:181 வசனம் பீ.ஜே கூறுவது போல ஏதோ ஒரு வகையில் நீக்கப்படுகிறது என்றால் 4:12,13 வசனத்தில் **இது கடமையில்லை. ஆனால் அனுமதி உள்ளது என்று கூறப்பட்டிருக்க வேண்டும்.** அவ்வாறு அந்த வசனத்தில் கூறப்படவில்லை.

4) 4:12 வசனத்தில், பாகப்பிரிவினை பற்றிக் கூறிய பின்னர் (இவையாவும்) **அவர் செய்த மரண சாசனத்தையும் கடனையும் நிறைவேற்றிய பின்னரே (நிறைவேற்ற வேண்டும்) என்றும் (இது) அல்லாஹ் விதித்த கடமை என்றும் அல்லாஹ் கூறுகிறான்.**

4:12 வசனத்தில் பாகப்பிரிவினை யார் யாருக்கு எவ்வளவு என்று கூறிய பின்னர்... செய்யப்பட்ட மரண சாசனம் (வஸிய்யத்) மற்றும் கடனுக்குப் பிறகே (பாகம் பிரிக்கப்பட வேண்டும்). (இவையனைத்தும் யாருக்கும்) பாதிப்பு ஏற்படாத வகையில் செய்யப்பட வேண்டும். இது அல்லாஹ்வின் கட்டளை என்று அல்லாஹ் கூறுகிறான். (இது பீ.ஜே யின் மொழிபெயர்ப்பாகும்)

இந்த இரு வசனங்களிலும் வஸிய்யத் - **மரண சாசனம் கடமை என்று தான் கூறுகிறது. அனுமதி என்று கூறவில்லை.** மேலும் மரண சாசனத்தை நிறைவேற்றிய பின்னர் தான் பாகப் பிரிவினை செய்ய வேண்டும் (4:12-13) என்று கூறுவதிலிருந்து மரண சாசனம் வசனம் நீக்கப்படவில்லை என்பது தெளிவாகிறது.

5) 2:180 வது வசனத்தில், உங்களில் ஒருவர் செல்வத்தை விட்டுச் சென்றால், அவருக்கு மரணம் நெருங்கும் போது **பெற்றோருக்காகவும் உறவினருக்காகவும்** சிறந்த முறையில் மரண சாசனம் செய்வது கடமையாக்கப்பட்டுள்ளது. (இறைவனை) அஞ்சுவோருக்கு இது கடமை என்று இறைவன் கூறுகிறான்.

1) இந்த வசனத்தில் மனைவி மக்களைப் பற்றி எதுவும் கூறப்படவில்லை.

2) பெற்றோரும் உறவினரும் மட்டும் கூறப்பட்டுள்ளனர்.

ஏன்? நான் முன்பே கூறியது போல் போருக்கு செல்பவர்களுள் பெரும்பாலார் மணமுடிக்காத இளைஞர்கள். அவர்கள் வெற்றியோ, வீர மரணமோ அடையலாம். வீர மரணம் அடைந்தால் அவர்களுடைய பெருஞ்செல்வம் பெற்றோர்களிடமும் ஏனைய உறவினர்களிடமும் பிரிவினை சட்டத்தின்படி பிரித்துக் கொடுக்க வேண்டும்.

எனவே இவ்வசனம் பாகப்பிரிவினைக்குரிய கட்டளைகளினால் எவ்வகையிலும் ரத்துச் செய்யப்படவில்லை. இரண்டு சூழ்நிலைகளிலும் இத்தகு வஸியத்திற்கான கட்டாயம் ஏற்படுகின்றது. அவற்றுள் ஒன்று, இவ்வசனத்தில் கூறப்பெற்றது போன்று அதிகமான செல்வம் இருத்தலாகும். மற்றொன்று இவ்வசனத்திற்கு முன்னுள்ள வசனங்களிலிருந்து தெரிகின்ற (போர்சி) சூழ்நிலையாகும். அதாவது இவ்வசனத்திற்கு முன்னுள்ள 155,181 ஆகிய இரு வசனங்களிலும் போர் குறித்துக் கூறப்பெற்றுள்ளது. இவ்வசனத்திற்குப் பின்னுள்ள 191 வது வசனத்திலும் இதனை அடுத்துள்ள வசனங்களிலும் போர் குறித்தே கூறப்பெற்றுள்ளது. எனவே, இங்கு போருக்குரிய கட்டளையைக் குறித்தும், இதற்கு நிகரான மற்ற நிலைகளைக் குறித்தும் கூறப்பெற்றுள்ளது. பொதுவாக போரில் வாலிபர்களே பங்கேற்கின்றனர். இவர்களுக்குப் பிள்ளைகள் இருப்பதில்லை. அப்படியே இருந்தாலும் அவர்கள் சிறு குழந்தைகளாகவே இருப்பர். எனவேதான் பிள்ளைகள் குறித்துக் கூறாமல் பெற்றோர் -களிடத்திலும், உறவினர்களிடத்திலும், வஸிய்யத் செய்யுமாறு கட்டளையிடப்பட்டுள்ளது. அதிகமான செல்வத்தைப் பெற்ற ஒருவர், (போர்க்களம் போன்ற) ஆபத்தான இடத்தை நோக்கிச் செல்லும் போது, தமது உறவினர்களிடம், எனது மரணத்திற்குப் பிறகு



நியாயமான முறையில் எனது செல்வம் பகிர்ந்தளிக்கப்பட வேண்டும் என்று வஸிய்யத்துச் செய்து விடுதல் வேண்டும். (ஆதாரம்: அஹ்மதிய்யா முஸ்லிம் ஜமாஅத் தர்ஜுமா, 2:181 வசனத்தின் அடிக்குறிப்பு எண் 74)

எனவே வாரிசுரிமைச் சட்டம் மரணசாசனத்தை ரத்து செய்யவில்லை.

## 65. விபச்சாரமும் வெட்கக்கேடான செயலும்
## (மாற்றிய வசனம் 24:2, மாற்றப்பட்ட வசனம் 4:15)

**பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*விபச்சாரம் செய்த பெண்களை மரணிக்கும் வரை வீட்டுக்காவலில் வையுங்கள் எனக் கூறும் இவ்வசனம் (4:15) அல்லாஹ் வேறு வழியைக் காட்டும் வரை தான் செல்லும் எனவும் கூறுகிறது. பின்னர் 24:2 வசனத்தில் வேறு வழியை இறைவன் காட்டினான்.*

*விபச்சாரம் செய்யும் பெண்கள் மட்டுமின்றி ஆண்களும் தண்டிக்கப்பட வேண்டும். கற்பு நெறி இருபாலாருக்கும் பொதுவானது. எனவே விபச்சாரம் செய்யும் நபர் ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் இருவருக்கும் சமமான தண்டனை வழங்குமாறு கூறும் 24:2 வசனம் அருளப்பட்டவுடன் இச்சட்டம் மாற்றப்பட்டுவிட்டது*

**நம் விளக்கம்:**

**4:16 வது வசனம் இவ்வாறு வருகிறது:**

உங்கள் பெண்களுள், வெளிப்படையான ஏதாவதொரு வெறுக்கத்தக்க செயலைச் செய்பவளுக்கெதிராக உங்களுள் நான்கு சாட்சிகளை அழைத்துக் கொள்ளுங்கள். பின்னர் அவர்கள் சாட்சியம் கூறினால், அவர்களுக்கு (அதாவது அந்தப் பெண்களை) மரணம் வரும் வரை அல்லது அல்லாஹ் அவர்களுக்கு (வேறு) ஏதாவதொரு வழியை ஏற்படுத்தும் வரை நீங்கள் அவர்களை (உங்கள்) வீடுகளில் தடுத்து வையுங்கள்.

**24:2 வது வசனம் இவ்வாறு வருகிறது:**

விபச்சாரம் செய்பவள், விபச்சாரம் செய்பவன் ஆகிய (இருவர் மீதும் அக்குற்றச்சாட்டு நிரூபணமாகி விட்டால்) இருவருள் ஒவ்வொருவருக்கும் நீங்கள் நூறு கசையடி கொடுங்கள்....

திருக்குர்ஆனின் 4:15 வசனத்தின் சட்டத்தை பின்னர் வந்த 24:2 வசனத்தின் சட்டம் மாற்றி விட்டது என்று பீ.ஜே கூறுகிறார். இதற்கு அவர் காட்டும் ஆதாரம் 4:15 வசனத்தில் அல்லாஹ் வேறு வழியைக் காட்டும் வரை தான் இச்சட்டம் செல்லும் என கூறுகிறது. பின்னர் 24:2 வசனத்தில் வேறு வழியை இறைவன் காட்டி விட்டதால் மாற்றப்பட்டுவிட்டது என்று கூறுகிறார்.

1. இவருக்குத் தெரிந்த இந்த ஆதாரம் ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களுக்குத் தெரியாமல் போய் விட்டதா? அவர்கள் 24:2 வசனம் இறங்கும் போது 4:15 வசனத்தைக் காட்டி இது இதனை மாற்றிவிட்டது என்றும் 4:15 வசனத்தில் சொன்ன வேறு வழியை 24:2 வசனத்தில் காட்டி, முந்திய வசனத்தை இறைவன் ரத்து செய்து விட்டான் என்றும் கூறியதாக பீ.ஜே நிரூபிக்க முடியுமா ?

2. 4:15,16 வசனங்களில் **வெறுக்கத்தக்க, வெட்கக் கேடான செயல்** என்று தான் அல்லாஹ் கூறுகிறான். ஆனால் 24:2,3 வசனங்களில் விபச்சாரம் என்று கூறுகிறான்.

3. வெட்கங்கெட்ட செயலுக்கும் (4:15) விபச்சாரத்துக்கும் (24:2) 4 சாட்சிகளைக் கேட்கும் சட்டம், தண்டனையைப் பொறுத்த அளவில் முன்னதற்கு 100 சவுக்கடி இல்லையே ஏன்? விபச்சாரத்திற்கு 100 சவுக்கடி கொடுப்பது ஏன்? இவ்விரண்டும் ஒன்றல்ல என்பதால் தான்.

விபச்சாரம் வெட்கக் கேடான செயல்தான். ஆனால் வெட்கக் கேடான செயல்கள் எல்லாம் விபச்சாரம் ஆகிவிடுமா? வெட்கக் கேடான செயல்கள் எல்லாம் விபச்சாரம் என்று பீ.ஜே கருதினால் திருக்குர்ஆனில் வெட்கக் கேடான செயல் என்று வருமிடங்களில்



விபச்சாரம் என்று பொருள் கொள்வாரா? விபச்சாரம் என்பது, ஒரு ஆண், தன் மனைவி அல்லாத வேறு ஒரு பெண்ணுடனோ, ஒரு பெண், தன் கணவன் அல்லாத மற்றவனுடனோ கொள்ளும் உடலுறவை மட்டும் குறிக்கும். ஆனால் வெட்கக் கேடான செயல் என்பது, விபச்சாரத்தையும் இன்னும் விரிவாகப் பல பொருள்களையும் தரும். எனவே இரண்டும் ஒன்றல்ல.

ஒரு பெண் ஆடை அணிந்தும் நிர்வாணமாகத் தோற்றமளிக்கும் விதத்தில் வெளியில் நடமாடுவதாக வைத்துக் கொள்வோம். இது வெட்கக் கேடான செயலா? விபச்சாரமா? இன்று பெண்கள் கையில்லாத சட்டையையும் குட்டைப்பாவாடையும் உடுத்திக் கொண்டு உலா வருவது வெட்கக் கேடான செயலா? விபச்சாரமா? இவ்வாறு விபச்சாரம் இல்லாத அதற்குக் குறைவான செயல்கள் எல்லாம் வெட்கக்கேடான செயல்களில் அடங்கும்.

திருக்குர்ஆன் 29:46 இல் தொழுகை வெட்கக் கேடான காரியங்களை விட்டும் தீமையை விட்டும் தடுக்கும் என்று கூறுகிறது. இதில் வெட்கக் கேடு என்பது விரிவான பொருள்களை தரும். விபச்சாரம் என்று பொருள் கொண்டால் விரிவான அந்த பொருள் விபச்சாரம் என்ற ஒன்று என்று சுருங்கி விடுகிறது. குர்ஆன் 53:32 வசனம் வெட்கக் கேடானவற்றிலிருந்து விலகுங்கள் என பற்பல வெட்கக் கேடுகளைக் கூறுகிறது. இதில் விபச்சாரம் என்று பொருள் கொண்டால், அந்த விரிவான பொருள் ஒன்று என்ற அளவில் சுருங்கி விடுகிறது.

7:29 - அவர்கள் **வெட்கக் கேடானதை** செய்யும் போது எங்கள் முன்னோர்களை இப்படித் தான் செய்யக் கண்டோம். அல்லாஹ்வே இதை எங்களுக்கு கட்டளையிட்டான் என்று கூறுகின்றனர்.

இதில் வெட்கக் கேட்டுக்கு விபச்சாரம் என்று பொருள் கொள்ள முடியுமா? 33:31 நபியின் மனைவியரே! உங்களில் யாரேனும் மேலான நம்பிக்கைக்கு மாற்றமான **வெட்கக் கேடானதைச்**

செய்தால் அவருக்கு இருமடங்கு தண்டனை வழங்கப்படும். இது விபச்சாரம் ஆகுமா?

7:81 – இல் லூத் நபி உலகில் உங்களுக்கு முன் யாரும் செய்திராத **வெட்கக் கேடான** காரியத்தையா செய்கிறீர்கள் என்று தன் சமுதாயத்திடம் கேட்டார். இதில் **வெட்கக் கேடு என்பது ஓரினப் புணர்ச்சியைக்** (ஆணும் ஆணும்) குறிக்கும். இதை விபசாரம் என்று பீ.ஜே கருதுகிறாரா?

இதே சம்பவம் 29:29 வந்து ஆண்களின் ஓரினப் புணர்ச்சியைக் குறிக்கிறது. திருக்குர்ஆன் 65:2 இல், அவர்கள் (தலாக் கூறப்பட்ட பெண்கள்) பகிரங்கமான ஒரு அருவருக்கத்தக்க செயலைச் செய்தாலன்றி அவர்களை அவர்களின் வீடுகளிலிருந்து வெளியேற்றாதீர்கள். அவர்களும் தாமாகவும் வெளியேற வேண்டாம் என்று வருகிறது.

திருக்குர்ஆன் 4:15 வது வசனம், மானக் கேடான செயலை செய்த பெண்களை மரணிக்கும் வரை **வீட்டுக்காவலில் வையுங்கள்** என்று வருகிறது. 65:2 வசனம் தலாக் கொடுக்கப்பட்ட பெண்கள் மானக்கேடான செயலை செய்தால் **வீட்டை விட்டு வெளியேற்றுங்கள் என்று வருகிறது. ஒரே செயல் அதாவது வெட்கக் கேடான செயலைத் தான் இரு இடங்களிலும் பெண்கள் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது. ஓரிடத்தில் 4:15 இல் வெளியேற்ற வேண்டாம் எனவும் 65:2 வெளியேற்றவும்** என்றும் வருவது ஏன்? அவ்விரு இடங்களிலும் வெட்கக் கேடு என்று பொருள் கூறப்பட்டிருப்பதற்கு பீ.ஜே விபச்சாரம் என்று பொருள் கொள்கிறார் என்றால் அல்லாஹ் இப்படி வெவ்வேறு தீர்ப்பைக் கூறுவது ஏன்?

**அடுத்து 4:15-16 வசனங்களில்,**

உங்கள் பெண்களில் வெளிப்படையான வெறுக்கத்தக்க செயலைச் செய்பவர்களுக்கு எதிராக 4 பேர் சாட்சி கூறினால் **மரணம் வரும் வரை அல்லது அல்லாஹ் வேறு வழியை ஏற்படுத்தும் வரை** நீங்கள் அவர்களை (உங்கள்) வீடுகளில் தடுத்து வையுங்கள் என்றும் உங்களுள் இரண்டு ஆண்கள் வெறுக்கத்தக்க செயலைச் செய்தால் நீங்கள் **அவ்விருவரையும் துன்புறுத்துங்கள். அவ்விருவரும் பாவமன்னிப்புக் கோரி திருந்தி விடுவார்களாயின்** அவ்விருவரிடமும் கண்டும் காணாதது போன்று நடந்து கொள்ளுங்கள் என்றும் வருகிறது.

1. **இரண்டிலும் வெறுக்கத்தக்க செயல் என்று தான் வருகிறது.** விபச்சாரம் என்று அல்லாஹ் கூறவில்லை. எனவே இது விபச்சாரம் இல்லை என்றும் சமுதாயத்திற்கும் அமைதிக்கும் தீங்கு செய்யும் செயல் என்றும் விபச்சாரத்திற்கு குறைந்த ஒழுக்கக் கேடான வெறுக்கத்தக்க செயல் என்றும் தெரிகிறது.
2. வெறுக்கத்தக்க செயலுக்கு பெண்களுக்கு 4 சாட்சிகள் தேவை. சுதந்திரமாக அவர்கள் வீட்டிலிருந்து வெளியேறத் தடை என்ற தண்டனை வரையரை செய்யப்பட்டுள்ளது.
3. ஆண்கள் இருவர் வெறுக்கத்தக்க செயலைச் செய்தால் அவர்களைத் துன்புறுத்த வேண்டும். அவர்கள் பாவ மன்னிப்பு கோரி திருந்தினால் விட்டு விட வேண்டும் என்று இதிலும் தண்டனை வரையறை செய்யப்பட்டுள்ளது.
4. உங்கள் பெண்கள் என்றும் இரண்டு ஆண்கள் என்றும் அச்செயல் பிரித்து கூறப்பட்டுள்ளது.
5. வெட்கம் கெட்ட ஒரு செயலுக்கு ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறு வேறு தண்டனை கூறப்பட்டுள்ளது.
6. பெண்ணுக்கு மரணம் வரும் வரை அல்லது அல்லாஹ் வேறு வழியைக் காட்டும் வரை என்று கூறி, ஆணுக்கு அப்படி ஏதும் கூறாதது ஏன்?

**ஆனால், 24:3-4 வசனங்களில்**

1. **விபச்சாரம்** என்று அச்சொல் கூறப்பட்டுள்ளது.
2. விபச்சாரி விபச்சாரனுடனோ, இணை வைப்பவனுடனோ **உடலுறவு கொள்வாள்** என்றும் விபச்சாரன் விபச்சாரியுடனோ, இணை வைப்பவனுடனோ **உடலுறவு கொள்வான்** என்றும் அச்சொல் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.
3. **100 சவுக்கடி** என்று ஆணுக்கும் பெண்ணுக்கும் ஒரே தண்டனை கூறப்பட்டுள்ளது.
4. இத்தண்டனையை **நம்பிக்கை கொண்டவர்களின் முன்னிலையில்** நிறைவேற்ற வேண்டும்.
5. தண்டனையை நிறைவேற்றுவதில் **இரக்கம் காட்டக் கூடாது** என்றும் தண்டனை தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

| **4:16 வது வசனம்** | **24:3,4 வது வசனம்** |
|---|---|
| 1. வெட்கக் கேடான செயல் | 1. விபச்சாரம் |
| 2. உங்கள் பெண்கள் என்றும் , இரு ஆண்கள் என்றும் தனித்தனியே வருகிறது | 2. பெண்ணும் ஆணும் உடலுறவு கொள்ளுதல் |
| 3. வீட்டை விட்டு வெளியேறத் தடை துன்புறுத்தல்,பாவமன்னிப்பு | 3. 100 சவுக்கடி |
| 4. 4 சாட்சிகள் வேண்டும் என்று மட்டும் வருகிறது. 100 சவுக்கடி இல்லை. | 4. 4 சாட்சிகளை கொண்டு வராவிட்டால் அவ்வாறு அவதூறு கூறியவர்களுக்கு 80 சவுக்கடி |
| 5. இரு வேறு தண்டனை | 5. இருவருக்கும் ஒரே தண்டனை |
| 6. உடலுறவு பற்றிக் கூறப்படவில்லை | 6. உடலுறவு கொள்ளுதல் என்று கூறப்பட்டுள்ளது. |

எனவே, 4:15-16 வது வசனம் 24:2-3 வசனம் ஆகிய இவ்விரு வசனங்களிலும் சொல்லப்பட்டவை **இருவேறு விசயங்கள் என்பதால் முந்தைய சட்டத்தை பிந்திய சட்டம் நீக்கி விட்டது என்று கூறுவதற்கில்லை.**



## 66. மதுவைப் பற்றிய சட்டம்

**(மாற்றிய வசனம் 5:90,91;**
**மாற்றப்பட்ட வசனம் 2:219;4:43)**

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 116 இல் போதையாக இருக்கும் போது என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார் :**

*முதலில் அரபு மக்களுக்கு குடி தடுக்கப்படாமல் இருந்தது. (திருக்குர்ஆன்: 16:67) பின்னர் படிப்படியாக இது குறித்த தடைகள் இறங்கின.*

*போதையாக இருக்கும் போது தொழக்கூடாது என்ற கட்டளை வந்தது. (திருக்குர்ஆன்: 4:43) பிறகு குடிக்காமல் இருப்பதே நல்லது என்ற கட்டளை பிறப்பிக்கப்பட்டது (திருக்குர்ஆன் : 2:219) அதன் பிறகு அறவே போதை கூடாது என்று முழுமையாகத் தடை செய்யப்பட்டது. (திருக்குர்ஆன்: 5:90-91) என்று எழுதியுள்ளார்.*

**நம் விளக்கம்:**

**திருக்குர்ஆனின் 5:90-91 வசனம், குடிக்கவே கூடாது என்ற சட்டத்தின் மூலம் அதற்கு முன்னர் வந்த குடி பற்றிய பிற சட்டங்களை ரத்து செய்து விட்டது என்றால் இதனைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறியதாக, நபித் தோழர்கள் அனைவரும் கூறும் சான்று ஒன்றை உலகில் யாராவது எடுத்துக் காட்ட முடியுமா? முடியாது.**

குடிப்பழக்கம் படிப்படியாக குறைக்கப்பட்டு ஒரு கட்டத்தில் முழுமையாக தடை செய்யப்பட்டது என்று ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்களே கூறாதிருக்கும் போது அவர்களுக்குத் தெரியாத ஒன்று இவர்களுக்குத் தெரிந்து விட்டதா? இது பற்றிய சட்டம் இஸ்லாம் புதிதாக அறிமுகம் ஆகும் ஒரு நாட்டில் இப்படித்தான் படிப்படியாக குறைக்கப்பட வேண்டுமா? அல்லது ஒரேடியாக 5:90-91 வது வசனத்தின் சட்டம் நடைமுறைப்படுத்தப்பட வேண்டுமா? 5:90-91 வசனமே நடைமுறைக்கு வரும் என்றால்,அரபு நாட்டுக்கும் பிற நாட்டுக்கும் பாகுபாடு காட்டியது ஆகாதா?

அரபு மக்கள் குடியில் மட்டுமா அப்படி இருந்தார்கள். விபச்சாரம், வட்டி போன்ற பிற தீய செயல்களிலும் எப்போதும் அப்படித்தானே இருந்தார்கள். அந்தத் தீய பழக்கங்களும் படிப்படியாகக் குறைக்கப்பட்டு ஒரு கட்டத்தில் முழுமையாக நீக்கப்பட்டதா ? அதற்கு பீ.ஜே கைவசம் ஆதாரங்கள் உண்டா? என்று பற்பல கேள்விகள் எழும்!

பீ.ஜே மேலே காட்டிய வசனங்கள் எல்லாம் அவர் கூறுவது போல் படிப்படியாக குடியைக் குறைக்கக் கூறியது அன்று. திருக்குர்ஆன் 16:68 - ஐக் காண்போம். திருக்குர்ஆன் 16:66-70 வசனங்கள்.

1. மழை நீர் 2. பால் 3. கனிரசம் - உணவு 4. தேன் பற்றிக் கூறப்பட்டுள்ளது. எனவே இது வெறும் மது பற்றிய போதனை இல்லை என்று தெளிவாகிறது. அதிலும்,

பேரீச்சை மற்றும் திராட்சைக் கனிகளிலிருந்து மதுவையும் **அழகிய உணவையும்** தயாரிக்கிறீர்கள். விளங்கும் சமுதாயத்துக்கு இதில் சான்று உள்ளது என்று அவ்வசனம் கூறுகிறது. மதுப்பழக்கம் என்றால் மதுவை மட்டும் கூறியிருக்க வேண்டும். அத்துடன் அழகிய உணவையும் தயாரிக்கிறீர்கள் என்று கூறப்பட்டுள்ளதால் குடிக்கும் இதற்கும் சம்பந்தமில்லை என்று விளங்குகிறது.

மழை நீரைப்பற்றிக் கூறும் போது, செவியேற்கும் மக்களுக்கு இதில் அடையாளம் உள்ளது என்றும், பாலைப் பற்றி கூறும் போது இதில் படிப்பினை உள்ளது என்றும், கனிரசத்தையும் அதன் உணவைப்பற்றியும் கூறும் போது செயலாற்றும் மக்களுக்கு இதில் அடையாளம் உள்ளது என்றும், தேனைப்பற்றிக் கூறும் போது செயலாற்றுபவர்களுக்கு இதில் ஓர் அடையாளம் உள்ளது என்றும் கூறப்பட்டுள்ளது.

எனவே, இது மதுவுடன் சம்பந்தமில்லாதது என்று விளங்குகிறது. திருக்குர்ஆனில் சொர்க்கத்தில் நீராறும், பாலாறும்,



மது ஆறும், தேனாறும் ஓடுவதாகக் கூறப்பட்டுள்ளது. எனவே, மறுமையில் சொர்க்கத்தில் ஓடும் அந்தந்த ஆறுகளிலிருந்து நீரையும், பாலையும், மதுவையும், தேனையும் மறுமையில் அருந்துபவர்கள் இவ்வுலகில் ஹலாலான நீரையும், பாலையும், பழரசத்தையும், உணவையும், தேனையும் அருந்தியிருக்க வேண்டும் என்பதால் 16:67 இல் கூறப்பட்டது ஹலாலானது என்று விளங்குகிறது. ஹலாலான கனிரசம் என்றும், மது இல்லை என்றும் விளங்குகிறது.

**திருக்குர்ஆன் 16:67 வது வசனத்தின் அடிக்குறிப்பில்,**

இங்கு **ஸகர் (மது)** என்று குறிப்பிட்டிருப்பது போதை தரும் குடிப்பையல்ல; இது நபீது என்ற பானத்தையாகும். மது தயாரிப்பதற்காக பழச்சாற்றைப் புளிக்க வைக்கிறார்கள். ஆனால் நபீது தயாரிக்கும் விதம் வேறு. பழரசங்களைக் கொதிக்க வைத்து, அது மூன்றிலொரு பாகமாக வற்றியதும் நபீது கிடைக்கிறது. இது அனுமதிக்கப்பட்டிருக்கிறது. பெரியோர்கள் இதை அருந்தி இருக்கின்றனர் என்றும் கூறப்பட்டுள்ளது.

ஸக்ரு என்பது பசி தீர்க்கும் உணவு என்று பொருள்படும் என அபூ உபைதா சொல்லியிருப்பதாக தப்ஸீர் காஸினில் குறிப்பிடப்பட்டிருக்கிறது (காஸின்: குர்துபீ, நஸபி; மஆரிபு)

முஸ்லிம் மன்னர்கள், அப்பாஸீய கலீபாக்கள் குடிக்கிறார்கள் என்று மேலை நாட்டினர் சித்தரித்துக் காட்டுவதெல்லாம் நபீது அருந்திக் கொண்டிருந்ததைத்தான்.

நபீது போதை தருவதல்ல; அதை அருந்துதல் ஹலால் என்று இமாமுல் அஃலமும், ஹஸ்ரத் அபூயூஸுபும் அறிவித்திருக்கிறார்கள். (நஸபீ - மதாரிக் - பக். 161 மூன்றாம் பாகம்) ஆதாரம் : அப்துல் வஹ்ஹாப் குர்ஆன் தர்ஜமா 16:67 வது வசனத்தின் அடிக்குறிப்பு எண் 153.

பேரீச்சை மற்றும் திராட்சைப் பழங்களிலிருந்து பிழியப்படும் ரசங்களை ஆகுமாக்கப்பட்ட (ஹலாலான) வகையில் பருகுவதை இத்திருவசனங்கள் குறிப்பதாக ஹஸ்ரத் இப்னு ஜுபைர், நகஈ, சஅபீ, அபூஃதவ்ர் ஆகியோர் கூறுகின்றனர். (தஃப்ஸீர் ஜவாஹிருல் குர்ஆன், 61:7 வசனத்தின் விரிவுரை)

திராட்சை என்பதற்கு லத்தீன் மொழியில் என்ன சொல்லோ அதன் சாயலில் வந்த வார்த்தைதான் **வைன்.** உண்மையில் இது பழரசம். அதை மதுவாக மாற்றியது நம் தவறு. கி.மு. 5000-6000 ஆண்டுகளிலேயே மக்கள் **வைன்** பருகியிருக்கிறார்கள் என்கிறது விக்கிபீடியா இணையதளம். ஜார்ஜியாவில் 8 ஆயிரம் ஆண்டு பழமையான **வைன்** கிடைத்திருக்கிறது. வாரம் இரு கிளாஸ் வைன் குடித்தால் ஆஸ்துமா வராது என்கிறது டென்மார்க் ஆராய்ச்சி நிறுவனம்.

என்ன சிக்கல் என்றால் இன்று வைனுடன் ஆல்கஹாலை அதிகப்படியாக கலந்து அதையும் மதுபான பட்டியலில் சேர்த்து விட்டோம். இதனால் வைன் தரும் மருத்துவ பலன்களை பெருமளவு இழந்துவிட்டோம். புற்றுநோய் வராமல் தடுப்பது, இதய நோயை விரட்டுவது, வயதாகும் போது ஏற்படும் மூளை மந்தத்தை தடுப்பது.... எனப் பல வேலைகளை **வைன்** செய்கிறது. (தினகரன் 26.05.2013, இலவச இணைப்பு, பக்கம் 11)

இரண்டாவதாக, 4:44 இல், நம்பிக்கை கொண்டவர்களே ! நீங்கள் கூறுவதை புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு **மயக்க நிலையில் இருக்கும் போது தொழுகையை நெருங்காதீர்கள்** என்று வருகிறது.

இவ்வசனத்தில் வரும் **சுகாரா** எனும் சொல்லுக்கு மயக்க நிலை என்று பொருளாகும். **இது குடிபோதையை மட்டும் குறிக்காமல்,** கடுங்கோபத்திற்கு உள்ளானவன், காதல் போதைக்கு உள்ளானவன், அச்சத்தால் தாக்குண்டவன், தூக்க போதைக்கு



ஆளானவன் என்றெல்லாம் பொருள் உண்டு. எனவே இத்தகைய நிலைகளில் தொழுகையை நெருங்காதீர்கள் என்று பொதுவாக கூறும் வசனமாகும். குடியை மட்டும் கூறி தடை செய்யும் வசனம் அன்று.

மூன்றாவதாக 2:219 வசனத்தில், குடிக்காமல் இருப்பதே நல்லது என்று கட்டளை பிறப்பிக்கப்பட்டுள்ளதாக பீ.ஜே கூறுகிறார். இதுவும் தவறாகும். 2:218, 2:219 ஆகிய வசனங்களில் அவர்கள் புனித மாதத்தில் போர் செய்வது குறித்து உம்மிடம் வினவுகின்றனர் (2:218) என்றும்,

நம்பிக்கை கொண்டவர்களும், (தம் வீட்டைத்) துறந்து சென்று அல்லாஹ்வின் வழியில் அறப்போர் புரிபவர்களும் ஆகிய இவர்களே (2:219) என்றும் போரைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

2:220 வசனத்தில் அவர்கள் உம்மிடம் மதுவைப் பற்றியும் சூதாட்டத்தைப் பற்றியும் வினவுகின்றனர் என்று வருகிறது.

எனவே, இது போருடன் சம்பந்தப்பட்ட கேள்வி என்று விளங்குகிறது. அக்கால மக்களிடம் போரில் மதுவும், உணவும் வழங்குவதற்கு பலர் முன்வருவார்கள். போரிடும் வீரர்களுக்கு மதுவையும், உணவையும் யார் வழங்குவது என்பது பற்றி சீட்டுக் குலுக்கிப் போட்டு பார்த்து முடிவு எடுப்பது வழக்கம். இதுவே இங்கு சூதாட்டம் என்று கூறப்படுகிறது. இந்த சூதாட்டத்தில் யார் பெயர் வருகிறதோ அவர்கள் போர் வீரர்களுக்கு மதுவும் உணவும் வழங்க வேண்டும் என்று முடிவு எடுக்கப்படும்.

இவ்வாறு செய்வதில் கொஞ்சம் நன்மையும் மிகுதியாக தீமையும் உண்டு என்று இவ்வசனம் கூறுகிறது. **எனவே இவ்வசனம் குடியைப் படிப்படியாக குறைக்கும் வசனம் ஆகாது.**

முழுமையாகத் தடை செய்யப்பட்ட வசனம் 5:91, 5:92 என்பதே சரி.

நம்பிக்கை கொண்டவர்களே! போதைப் பொருள்கள், சூதாட்டம், சிலைகள், குறிபார்க்கும் அம்புகள் ஆகியன அருவருக்கத்தக்கதும் சைத்தானின் செயலும் ஆகும். எனவே நீங்கள் வெற்றி பெறும் பொருட்டு அவற்றிலிருந்து (முற்றிலும்) விலகிக் கொள்ளுங்கள். இதில் நம்பிக்கை கொண்டவர்களே என்று அழைக்கப்பட்டுள்ளது. போதை தரும் மதுவுடன் சூதாட்டம், சிலை, குறிபார்க்கும் அம்புகள் என்று வருகிறது. முற்றிலும் விலகுங்கள் என்றும் வலியுறுத்தப்பட்டுள்ளது.

எனவே மதுவை தடை செய்த சட்டம் 5:90-91 என்பதே சரி. இவ்வசனம் எதனையும் ரத்து செய்யவில்லை.

## 67. படைபலம் பற்றிய வசனங்கள்

**(மாற்றிய வசனம் 8:66; மாற்றப்பட்ட வசனம் 9:41)**

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 203 இல் குறைவாக இருந்த போதும் போர் கடமையா? என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*எண்ணிக்கை, படைப்பலம் குறைவாக இருந்தாலும் போரிடுவது கடமை என்று இவ்வசனம் (திருக்குர்ஆன் 9:41) கூறுகிறது.*

*8:66 வசனம் எதிரிகளின் பலத்தில் பாதியளவு இருந்தால் தான் போர் கடமை எனவும் அதை விடக் குறைவாக இருந்தால் போர் கடமையில்லை எனவும் கூறுகிறது. இவ்விரண்டும் முரண்பாடு என எண்ணக் கூடாது.*

*ஏனெனில் திருக்குர்ஆன் 8:66 வசனத்தில் இப்போது அல்லாஹ் உங்களுக்கு எளிதாக்கி விட்டான் என்ற சொற்றொடரைக் கூறி விட்டுத் தான் எதிரிகளின் பலத்தில் பாதி இருக்க வேண்டும் என்று அல்லாஹ் கூறுகிறான். எனவே ஆரம்பத்தில் இருந்த நிலை இதன் மூலம் மாற்றப்பட்டுவிட்டது என்பதை அறியலாம்.*



*எனவே படைபலம் எவ்வளவு குறைவாக இருந்தாலும் போர் செய்ய வேண்டும் என்பது முன்னர் இருந்த சட்டமாகும். குறைவாக இருந்தாலும் போர் செய்ய வேண்டும் என இவ்வசனம் கூறுவதாக வைத்துக் கொண்டாலும் குறைவு என்பது எவ்வளவு என்பதைக் கூறவில்லை. அந்த அளவை திருக்குர்ஆனின் 8:66 வசனம் விளக்குகிறது என்றும் எடுத்துக் கொள்ளலாம்.*

**நம் விளக்கம்:**

**ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் இவ்வசனம் அவ்வசனத்தின் மூலம் மாற்றப்பட்டுவிட்டது என்று சொன்னதாக அனைத்து நபித்தோழர்களும் கூறிய சான்றைக் கொண்டு வராதவரை, மற்றவர்கள் இவ்வாறு கூறுவது தத்தம் சுய விளக்கமேயாகும்.** திருக்குர்ஆன் 9:41 வது வசனம் (நம்பிக்கை கொண்டவர்களே) நீங்கள் நலிவாகவோ வலுவாகவோ இருப்பினும் (அறப்போர்க்கு) புறப்படுங்கள். நீங்கள் உங்கள் பொருள்களையும் உங்கள் உயிர்களையும் கொண்டு அல்லாஹ்வின் வழியில் அறப்போர் செய்யுங்கள். நீங்கள் அறிந்திருந்தால் இது உங்களுக்கு மிக்க நன்மையாகும் என்று கூறுகிறது. இதில்,

1) ஈமானில் நலிவோ, வலுவோ இருப்பினும் போர் செய்க
2) உங்கள் பொருள்கள், உயிர்கள் ஆகியவற்றை கொண்டு போர் செய்க
3) அல்லாஹ்வின் வழியில் அறப்போர் செய்க
4) இதுவே உங்களுக்கு நன்மை என்று பொத்தம் பொதுவாக கூறுகிறது.

8:66 இல், அதைவிடக் குறைவாக இருந்தால் போர் கடமை இல்லை. எனவும் இந்த வசனம் கூறுகிறது என்று பீ.ஜே கூறுவது தவறாகும். அந்த வசனம் அப்படி எதுவும் கூறவில்லை. மேலும் 8:67 வசனம் பாதியளவு இருந்தால் தான் போர் கடமை எனவும் கூறவில்லை. காரணம் முதற்போராம் பதர் யுத்தத்தில் தங்களை விட

மூன்று மடங்கு அதிகமுள்ள எதிரிகளுடன் முஸ்லிம்கள் போரிட்டுள்ளார்கள்.

உறுதியாக ஈமான் கொண்டவர்கள் **20 பேர் நிராகரிப்போர் 200 பேரையும், 100 பேர் ஓராயிரம் பேரையும்** வென்று விடுவார்கள் என்று வலுவான நிலைக்கு ஒரு அளவையும்,

8:67 இல், ஈமானில் பலவீனம் இருந்தால், உறுதியாக நிற்கக்கூடிய **100 பேர், காஃபிர்கள் 200 பேரையும் 1000 பேர் இருந்தால்,** காஃபிர்கள் 2000 பேரையும் வென்று விடுவர் என்று நலிவான நிலைக்கு ஒரு அளவையும் அல்லாஹ் எடுத்துக் கூறுகிறான்.

அதாவது, நம்பிக்கையாளர்கள் நம்பிக்கையின் உயர் நிலையை அடைந்தால் ஒருவர் நிராகரிப்போரில் பத்து பேரை வெல்வர். ஆனால் இப்போது நம்பிக்கையின் உயர் நிலையை அடையாததால் நம்பிக்கையாளர் ஒருவர் காஃபிர்கள் இருவரையே வெல்ல முடியும் என அடுத்த வசனம் கூறுகிறது. ஆக, நம்பிக்கையாளரின் குறைந்த பட்ச அளவையும் அதிகபட்ச அளவையும் இவ்விருவசனங்களும் வரையறை செய்துள்ளன என்பதே உண்மை.

நம்பிக்கைக்கு ஏற்றவாறு ஆற்றலும் வளர்கிறது. ரோமானியர் பாரசீகர் ஆகியோருடன் செய்த போர்களில் முஸ்லிம்கள் 10 மடங்கு என்ன 80 மடங்கு, 100 மடங்கு கொண்ட பகைவர்களைத் தோற்கடித்தனர். ஏனென்றால் அந்த முஸ்லிம்கள் நபித் தோழர்களின் காலத்தையும் நபி (ஸல்) அவர்களின் மரணத்தற்குப் பின் புதுப்புது அடையாளங்களையும் கண்டதனால் அவர்களின் நம்பிக்கை அவ்வளவுக்கு வளர்ந்திருந்தது. எனவே, 9:41; 8:67 ஆகிய வசனங்கள் ரத்து செய்த, ரத்து செய்யப்பட்ட வசனங்கள் அல்ல என்பதை அறிகிறோம்.



# XIV. சொர்க்கம் - நரகம்

## 68. நரகம் நிரந்தரமன்று, தற்காலிகமானதே!

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 173 இல் அல்லாஹ் நாடியதைத் தவிர... என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு கூறுகிறார் :**

*நிரந்தரமான நரகம் என்று கூறிவிட்டு அல்லாஹ் நாடியதைத் தவிர என்று இங்கே (6:128, 11:107-108) கூறப்பட்டதற்கு பலரும் பலவிதமாக விளக்கம் கூறுகின்றனர். அல்லாஹ்வுக்கு எல்லா அதிகாரமும் உள்ளது என்ற நம்பிக்கை உடையவர்களுக்கு இதில் குழப்பம் ஏற்படத் தேவையில்லை. நிரந்தரமான நரகம் என்று தீர்மானிக்கும் அதிகாரம் அவனுக்கு இருப்பது போல் சிலருக்கு அதில் விதிவிலக்கு அளிக்கவும் அதிகாரம் இருக்கிறது. அவனது விதிவிலக்கைப் பெறுவோர் யார் என்று மறுமையில் தான் தெரியும் என்று நம்பினால் எந்தக் குழப்பமும் ஏற்படாது.*

**நம் விளக்கம்:**

நரகம் நிரந்தரமானது இல்லை. தற்காலிகமானது என்பதைக் காண்போம். திருக்குர்ஆனில் சுவர்க்கத்தைப் பற்றி, நற்பேறு பெற்றோர் சுவர்க்கத்தில் இருப்பார்கள். உம்முடைய இறைவன் நாடினாலன்றி வானங்களும் பூமியும் நிலைத்திருக்கும் காலம் வரை அவர்கள் அதில் வாழ்ந்து வருவர். **(இது ஒரு போதும்) துண்டிக்கப்படாத அருட்கொடை ஆகும்** என்று (11:108) இல் கூறுகிறது. இதில் சொர்க்கம்,

1) இறைவனின் அருட்கொடை என்றும்

2) அது ஒரு போதும் **துண்டிக்கப்படுவதில்லை** என்றும் நிரந்தரம் என்றும் அல்லாஹ் கூறுகிறான்

3) இந்த துண்டிக்கப்படாத எனும் அடைமொழி சொர்க்கத்திற்கு மட்டுமே வருகிறது. நரகிற்கு எங்கும் வரவில்லை.

அதாவது நரகம் ஒரு நாள் துண்டிக்கப்படக் கூடியது என்றும் விளங்குகிறது.

இறைவன் சொர்க்கத்தின் கூலியைப்பற்றி நம்பிக்கை கொண்டு நல்லறங்கள் செய்வோர்க்கு **முடிவில்லாத** கூலி உண்டு (41:9; 84:26; 95:7) என்று கூறுகிறான். எனவே நரகம் ஒருநாள் முடிவடையும் என்று தெளிவாகிறது.

திருக்குர்ஆன் 11:120 இல், உம் இறைவன் அருள் புரிந்தவர்களைத் தவிர இதற்காகவே அவன் அவர்களைப் படைத்தான். ஜின்கள் மனிதர்கள் ஆகிய எல்லோரையும் கொண்டு நிச்சயமாக நான் நரகத்தை நிரப்புவேன் என்ற உம்முடைய இறைவனின் வாக்கு கட்டாயம் நிறைவேறி விடும் என்று வருகிறது. இவ்வசனத்தில் **இறைவன் அருள்புரிந்தவர்களைத் தவிர என்றும் இதற்காகவே அதாவது அருள்புரிவற்காகவே அவன் அவர்களைப் படைத்தான் என்றும் வருகிறது.**

எனவே படைப்பின் நோக்கம் அருள் புரிவதற்கு என்றால், அந்த அருள் எனும் குணம் நிரந்தர நரகிலிருந்து அவர்களைக் காப்பாற்றி விடும் அல்லவா? நரகின் வாசல் ஏழு என்றும் சொர்க்கத்தின் வாசல் எட்டு என்றும் இஸ்லாம் கூறுகிறது. சொர்க்கத்தின் எட்டாவது வழியானது, **இறைவனின் அருளாகும்.** அந்த அருள் சொர்க்கத்தையும் நரகத்தையும் சூழ்ந்துள்ளது. எனவே, இறைவன் இறுதியில் தன் அருளினால் நரகவாசிகள் எல்லாரையும் அதிலிருந்து வெளியேற்றி விடுவான்.

**ஹஸ்ரத் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

அல்லாஹ் அன்பை நூறாகப் பங்கிட்டான். அதில் 99 பங்கைத் தம்மிடம் வைத்துக் கொண்டான். (மீதமிருக்கும்) ஒன்றையே பூமியில் இறக்கினான். இந்த ஒரு பங்கினால் தான் படைப்பினங்கள் பரஸ்பரம் பாசம் காட்டுகின்றன. எந்த அளவுக்கு என்றால் மிதித்து விடுவோமோ? என்ற அச்சத்தினால் குதிரை தனது குட்டியை விட்டுக் கால் குளம்பைத் தூக்கிக் கொள்கிறது. (புகாரி 6000)



உலகின் முதல் உயிரினம் முதல் இறுதி உயிரினம் வரை தன் குட்டியுடனும் பிறரிடமும் காட்டும் அன்பும் கருணையும் அல்லாஹ்வின் ஒரு பங்கு என்றால், மீதமுள்ள 99 பங்கு கருணை நம்மை நரகில் விட்டு வைக்குமா? நரகம் நிரந்தரம் என்றால் அவன் அளப்பரிய கருணையாளனா? மறுமையில் இறை கருணை, மக்களை நரகிலிருந்து ஒரு நாள் வெளியேற்றிவிடும்.

திருக்குர்ஆன் 17:9 இல் நிராகரிப்பவர்களுக்கு நரகத்தைச் சிறைக்கூடமாக நாம் ஆக்கியுள்ளோம் என்று கூறுகிறது. சிறைத்தண்டனை என்பது அவனவன் செய்த குற்றத்திற்கு ஏற்ப குறைவாகவோ அதிகமாகவோ இருக்கும். அது நிரந்தரம் அன்று. என்றாவது ஒரு நாள் அவன் அதிலிருந்து விடுதலையாகி விடுவான். எனவே, நரகம் நிரந்தரமானதன்று.

இறைவன் சொர்க்கத்தின் கூலியைப்பற்றி நம்பிக்கை கொண்டு நல்லறங்கள் செய்வோர்க்கு **முடிவில்லாத** கூலி உண்டு (41:9, 84:26, 95:7) என்று கூறுகிறான். எனவே நரகம் ஒரு நாள் முடிவடையும் என்று தெளிவாகிறது.

திருக்குர்ஆன் 101:10 வது வசனம், நரகம் ( உம்முஹூ ஹாவியா ) அவனுக்குத் தாயாகி விடும் என்று வருகிறது.

தாயின் வயிற்றில் குழந்தை 9 மாதம் 10 நாள்கள் இருந்து முழு வளர்ச்சியடைந்த பிறகு அதிலிருந்து வெளியேறுவது போல் நரகில் புகுந்தவனும் தான் செய்த பாவத்திற்குரிய தண்டனை முடிந்தவுடன் வெளியேற்றப்படுகிறான். குழந்தைக்கு தாயின் கருப்பை தற்காலிகமானது போல் மனிதனுக்கும் நரகம் தற்காலிகமானதால் நரகம் அவனுடைய தாயாகி விடும் என்று கூறப்பட்டுள்ளது.

**நபிமொழி:**

நரகத்திற்கு ஒரு காலம் வரும். அன்று நரகில் யாரும் இருக்க மாட்டார்கள். அதன் (ஜன்னல்) கதவுகள் ஒன்றுக் கொன்று அடித்துக் கொள்ளும். (ஆதாரம் : இமாம் அஹ்மது பின் ஹம்பல்)

நரகம் நிரந்தரம் அன்று என்பதை திருக்குர்ஆனின் 99:8; 78:24; 2:168; 21:48; 11:108,109; 7:157; 40:8; 51:57; 89:30,31 ஆகிய வசனங்கள் கூறுகின்றன.

அணுவளவு நன்மை செய்தாலும் அதையும் கண்டு கொள்வார். (99:8)

இந்த அணுவளவு நன்மையை அவர் சொர்க்கத்தில் பெறுவார். எனவே நரகம் நிரந்தரமானதல்ல.

அவர்களால் இந்த நெருப்பிலிருந்து வெளியேற முடியாது. (2:168)

அவர்களால் வெளியேற முடியாது. ஆனால் அல்லாஹ் அவர்களை வெளியேற்றுவான்.

என் கருணை எல்லாவற்றையும் சூழ்ந்துள்ளது. (7:157)

எனவே அல்லாஹ்வின் கருணை நரகையும் சூழ்ந்துள்ளது. அந்த கருணையின் மூலம் அவர்கள் நரகத்தை விட்டு வெளியேறுவர்.

நான் ஜின்களையும் மனிதர்களையும் என்னை வணங்குவதற்காகவே படைத்துள்ளேன். (51:57)

அவர்கள் அல்லாஹ்வின் அடியாராக இருப்பதற்காக படைக்கப்பட்டிருக்கிறார்கள். எனவே அவர்கள் சொர்க்கத்திற்கு செல்ல வேண்டும் என்பது இறைநாட்டமாகும்.

தேர்ந்தெடுக்கப்பட்ட என் அடியார்களுக்கிடையே நுழைந்து விடுக. மேலும் என் ஜன்னத்தில் நுழைந்து விடுக. (89:30-31)

இந்த இரு வசனங்களிலிருந்தும் அல்லாஹ்வுடைய அப்தாக மாறி சொர்க்கத்தில் நுழைவது தான் மனித, ஜின்கள் படைக்கப்பட்டதன் நோக்கமாகும். எனவே நரகம் நிரந்தரமானதல்ல.



**கடைசி நரகவாசி:**

**1. புகாரி 7511**

**அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

சொர்க்கவாசிகளில் இறுதியாக சொர்க்கத்தில் நுழைபவரும் நரகவாசிகளில் இறுதியாக நரகத்திலிருந்து வெளியேறுபவரும் யாரென்றால் தவழ்ந்தபடி வெளியேறுகின்ற ஒரு மனிதராவார்..... அறிவிப்பாளர் அப்துல்லாஹ் பின் மஸ்ஊத் (ரலி)

**2. நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:**

சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையே ஒருவர் மட்டும் எஞ்சியிருப்பார். அவர் தாம் நரகவாசிகளிலேயே இறுதியாக சொர்க்கம் செல்பவராவார் - அறிவிப்பாளர் அபு ஹுரைரா (ரலி) அவர்கள். (7382 - 7383 இடையில் 29:42 வசனத்திற்கு விளக்கம்)

மேற்கண்ட நபிமொழிகள் நரகம் ஒரு நாள் காலியாகி விடும் என்பதைப் படம் பிடித்துக் காட்டுகிறது.

## 69. ஆதம் நபி வாழ்ந்தது இவ்வுலக சொர்க்கமா? மறுமை சொர்க்கமா?

**திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 12 இல் சொர்க்கம் என்னும் தலைப்பில் பீ.ஜே இவ்வாறு எழுதுகிறார்:**

*ஆதம் நபி மறுமையில் நல்லோர்க்கு இறைவன் வழங்கவுள்ள சொர்க்கச் சோலையில் தங்க வைக்கப்பட்டு இறைக் கட்டளையை மீறியதால் வெளியேற்றப்பட்டார் என்று பலர் கூறுகின்றனர்.*

**நம் விளக்கம்:**

திருக்குர்ஆன் 2:36 -இல், ஆதமே! நீரும் உம் மனைவியும் இத்தோட்டத்தில் குடியிருங்கள்... என்று கூறினோம் என்று வருகிறது.இதே கருத்து 7:20 வசனத்திலும் வருகிறது. பூமியிலுள்ள எல்லா குடியிருக்கும் இடங்களும் அதாவது வாழும் இடங்களும்... இதில் வாழும் இடங்கள் என்று எந்த அடைமொழியும் இன்றியே

திருக்குர்ஆனில் வருகிறது. ஆனால் சொர்க்கத்தில் உள்ள குடியிருக்கும் இடத்தை – வாழும் இடத்தைப் பற்றி அல்லாஹ் கூறும் போது, **தூய, பரிசுத்தமான வாழுமிடம்** என்று தூய என்று அடைமொழியுடன் சேர்த்துக் கூறுகிறான். திருக்குர்ஆனின் 9:72; 61:13 ஆகிய வசனங்களில்,

அல்லாஹ் நம்பிக்கை கொண்ட ஆண்களுக்கும் பெண்களுக்கும் சுவர்க்கங்களை வாக்களித்துள்ளான். அவற்றின் கீழ் ஆறுகள் ஓடும். அவர்கள் அவற்றில் என்றென்றும் வாழ்வர். மேலும் நிரந்தரமான சுவர்க்கங்களில் **தூய்மையான இல்லங்களை**(யும் வாக்களித்துள்ளான்) (9:72) என்று கூறுகிறான். மேலும்,

நீங்கள் அல்லாஹ்விடத்தும் அவனது தூதரிடத்தும் நம்பிக்கை கொண்டு உங்கள் பொருள்களையும் உங்கள் உயிர்களையும் கொண்டு அல்லாஹ்வின் வழியில் கடுமையாக உழைப்பதே (அந்த வாணிபம் ஆகும்) (நீங்கள் அவ்வாறு செய்தால்) அவன் உங்கள் பாவங்களை மன்னித்து, தோட்டங்களில் நுழையச் செய்வான். அவற்றுக்கிடையே ஆறுகள் ஓடுகின்றன. மேலும் என்றென்றும் நிலைத்திருக்கும் தோட்டங்களிலுள்ள **தூய்மையான இன்பமான இருப்பிடங்களில்** (அவன் உங்களை வாழச் செய்வான்). (61:13)

**எனவே ஆதம் நபி வாழ்ந்த இடம், தூய வாழுமிடம் என்று வராததினால்,** அவர் வாழ்ந்த இடம் பூமியிலுள்ள ஜன்னத் என்று தெளிவாகிறது. அதாவது மறுமையில் கிடைக்கும் சொர்க்கம் இல்லை.

இரண்டாவதாக, மறுமையில் உள்ள சொர்க்கத்தைப் பற்றி வருமிடங்களில் ஆறுகள் ஓடும் என்ற வருணனை வருகிறது. ஆதம் நபி வாழ்ந்த இடத்தில் ஓடும் ஆறுகளைக் காண முடியவில்லை. அந்த ஆறுகள் எங்கே ஓடி ஒளிந்து கொண்டன? எனவே ஆதம் நபி



வாழ்ந்த இடம் மறுமையிலுள்ள சொர்க்கம் இல்லை என்றும், பூமியிலுள்ள ஜன்னத் என்றும் நாம் விளங்கிக் கொள்கிறோம்.

மூன்றாவதாக, திருக்குர்ஆனில் அல்லாஹ் மறுமையில் கிடைக்கும் சொர்க்கத்தைப் பற்றிப் பல பெயர்களில் அழைக்கிறான்.

1. மறுமை வீடு (2:103)
2. அதன் எனும் சொர்க்கம் (9:72)
3. ஃபிர்தவ்ஸ் (18:108)
4. மஃவா எனும் சொர்க்கம் (32:20)
5. நயீம் எனும் சொர்க்கம் (5:66)
6. தாருல் குல்து (25:16)
7. ஆலியா (69:23)
8. அல்ஹுஸ்னா (4:96)
9. இறுதி இல்லம் (28:84)
10. தாருஸ் ஸலாம் (6:178)
11. தாருல் கரார் (40:40)
12. இறையச்சம் உடையவர்களின் இல்லம் (16:31)
13. நிலையான தங்கும் இல்லம் (35:36)
14. சுவனப் பூங்காக்கள் (142:23)
15. பூங்கா (30:16)
16. தூபா (மிக நல்ல) 13:30
17. இல்லிய்யூன் (83:20)
18. ஃபிர்தவ்ஸ் (23:12)
19. ஃபழ்ல் (கிருபை) 33:40
20. வலப்புறம் (56:28)
21. மகாமுல் அமீன் (44:52)

இவை மறுமையில் கிடைக்கும் சொர்க்கத்தின் பெயர்கள். இப்பெயர்களில் எதுவும் ஆதம் நபி வாழ்ந்த பூலோக ஜன்னத்திற்குக்

கூறப்படவில்லை. எனவே ஆதம் நபி வாழ்ந்தது மறுமையில் கிடைக்கும் சொர்க்கம் இல்லை என்று தெளிவாகிறது.

நான்காவதாக, நான் மறுமை நாளில் சென்று அதைத் திறக்கும்படிக் கோருவேன். அப்போது அதன் காவலர், நீங்கள் யார் என்று கேட்டார். **நான் முஹம்மது** என்றேன். அதற்கு அவர், உங்களுக்காகவே நான் கட்டளையிடப்பட்டுள்ளேன். **உங்களுக்கு முன் வேறு யாருக்காகவும் (சொர்க்க வாசலை) நான் திறக்கக் கூடாது.** (எனப் பணிக்கப்பட்டுள்ளேன்) என்று கூறுவார். (அறிவிப்பவர் ஹஸ்ரத் அனஸ் (ரலி) அவர்கள்; நூல் : முஸ்லிம் 333)

நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு முன் வேறு யாருக்காகவும் சொர்க்க வாசல் திறக்கப்படவில்லை என்றால், ஆதம், ஹவ்வா, இப்லீஸ், சைத்தான் போன்றவர்கள் எப்படி மறுமை சொர்க்கத்தில் நுழைந்திருக்க முடியும்? எனவே அவர்கள் வாழ்ந்தது இம்மையில் உள்ள ஜன்னத் என்று விளங்குகிறது.

ஐந்தாவது, சொர்க்கத்தில் எட்டு வாசல்கள் உள்ளன. அதில் ரய்யான் என்றழைக்கப்படும் வாசலொன்று உள்ளது. அதில் நோன்பாளிகளைத் தவிர வேறெவரும் நுழைய மாட்டார்கள். (அறிவிப்பவர்: ஸஹ்ல் பின் ஸஅத் நூல் புகாரி 3257 ; முஸ்லிம் 212)

இதில் நோன்பு போன்ற நற்செயல்களை அல்லாஹ்வுக்காக செய்தவர்கள் அந்த வாசல் வழியே நுழைவார்கள் என்றால், ஆதமும் ஹவ்வாவும் படைக்கப்பட்டதே அங்கு என்பது எப்படிப் பொருந்தும். அதாவது நற்செயலின் கூலி தான் மறுமை சொர்க்கம் என்றால் ஆதமும் ஹவ்வாவும் அங்கு எப்படி படைக்கப்பட்டிருப்பார்கள்? எந்த வாசல் வழியாக நுழைந்தார்கள்? அது சரி, இப்லீஸும் சைத்தானும் எந்த நற்செயல் செய்ததற்காக எந்த வாசல் வழியாக சொர்க்கத்தில் நுழைந்தார்கள்?

ஆறாவது, சொர்க்கவாசிகளுக்கு அல்லாஹ் அழகிய மாளிகைகளை வழங்குகிறான் என்று திருக்குர்ஆனும் நபிமொழியும் கூறுகின்றன.



குர்ஆனில் 66:12 வசனத்தில், ஃபிர்அவ்னின் மனைவி, என் இறைவா! உன்னிடத்திலே ஜன்னத்தில் நீ எனக்காக ஒரு வீட்டைக் கட்டுவாயாக! என்று கேட்கிறார். மறுமை சொர்க்கத்தில் மாளிகைகள் வழங்கப்படும் என்று திருக்குர்ஆனில் 39:21; 34:38; 25:76 ஆகிய வசனங்களில் காண்கிறோம்.

இப்லீஸும் சைத்தானும் இருக்கட்டும்; ஆதம் நபியும் ஹவ்வாவும் எந்த மாளிகையில் இருந்தார்கள்? திருக்குர்ஆனில் அவர்களின் மாளிகையைப் பற்றி பேச்சே இல்லையே! ஏன்?

ஏழாவது, மறுமை சொர்க்கத்தில் கூடாரங்களில் தங்க வைக்கப்பட்ட ஹூர் எனும் கன்னியராவர் (55:72) ஆதமும் நபி வாழ்ந்த ஜன்னத்தில் ஹூர் எனும் கன்னியரின் காட்சி பற்றி காட்டப்படவில்லையே! ஏன்?

எட்டாவது, மறுமையில் கிடைக்கும் சொர்க்கத்தில், அவர்களுக்கு தங்கக் காப்புகள் அணிவிக்கப்படும். ஸுந்துஸ், இஸ்தப்ரக் என்னும் பச்சைப் பட்டாடைகள் அவர்கள் அணிவார்கள். (திருக்குர்ஆன் 18:30) என்று கூறப்பட்டுள்ளது. ஆனால்,

ஆதம் நபியின் சொர்க்கத்தில், அவ்விருவரும் அம்மரத்தைச் சுவைத்த போது அவர்களின் வெட்கத்தலங்கள் அவர்களுக்குத் தெரிந்தன. அவ்விருவரும் சொர்க்கத்தின் இலையினால் தம்மை மூடிக் கொள்ள முயன்றனர். (திருக்குர்ஆன் 7:22) என்று வருகிறது.

அவர்கள் அந்த பச்சைப் பட்டாடைகளை அணியவில்லை என்பதாலும், மரத்தின் இலைகளே ஆடையாக கிடைத்தன என்பதாலும் இரண்டும் வெவ்வேறு இடங்கள் என்பது தெரியவில்லையா?

ஒன்பதாவது, திருக்குர்ஆனில் ஆதம் நபியைப் பற்றிக் கூறும் இடங்களில் எல்லாம் இப்லீஸும், சைத்தானும் கூறப்படுகிறான்.

நம் கேள்வியாவது, அல்லாஹ்வின் மீதும் அவனுடைய தூதரின் மீதும் நம்பிக்கை கொண்டு தொழுகையை நிலைநிறுத்தி ரமலானில் நோன்பு நோற்ற மனிதரை சொர்க்கத்தில் புகச்செய்வது அல்லாஹ்வின் மீது கடமையாகி விட்டது. அவர் அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிந்தாலும் சரி, அவர் பிறந்த பூமியில் உட்கார்ந்து கொண்டாலும் சரி என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர் : அபூஹுரைரா (ரலி). புகாரி 2790 ; முஸ்லிம் 3829)

இப்லீஸும், சைத்தானும் மேலே சொல்லப்பட்ட நற்செயல்களைச் செய்ததினால் தான் அவர்களை அல்லாஹ் சொர்க்கத்தில் புகுத்தியுள்ளானா?

பத்தாவது, (சொர்க்கவாசிகள் சொர்க்கத்தில் நுழைந்த பின்னர்) பொது அறிவிப்பாளர் ஒருவர், (இனி) நீங்கள் **ஆரோக்கியத்துடனேயே** இருப்பீர்கள். ஒருபோதும் **நோய் ஏற்படாது.** நீங்கள் என்றென்றும் **உயிருடன்** தான் இருப்பீர்கள். ஒருபோதும் உங்களுக்கு **மரணம் ஏற்படாது. இளமையோடு** தான் இருப்பீர்கள். ஒருபோதும் **முதுமையடைய மாட்டீர்கள். நீங்கள் இன்பத்தோடுதான்** இருப்பீர்கள். ஒருபோதும் **துன்பம் அடைய மாட்டீர்கள்** என்று அறிவிப்புச் செய்வார் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம் 5457)

ஆனால் ஆதம் நபி வாழ்ந்த ஜன்னத்தில் சைத்தான், இந்த மரத்தினை நெருங்கினால் நீங்கள் **வானவர்கள்** ஆகி விடுவீர்கள்; **நிரந்தர வாழ்வைப் பெறுவீர்கள்** என்று ஆதம் நபியிடம் கூறுகிறான். (7:21) இதிலிருந்து இரண்டும் வெவ்வேறு இடங்கள் என்று தெரியவில்லையா? அதாவது, இரண்டும் இரண்டு விதமாக உள்ளன.

பதினொன்றாவது, இனிமையான சொர்க்கச் சோலைகளில் அவர்களுக்கு **அறியப்பட்ட உணவும்,** கனிகளும் உண்டு. அவர்கள் **மரியாதையுடன் நடத்தப்படுவார்கள்.** (அல்குர்ஆன் 37:42-44)



சொர்க்கத்தில் அவர்கள் எச்சில் துப்பவும் மாட்டார்கள். மலஜலம் கழிக்கவும் மாட்டார்கள் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி 3327 ; முஸ்லிம் 5450)

ஆனால் ஆதம் நபி வாழ்ந்த ஜன்னத்தில் அவர்கள் **அறியாத ஒரு மரம் காணப்படுகிறது.** அதனை **நெருங்க வேண்டாம் என்ற தடையும் உள்ளது.** அதனை உண்டதனால் அவர்களின் **மானம் வெளியாகி விட்டது** எனத் திருக்குர்ஆன் கூறுகிறது.

இவ்வாறாக இரு வேறு முரண்பட்ட நிலைகள் சொல்லப் -படுவதால் ஆதம் நபி மறுமைக்குப் பின் உள்ள சொர்க்கத்தில் வாழவில்லை என்பது உறுதியாகின்றது.

திருக்குர்ஆன் 2:31 இல், அல்லாஹ் தன் கலீஃபாவை பூமியில் ஏற்படுத்தப் போகிறான் என்று தான் கூறியுள்ளான். பூமியில் வாழ்ந்த ஆதம் நபியை சொர்க்கத்திற்கு உயர்த்தியதாகத் திருக்குர்ஆனிலோ, நபிமொழிகளிலோ கூறப்படவில்லை. எனவே அவர் வாழ்ந்தது பூமிலுள்ள ஜன்னத்தே ஆகும்.

இதுபற்றிய மேலும் பல கருத்துக்களை ஹஸ்ரத் மஸீஹ் ஈசப்னு மர்யம் (அலை) அவர்களின் மரணம் எனும் நூலில் பக்கம் 46 இல் ஆதம் (அலை) அவர்கள் வாழ்ந்த பூவுலக சொர்க்கம் எனும் தலைப்பில் காண்க)

**உண்மை இவ்வாறிருக்க, ஆதம் நபி வாழ்ந்தது மறுமைக்குப் பின்னர் கிடைக்கும் சொர்க்கமே என்று பலர் கூறுகின்றனர். இரண்டில் எதை ஏற்றாலும் இஸ்லாத்தின் அடிப்படைக்கோ இந்நிகழ்ச்சியில் இருந்து பெற வேண்டிய பாடத்துக்கோ எந்தப் பாதிப்பும் ஏற்படாது என்று பீ.ஜே எழுதுகிறார்.**

நம் கேள்வியாவது, திருக்குர்ஆனும் நபிமொழியும் கூறுவனவற்றுள் ஏதாவது ஒன்றுதான் உண்மையாக இருக்க

வேண்டும். மற்றொன்று தவறானதுதான். திருக்குர்ஆனும் நபிமொழியும் எதனை உண்மை எனக் கூறுகிறதோ அதனை ஏற்பதே இஸ்லாம் ஆகும்.

## 70. மூஸா நபியும் இஸ்ரவேலர்களும் மீண்டும் எகிப்திற்குத் திரும்பினார்களா?

**பீ.ஜே. திருக்குர்ஆன் விளக்க அட்டவணை எண் 428 -இல் குற்றவாளிகளின் இல்லம் என்பது எது? எனும் தலைப்பில் (ஒன்பதாம் பதிப்பில்) எழுதுவதாவது,**

*மூஸா நபியும் அவரது சமுதாயத்தினரும் ஃபிர்அவ்னுக்கு அஞ்சி வீடு வாசல்களைத் துறந்து **ஓட்டம் பிடித்தனர்.** அல்லாஹ்வின் அருளால் அவர்கள் காப்பாற்றப்பட்டு, எதிரிகள் கடலில் மூழ்கடிக்கப்பட்டனர். கடல் கடந்து ஊரை விட்டு வெளியேறியவர்கள் **மீண்டும் எகிப்து செல்வார்கள்....***

*எதிரிகள் வசித்த ஊரை வீடுகளை உங்களுக்கு நான் காட்டுவேன். **அங்கே உங்களைச் சேர்ப்பேன்...***

*7:137; 17:103-104; 44:23,28; 26:57-59 வசனங்களில் **அவர்கள் மீண்டும் எகிப்தில் குடியேறியதாகத்** திருக்குர்ஆன் கூறுவது இக்கருத்தை வலுப்படுத்துகிறது.*

**நம் விளக்கம்:**

1) ஒரு சமூகம் ஒரு நாட்டில் நீண்ட காலமாக வாழ்ந்து வருகிறது. அவரது சந்ததிகள் அந்த மண்ணிலே பிறந்து, வளர்ந்து, வாழ்கிறார்கள் என்றால், அவர்கள் நிர்பந்தத்தின் காரணமாகவும், இறைகட்டளையின் பேரிலும் வெளியேறினாலும், என் வீடு, என் நாடு என்ற ஏக்கமும் பிரிவின் தாக்கமும் இருக்கத்தான் செய்யும். எனவே அவர்களை அவர்களின் நாட்டுக்கு திரும்பவும் கொண்டு வருவேன் என்றும் உங்கள் இல்லங்களில் உங்களை வாழ வைப்பேன் என்றும் கூறுவது தான் பொருத்தமாகும்.



பீ.ஜே. எழுதியிருப்பது போல், **எதிரிகள் வசித்த ஊரை வீடுகளை உங்களுக்கு நான் காட்டுவேன்** – என்று எழுதியிருப்பது சரியன்று.

2) மூஸா நபியும் அவரது சமுதாயமும் மீண்டும் எகிப்துக்குத் திரும்பினார்கள் என்று திருக்குர்ஆன், நபிமொழி, வரலாற்றின் அடிப்படையில் நிரூபிக்க முடியாது. பீ.ஜே. எடுத்துக்காட்டும் வசனங்கள் அவ்வாறு கூறவில்லை.

*பலவீனர்களாகக் கருதப்பட்டு வந்து சமுதாயத்தை நாம் பாக்கியம் செய்த பூமியின் கிழக்கு மற்றும் மேற்குப் பகுதிகளுக்கு உரிமையாளர்களாக ஆக்கினோம். இஸ்ராயீலின் அழகிய வாக்கு அவர்கள் விசயத்தில் முழுமையாக நிறைவேறியது. ஃபிர்அவ்னும் அவனது சமுதாயத்தினரும் தயாரித்தவற்றையும், அவர்கள் உயரமாக எழுப்பியவற்றையும் அடியோடு அழித்தோம் (7:138)* என்று தான் வருகிறது.

இவ்வசனத்தில் இஸ்ரவேலர்கள் பாக்கியம் செய்த பூமிக்கு என்று தான் வருகிறதே தவிர எகிப்து என்றோ, அவர்கள் வாழ்ந்து வெளியேறிய இடத்திற்கு என்றோ வரவில்லை.

திருக்குர்ஆன் 21:72; 17:1 -இல் பாக்கியம் பெற்ற பூமியாக பைத்துல் முகத்தஸை நாம் ஆக்கியுள்ளோம் என்றும், 5:22 -இல் மூஸா நபி, ‘என் சமுதாயத்தினரே! அல்லாஹ் உங்களுக்கு விதித்துள்ள புனித பூமியில் நுழையுங்கள்’ என்று தன் சமூகத்தை நோக்கி கூறியிருப்பதும், புனித பூமி என்பது எகிப்து இல்லை என்று காட்டுகிறது.

மேலும் ஃபிர்அவ்னும் அவனது சமுதாயமும் தயாரித்தவற்றையும், உயரமாக எழுப்பியவற்றையும் அடியோடு அழித்து விட்டதாக அல்லாஹ் கூறுகிறான். எனவே குற்றவாளிகளின் இல்லம் என்ற பேச்சுக்கே இடமில்லை.

**திருக்குர்ஆன் 17:104வது வசனத்தில்,**

இப்பூமியில் வசியுங்கள். மறுமை பற்றிய வாக்கு நிறைவேறும் போது உங்களை ஒருசேரக் கொண்டு வருவோம் என்று இதன் பின்னர் இஸ்ரவேல் மக்களிடம் கூறினோம் என்று வருகிறது.

இதில் மறுமையின் வாக்குறுதி வரும் போது அவர்கள் வாழ்ந்த, பாக்கியம் செய்த பூமியில், அனைவரையும் ஒருசேரக் கொணடு வருவோம் என்று தான் வருகிறது. இதிலும் எகிப்து என்று வரவில்லை.

அடுத்து 44:25-28 வசனங்கள்,

அவர்கள் எத்தனையோ சோலைகளையும், ஊற்றுகளையும் பயிர்களையும் மதிப்புமிக்க இடங்களையும் அவர்கள் அனுபவித்துக் கொண்டிருந்த சொகுசுகளையும் விட்டுச் சென்றனர்.

இப்படித்தான் வேறு சமுதாயத்தினரை அதற்கு உரிமையாளர்களாக ஆக்கினோம்.

இதிலும் இஸ்ரவேலர்கள் விட்டுச் சென்றவற்றுக்கு, இஸ்ரவேல் அல்லாத வேறு சமுதாயம் உரிமையாளர்களாக ஆக்கப்பட்டது என்று தான் வருகிறது.

திருக்குர்ஆன் 26:57-58

“தோட்டங்கள், நீரூற்றுகள், பொக்கிசங்கள் மற்றும் மதிப்புமிக்க தங்குமிடங்களை விட்டும் அவர்களை வெளியேற்றினோம். இப்படித்தான் இஸ்ரவேலின் மக்களை அவற்றிற்கு வாரிசுகளாக ஆக்கினோம்.”

இந்த வசனத்திலும், ‘அவற்றுக்கு’ - என்பது எகிப்தில் உள்ளவற்றைக் குறிக்காது. மாறாக அவை போன்றவற்றுக்கு இஸ்ரவேலர்கள் வாரிசுகள் ஆனார்கள் என்றே பொருள்படும்.

வரலாற்றிலும் ஆதாரம் இல்லை

மூஸா நபியும் அவரது சமுதாயமும் மீண்டும் எகிப்தில் குடியேறினார்களா?



எத்தனையோ நூற்றாண்டுகளாக உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஊர் ஊராகத் தப்பி ஓடிக்கொண்டிருந்தவர்கள் யூதர்கள். இதிகாச காலங்களில் அவர்கள் ஓடிக் கொண்டிருந்தார்கள். புராண காலங்களில் அவர்கள் தலை தெரிக்க ஓடிக் கொண்டிருந்தார்கள். சரித்திர காலம் வந்த போதும், வாழ வழியில்லாமல் தான் ஓடிக் கொண்டிருந்தார்கள். பின்னால் நவீன உலகம் உருவான பிறகும் அவர்களது ஓட்டம் ஓயவில்லை. சொந்தமாக ஒரு துண்டு நிலம் இல்லாமல் எல்லா தேசங்களிலிருந்தும் அடித்துத் துரத்தப்பட்டவர்கள் அவர்கள்...

...காலம் காலமாக வதை பட்டே மடிந்தவர்கள் 1948 -ல் தான் இஸ்ரவேல் என்ற தேசத்தைத் தமக்காக உருவாக்கிக் கொண்டு வந்து, வாழவே ஆரம்பித்தார்கள். (ஆதாரம் : நிலமெல்லாம் ரத்தம் – எனும் நூல், பக்கம் 21-22. ஆசிரியர் பா. ராகவன்.)

**மொத்தத்தில்,**

1) இஸ்ரவேல் மக்கள், பாக்கியம் பெற்ற பூமிக்கு உரிமையாளர் -களாக ஆக்கப்பட்டனர்; எகிப்துக்கு அன்று.
2) அந்த பாக்கியம் பெற்ற பூமியில் யூதர்கள் எல்லாரும் ஒன்று சேர்க்கப்படுவார்கள் என்று தான் வருகிறது; எகிப்தில் அன்று.
3) எகிப்திலுள்ள இடங்களுக்கு வேறு ஒரு சமுதாயத்தினர் உரிமையாளர் ஆக்கப்பட்டனர்; இஸ்ரவேலர்கள் அன்று.
4) இஸ்ரவேலர்களோ பாக்கியம் பெற்ற நாட்டில் தோட்டங்கள், நீரூற்றுகள், பொக்கிசங்கள், மதிப்புமிக்க தங்குமிடங்களுக்கு உரிமையாளர்களாக ஆக்கப்பட்டனர்.

இவற்றைத் தொகுத்துப் பார்த்தால் மூஸா நபியும் அவருடன் சென்ற இஸ்ரவேலர் சமுதாயமும், எகிப்துக்குத் திரும்பி வந்தனர் என்பது திருக்குர்ஆன், நபிமொழிக்கு மட்டும் இல்லாமல் வரலாற்றுக்கும் மாறுபட்ட சம்பவம் என்று அறிகிறோம்.